# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ஆறாம் மடலம் - முதல் பாகம்

## பெ - பௌ

## Vol. VI-Part -III


முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட

இயக்கக வெளியீடு

2005

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

ஆறாம் மடலம் - மூன்றாம் பாகம்

## பெ - பௌ

## Vol. VI- Part - III


முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2005

முதற் பதிப்பு : 2005

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. VI, Part - III

பதிப்புரிமை : தமிழ்நாட்டரசு
Government of Tamilnadu

விலை : உருபா 400/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

**VOL. VI- PART III**

ஆறாம் மடலம் - மூன்றாம் பாகம்

(பெ - பௌ)


பதிப்புக் குழு

முனைவர் திரு.பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும்*

*அறநிலையத் துறை*

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்

புலவர் இறைக்குருவனார்

தொகுப்பாளர்கள்

திரு.முத்து.பிச்சை

முனைவர் மு.கண்ணன்

முனைவர் பா.வெற்றிச்செல்வன்

முனைவர் ச.செந்திலாண்டவன்

முனைவர் இரா.கு.ஆல்துரை

திரு.கா.இளமுருகு (பகுதிப் பொறுப்பாளர்)

திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

ஜெ ஜெயலலிதா
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை–600 009.

நாள் 26.12.2005

## அணிந்துரை

'வானம் அளந்தது அனைத்தும் அளந்திடும் வண்மொழி தமிழ்!' அந்த வண்டமிழ், 'ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி இசை கொண்டு வாழ' ஏற்ற பணிகளை ஆற்றி வருகிறது எனது அரசு.

தமிழ்நாடு அரசு, தமிழ் நாடும் அரசாக விளங்குகின்றது. இந்திய அரசின் ஆட்சி மொழியாகத் தமிழை ஆக்கவும், இணையற்ற தமிழ் மறையாம் திருக்குறளை இந்தியாவின் தேசிய இலக்கியமாக ஆக்கவும், ஒல்லும் வகையான் ஓயாது முயன்று வருகிறது தமிழ்நாடு அரசு. 'முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழமையதாய் விளங்கும் நம் தமிழ், பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியதாய்' விளங்க வேண்டும் என்ற விழைவோடு, முத்தமிழோடு நான்காம் தமிழாக அறிவியல் தமிழை அறிமுகப்படுத்தி, அதனை மழலையர் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை, மாணவ மாணவியர் கற்க ஏற்பாடு செய்தேன்.

உயர்தனிச் செம்மொழியாம் தமிழின் வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதுடன் நில்லாது, தமிழ் வளர்த்த சான்றோர்கள் நினைவைப் போற்றும் வகையில் விழாக்கள் எடுத்தும், நினைவிடங்கள் அமைத்தும், அவர்தம் நூல்களைப் பொது உடைமையாக்கியும் சிறப்பித்து வருகிறது எனது அரசு. அந்த வகையிலே, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூற்றாண்டு பிறந்த நாள் விழாவைக் கொண்டாடி மகிழ்ந்ததுடன், அவரது நினைவை என்றென்றும் போற்றிப் பாராட்டிடும் வகையில் மதுரை மாநகரில் மணி மண்டபம் உருவாக்கிடவும் முனைந்துள்ளது.

தமிழ் மொழியின் தனிப் பெரும் வளர்ச்சி குறித்த கவிஞர்களின் கனவுகள் நனவாக்கப்பட வேண்டும் என்பது என் விருப்பம்

"வெளியுலகில், சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெலாங் கண்டு
தெளி உறுத்தும் படங்களோடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும் வேண்டும்"

என்ற பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் கனவு மெய்ப்படும் விதத்தில், தமிழ் மொழியின் சொல் வளத்தைப் பெருக்க 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி' (A Comprehensive Etymological Dictionary of Tamil Language) நூல்களை உருவாக்கும் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் சார்பாக கடந்த 2002–ஆம் ஆண்டு வரை ஆறு பகுதிகள் மட்டுமே வெளியிடப்பட்டிருந்தன. 2002–2003–ஆம் ஆண்டில், சட்டமன்றப் பேரவையில், எஞ்சிய 25 பகுதிகள் நான்காண்டுகளில் தொகுத்து முடிக்கப் பெறும் என்ற அரசின் அறிவிப்பினைத் தொடர்ந்து, தொய்வுற்றிருந்த அகரமுதலித் திட்டத்திற்குப் புத்துயிர் ஊட்டி, போதுமான நிதியுதவியும் வழங்கி, பணிகள் முடுக்கிவிடப்பட்டதன் விளைவாய், ஆண்டுக்கு ஆறு பகுதிகள் என்ற முறையில், முதற்கட்டமாகத் தொகுத்து அச்சிட்டு முடிக்கப்பட்ட 'ச' மற்றும் 'த' வரிசைச் சொற்களின் 6 பகுதிகள் அண்மையில் 9.8.2005 அன்று என்னால் வெளியிடப்பெற்றன. அதனைத் தொடர்ந்து இரண்டாவது கட்டமாக 'ந' மற்றும் 'ப' வரிசை சொற்களில், 6 பகுதிகள் தொகுத்து முடிக்கப்பட்டு அச்சிடப்பட்டு அவை தற்போது வெளியிடப்படுவதை அறிந்து பெரு மகிழ்வு அடைகிறேன்.

'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிப்' பணி சீரிய பணி. அந்தச் சீரிய பணியில் ஈடுபட்டு செந்தமிழைச் செழுந்தமிழாய் ஆக்கிவரும் அனைவருக்கும் என்னுடைய வாழ்த்துகள்.

தமிழ் வாழ்க ! தமிழ்ப் பணி வளர்க !

ஜெ ஜெயலலிதா
தமிழக முதலமைச்சர்

# தமிழ்நாடு அரசு

சி.வி.சண்முகம்
கல்வி மற்றும் வணிகவரித் துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

## அணிந்துரை

"தமிழுண்டு தமிழ் மக்களுண்டு – இன்பத்
தமிழுக்கு நாளும் செய்வோம் நல்ல தொண்டு"
– (பாவேந்தர்)

மிகப் பழங் காலந்தொட்டு மொழி பற்றிய ஆய்வு இருந்து வந்துள்ளது என்பதற்குச் சான்றுகள் உள்ளன என்பர் மொழியாராய்ச்சியாளர்கள். தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்கள் பண்டைக் காலத்தில் கொண்டிருந்த மொழி பற்றிய தெளிவான அறிவினைத் தெற்றெனத் தெரிவிப்பனவாக இருப்பதைக் காணலாம். மொழியானது மாறும் தன்மை கொண்டது; பழமையான மொழிக் கூறுகளில் சில அழிவதும் புதியதாக சில தோன்றுவதும் மொழி வழக்கில் இயல்பு என்பர் அறிஞர் பெருமக்கள்.

தமிழ் மொழியைப் பொறுத்தவரை, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலான இடைவெளியில் சிற்சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதை மறுக்கவியலாது. பழைய சொற்கள் சில வழக்கொழிந்துள்ளன. புதிய சொற்கள் பல உருவாகியுள்ளன. புதிய கண்டுபிடிப்புகளையும், புதுப்புனைவுகளையும் வெளிப்படுத்த புதுச் சொற்கள் தேவை. இது மொழி வளர்ச்சிக்கு உறுதுணையாய் அமையும் என்பதில் ஐயமில்லை.

ஞாலத் தொன்மொழிகளுள் தாய்மையும், தலைமையும், தகைமையும் கொண்டது நம் தமிழ்மொழியாகும். தமிழின் தூய்மையையும், மாண்பையும், தனித்தியங்கும் ஆற்றலையும், இயற்கைச் சிறப்பையும் இனிமையையும், எளிமையையும் விரிவாக எடுத்துக்காட்டி நிலைநாட்டிய பெருமை 'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணர் அவர்களுக்கு உண்டு. சொற்களை அகழ்வாய்வு செய்வதன்வழி மொழிக்கு அகழ்வாய்வு என்ற துறையைத் தமிழுக்கு அறிமுகப்படுத்திய பெருமை அவரைச் சாரும்.

அத்தகைய மாபெரும் அறிஞர் காட்டியுள்ள நெறிமுறைகளை அடியொற்றி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி பகுதிகள் வெளிவந்த வண்ணம் உள்ளன. அண்மையில் 'ச'கரம் மற்றும் 'த'கரம் வரிசையில் 6 பகுதிகள் மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின்

திருக்கரங்களினால் வெளியிடப்பெற்றுள்ளன. அதனைத் தொடர்ந்து தற்போது 'ந'கரம் மற்றும் 'ப'கரம் வரிசையில் 6 பகுதிகள் வெளியிடப் பெறுகின்றன என்பதையறிந்து மகிழ்கிறேன். இந்த சீரியத் திட்டத்திற்கு அனைத்து வகையிலும் பேராக்கமும், பேராதரவும் நல்கி வரும் நம் தமிழக முதலமைச்சர் மாண்புமிகு புரட்சித் தலைவி 'அம்மா' அவர்களுக்கு மனமார்ந்த நன்றியினை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தியாவிலேயே, ஏன் ஆசியக் கண்டத்திலேயே தலைசிறந்து விளங்கும், தன்னிகரில்லாத் தங்கத் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின் ஆட்சிக் காலம் பொற்காலம் என்று மேனாட்டரும் புகழ்பாடுகின்றனர். சோதனைகளை முறியடித்து, சாதனைக்கு மேல் சாதனைப் படைத்து, வெற்றிக் கொடி நாட்டி வரும் மாண்புமிகு முதலமைச்சர் 'அம்மா' அவர்களின் சாதனைகள் நீண்டு தொடரும் என்பதில் அணுவளவும் ஐயமில்லை.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி வெளியீடுகள் வருவதில் அரும்பங்காற்றிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் பொறுப்பு இயக்குநராகப் பதவி வகிக்கும் தமிழ் வளர்ச்சிப் பண்பாடு மற்றும் அறநிலையத் துறை அரசு செயலாளர் முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப., அவர்களுக்கும், நூல்களை உருவாக்குவதற்கு அயராதுழைத்த அகரமுதலித் திட்ட இயக்ககப் பணியாளர்களுக்கும் என் மனமுவந்த பாராட்டுக்கள்.

சி.வி.சண்முகம்

சென்னை.

*முனைவர்.பு.ஏ. இராமையா,* இ.ஆ.ப.,
அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி – பண்பாடு
(ம) அறநிலையத் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்,

## பதிப்புரை

மொழி வளர்ச்சியின் அளவுகோல் அகரமுதலி எனில், அது மிகவும் பொருந்தும். ஒரு மொழியில் வெளிவந்துள்ள அகரமுதலிகள், அம்மொழி எந்தெந்தத் துறையில் சொல்வளம் பெற்றுள்ளது என்பதைக் காட்டும் வரலாற்றுப் பெட்டகமாகும். ஒரு மொழியின் சொல்வளத்தைத் தெரிந்து கொள்ளவும், சொற்களின் பொருள் வீச்சைத் துல்லியமாகப் புரிந்து கொள்ளவும் அகரமுதலி உதவுகிறது எனில், அது மிகையன்று.

செந்தமிழின் தொன்மையையும், பழமையையும் பறைசாற்றும் நோக்கில், தமிழ்நாடு அரசால் உருவாக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் தற்போது ஆறாம் மடலம்–மூன்றாம் பாகத்தை (பெ–பௌ) வெளியிடுகின்றது. இந்நூல் பேரகரமுதலி வெளியீடுகள் வரிசையில் பதினெட்டாவது பகுதியாகும்.

செந்தமிழ் மீட்பர் தேவநேயப் பாவாணர் அவர்களின் வழிகாட்டு நெறிமுறைகளின் அடிப்படையில், வேர்ச்சொல் நெறிமுறைக்கு மெருகூட்டும் சொற்கள் இந்நூலில் அழகுறக் காட்டப்பட்டுள்ளன. சான்றாக, பேசு என்ற சொல்லுக்கான மூலத்தைக் காட்டும் வகையைக் காணலாம்.

பொள் – துளை
பொள்ளுதல் – துளைத்தல்
பொள் → பொய் (ஒ.நோ.) தொள் → தொய்

பொய்தல் – 1. துளைபடுதல்
2. துளையினின்று ஒழுகுதல்

பொய் → பெய் 1. மேலினின்று ஒழுகுதல்
2. வார்த்தல்
3. சிறுநீர் கழித்தல்

பெய் → பேய் (மழை பேய்ந்தும் கெட்டது
மழை ஒய்ந்தும் கெட்டது – வழக்கு)

பேய் → பேயு → பேசு (ஒ.நோ.) தேய் → தேயு → தேசு

பேசுதல் – வான் நீரை ஒழுக விடுவது போன்று வாய்ச்சொல்லை ஒழுகவிடுதல்.

பெய்தல் என்ற சொல்லுக்கு 16 வகைப் பொருள்களும் அவற்றிற்குரிய இலக்கிய மேற்கோள்களும் இந்தத் தொகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

-----2-----

பொத்தகம் என்ற சொல்லுக்கு பொரு → பொருத்து → பொருத்தகம் → பொத்தகம் என்று பாவாணர் நெறிப்படி சொற்பிறப்பியல் கொடுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

பொருள் என்ற சொல்லுக்கு 27 வகையான பொருள் விளக்கங்களும் மேற்கோள்களும் காட்டப்பட்டுள்ளன.

பொறி என்ற சொல்லுக்கு 32 வகையான பொருள் விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

அடுத்து, *'பேறு'* என்ற சொல்லுக்கு 14 வகைப் பொருள் விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. பேறு என்னும் சொல் புகல், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் ஆகிய பதினாறு வகைப்பட்ட செல்வங்களைக் குறிப்பதையும் காணலாம்.

போதல் என்ற சொல்லுக்கு மட்டும் 27 வகை நேர்வினைப் பொருள்களும், துணை வினைப் பொருள்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

*"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"* என்பது தொல்காப்பியம். தமிழிலும் பலசொற்களைக் கண்ட அல்லது கேட்டமட்டில் அவற்றின் வேர்ப்பொருளைக் காணமுடியாது. சில சொற்களில் விளங்கித் தோன்றும்; சிலவற்றில் மறைந்து நிற்கும். மறைந்து நிற்பவற்றை ஆய்ந்து காண வேண்டும். அதனால் தான் *"மொழிப் பொருட்காரணம் விழிப்பத் தோன்றா"* என்றார் தொல்காப்பியர். தமிழ் வரலாற்றையும், தமிழர் வரலாற்றையும் ஆழ்ந்தாய்ந்து தமிழ் மொழியே உலகின் முதன்மொழி என்று நிறுவிக் காட்டிய பாவாணரின் தமிழ்த் தொண்டு என்றென்றும் போற்றப்பெறும் என்பதில் ஐயமில்லை.

பேரகரமுதலி எஞ்சிய பகுதிகள் யாவும் திட்டமிட்டவாறு வெளிவருதற்குச் செயலூக்கம் அளித்துவரும் **மாண்புமிகு தமிழக முதலமைச்சர்** அவர்களுக்கு இத்துறையின் பொறுப்பு இயக்குநர் என்ற முறையில் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். **மாண்புமிகு முதலமைச்சர்** அவர்களின் ஆணையின் வண்ணம் நல்லாதரவு நல்கும் **மாண்புமிகு கல்வி அமைச்சர்** அவர்களுக்கும் மேலான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் வெளிவர அயராதுழைத்த தொகுப்பாளர் (பகுதிப் பொறுப்பாளர்), பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர்கள் மற்றும் திட்டப் பணியாளர்கள் / அனைவருக்கும் எனது மனமார்ந்த பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்வதுடன், நூலினை நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை

–07–2005

(பு.ஏ. இராமையா)

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## பெ

**பெ** pe, பெ. (n.) தமிழ் நெடுங்கணக்கில் 'ப்' என்ற மெய்யும் 'எ' என்ற உயிர்க்குறிலும் சேர்ந்து உருவான உயிர்மெய்யெழுத்து; the compound of, `p' and, `a'

*[ ப் + எ = பெ ]*

**பெங்கு** pengu, பெ. (n.) ஒருவகைக் கள் (மூ.அ.); a kind of toddy.

**பெட்டகங்கொட்டு—தல்** peṭṭagaṅ- koṭṭu-, பெ. (n.) மணப்பெண்ணுக்கு வரிசை யெடுத்துச் செல்லும் போது கைதட்டி மங்கலவொலி எழுப்புதல்; to clap the hands in applause when presents are carried in procession to a bride.

*[ பெட்டகம் + கொட்டு—,தல் ]*

**பெட்டகத்துத்தி** peṭṭaga-t-tutti, பெ. (n.) வெண்டைவகை; (மலை) musk-mallow.

*[ பெட்டகம் + துத்தி ]*

**பெட்டகநூல்** peeṭṭaga-nūl, பெ. (n.) வழிகாட்டுப்பொத்தகம்; source-book.

*[ பெட்டகம் + நூல் ]*

**பெட்டகப்பெட்டி** peṭṭaga-p-peṭṭi, பெ. (n.) மரம் அல்லது இரும்பாலாகிய பெரும் பேழை; safe or treasure-chest made either of wood or iron.

*[ பெட்டகம் + பெட்டி ]*

**பெட்டகம்** peṭṭagam, பெ. (n.) 1. பெட்டி; chest, box. *'ஆங்கிலங்கு மளப்பரும் பெட்டகம்'* (திருவாலவா;27:22.) 2. மணப்பெண்ணுக்கு வரிசைகள் கொண்டு செல்லும் பெட்டி; a box in which presents to the beride are carried in procession.

*[ பிள் → பெள் → பெட்டி → பெட்டகம் ]* (வே.க.110)

**பெட்டல்** peṭṭgal, பெ. (n.) 1. விருப்பம்; (திவா). desire, longin. *'பிரித்தலும் பெட்டலும்'* (தொல்.கற்பு. 6). 2. காதலித்தல்; loving. *'பிறன் பொருளாட் பெட்டொழுகும் பேதைமை'* (குறள்.141). 3. செய்ய விரும்புதல்; desire to do. *'பெட்டவை செய்யார்'* (இனி. நாற். 23).

*[ பிள் → பெள் = பெள் + தல் = பெட்டல் ]* (வே. க. 88)

**பெட்டன்** peṭṭaṉ, பெ. (n.) பொய்யன்; liar, deceiful person. *'பெட்டனாகிலுந் திருவடிப் பிழையேன்,'* (தேவா. 1110, 2).

*[ பெட்டு → பெட்டன் ]*

**பெட்டார்** peṭṭār, பெ. (n.) 1. நண்பர்; friends. (சூடா). 2. விரும்பியவர்; lovers. *'பேணாது பெட்டார்'* (குறள் 1178).

*[ பெள் → பெட்டார் ]*

**பெட்டி**[1] peṭṭi, பெ. (n.) **1.** பண்டங்களை வைத்துக் காக்கவுதவும் மூடியுள்ள கலம்; chest, trunk, coffer. **2.** கூடை (வின்.); basket, flower-basket. **3.** தொடர்வண்டி முதலியவற்றின் அறை; compartment, as in a railway carriage. **4.** வண்டியோட்டுபவன் உட்காரும் இடம்; driver's seat in a carriage. **5.** வண்டியில் உட்காருமிடத்திற்கு அடியில் சிறுபொருள்கள் வைப்பதற்கான இடம்; fixed box under the seat in a carriage. **6.** சான்றாளி; witness box. **7.** சுண்ணாம்பு முதலியன அளக்கும் முகத் தலளவை; a measure of capacity, as in measuring lime.

*[ பிள் → பெள் → பெட்டி ]*



**பெட்டி**[2] peṭṭi, பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

**பெட்டிக் கோரை** peṭṭi-k-kōrai, பெ. (n.) கோரை வகை; a glalbrous rush-like sedge.

*[ பெட்டி + கோரை ]*

**பெட்டிகரிபிலை** pieṭṭi-karipilai, பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

**பெட்டிப்பல்லக்கு** peṭṭi-p-pallakku, பெ. (n.) பெட்டியின் உருவில் அமைந்த பல்லக்கு வகை; box-like-palanguin.

*[ பெட்டி + பல்லக்கு ]*



**பெட்டிபோடு–தல்**[1] peṭṭi-pōḍu-, செ.கு.வி. (v.i.) ஒத்திசை, இசைத்தல் (இக்.வு.); to play on the harmoniam. "பெட்டி போடுகிற பையன் இன்னும் வரவில்லையா?" (உ.வ.)

*[ பெட்டி + போடுதல் ]*

**பெட்டிபோடு–தல்**[2] peṭṭi-pōḍu-, செ.கு.வி. (v.i.) சூடேறிய மாழைப்பெட்டியால் துணியின் சுருக்கம் நீங்கத் தேய்த்து மடித்து வைத்தல்; inoning.

*[ பெட்டி + போடு–, ]*

**பெட்டிமோதிரம்** petti-mōdiram, பெ. (n.) மோதிர வகை (புதுவை.); a kind of ring.

*[ பெட்டி + மோதிரம் ]*

**பெட்டியடி** peṭṭi-y-adi, பெ. (n.) பண வரவு செலவு செய்யுங் கணக்கப் பிள்ளை; cashkeeper.

*[ பெள் → பெட்டி → பெட்டியடி ]*

**பெட்டியிழைப்புளி** petti-y-ilaippuli, பெ. (n.) இழைப்புளி வகை; (கட்டட. நாமா. 39) panel plane.

*[ பெட்டி + இழைப்புளி ]*



**பெட்டிலிக்குழல்** pettili-k-kulalr, பெ. (n.) *சுங்குத்தான் குழல்* பார்க்க; see *sunguttan kulal.*

*[ பெட்டிலி + குழல் ]*

**பெட்டிவண்டி** petti-vandi, பெ. (n.) வண்டி வகை; bullock-coach.

*[ பெட்டி + வண்டி ]*

**பெட்டிவரிசை** petti-varišai, பெ. (n.) மணப்பெண் புகுந்தவீடு செல்லும்போது கொண்டு செல்லும் வரிசை; presents taken by a bride when she goes to her bridegroom's house.

*[ பெட்டி + வரிசை ]*

**பெட்டிவாணம்** petti-vānam, பெ. (n.) பெட்டியினின்று பல உருவங்களில் வெளிப் படும் வாணவகை; fire works in the shap of a case from which various figures are liberated, one after another.

*[ பெட்டி + வாணம் ]*

**பெட்டு** pettu, பெ. (n.) **1.** பொய் (பிங்); lie, false- hood. *'மானுடம் போன்று பெட்டினை யுரைப்போர்'* (பதினொ. கோபப்பிர). **2.** மயக்குச்சொல்; delusive word. *'கயவர் சொல்லும் பெட்டைக் கெடுக்கும்'* (திவ். இராமாநுச நூற். 93).

*[ பெள் → பெட்டல் → பெட்டு ]*
(வே. க. 89)

**பெட்டெனல்** pettendal, பெ (n.) விரைவுக்குறிப்பு; expr. signi fying. quickness. *'ஏகுதிர் பெட்டென்று'* (காஞ்சிப்பு. நாடு. 21)

**ம.** பெட்டெந்நு

*[ பெட்டு + எனல் ]*

**பெட்டை[1]** pettai, பெ. (n.) **1.** விலங்கு புட்கள் இவற்றின் பெண்பால் (தொல். பொ. 607/8); female of animals and birds. **2.** பெண்; woman, girl. *"ஒட்டகங் குதிரை கழுதை மரையிவை பெட்டை யென்னும் பெயர்க் கொடைக் குரிய"* (தொல். மரபு. 53). *"புள்ளும் உரிய அப்பெயர்க் கென்ப."* (தொல். மரபு. 54).

**ம., தெ.** பெட்ட.

*[ பெள் → பெட்டை ]* (வே. க. 89)

**பெட்டை[2]** pettai, பெ. (n.) **1.** குருடு; blindness **2.** குறைவு (யாழ்ப்.); imperfection.

*[ பெள் → பெட்டை ]*

**பெட்டைக்கட்டு** pettai-k-kattu, பெ. (n.) தளர்ந்த முடிச்சு (யாழ்ப்.); loose knot, not badly tide.

*[ பெள் → பெட்டை + கட்டு ]*
(வே. க. 89)

**பெட்டைக்கடல்** peṭṭaik-k-kaṭal, பெ. (n.) ஆழமற்ற கடல்; shallow sea.

*[ பெள் → பெட்டை + கடல் ]*

**பெட்டைக்கண்** peṭṭai-k-kaṉ, பெ. (n.) 1. குறையுடய கண் (வின்.); defective eye. 2. மாறு கண்; squint eye. 3. சிறுகண்; small-eye. 4. தேங்காயின் மட்டையிலுள்ள துளையில்லாக் கண்கள்; the two false eyes of a coconut.

*[ பெள் → பெட்டை + கண் ]*

**பெட்டைக்காடு** peṭṭai-k-kāḍu, பெ. (n.) விளைவற்ற நிலம்; barren tract of land.

*[ பெள் → பெட்டை = காடு ]*

**பெட்டைக்குஞ்சு** peṭṭai-k-kuñju, பெ. (n.) *பெட்டைக் கோழி* பார்க்க; see *peṭṭai-k-kōḻi.*

*[ பெட்டை + குஞ்சு ]*

**பெட்டைக் கோழி** peṭṭai-k-kōḻi, பெ. (n.) இளம் பெண்கோழி; Pullet, moorhen.

*[ பெட்டை + கோழி ]*



**பெட்டைமாறி[1]** peṭṭai-mari, பெ. (n.) 1. கெட்ட வொழுக்க முடையவளின் கணவன்; cuckold. 2. ஆண் தன்மையுள்ள பெண்; masculine woman, Nirago.

*[ பெள் → பெட்டை → மாறி ]*

**பெட்டைமாறி[2]** peṭṭai-māṟi, பெ. (n.) மனைவி தீயவொழுக்கத்தைக் கண்டும் காணாதவன் போலிருப்பவன்; man who winks at wife's in fidelity.

*[ பெள் → பெட்டை + மாறி ]*

**பெட்டை முடிச்சு** peṭṭai-muḍiccu, பெ. (n.) *பெட்டைக் கட்டு* பார்க்க; see *peṭṭai-k-kaṭṭu.*

*[ பெள் → பெட்டை + முடிச்சு ]*

**பெட்டையன்** peṭṭaiyaṉ, பெ. (n.) 1. அலி; hermaphrodite, eunuch. 2. ஆண்மையற்றவன்; effeminate man.

*[ பெள் → பெட்டை + அன் ]*

**பெட்ப** pietpa, பெ. (n.) மிக; much, exceedingy. '*பெட்ப நகுகின்றது*' (சீவக. 1662).

*[ பெள் → பெட்ப ]*

**பெட்பு[1]** peṭpu, பெ. (n.) 1. விருப்பம்; desire. (சூடா) '*குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்*' (தொல். களவு. 11). '*பெட்புறும்*' (கம்பரா. மூலபல. 135). 2. பேணுகை; cherishing, regard. '*பெட்ட வாயில் பெற் றிரவு வலியுறுப்பினும்*' (தொல். களவு. 11). 3. அன்பு (சூடா); love. 4. பெருமை (சூடா); greatness. 5. தன்மை; nature.

*[ பிள் → பெள். பெள் + பு → பெட்பு ]*
(வே. க. 88)

**பெட்பு²** petpu, பெ. (n.) பாதுகாப்பு; (தொல். சொல். 338). protection.

*[ பிள் + பெள். பெள் + பு = பெட்பு ]*
(வே. க. 88)

**பெடம்** pedam, பெ. (n.) மிகுதி (அக. நி.); much.

தெ. பெத்த.

*[ பெள் → பெடம் ]*

**பெடை** peṭai, பெ. (n.) புட்களின் பெண் பால்; female of birds. (தெல். பொ. 609) '*பேடையும் பெடையும் நாடின் ஒன்றும்*' (தொ. மரபு. 55) "*செந்தயைலன்றில் இறவினன்ன கொடுவாய்ப் பெடையொடு*" (குறுந். 160).

ம. பெட, க. ஹேட்டே.

*[ பெள் + பெட்டை + பெடை ]*
(வே. க. 88)

**பெடைமாறி** peḍai-māṟi, பெ. (n.) பெட்டை மாறி (வின்.) பார்க்க; see peṭṭaimāṟi.

*[ பெடை + மாறி ]*

**பெண்** peṇ, பெ. (n.) 1. பெண் பாலினம்; womankind. "*பெண்ணே பெருமையுடைத்து*" (குறள். 907). "*பெண்ணும் பிணாவும் மக்கட்குரிய*" (தொல். மரபு. 90). 2. மகள்; daughter. "*இந்திரன் பெண்ணை*" (கந்தபு. திருப்ப. 35). 3. சிறுமி; girl. 4. மணமகள்; bride. '*பெண்கோ ளொழுக்கம் கண்கொள நோக்கி*' (அகநா. 112). 5. மனைவி; wife. "*பெண்ணீற் றுற்றென*" (புறநா. 82). 6. விலங்கு நிலைத் திணைகளின் பெடை (திவா); female of animals and plants. 7. பெண்டன்மை; womanish ness.

ம. பெண். க. பெண், ஹெண்ணு.

*[ பெள் + பெண் ]*
(வே.க.90)



**பெண்கட்டு–தல்** peṇ-kaṭṭu, செ.கு.வி. (v.i.) *பெண்கொள்* பார்க்க; see *peṇkoḷ*.

*[ பெள் + பெண் + கட்டு–தல் ]*

**பெண்கரு** peṇ-karu, பெ. (n.) சினை முட்டை; ovum.

*[ பெள் → பெண் + கரு → பெண்கரு ]*
(வே. க. 90)

**பெண்கலை** peṇ-kalai, பெ. (n.) வண்ணப் பாவின் பிற்பகுதி (வின்.) ; latter half of a vaṇṇam verse.

*[ பெள் → பெண் → பெண்கலை ]*

**பெண்கிரகம்** peṇ-kiragam, பெ. (n.) கதிரவனைச் சுற்றிச் செல்லும் திங்கள், வெள்ளியாகிய பெண்பாற் கோள்கள். female, planet, as moom and venus.

*[ பெள் → பெண் +* Skt. graha. *த. கிரகம் ]*

**பெண்குணம்** peṇ-kuṇam, பெ. (n.) *மகடூஉக் குணம்* பார்க்க. see *magaḍūū-k-kuṇam.*

*[ பெண் + குணம் ]*

**பெண்குமைஞ்சான்** peṇ-kumaiñjaṉ, பெ. (n.) சுராலைத் தூள் (சாம்பிராணி) (சங்.அக.); benzin.

*[ பெள் → பெண் → பெண்குமைஞ்சான் ]*

**பெண்குறி** peṇkuri, பெ. (n.) அல்குல்; pedendum muliebre.

*[ பெள் → பெண் + குறி ]*

**பெண்கேள்–தல்** peṇ-kēḷ, செ.குன்றாவி. (v.t.). திருமணஞ்செய்து கொடுக்கும்படி பெற்றோரிடம் மகட் கேட்டல்; to ask the parents of a girl to give her in marriage. "தஞ்சாவூரிலிருந்து பெண் கேட்டு வந்திருக்கிறார்கள்."

*[ பெள் → பெண் + கேள் –, ]*

**பெண்கை** peṇ-kai, பெ. (n.) பெண்பாற் செயல் குறிக்கும் நளிநயக்கை. (சிலப். 3, 18. உரை); gesture of hands representing the action of women.

*[ பெள் → பெண் → பெண்கை ]*

**பெண்கொடி** peṇ-koḍi, பெ. (n.) மெல்லியலான பெண்; woman, tender as a vine. *'ஓர் பெண் கொடியை வதை செய்தான்'* (திவ். நாய்ச். 8:9).

*[ பெள் → பெண் + கொடி ]*

**பெண்கொடு–த்தல்** peṇ-koḍu, பெ. (n.) பெண்ணைத் திருமணஞ் செய்து கொடுத்தல்; to give a girl in marriage. "என் மாமன் எனக்குப் பெண்கொடுக்கமறுக்கிறான்."

*[ பெள் → பெண் கொடு–த்தல் ]*

**பெண்கொடுத்தமாமன்** peṇ-koḍutta-māmaṉ, பெ. (n.) ஒருவனுடைய மனைவியின் தந்தை; a man's father-in-law, dist fr. tāy-māmaṉ.

*[ பெண் + கொடுத்த + மாமன் ]*

மாமன் என்னுஞ் சொல் அம்மானையுங் குறிக்கலானமையின் அதனின்று வேறுபடுத்தும் பொருட்டுப் பெண் கொடுத்த என்னும் அடைமொழி சேர்ந்தது.

**பெண்கொலை** peṇ-kolai, பெ. (n.) பெண்ணைக் கொலை செய்தல்; murder of a women. *'பெண் கொலை புரிந்த நன்னன் போல'* (குறுந். 292)

*[ பெள் → பெண் + கொலை ]*

**பெண்கொள்(ளு)–தல்** peṇ-koḷ, செ.கு.வி. (v.i.) பெண்ணைத் திருமணஞ்செய்தல்; to marry or take a wife. *'பேய் கொண்டாலுங் கொள்ளலாம் பெண் கொள்ளலாகாதே'* (சிவப். பிர. வரலாறு. பக். 19).

*[ பெள் → பெண் + கொள்(ளு)–தல் ]*

**பெண்கோலம்** peṇ-kōlam, பெ. (n.) **1.** மகளிர் பூணுங் கோலம்; female attire or costume. **2.** பெண் புனைவு (வேடம்) (வின்.); female part or disguise.

*[ பெண் + கோலம் ]*

**பெண்கோள்** peṇ-kōḷ, பெ. (n.) பெண்ணை மணம்புரிந்து உறவுசெய்து கொள்கை; entering into alliance with another family by marrying a girl. "*பெண் கோளொழுக்கத்தி னொத்து மறுத்தல் பற்றி*" (தொல். பொ. 79, உரை). **2.** *பெண் கிரகம்* (நாமதீப்.101) பார்க்க; see *peṇ-kiragam.*

*[ பெண் + கோள் ]*

**பெண்சக்கரவர்த்தி** peṇ-cakkaravartti, பெ. (n.) 1. பேரரசி; empress; *'பெண் சக்கரவர்த்தி யுடனெய்திய பள்ளியினி தெழுந்து'* (விக்கிரம. உலா. 80). 2. *பெண்ணாயகம்* பார்க்க; see *peṇ-nāyagam.*

*[ பெண் +* Skt. cakravarti. *த. சக்ரவர்த்தி ]*

**பெண்சகோதரம்** peṇ-šagōdaran, பெ. (n.) உடன்பிறந்தாள்; sister.

*[ பெண் +* Skt. sahōdara. *த.சகோதரம் ]*

**பெண்சந்ததி** peṇ-šandadi, பெ. (n.) 1. பெண் குழந்தை; female issue. 2. பெண் பிறங்கடை; female heir.

*[ பெண் +* Skt. santati. *த.சந்ததி ]*

**பெண்சரக்கு** peṇ-šarakku, பெ. (n.) படிக்காரம், பழப்புளி, காடி முதலிய புளிப்புள்ள சரக்குகள் (மூ.அ); any acid which a readily combines with an alkali or base, as paḍikkāram, paḻa-p-puli, kāḍi dist. fr.āṉ-šarakku.

*[ பெண் + சரக்கு ]*

**பெண்சனம்** peṇ-šaṉam, பெ. (n.) மகளிர் கூட்டம்; womanfolk. *'தண்கோசம்பிப் பெண்சன நோக்கி'* (பெருங்.நரவாண.9, 34).

*[ பெண் +* Skt. jana. *த. சனம் ]*

**பெண்சாதி** peṇ-šadi, பெ. (n.) 1. பெண்பாலர்; woman kind. *'குணச் சிறப்பால் உலகத்துப் பெண்சாதி விருப்பமுற்ற...மகளிர்.'* (மதுரைக். 555, உரை). 2. மனைவி; wife. *'உன்தன் வீட்டுப் பெண் சாதிக்காக'* (இராமநா. அயோத்.8).

*[ பெள் → பெண்+ சாதி ]*

**பெண்சாவி** peṇ-šāvi, பெ. (n.) துளையுள்ள தாழ்க்கோல் ; tubular key bored key.

*[ பெள் → பெண்.*Port.cāvi. *த.சாவி]*



**பெண்சிரட்டை** peṇ-širaṭṭai, பெ. (n.) கண்ணுள்ள கொட்டாங்கச்சி (நெல்லை.); the outer shell of that half of a broken cocount containing its eye.

*[ பெள் → பெண் → பெண்சிரட்டை ]*



**பெண்சினை** peṇ-šiṉai, பெ. (n.) *பெண்கரு* பார்க்க; see *peṇkaru.*

*[ பெண் + சினை ]*

**பெண்சீக்கு** peṇ-šīkku, பெ. (n.) தகாப்புணர்ச்சி யால் வரும் பாலியல் நோய்; venereal disease.

*[ பெண் +* E.sick > *த. சீக்கு ]*

**பெண்சோடினை** peṇ-šōḍiṉai, பெ. (n.) **1.** நாடகத்திற் கொள்ளும் பெண் கோலம்; female attire for the stage. **2.** மணப் பெண்ணை ஒப்பனை செய்தல்; decoration of a women, as a bride.

*[ பெள் → பெண் + சோடினை ]*

சோடனை
சுவடி → சோடி → சோடினை = ஒப்பனை.

**பெண்டகம்** peṇḍagam, பெ. (n.) *பெண்டகன்* பார்க்க, see *peṇḍagaṉ.*

*[ பெள் → பெண் → பெண்டு →பெண்டகம் ]*
(வே.க.பக்.90)

**பெண்டகன்** peṇḍagaṉ, பெ. (n.) அலி (பிங்.); hermaphrodite, eunuch.

**க.** ஹெண்ணுக.

*[ பெள் → பெண் → பெண்டு →பெண்டகம் ]*
(வே.க.90)

**பெண்டகை** peṇḍagai, பெ. (n.) *பெண்டகைமை* பார்க்க; see peṇḍagaimai.

*[ பெண் + தகை → பெண்டகை ]*

**பெண்டகைமை** peṇḍagaimai, பெ. (n.) பெண்மைக் குணம்; womanliness.

*[ பெண் + தகைமை ]*

**பெண்டன்** peṇḍaṉ, பெ. (n.) *பெண்டகன்* பார்க்க; see *peṇḍagaṉ.*

**ம.** பெண்டி, **க.** பெண்ட், கெண்ட, **தெ.** பெண்ட்டி.

*[ பெண்டு → பெண்டன் = பேடி (திவா.) ]*
(வே.க. பக். 92)

**பெண்டாட்டி** peṇḍaṭṭi, பெ. (n.) **1.** பெண்; woman. *'செல்லப் பெண்டாட்டி நீ'* (திவ். திருப்பா. **11**). *"ஒரு பெண்டாட்டி தமரொடு கலாய்த்து"* (இறை. கள.**1**, உரை). **2.** மனைவி; wife. *'கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி'* (திடுகடு. **96**). **3.** வேலைக் காரி; woman servant. (s.i.i. **11. 483**).

**க.** ஹெண்டத்தி

*[ பெண்டு + ஆள் → பெண்டாட்டி ]*

**பெண்டாளு-தல்** peṇḍālu, செ.குன்றாவி. (v.t.) மனைவியாக நுகர்தல்; to have as wife.

**தெ.** பெண்ட்லாடு.

*[ பெண்டு + ஆள் ]*

**பெண்டிழந்தான் சுழி** peṇṭilantāṉ-euḻi, பெ. (n.) தன்னை உடையவனது மனைவியை இழக்கச் செய்வதாகக் கருதப்படும் மாட்டுச் சுழிவகை (மாட்டுவா. **22**).; unlucky mark in cattle in the form of a line across the back, indicating that the owner will lose his wife.

*[ பெண்டு + இழந்தான் + சுழி ]*

**பெண்டு** peṇḍu, பெ. (n.) **1.** பெண்; woman. *"ஒரு பெண்டா லிதய முருகினை யாயின்"* (வெங்கைக்கோ. **47**). **2.** மனைவி; wife. *"வனை நல முடையளோ மகிழ்நின் பெண்டே"* (ஐங்குறு. **57**).

**ம.** பெண்டி, **க.** பெண்ட, ஹெண்ட, **தெ.** பெண்ட்டி

*[ பெண் → பெண்டு ]* (வே.க.**92**)

**பெண்டுக்கஞ்சி** peṇḍukkañji, பெ. (n.) ஆண்மையற்றவன்; effeminate-man.

*[ பெண்டுக்கு + அஞ்சி ]*

**பெண்டுக்குமேய்க்கி** peṇḍukku-mēykki, பெ. (n.) 1. பெண் கொண்ட வீட்டைச் சேர்ந்து தன் மனைவியின். ஆடுகளை மேய்க்கும் இடையர் இனத்தவன்; a division of a itaiyar who tend the sheep of their wives and observe matriarchal customs. 2. மனைவிக்குக் கீழடங்கி நடப்பவன்; henpecked husband.

*[ பெண்டு + மேய்க்கி ]*

**பெண்டுகட்டு—தல்** peṇḍu-kaṭṭu, செ.குன்றாவி. (v.t.) தகாத சேர்க்கை குறித்துப் பழிகூறுதல் (வின்.); to attribrute criminal intimacy with a person of the opposite sex.

*[ பெண்டு + கட்டு—தல் ]*

**பெண்டுகம்** peṇḍugam, பெ. (n.) *கழற்சி* பார்க்க (மலை); see *kaḻarci.*

*[ பெண் → பெண்டு → பெண்டுகம் ]*

**பெண்டுகள்சட்டி** peṇḍugal-šaṭṭi, பெ. (n.) 1. பெண்கொண்ட வீட்டைச் சேர்ந்து தன் மனைவியின் ஆடுகளை மேய்க்கும் இடையர்; a division of itḍaiyar who tend the sheep of their wives and observe matriarchal customs. 2. மனைவிக்குக் கீழடங்கி நடப்பவன்; henpecked husband.

*[ பெண்→பெண்டு – பெண்டுகள் + சட்டி ]*

(வே.க.92)
பெண்டு = பேடி

**பெண்டு பிள்ளை** peṇḍu-pillai, பெ. (n.) மனைவி குழந்தைகள் அடங்கிய குடும்பம்; family, as consisting of wife and children.

*[ பெண்டு + பிள்ளை ]*

**பெண்டுருவன்** peṇṭururan, பெ. (n.) திருமால் (நாம. தீப. 50); thirumāl, as having assumed the form of mogiṉi.

*[ பெண் → பெண்டு + வுரு → பெண்டுருவன் ]*

**பெண்டுவசட்டி** peṇḍuva-šaṭṭi, பெ. (n.) *பெண்டுகள் சட்டி* பார்க்க; see *peṇḍugal caṭṭi.*

*[ பெண்டுகள் + சட்டி → பெண்டுவசட்டி ]*

**பெண்டுவை—த்தல்** peṇḍu-vai, செ.குன்றா.வி. (v.t.) வைப்பாட்டியாகக் கொள்ளுதல்; to keep as concubine. *'நீரிவளைப் பெண்டுவைத்துக் கொள்ளும்'* (தெய்வச், விறலிவிடு. 292).

*[ பெண்டு + வை—த்தல் ]*

**பெண்டைக்காய்** peṇḍai-k-kāy, பெ. (n.) வெண்டைக் காய்; lady's finger.

*[ பெண்டை + காய் ]*

**பெண்டை மரக்கால்** peṇḍai-marakkāl, பெ. (n.) இரண்டரைப்படி கொள்ளும் தவச வளவை; containing two and a half paḍi.

*[ இரண்டரை → ரெண்டரை → பெண்டரை → பெண்டை + மரக்கால் ]*

**பெண்ணடி** peṇ-n-aḍi, பெ. (n.) பெண்பிறங்கடை; female child for heir. *"ஒரு பெண்ணடி தன் காணிக்குத் தேடக் கருத்தாகி"* (விறலிவிடு. 152).

*[ பெண் + அடி ]*

**பெண்ணரசி** peṇ-ṇ-araši, பெ. (n.) 1. ஆட்சிபுரியும் பெண்; queen consort. '*தன்னரசளித்த பெண்ணரசி*' (திருவிளை. பாயி. 11). 2. அழகிற் சிறந்தவள்; queenly woman.

*[ பெண் + அரிசி பெண்ணரசி ]*

**பெண்ணரசு** peṇ-ṇ-arašu, பெ. (n.) 1. *பெண்ணரசி* பார்க்க; see *peṇ-ṇ-araši.* 2. குடும்பத்தில் பெண் ஆளுமை; petticoat government.

*[ பெண் + அரசு → பெண்ணரசு ]*

**பெண்ணருங்கலம்** peṇ-ṇ-aruṅgalam, பெ. (n.) பெண்களிற் சிறந்தவள்; a gen among woman, as an ornament. "*பெண்ணருங்கலத்தொடு பிணைந்த பொருள்*" (சீவக. 198)

*[ பெண் + அருங்கலம் ]*

**பெண்ணலம்** peṇṇalam, பெ. (n.) 1. பெண்மைக்குணம்; womanliness. 2. பெண்ணின் அழகு, முதலியன; womanly grace. 3. பெண்ணின்பம்; enjoyment with a woman. "*பெண்ணலங் காதலிற் பேயுமாயினான்*" (சீவக. 2010).

*[ பெண் + நலம் ]*

**பெண்ணலி** peṇ-ṇ-ali, பெ. (n.) பெண் தன்மை மிக்க அலி; hermaphrodite with feminine characteristies predominating. (தொல். பொருள். 605. உரை)

*[ பெண் + அலி ]*

–பெண் ஆண் அல்லாதவன்–ன் அலி. அல்→அலி

**பெண்ணழைத்தல்** peṇ-ṇ-aḷaittal, பெ. (n.) திருமணத்திற்கு முன் மணமகளை மணமகன் வீட்டுக்கு அழைத்தல்; welcoming a bride at the bride groom's house just before wedding. 2. திருமணம் செய்து கொள்ளுதல் (யாழ்.அக.); marriage.

*[ பெண் + அழைத்தல் ]*

**பெண்ணன்** peṇṇaṉ, பெ. (n.) ஆண்மையற்ற (வீரமற்றவன்); effeminate man.

*[ பெள் + பெண் + பெண்ணன் ]*
(வே.க.91)

**பெண்ணாசி** pen-ṉāši, பெ. (n.) இல்லிமூக்கு (நாஞ்.); bleeding nose.

*[ பெள் + நாசி ]*

**பெண்ணாசை** peṇ-ṇ-āšai, பெ. (n.) பெண் மீது பற்று; love of woman.

*[ பெண் + ஆசை ]*

skt.nāsika. *த. நாசி*

**பெண்ணாட்சி** peṇ-ṇ-āṭci, பெ. (n.) பெண்ணாளுமை; woman personality.

*[ பெண் + ஆட்சி ]*

**பெண்ணாடை** peṇ-ṇ-āḍai, பெ. (n.) *பெண்ணுடை* பார்க்க; see *peṇ-ṇ-uḍai.*

*[ பெண் + ஆடை ]*

**பெண்ணாண்** peṇ-ṇ-aṉ, பெ. (n.) கணவன் மனைவியர்; (தம்பதிகள்)(நாமதீப. 176); husband and wife.

*[ பெள் → பெண் + ஆண் ]*
(வே.க.91)

**பெண்ணாய்ப்பிறந்தவள்** peṇ-ṇ-āy-p-piṟandaval, பெ. (n.) பெண்(நெல்லை); woman.

*[ பெண் + ஆய் + பிறந்தவள் ]*

**பெண்ணாயகம்** peṇ-ṇāyagam, பெ. (n.) பெண்களுக்குள் அரசி; queen among woman.

*[ பெண் + நாயகம் ]*

**பெண்ணாள்**[1] peṇ-ṇ-āḷ, பெ. (n.) நடவு முதலிய பயிர் வேலை செய்யும் உழத்தி; female farm-labourer.

மறுவ. நடவர்ன்

*[ பெண் + ஆள் ]*

**பெண்ணாள்**[2] peṇ-ṇ-āḷ, பெ. (n.) பெண்கோள் (வின்.); female naksatra, as kārttigai, Tiruvādirai etc.

*[ பெண் + நாள் → பெண்ணாள் ]*

**பெண்ணாளுமை** peṇ-ṇ-āṭci, பெ. (n.) *பெண்ணாட்சி* பார்க்க; see *peṇ-ṇ-āṭci.*

*[ பெண் + ஆளுமை ]*

**பெண்ணாறு** peṇ-ṇ-āṟu, பெ. (n.) கிழக்கு நோக்கியோடும் ஆறு; eastward flowing river, opp, to āṉ-āṟu. '*ஆணாறு பெண்ணாறு ஒன்றின்றிக்கே*' (ஈடு, **4, 4,** ப்ர).

*[ பெண் + ஆறு ]*

**பெண்ணியல்பு** peṇ-iyalpu, பெ. (n.) பெண்மை; womanish.

*[ பெண் + இயல்பு ]*

**பெண்ணிராசி** peṇ-ṇ-rāši, பெ. (n.) ஏழுவகை இராசிகள் (மங்களே. **2, 15,** உரை); female or even signs of the zodioc.

*[ பெண் + இராசி ]*

(skt. rāsi → த. இராசி)

**பெண்ணினம்** peṇ-ṇ-iṉam, பெ. (n.) மகளிர்; womankind.

*[ பெண் + இனம் ]*

**பெண்ணீர்மை** peṇṇīrmai, பெ. (n.) பெண்மைக் குணம்; womanliness. '*பெண்ணீர்மை கற்பழியா வாற்றால்*' (நல்வழி. **16).**

*[ பெண் + நீர்மை ]*

**பெண்ணுடம்பு** peṇ-ṇ-uḍambu, பெ. (n.) பெண் குறி (வின்.); redendum muliebre.

*[ பெண் + உடம்பு ]*

**பெண்ணுரிமை** pēṇ-ṇ-urimai, பெ. (n.) ஆணுக்கு நிகராகக் குமுகாயத்தில் சொத்துரிமை முதற்கொண்டு அனைத்து நிலையிலும் சம உரிமை அளித்தல்; woman's right.

*[ பெண் + உரிமை ]*

**பெண்விடுதலை** pēṇ-viḍudalai, பெ. (n.) *பெண்ணுரிமை* பார்க்க; see *peṇ-ṇ-urimai.*

*[ பெண் + விடுதலை ]*

**பெண்ணுலகு** peṇ-ṇ-ulagu, பெ. (n.) பெண்கள் மாத்திரமே வாழுவதாக் கருதப்படும் தீவு; an island said to be solely in habited by women. *'பெண்ணுல கேய்ப்ப'* (பெருங். உஞ்சைக். 42, 181)

*[ பெண் + உலகு ]*

**பெண்ணுழைப்பு** peṇ-ṇ-nulaippu, பெ. (n.) *பெண்பாடு* பார்க்க; see *peṇ pāṭu.*

*[ பெண் + உழைப்பு ]*

**பெண்ணுடை** peṇ-ṇ-udai, பெ. (n.) பெண்டிர்க்குரிய ஆடை (இ.வ.); female attire.

*[ பெண் + உடை ]*

**பெண்ணுறுப்பு** *peṇ-ṇ-uṟuppu,* பெ. (n.)
1. பெண்ணுக்குரிய உறுப்புகள்; limb or part of a body, peculiar to women.
2. *பெண்ணுடம்பு* பார்க்க; see *peṇṇudambu.*
3. *பெண்குறி* பார்க்க; see *peṇ-kuṟi.*

*[பெண் + உறுப்பு]*

**பெண்ணெடு-த்தல்** *peṇ-ṇ-eḍu,* செ.குன்றாவி. (v.t.) திருமணஞ் செய்தல்; to marry, chosse as a bride. *'நீ எங்கே பெண்ணெடுத்தாய்?'*

*[பெண் + எடு–,த்தல்]*

**பெண்ணெழுத்து** *peṇ-ṇ-eḻuttu,* பெ. (n.)
1. உயிர்மெய் (பிங்.); compound letter or vowelconsonant in Tamil orthography.
2. நெட்டெழுத்து; (வெண்பாப். முதன்மொ.6) long vowel;

*[பெண் + எழுத்து]*

**பெண்ணை** *peṇṇai,* பெ. (n.) 1. பனை; palmyra-palm. *'மன்றப் பெண்ணைவாங்கு மடற் குடம்பை'* (நற். 303) 2. *பெண் மரம்* (மூ.அ) பார்க்க; see *peṇmaram.* 3. நீர்முள்ளி; (மலை) water-thorn. 4. வடபெண்ணை தென்பெண்ணையாறுகள்; rivers, north pennaiyaru, south penniyaru *'பெண்ணையம் படப்பை நாடுகிழவோயே'* (புறநா.126) பெண்ணையெனுநதியாறுகடந்து; (கலிங்.354)

*[பெள் → பெண் → பெண்ணை]*

**பெண்ணை வாயன்** *peṇṇai-vāyaṉ,* பெ. (n.) 1. *பெண்வாயன்* பார்க்க; see *peṇ-vāyaṉ* 2. அலி; hermaphrodite.

**பெண்தண்டு** *peṇ-taṇḍu,* பெ. (n.) இடக்காது (வின்); small gristly protuberance of the left ear, dist.frāṇ-taṇḍu

மாந்தர்தம் உடலில் வலப்புறம் ஆண்டன்மையும் இடப்புறம் பெண்டன்மையும் உள்ளது என்னுங் கருத்துப்பற்றி இடக்காது பெண் தொண்டு எனப்பட்டது போலும். தொண்டு– தொளை.

*[பெண் + தொண்டு → தண்டு]*

**பெண்தன்மை** *pēṟn-taṉmai,* பெ. (n.) *பெண்மயம்*[1] பார்க்க, see *peṇmayam*[1]

*[பெண் + தன்மை]*

**பெண்தானையான்** *peṇ-tāṉaiyāṉ,* பெ. (n.) காமன் அல்லது பெண் படையான் (நாமதீப.58); kama, as having women for hisarmy.

*[பெண் + தானையான்]*

**பெண்பருவம்** *peṇ-paruvam,* பெ. (n.) *மகளிர் பருவம்* பார்க்க; see *maglir paruvam.*stages in the life of a woman. (பிங்.)

*[பெண் + பருவம்]*

**பெண்பள்ளி** *peṇ-paḷḷi,* பெ. (n.) பெண் துறவிகள்தங்குமிடம்;nunnery. '*இம்மனையும் இக்கிணறும்* பெண்பள்ளி யாவதாகவும்' (s.i.i.vii, 24.)

*[பெண் + பள்ளி]*

**பெண்பழி** *peṇ-p-paḻi,* பெ. (n.) 1. பெண் கொலைப் பழி; crime of killing a woman. '*இனையதோர்*' பெண்பழியை யாரேற்றார். (திருவிளை.பழியஞ்.12) 2.பெண்ணைவருத்தல் அல்லது கட்டாயப்படுத்துவதால் உண்டாகும் பழி(வின்); guilt of harassing or forcing a woman.

*[பெண் + பழி]*

**பெண்பனை** *peṇ-paṉai,* பெ. (n.) காய்க்கும் பனை; (தொல்.பொ. 558, உரை). palmyra, as bearing fruit.

*[பெண் + பனை]*

**பெண்பாடு** *peṇ-pāḍu,* பெ.(n.) பெண்பிள்ளை யினுழைப்பு; efforts or industry of the female members of a family. '*ஆண்பாடு பெண்பாடு பட்டு அந்த வேலை முடிந்தது*'

*[பெண் + பாடு]*

**பெண்பாத்தி** *peṇ-pātti,* பெ. (n.) உப்பளத்தில் உப்பு நீரைச் சுண்டவிடும் பாத்திவகை; condenser in salt-pans dist. fr.āṇ-pātti.

*[ வெண் → பெண் + பாத்தி ]*

**பெண்பார்–த்தல்** *peṇ-par,* செ.கு.வி. (v.i.) திருமணத்திற்கு மணமகளைத் தேர்ந் தெடுத்தல்; to choose a bride.

*[பெண் + பார்]*

**பெண்பால்** *peṇ-pāl,* பெ. (n.) 1. ஐம்பால்களுள் ஒன்று; (நன்.262) feminine gender, one of ai-m-bāl, q.v. 2. பெண்ணினம்; female sex. '*ஒரு பெண்பாலேன்*' (சீவக. 1662)

*[பெண் + பால்]*

**பெண்பாலெழுத்து** *pen-pal-eluttu,* பெ. (n.) *பெண்ணெழுத்து* பார்க்க; see *peṇ-ṇ-e ittu.* (இலக்.வி.773, உரை).

*[பெண்பால் + எழுத்து]*

**பெண்பாவம்** *pen-pavam,* பெ (n.) *பெண்பழி* (வின்) பார்க்க; see *penpaḻi.*

*[பெண் + பாவம்]*

**பெண்பாற் பருவம்** *pen-par-paruvam,* பெ. (n.) மகளிர் பருவம்; stages in the life of a woman.

*[பெண்பால் + பருவம்]*

**பெண்பாற் பிள்ளைக்கவி** *pen-par-pillai-k-kavi,* பெ. (n.) பெண்பாற் பிள்ளைத் தமிழ் பார்க்க; (இலக்.வி.807, உரை.)

*[பெண்பால் + பிள்ளை + skt-kavi. த.கவி]*

**பெண்பாற் பிள்ளைத்தமிழ்** *pen-par-pillait-tamil,* பெ. (n.) ஆண்பால், பெண்பால்ஆகிய இரண்டிற்கும்பொதுவாயுள்ளபருவங்களோடு, பெண்பாற்கே சிறப்பாக உரிய கழங்குப்

பருவம், அல்லது நீராடற் பருவம், அம்மானைப் பருவம், ஊசற் பருவங்களைச் சேர்த்துப் பெண் தெய்வத்தை அல்லது சிறப்புடைய பெண்பாலைப் புனைந்து பாடும் பிள்ளைத்தமிழ் வகை; a poem descrbing the different stages in the child hood of a goddess or heroine an consisting of seven sections common.

*[பெண்பால் + பிள்ளை + தமிழ்]*

**பெண்பாற்பிள்ளைப்பாட்டு** *pen-par-pillai-p-pattu,* பெ. (n.) *பெண்பாற் பிள்ளைத் தமிழ்* பார்க்க; (பிங்.).

*[பெண்பால் + பிள்ளை + பாட்டு]*

**பெண்பிடி–த்தல்** *peṇ-pidi,* செ.குன்றாவி. (v.t.) கூத்தியாகக் கொள்ளுதல் (யாழ்.அக); to keepaconcubine.

*[பெண் + பிடி]*

**பெண்பிள்ளை** *peṇ-pilḷai-cikku,* பெ. (n.) 1. பெண் குழந்தை; female infant, girl, 2. மகளிர்; woman; *'நாயகப் பெண் பிள்ளாய்'* (திவ்.திருப்பா.7) 3. மனைவி; wife.

*[பெண் + பிள்ளை]*

**பெண்பிள்ளைசீக்கு** *peṇ-pilḷai-cīkku,* பெ. (n.) *பெண்சீக்கு* (M.L.) பார்க்க; see *peṇcīkku.*

*[ பெண்பிள்ளை+ E. Sick → த.சீக்கு]*

**பெண்பிள்ளை வியாதி** *peṇ-pilḷai-viyādi,* பெ. (n.) *பெண்சீக்கு* (M.L.) பார்க்க; see *pen-cīkku.*

*[பெண்பிள்ளை + skt vyādhi. த.வியாதி]*

**பெண்பிற–த்தல்** *peṇ-piṟa,* செ.கு.வி. (v.i.) பெண்பிறவியெடுத்தல்; to be born a woman. *'வல்வினையேன்பெண்பிறந்தே'* (திவ்.திருவாய். 5,4,3.).

*[பெண் + பிற–,]*

**பெண்பிறந்தார்** *peṇ-piṟancdār,* பெ. (n.) பெண்டிர்; woman. *"பெண் பிறந்தா ரெய்தும் பெருந்துயர்"* (திவ்.திருவாய்.5,4,4)

*[பெண் + பிறந்தார்]*

**பெண்பிறப்பு** *peṇ-piṟappu,* பெ. (n.) பெண்ணாகப் பிறத்தல்; being born a woman. *"பெண்பிறப்புந்தோழியினிதென'* (சீவக.1297)

*[பெண் + பிறப்பு]*

**பெண்புத்தி** *peṇ-putti,* பெ.(n.) பெண்டிர்க்குரிய அறிவு; woman's wit, used in contempt. *'பெண்புத்தி பின்புத்தி.*

*[பெண் + skt-buddhi. த.புத்தி]*

**பெண்பூக்கதிர்** *peṇ-pū-k-kadir,* பெ. (n.) செடி மரம் முதலியவற்றிற் காயாக மாறும் பூங்கொத்து(இ.வ.); pistillate cluster.

*[பெண் + பூக்கதிர்]*

**பெண்பெண்டாட்டி** *peṇ-peṇḍāṭṭi,* பெ. (n.) பெண், woman. ஒரு பெண் பெண்டாட்டி ஆணுடை யுடுத்து; (ஈடு,6,2,ப்ர.)

*[பெண் + பெண்டாட்டி]*

**பெண்பெருமாள்** *peṇ-perumāḷ,* பெ. (n.) பெண்ணரசி; queen, queenly woman. *'பெண் பெருமாளந்தப்புரப் பெருமாள்'*(மூவருலா: இராசராச. 80.)

*[பெண் + பெருமாள்]*

**பெண்போகம்** *peṇ-pōgam,* பெ. (n.) **1.** எட்டுத் துய்ப்புகளில் (அட்ட போகங்களில் ஒன்றான சிற்றின்பந் துய்க்கை; sexual onfoyment with a woman, one of aštā-pōkam, q.v. (w.). **2.** முப்பத்திரண்டறங்களுள் பெண்ணின் பந்துய்க்கப் பிறனுக்கு உதவும் அறம் (பிங்.); aiding a man to obtain sexual enjoyment one of muppattiraṇḍadṟm.

*[பெண் + skt. bhōga. த.போகம்]*

**பெண்மகவு** *peṉ-magavu,* பெ. (n.) பெண்குழந்தை; woman-child.

*[பெண் + மகவு]*

**பெண்மகள்** *peṇ-magaḷ,* பெ. (n.) **1.** பெண்; woman. **2.** பெண் மகவு; girl-child.

*[பெண் +மகள் ]*

**பெண்மகன்** *peṇ-magaṉ,* பெ. (n.) புறத்துப் போய் விளையாடும் பேதைப் பருவத்துப் மெண்மகள் (தொல்.சொல். **164.** சேனா.); girl child which has attained the stage of playing in the neighbourhood.

*[பெண் + மகன்]*

*'பெண்மகன்' என்னும் மாறோக்கத்தார் (சொற்கை) வழக்கு, பெட்டைப்பசன் என்னும் ஆம்பூர் வட்டத்தார் வழக்குப்போன்றது.*

**பெண்மயக்கம்** *peṇ-mayakkam,*பெ.(n.) பெண்மேற் கொள்ளும் காதல் (வின்); falling in love with a woman.

*[பெண் + மயக்கம்]*

**பெண்மயம்** *peṇ-mayam,*பெ.(n.) **1.** பெண் தன்மை; womanliness, feminine nature. *'பெண்மயமோ பெரிதே'* (சீவக. **228.**) **2.** பெண்டிர்திரள்; crowd of women. *'அங்கே பெண்மயமாயிருக்கிறது, போகமுடிய வில்லை.'*

*[பெரும் + மயம்]*

**பெண்மயல்** *peṉ-mayal,*பெ.(n.) *பெண்மயக்கம்.* (வின்.) பார்க்க; *peṉ-mayakkkam.*

*[பெண் + மயல்]*

**பெண்மயிர்** *peṉ-mayir,* பெ. (n.) பெண்ணின் கூந்தல் (பிங்.); tresses, woman's lock of hair.

*[பெண் + மயிர்]*



**பெண்மரம்** *peṉ-maram,* பெ. (n.) **1.** புறக்காழுள்ள மரம் (பிங்.); endogenous tree. **2.** காய்க்கும் மரம் அல்லது செடி (வின்); female tree or plant.

*[பெண் + மரம்]*

**பெண்மாயம்** *peṉ-māyam,* பெ. (n.) *பெண்வலை* (வின்.) பார்க்க; *peṉ-valai.*

*[பெண் + மாயம்]*

**பெண்மாறி** *peṇ-māxṟi,* பெ. (n.) பெண்டிர் பலரிடம் மாறிமாறிக் காதல் கொள்பவர் (வின்.) a man who if fickle in his love.

*[பெண் + மாறி]*

**பெண்மூச்சு** *peṉ-mūccu,* பெ. (n.) விடாப்பிடி; ஒட்டாரம் (யாழ்.அக.); obstinacy, as a feminine trait.

*[பெண் + மூச்சு]*

**பெண்மை[1]** *peṉmai,* பெ. (n.) தாய்மை; woman hood.

*[பெண் + மை]*

**பெண்மை[2]** *peṉmai,* பெ. (n.) **1.** *பெண் பிறப்பு* பார்க்க; see *peṉpiṟappu.* '*பெண்மைக்கு இரதியென*' (பாரத.திரௌபதிமாலை.39) **2.** பெண்ணுக்குரிய நலம்; feminine grace. '*காணியைப் பெண்மைக் கெல்லாம்*' (கம்பரா. மீட்சி.46) **3.** பெண்ணின்தன்மை; womanliness, gentleness, womanishness. '*பெண்மையு மிலளாகி யழுதலு மழூஉம்*' (கலித், 147.) **4.** பெண்ணின்பம்; sexual enjoyment with a woman; '*பிறனியலாள் பெண்மை நயவாதவன்*' (குறள். 147.) **5.** அமைதித்தன்மை; modesty '*பெண்மை நாண்வனப்புச் சாயல்*' (சீவக. 356.); **6.** நிறை; self-restraint, natural to a woman '*பிறையெனு நுதலவள் பெண்மை யென்படும்*' (கம்பரா. மிதிலைப். 40.)

*[பெண் + மை]*

மை பண்புப் பெயரீ ஈறு.

**பெண்வசம்பு** *peṉ-vašambu,* பெ. (n.) பிசிறில்லாத வசம்பு; sweet flag without bristles.

*[பெண் + வசம்பு]*

**பெண்வலை** *peṉ-valai,* பெ. (n.) பெண்டிர் செய்யும் ஈர்ப்புச் செயல்; toils of a woman. '*பெண்வலைப் படாதவர்*' (சீவக. 78.)

*[பெண் + வலை]*

**பெண்வழி** *peṉ-vaḻi,* பெ. (n.) **1.** பெண்ணினமாக உரிமையிறங்குதற்குரிய பிறங்கடை வரிசை; female line, as in inheritance matriarchy. **2.** *பெண்வழிச் சுற்றம்* (யாழ்.அக.); பார்க்க, see *peṉ-vaḻi-c-cuṟṟam.*

*[பெண் + வழி]*

வழி = குடிவழி.

மக்களுக்குத் தலைமுறைதலைமுறையாய் உரிமைதொடர்ந்துவரும்வழி, தந்தைவழி தாய்வழி அல்லது மகன்வழி மகள்வழி என இரண்டாம், இவற்றுள் தாய் வழியே பழந்தமிழ் நாட்டில் வழங்கி வந்த தென்பதற்கு, தாயம் என்னும் வழக்கே சான்றாம். தாய்வழிப்பெறுவது தாயம். தந்தைவழி அல்லது மகன்வழி ஆண்வழியும்தாய்வழிஅல்லது மகள்வழி பெண்வழியும் ஆகும். ஆத்திரேலியோ என்னுந்தென்கண்டத்தில் பெண் வழியுரிமை இருந்து வருவதாகச் சொல்லப் படுகின்றது.

**பெண்வழிச் சுற்றம்** *peṉ-vaḻi-c-cuṟṟam,* பெ. (n.) பெண்ணினமாக வரும் உறவு (யாழ்.அக.); relation in the female line.

*[பெண்வழி + சுற்றம்]*

**பெண்வழிச் சேறல்** *peṉ-vaḻi-c-ceṟal,* பெ. (n.) காமப் பேராசையில் மனைவி விருப்பப்படியே ஒழுகுகை (குறள். அதி. 91.); being led by wife. being under wife's influence.

*[பெண்வழி + சேறல்]*

செல்தல்→சேறல்

**பெண்வாயன்** *peṉ-vāyaṉ,* பெ. (n.) பெண்டிர் போற் சளசளவென்று பேசுவோன் (இ.வ.); man who talks lika a woman.

*[பெண் + வாயன்]*

**பெண்வாரிசு** *peṇ-vārišu,* பெ. (n.) *பெண்வழி* பார்க்க; see *pervali.*

*[பெண் +* u. wāris. *த.வாரிசு]*

**பெண்வியாதி** *peṇ-viyādi,* பெ. (n.) *பெண்சீக்கு* (M.L) பார்க்க; see *peṇ-cīkku.*

*[பெண் +* skt vyādhi. *த.வியாதி]*

**பெண்விளக்கு** *peṇ-viḷakku,* பெ. (n.) 1. பெண்களிற்சிறந்தவள்;woman conspicuous for virtue and other excellences. *'பெண் விளக்காகிய பெறலரும் பேதாய்'* (பெருங். இலாவாண. 18, 79) 2. பாவை விளக்கு (இ.வ.); damsel shaped standard of a lamp.

*[பெண் + விளக்கு]*



**பெண்வீட்டார்** *peṇ-viṭṭār,* பெ. (n.) மணமகளைச் சேர்ந்த உறவாடிகள்; parents and other relatives of a bride, bride's party.

*[பெண் + வீட்டார்]*

**பெண்வை—த்ததல்** *peṇ-vai-,* செ.குன்றாவி. (v.t.), வைப்பாட்டியாகக் கொள்ளுதல் (நெல்லை); to keep as conbine.

*[பெண் + வை—]*

**பெத்தகாலம்** *petta-kālam,* பெ. (n.) ஆதன் (ஆன்மா) பாசத்திற்கு உட்பட்ட காலம்; period during which a soul is in bondage of mummalam. மலத்தினால்மறைப்புண்டு கிடக்கும் அப் பெத்த காலத்து' (சி.போ. பா. 2, 2. பக். 63, சுவாமிநா.)

*[பற்று → பத்து → பெத்து → பெத்தம் + காலம்]*

**பெத்ததசை** *pentta-tašai,* பெ. (n.) ஆதனின் பாசபந்தத்திற்கு உட்பட்ட நிலை (யாழ்.அக.); condition of the soul subject to the bondage of mummalam.

*[பற்று → பத்து → பெத்து + தசை]*

**பெத்தம்** *pettam,* பெ. (n.) 1. கட்டு; bond, tie, ligature. 2. ஆதனின் பாசபந்தம் bondage of the soul, connection of & the soul with mummalan; *'பெத்தமொடு முத்தியும்'* (தாயு. ஆனந்த. 5.) 3. சேர்மானம் (யழ்.அக.); thing added.

*[பற்று → பத்து → பெத்து → பெத்தம்]*

**பெத்தமுத்தி** *petta-mutti,* பெ. (n.) 1. பந்தமும் வீடும்; bondage and liberation of souls. 2. ஒன்றுகை (இலய) (யாழ்.அக.); salvation by absorption in to God-head.

*[பெத்தம் + முத்தி]*

**பெத்தமூலம்** *petta-mūlam,* பெ. (n.) சிறுவழுதுணை,1.(சங்.அக.)பார்க்க; širuvaḷuduṇai nightshade Indian.

*[பெத்தம் + மூலம்]*

**பெத்தர்** *pettar,* பெ. (n.) பாசபந்தமுள்ள உயிர்கள்; souls bondage.

*[பெத்து → பெத்தர்]*

**பெத்தல்** *pettal,* பெ. (n.) *பெருங்குரும்பை* (மலை.) பார்க்க; *bow-string hemp.*

*[பெத்து → பெத்தல்]*

**பெத்தான்மா** *pettāṉmā,* பெ. (n.) பாசபந்தமுள்ள உயிர்; soul in bondage. '*முத்தியின்கட் பெத்தான்மாவை*' (சி.சி. 11,6.)

*[பெத்து + ஆன்மா]*

skt ātmā. *ஆத்மா த. ஆன்மா*

**பெத்தி** *petti,* பெ. (n.) *சிறுவழுதுணை* 1. (மலை); பார்க்க see *śiṟu vāḻuduṇai* indian nightshade.

*[பெத்து → பெத்தி ]*

**பெத்து** *pettu,* பெ. (n.) பெத்தம் பார்க்க; see pettam. '*பெத்தின்றியைந்து தொழிலானும்*' (விநாயகபு. 82,47)

*[பற்று → பத்து → பெத்து]*

**பெதரிக்களம்** *pedarikkaḷam,* பெ. (n.) *எட்டி*[1] பார்க்க (சங்.அக.); strychinōe tree.

*[பெதரி + களம்]*

**பெதிகாரம்** *pedikgāram,* பெ. (n.) படிக்காரம் (சங்.அக.); alum.

*[படிகாரம் → பெடிகாரம் → பெதிகாரம்]*

**பெதும்பை** *pedumabi,* பெ. (n.) 1. எட்டு முதல் பதினொரு அகவை வரையுள்ள பெண் (இலக். வி. 860.); girl between the ages of 8 and. 11. 2. பெண் (திவா.); woman.

*[பேது – பெது – பெதும்மை]*

**பெந்தகம்** *pendagam,* பெ. (n.) 1. கட்டு; tie. 2. அடைமானம்; simple mortage.

*[பற்று → பத்து → பந்து → பெந்து → பெந்தகம் ]*

**பெந்தம்** *pendam,* பெ. (n.) 1. கட்டு (வின்); bond- age. 2. தொடர்பு; (மாறனலங். 281, உரை. பக்.477.) relation, conection

*[பெந்தகம் → பெந்தம்]*

**பெந்தர்** *pendar,* பெ. (n.) *பெத்தர்* பார்க்க. see *pettar.* (யாழ்.அக.).

*[பெத்தர் – பெந்தர்]*

**பெந்தனம்** *pendaṉam,* பெ. (n.) *பெந்தம்.* (யாழ். அக.) பார்க்க; see *pendam.*

*[பெந்தம் – பெந்தனம்]*

**பெந்தி–த்தல்** *pendi-,* செ.குன்றாவி. (v.t.) 1. *பந்தி* பார்க்க;see*pandi.* 2. சித்திரப்பாக்களில் எழுத்துகளை அடைத்தல்; to confine, as letters of a stanza with in the figure of a particular shape.'*சக்கரத்தினுள் அக்கரந் தடுமாறப் பெந்திப்பது*' (மாறனலங். 281, உரை. பக்.477.)

*[பந்து → பெந்தி]*

**பெந்து** *pendu,* பெ. (n.) *பந்து*[1] பார்க்க; end *pandu*[1].

*[பந்து → பெந்து]*

**பெந்தை** *pendai,* பெ. (n.) 1. அருவருப்பாய்ப் பருத்தது; monstrosity. 2. கலப்பையின் ஒருறுப்பு; a part of a ploughshare.

*[பெத்தை → பெந்தை*
*பெரிது → பெர்த்து → பெத்து→ பெத்தை]*

**பெந்தைக்கயிறு** *pendai-k-kayiṟu*, பெ. (n.) **1.** நன்றாய்த் திரிக்காத கயிறு; rope not neatly twisted. **2.** கொழுவுள்ள கட்டையைக் கலப்பையோடிணைக்குங் கயிறு; rope that binds the parts of a phoughshare.

*[பெந்தை + கயிறு]*



**பெந்தைவிழி** *pendai-viḻi*, பெ. (n.) **1.** உருண்டை விழி; goggle-eyes. **2.** அச்சத்தால் கண் மருண்டு பார்க்கை; staring or rolling of the eyes, as in bewilderment.

*[பேம் → பேந்தை → பெந்தை + விழி]*

**பெம்மான்** *pemmāṉ*, பெ. (n.) **1.** இறைவன்; god. *'பிரமாபுர மேவிய பெம்மானிவனன்றே'* (தேவா.61,1.) **2.** பெரியோன்(வின்); great man.

*[பெருமகன் → பெருமான் → பெம்மான்]*

**பெய்¹–தல்** *pey-*, செ.கு.வி. (v.i.) *1. மேனின்று பொழிதல்;* to rain, fall, as dew or hail. *'பெய்யெனப் பெய்யு மழை'* (குறள்.55.)

பொய் → பெய். பெய்தல்= துளைவழி நீர் ஒழுகுதல் போல முகிலினின்று மழை ஒழுகுதல். (வே.க.3; 126)

**பெய்²–தல்** pey-, செ.குன்றாவி. (v.t.) **2.** பொழிதல்; to pour down, pour into. *'பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்'* (புறநா.115.) **3.** கலமுதலியவற்றில் இடுதல்; to put, place, lay, put into serve up, as food in a dish. *'உலைப்பெய் தடுவது போலுந்துயர்'* (நாலடி.14.). **4.** எறிந்து போகவிடுதல்; to throw out, throw aside *'பார்த்துழிப் பெய்யிலென்'* (நாலடி.26.). **5.** இடைச் செருகுதல்; to insert, interpolate as in a text. **6.** கொடுத்தல்; to give, confer *'உயிர்க்கு....வீடுபேறாக்கம் பெய்தானை'* (தேவா.975,7.) **7.** அமைத்தல்; to make; to settle, appoint *'பிரான் பெய்த காவு கண்டீர்... மூவுலகே'.* (திவ். திருவாய்.6,3,5.) **8.**பரப்புதல்; to spread. *'தருமணல் தாழப்பெய்து'* (கலித்.114.) **9.** புகவிடுதல்; to discharge. *'கருந்தலை யடுக்கலி னணைகள்.... பெருங்கடலிடைப் பெய்து'* (கம்பரா. கும்ப. 248.) **10.** எழுதுதல்; to writedraw, *'பெய்கரும் பீர்க்கவும் வல்லன்'* (கலித்.143.). **11.** அணிதல்; to put on, as harness; to wear, as jewells, cloths, flowers. *'மைந்தர் தண்டார் மகளிர் பெய்யவும்'* (பரிபா.20,21.). **12.** பயன்படுத்தல்; to bring into play; to use. *பெய்திறனெல்லாம் பெய்து பேசினேன்'* (கம்பரா. கும்ப.169.) **13.** கட்டுதல்; to tie, faster. *'புணர்நார்ப் பெய்த புனைவின் கண்ணி'* (பெரும்.பாண். 218). **14.** சிறுநீர் முதலியன ஒழுகவிடுதல் (கொ.வ.).; to discharge, as urine; to shed, as tears. **15.** தூவுதல்; to strew, scatter, as flowers. **16.** பங்கிடுதல் (திவா.) to distribute **16.** செறித்தல் (பிங்.). to crowd, being close together. *'பெய்ம்மணி யேயதேர்'* (கம்பரா. நாக பாச. 128)

**ம.** பெய்யுக

*[பொய் → பெய் ]*

**பெய்கலம்** *pey-kalam,* பெ.(n.) ஏனம்; pot or vessel.

*[ பெய் + கலம். ]*

**பெய்தளத்தல்** *peydalattal,* பெ. (n.) படியால் அளக்கும் அளவை வகை; (தொல். எழுத்.7, உரை.) measuring by a vessel of standard capacity.

*[ பெய் – பெய்து + அளத்தல் – 'தல் தொ.பெ.ஈறு ]*

**பெய்துரை** *peydurai,* பெ. (n) **1.** இடைப்பெய்து உரைப்பது; insertion, interpolation. **2.** பாயிரம் (பிங்.)preface, introduction.

*[ பெய் – பெய்து + உரை ]*

**பெய்வளை** *pey - valai,* பெ.(n) பெண்பால்; lady, as wearing bracelets. *'பேதை பெருந்தோளி பெய்வளா யென்னும்'* (நாலடி. 47.).

*[ பெய் + வளை ]*

**பெயர்** *peyar,* பெ.(n) **1.** பெயர்; name, appellation, designation, epithet. *'மறவர் பெயரும் பீடுமெழுதி'* (அகநா. 67.). **2.** புகழ்; reputation. renown, celebrity, fame. *'பெரும் பெயர் மீளி'* (கலித். 17.) **3.** பெருமை (சூடா.); greatness. **4.** ஆள் person; எத்தனை பெயர் வந்தார்கள்? **5.** வடிவு; shape, form. *'கூந்த லென்னும் பெயரொடு'* (பரிபா. 3,31.) **6.** பொருள்; property, substance *'பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய'* (பதிற்றுப்.90,23.) **7.** பொருளிலக்கணங் கூறு நூல்; treatise dealing with porul *'சொற்பெயர் நாட்டங் கேள்வி'* (பதிற்றுப். 21,1.) **8.** இதன் பொருட்டு; alleged cause, pretext. *'திருவிழா வென்பதோர் பெயரால்'* (காஞ்சிப்பு. நகர. 70.). **9.** சூளுரை; vow *'பொருவேமெனப் பெயர் கொடுத்து'* (பட்டினப். 289.) **10.** பெயர்ச்சொல் (தொல்.எழுத். 180.) பார்க்க. (gram.) **11.** முதல் வேற்றுமை; (gram.) nominative case. *'அவைதாம் பெயர் ஐ யொடுகு'* (தொல். சொல். 64.).

**தெ.** பேரு; **க.** பேசர்; **ம.** பேயர்; **து.** புதேரு; **பட.** ஹெசரு.

*[ பெய் – பெயர் ]*

**பெயர்—தல்** *peyar-,* செ.கு.வி. (v.i.) **1.** போதல் (திவா.); to move, leave, stir, rise, depart. *'திசை யெங்கணும் பெயர்ந்தான்'* (கம்பரா. நிகும்பலை. 101.). **2.** பிறழ்தல்; to turn about, shift, veer. *'நிலம் பெயரினும் நின்சொற் பெயரல்'* (புறநா.3.). **3.** மீளுதல்; to return, come back. *'சூழ்ந்த நிரை பெயரல்'* (பு.வெ.1,10.) **4.** மாறுதல்; to vary, change. *'ஆணெனத் தோன்றி யலியெனப் பெயர்ந்து'* (திருவாச. 3,134.) **5.** சிதைவுறுதல்; to fall into ruins. *'கட்டடம் பெயர்ந்து போயிற்று'* **6.** இணைப்பு நெகிழ்தல்; to grow loose; to be detached. *'தளம் பெயர்ந்து விட்டது'* **7.** கூத்தாடுதல் (பிங்.); to dance. **8.** சலித்தல்; to shake. *'பெயரும்.... பிதற்றும்'*(கம்பரா.சூர்ப்ப. 98.). **9.** அசையிடுதல்; to chew the cud. *'விளையா விளங்கணாற மெல்குபு பெயரா'* (சிறுபாண். 45.) **10.** இடம் விட்டு மாறுதல் (வின்.); to be displaced. dislocated. **11.** பிரிதல்; to be separated; to stand aside நிலம் பெயர்ந்துறைதல் (தொல். தோ பொ. 169.). **12.** கிளர்தல்; to be agitated *'ஓதநீரிற் பெயர்பு பொங்க'* (புறநா. 22.). **13.** தேய்தல்; to be rupped (w.) **14.** பணம் நடமாடுதல்; to pass from hand to hand., as currency. *'அந்த ஊர் எப்பொழும் பணம் பெயரக்கூடியது'* **15.** தண்டப்படுதல் (வசூலாதல்); to be collected, as money or debt. *'ஆயிர உருபா பெயர்ந்தது'*

*[ பெய் – பெயர் ]*

**பெயர்[3]–த்தல்** *peyar-,* **செ.குன்றாவி.** (v.t.) **1.** போக்குதல்; to remove, displace, dislodge, dislocate, unseat. *'உடைமை மயலாகும் மற்றும் பெயர்த்து'* (குறள். 344.) **2.** நிலைமாறச் செய்தல்; to dispel; to shake from its basis. *'சூறை மாருதத் தெறியது வளியிற் கொட்கப் பெயர்க்கும் குழகன்'* (திருவாச .3,12.) **3.** அப்புறப்படுத்துதல்; to drive away, as foes; to remove from one place to another, as cattle. *'தென்னவற் பெயரிய.... தொன்முதுகடவுள்'* (மதுரைக். 40.) **4.** திருப்பிப் போடுதல் (யாழ். அக.); to turn over, as a cake **5.** பிடுங்குதல்; to uproot, as a plant; to force open, as a door. **6.** கெடுத்தல்; to blow up; to blast; to ruin. *'பிணம் பிறங்கப் பெயர்த்திட்டன்று'* (பு. வெ. 1,10.) 7. ஒடுக்கிக் கொள்ளுதல்; to absorb, gather into one's self. *'பல்லுருவம் பெயர்த்துநீ'* (கலித். கடவுள்.). **8.** பிரித்தல்; to separate. *'நாணடப் ரெயர்த்தனமக்குமாங் கொல்லாது'* (கலித். 47.) **9.** மீட்டுதல்; to redeem, save, recover. *'நல்வளைத் தோளியைப் பெயர்க்கும் விச்சையின்'* (பெருங். வத்தவ. 6,40.). **10.** தண்டுதல் (வசூலித்தல்) to collect, realise. *'நூறு உருவா பெயர்த்தேன்'* **11.** செலுத்துதல்; to lead, push, drive. *'இனிய சொல்லி யின்னாங்குப் பெயர்ப்பது'* (கலித். 14.). **12.** விடுத்தல்; to discharge. *'வெஞ்சரம்.... இராகவன் சிலை நின்று பெயர்த்தான்'* (கம்பரா. முதற்.228.)

[ பெயர்தல் (த.வி.) – பெயர்த்தல் (பி.வி.)]

'த்' பிறவினையாக்க உருபு.

**பெயர்க்கணக்கு** *peyar-k-kaṇakku,* **பெ.** (n.) **1.** பங்கீடு(வின்); distribution of shares. (n.) **2.** பேரேடு(இ.வ.); ledger.

*[பெயர் + கணக்கு]*

**பெயர்க்கு** *peyarkku,* **வி.அ.** (adv.) பெயர் மாத்திரையாய்; nominally; for form's sake. *'பெயர்க்கு மாத்திரம் அவன் அரசன்'*

*[பெயர் – பெயர்க்கு.]*

**பெயர்ச்சி[1]** *peyarcci,* **பெ.** (n.) இடமாறுகை; shifting, moving. காரி(சனி)ப் பெயர்ச்சி அடுத்த திங்கள் நிகழும் (உ.வ)

*[பெயர்[2] – பெயர்த்தி – பெயர்ச்சி.]*

**பெயர்ச்சி[2]** *peyarcci,* **பெ.**(n.) இடமாற்றுகை; removal, displacement, dislocation.

*[பெயர்[3] – பெயர்ச்சி.]*

**பெயர்ச்சூத்திரம்** *peyar-c-cūttiram,* **பெ.** (n.) *பெயர் நூற்பா* பார்க்க; see *peyar nūṟpā*

*[பெயர் + சூத்திரம்.]*

*skt.* sūtra > *த சூத்திரம்.*

**பெயர்ச்செவ்வெண்** *peyar-c-cevveṇ,* **பெ.** (n.) பெயர்களில் எண்ணிடைச் சொல் தொக்கு விட்டிசைத்து வருந்தொடர் (நன். 428.); (gram.) a series of nowns with the connecting conjunction understood there being a pause between the nowns in utterance. dist. fr. u mmai-t-tokai.

*[பெயர் + செவ்வெண்.]*

**பெயர்ச்சொல்** *peyar-c-col.,* **பெ.** (n.) நால்வகைச் சொற்களுள் பொருளைக் குறிக்க வழங்குச்சொல்; (gram.) noun or pronoun, one of four parts of speech.

*[ பெயர் + சொல்.]*

**பெயர்த்தி**[1] *peyartt,* பெ. (n.) **1.** மக்கள் வயிற்றுப் பெண்; grand-daughter, as bearing the same name as her grandmother **2.** பாட்டி(யாழ்ப்.); grandmother.

*[பெயர் → பெயர்த்தி]*

பெயரன் (ஆ.பா.) → பெயர்த்தி (பெ.பா) 'தி' (பெ.பா.ஈறு)

**பெயர்த்தி**[2] *peyartti,* பெ. (n.) கோள் முதலிய வற்றின் பெயர்ச்சி; movement, as of a planet from one irāši to another. '*சனிப் பெயர்ச்சி*'.

*[பெயர்[2] – பெயர்த்தி.]*

**பெயர்த்திரிசொல்** *peyar-t-tiri-šol,* பெ.(n.) **1.** திரிந்து வழங்கும் பெயர்ச் சொல்.(சீவக. **1774,** உரை.); altered or changed form of a noun. **2.** தம்பொருளை அரிதில் விளக்கும் பெயர்ச் சொல் (நன். **272,** உரை.); archaic or classical noun.

*[பெயர் + திரிசொல்.]*

**பெயர்த்து** *peyarttu,* வி.எ (adv.) *பெயர்த்தும்* பார்க்க, see *peyarttum.* '*பெயர்த் தொற்றும்*' (கலித். **103.**)

*[பெயர் – பெயர்த்து.]*

**பெயர்த்துக் கொடுக்கும் வலி** *peyarttu-k-koḍukkum-vali,* பெ.(n.) பேறுகால வலிக்குமுன் சிறிது சிறிதாக வலிக்கும் நோவு(இ.வ.); preliminary labour pains due to movements of the foetus.

*[பெயர்த்து + கொடுக்கும் + வலி]*

**பெயர்த்துநடு–தல்** *peyarttu-nadu,* செ.குன்றாவி. (v.t.) நாற்றுப்பிடுங்கி நடுதல்; to transplant.

*[பெயர்த்து + நடு]*

**பெயர்த்தும்** *peyarttum,* வி.எ. (adv.) பின்னும்; again, in return. '*ஞாயிறு பெயர்த்து நின்.... குடகடற் குளிக்கும்*' (புறநா. **2.**)

*[பெயர் → பெயர்த்தும்]*

**பெயர்த்துரை** *peyar-t-t-urai,* பெ.(n.) திரும்பக் கூறுதல்; repetition. (குறள், **944,**உரை.)

*[பெயர்த்து + உரை]*

**பெயர்த்தெழுது–தல்** *peyartteḻudu,* செ.குன்றாவி. (v.t.) **1.** படியெடுத்தல்(வின்); to copy, transcribe. **2.** மொழிபெயர்த்தல்(இ.வ.); to translate from one language to another.

*[பெயர் → பெயர்த்து + எழுது]*

**பெயர்திறம்** *peyar-tiṟam,* பெ. (n.) முல்லை யாழ்த்திறவகை(பிங்.); (mus.) an ancient secondary melody-type of mullai-class.

*[பெயர் – திறம்]*

**பெயர்ந்து** *peyarndu,* வி.எ. (adv.) **1.** மறுபடியும்; again. '*பெயர்ந்தொரு சிகரந்தேடின்*' (கம்பரா. கும்பகருண.**184**) **2.** பிற்பாடு; presently, afterwards. '*பெயர்ந்துவா*'.

*[பெயர் → பெயர்ந்து]*

**பெயர் நூற்பா** *peyarnūṟpā,* பெ. (n.) குறி நூற்பா (குறிச்சூத்திரம்)(யாப்.வி.பாயி.பக்.11) (இலக்) nūṟpa dealing with technical terms.

*[பெயர் + நூற்பா]*

**பெயர்நேரிசை** *peyar-nērišai,* பெ. (n.) சிற்றிலக்கியவகை தொண்ணூற்றாறனுள் பாட்டுடைத் தலைவன் பெயர் சார்ந்து வர50, 70 அல்லது 90 நேரிசை வெண்பாக்களால் இயற்றப்படும் சிற்றிலக்கிய வகை (இலக்.வி. 830.); a poem of 50, 70 or 90 stanzas of nēršai veṉbā, each mentioning the name of a patron or hero, one of 96 šiṟṟilakkiyam. q.v;

*[பெயர் + நேரிசை]*

**பெயர்ப்பகுதி** *peyar-p-pagudi,* பெ.(n.) பகுசொல்லில் பெயராகிய பகுதி; (gram.) nominal base of a derivative word.

*[பெயர் + பகுதி]*

**பெயர்ப்படு–த்தல்** *peyar-p-paḍu,* செ. குன்றா வி. (v.t.) பேரிடுதல்; to name after. '*மூதூர் நின் பெயர்ப்படுத்தேன்*' (மணிமே.பதி. 31.).

*[பெயர் + படு–,]*

**பெயர்ப்பு** *peyarppu,* **1.** பெயரச் செய்கை; shifting, eradication. **2.** மொழிபெயர்ப்பு; (இ.வ.) translation.

*[பெயர் – பெயர்ப்பு]*

'பு' (சொல்லாக்க ஈறு)

**பெயர் படை–த்தல்** *peyar-paḍai,* செ.கு.வி. (v.i.) பேர்படைத்தல்; to become famous.

*[பெயர் + படை]*

**பெயர்பாதி** *peyar-pādi,* பெ. (n.) சரிபாதி; (கொ.வ.) exact half.

*[பெயர் + பாதி]*

பகுதி – பாதி

**பெயர்புறம்** *peyar-puṟam,* பெ. (n.) புறங் கொடுக்கை; retreating '*பெயர்புறத் தார்த்து*' (புறநா.35.)

*[பெயர்² + புறம்]*

**பெயர்ப்போலி** *peyar-p-pōli,* பெ. (n.) உரிச்சொல்வகை (தொல்.சொல்.297,சேனா); word partaking of the nature of a noun.

*[பெயர் + போலி]*

**பெயர்பொறி–த்தல்** *peyar-poṟi-,* செ.குன்றாவி. (v.t.) புகழை நிலைநிறுத்துதல்; to be distinguished. '*பெயர் பொறிக்கும் பேராண்மையில்லாக் கடை*' (நாலடி.199)

*[பெயர் + பொறி]*

**பெயர்போ–தல்** *peyar-pō,* பெ. (n.) செ.கு.வி. (v.i.) புகழ்பெறுதல்; to be renowned, celebrated famous.

*[பெயர் + போ]*

**பெயர்வழி¹** *peyar-vaḻi,* பெ. (n.) **1.** ஆள்; individual. **2.** தலைமுறை; genealogy (w.)

*[பெயர் + வழி]*

**பெயர்வழி²** *peyarvaḻi,* பெ.(n.) பொருளட்டவணை; list, catalogue

*[பெயர் + வழி]*

**பெயர் வேற்றுமை** *peyar-vēṟṟumai,* பெ.(n.) முதல் வேற்றுமை; (gram) nominative case. ***'அவ்வாறும் பெயர் வேற்றுமைப் பயனிலையாம்'*** (தொல். சொல். 66, சேனா.)

மறுவ. எழுவாய் வேற்றுமை

*[பெயர் – வேற்றுமை]*

வேற்றுமை = பொருள் வேற்றுமை செய்வன. (நன். 261) பெயர் வேற்றுமை என்பது ஒரு சொற்றொடறின் எழுவாய் இது என்று உணர்த்துவதாகும். எழுவாய் வேற்றுமைக்கு உருபு இல்லை. உருபேற்றல் பெயர்க்கு இலக்கணமாகும். பெயர் வேற்றுமை பயனிலை கொள்ளாத வழியும் பெயர் வேற்றுமையேயாகும்.

**பெயரகராதி** *peyar-agarādi,* பெ.(n.) சதுரகராதியில் சொற்பொருளை விளக்கும் பகுதி; first section of Beschi's cadur-agarādi, containing homonyms.

*[பெயர் – அகராதி]*

**பெயரட்டவணை** *peyar-aṭṭavaṇai,* பெ. (n.) பெயர்ப்பட்டியல்(இ.வ.); index of names.

*[பெயர் + அட்டவணை]*

**பெயரடி[1]–த்தல்** *peyar-adi-,* செ.குன்றாவி. (v.t.) ஒருவன் பெயரைப் பதிவுப் புத்த கத்தினின்று நீக்குதல்; to score out a name, as from a roll or register. (தற்.) "மாணவர் ஐவர் சம்பளம் கட்டாமையால் பெயரடித்துவிட்டடார்கள்"

*[பெயர் – அடி]*

**பெயரடி[2]** *peyar-aḍi,* பெ. (n.) ***பெயர்ப்பகுதி.*** பார்க்க; see *peyar-p-pagudi*

*[பெயர் + அடி]*

அடி = முதலானது, பகுசொல்லிற் பெயராகிய பகுதி.

**பெயரப்பெயர** *peyara-p-peyara,* வி.எ. (adv.) மீண்டும் மீண்டும்; again, and again. ***'பெயரப் பெயரப் பார்த்தான்'*** (யாழ்ப்.)

*[பெயர்[2] – அ + பெயர் + அ]*

'அ' வினையெச்ச ஈறு

**பெயரன்** *peyaraṉ,* பெ.(n.) பெயரையுடைவன்; one who beavis a name. ***'எந்தை பெயரனை'*** (கலித். 81) 2. மகன் அல்லது மகளிடம் பிறந்த பெயரன்; grandson, as bearing the grandfather's name. ***'தனிக் காதலைப் பெயரனை'*** (கம்பரா. அதிகாய.117.) 3. பாட்டன் (யாழ்ப்); grandfather.

ஒருவனுக்கு மகனின் மகன் பேரன் எனப்படுவான். பெயரன் என்பது பேரன் என மருவிற்று. பாட்டன் பெயரைப் பேரனுக்கிடுவது பண்டை வழக்கமாதலால், பேரனுக்கு அப்பெயராயிற்று. சிலர் பாட்டனையும் பேரன் அல்லது பேரனார் என்பர், அரசகேசரி, பரகேசரி, எனற பட்டங்கள், பிற்காலச் சோழர்க்கு ஒன்றுவிட்டு வழங்கியதும் இம்முறை பற்றியே. (வே.கட்.26)

*[பேரன் → பெயரன்]*

*பெயர் → பெயரன்= (முதற்காலத்திற் பாட்டன் பெயரைப் பெற்றுவந்த) மகன்மகன் (வே.க.127)*

**பெயராயிரு–த்தல்** *peyarāy-iru-,* செ.கு.வி. (v.i.) 1. புகழுண்டாதல்; to be famous, celebrated 2. வெளிப்பாடு; to be rumoured, to be noised abroad.

*[பெயர் + ஆய் + இரு]*

**பெயராளி** *peyar-āḷi,* பெ. (n.) புகழ்மிக்கவன் (யாழ்.அக.); person of great celebrity.

*[பெயர் + ஆள் + இ]*

**பெயரிடுதல்** *peyar-iḍu-,* செ.கு.வி. (v.i.) பெயர் சூட்டுதல்; to give a name; to perfrom the rite of naming a child. "பெயரிடுதல் விழாவைச் சிறப்பாகக் கொண்டாட வேண்டியதில்லை."

*[பெயர் + இடு]*

**பெயரிடை நிலை** *peyar-iḍai-nilai,* பெ.(n.) பெயரின் முதனிலை இறுதிநிலை கட்கு இடைநிற்கும் எழுத்து (நன். 141, உரை.); (gram.) medial letter between the root and suffix of a noun as ñ in aṟiñaṉ.

*[பெயர் + இடைநிலை]*

**பெயரிய** *peyariya,* பெ.எ. (adv.) 1. பெயர்பெற்ற; having a name. '*இருபாற் பெயரிய.... மூதூர்*' (புறநா. 202.) 2. பெயரால் அழைத்த; of calling by name. '*கோவெனப் பெயரிய காலை*' (புறநா. 152.)

*[பெயர் – பெயரிய]*

**பெயரியல்** *peyar-iyal,* பெ. (n.) சொல்லதி காரத்திற் பெயர்ச்சொல்லிலக்கணங் கூறும் பகுதி (தொல்.); (gram.) chapter on nouns.

*[பெயர் + இயல்]*

**பெயரியற்சொல்** *peyar-iyaṟ-col,* பெ. (n.) தன் பொருளை இயல்பில் விளக்கும் பெயர்ச்சொல் (நன். 269); noun that naturally suggests its meaning.

*[பெயர் + இயல் + சொல்]*

**பெயரிரவல்** *peyar-iraval,* பெ. (n.) உடைமைக்கு உரியவர் பெயரை மறைத்து உரியரல்லாதார் பேரால் நடத்தும் நடவடிக்கை; benami transaction.

*[பெயர் + இரவல்]*

**பெயரின்மை** *peyar-iṉmai,* பெ. (n.) இறைவனெண்குணத்தொன்றான சொல்லமுடியாத தன்மை(பிங்.); namelessness, one of iṟaivaṉ-eṇ-guṇam. q.v.

*[பெயர் + இன்மை]*

**பெயரின்னிசை** *peyar-iṉṉišai,* பெ. (n.) சிற்றிலக்கிய வகை தொண்ணூற் றாறனுள் பாட்டுடைத் தலைவன் பெயர் சார்ந்துவர 50, 70 அல்லது 90 இன்னிசை வெண்பாக்களால் இயற்றப்படும் சிற்றிலக்கிய வகை. (இலக். வி. 825.) (சது.); a poem of 50, 70 to 90 stangas of iṉṉišsi-veṇbā each mentioning the name of a patron or hero, one of 96 šiṟṟilakkiyam.

*[பெயர் + இன்னிசை]*

**பெயருரிச்சொல்** *peyar-uri-c-col,* பெ. (n.) பெயர்ச்சொல்லைத் தழுவிவரும் சொல்(இ.வ.); adjective, as qualifying a noun.

*[பெயர் + உரிச்சொல்]*

**பெயரூர்** *peyar-ūr,* பெ. (n.) பெயரும் பிறந்தவிடமும்(வின்); name and native place.

*[பெயர் + ஊர்].*

**பெயரெச்சம்** *peyar-eccam,* பெ. (n.) பெயர்கொண்டு முடியும் வினைக்குறை (நன். 340.); பெயரை எச்சமாக உடையது. relative participle, as requiring a noun to complete the sense.

*[பெயர் + எச்சம்]*

**பெயரெஞ்சுகிளவி** *peyar-eñju-kiḷavi,* பெ. (n.) *பெயரெச்சம்* (தொல். சொல். 238.) பார்க்க; see *peyar-eccam*

*[பெயர் + எஞ்சு + கிளவி]*

**பெயரெடு—த்தல்** *peyar-eḍu-,* செ.கு.வி. (v.i.) **1.** பெயர் பெறுதல்; to get a name. **2.** *பெயரடி* பார்க்க; see *peyar-aḍi*

*[பெயர் + எடு]*

**பெயரெழுத்து** *peyar-eluttu,* பெ. (n.) எழுத்து வகை(பிங்.); a kind of letter.

*[பெயர் + எழுத்து]*

**பெயரேடு** *peyar-ēḏu,* பெ. (n.) பேரேடு(நாஞ்.); ledger.

*[பெயர் + ஏடு]*

**பெயல்.** *peyal,* பெ. (n.) **1.** பொழிகை; showering *'ஒல்லாது வானம் பெயல்'* (குறள். 559.) **2.** மறை; rain *'மன்னவ னாட்ட பெயலும் விளையுளுந் தொக்கு'* (குறள். 545.) **3.** மழைத்துளி (திவா.); rain drop. **4.** முகில்; cloud. *'பெயறுளி முகிழென'* (கலித். 56.)

*[பெய் – பெயல்]*

**பெயலை** *peyalai,* பெ. (n.) மழை(சது.); rain "பெயலை பொய்த்தால் பெருந்தீங்கு" (இ.வ)

*[பெய் → பெயல் → பெயலை]*

**பெயாதனம்** *peyādanam,* பெ. (n.) வேங்கை (மலை.) பார்க்க; East India Kino.

**பெரட்டு** *peraṭṭu,* பெ. (n.) புரட்டு; deception. *'பெரட்டும் உருட்டும் வேதனை செய்வதும்'* (கனம் கிருஷ்ணையர், கீர்த்.21.).

*[புரட்டு → பெரட்டு]*

**பெரி** *peri,* பெ. (n.) சிறுநாகப்பூ; iron-wood of ceylon

**பெரிசு** *perišu,* பெ. (n.) *பெரியது* (யாழ்.அக.) பார்க்க; see *periyadu*

*[பெரியது– பெரிது – பெரிசு] (கொ.வ.)*

**பெரிது**[1] *peridu,* பெ. (n.) பெரியது; that which is great big or large. *'நன்மை கடலிற் பெரிது'* (குறள். 103.)

*[பெரியது– பெரிது]*

**பெரிது**[2] *peridu* வி.அ. (adv.) மிகவும்; greatly. *'கலங்குவன் பெரிதென'* (கலித்.27.)

*[பெரியது– பெரிது]*

**பெரிய** *periya,* பெ.அ. (adf.) **1.** பெரிதான large, great. *'பெரிய மேருவரையே சிலையா மலைவுற்றார்'* (தேவா. 1114.9.) **2.** மூத்த; elder. *'பெரிய தாயார்'* **3.** இன்றியமையாத; important, great. *'பெரிய செயல்'* **4.** நல்ல; noble. பெரிய நடை.

*[பெரு(மை) பெரி – ய]*

**பெரியகம்பு** *periya kambu,* பெ. (n.) கம்புப் பயிர்வகை; large bulrush millet, pennisetum typhoideum.

*[பெரிய + கம்பு]*



**பெரியகரடி** *periya-karadi,* பெ. (n.) எழுமுனிமண்டலம்; the great bear, (pond.)

*[பெரிய + கரடி]*

**பெரியகருப்பன்** *periya-karuppan,* பெ. (n.) ஒரு சிற்றூர்த் தெய்வம்(இ.வ.); a village deity.

*[பெரிய + கருப்பன்]*

**பெரியகாட்டுச்சாதி** *periya-kāṭṭu-c-cādi,* பெ. (n.) காட்டுச் சாதி(M.M.887); malabar nutmeg.

*[பெரிய + காட்டுச்சாதி.* skt jāti. *த.சாதி]*

**பெரியகாடை** *periya-kāḏai,* பெ. (n.) காடை வகை(M.M. 75); common quail, coturnix communis.

*[பெரிய + காடை]*



**பெரியகிளி** *periya-kiḷi,* பெ. (n.) கிளிவகை; large indian parakeet, palacornis nepalensis.

*[பெரிய + கிளி]*

**பெரியகுடி** *periya-kuḏi,* பெ. (n.) *பெரிய குடியானவன்* பார்க்க; see *periya kuḏiyāṉavaṉ*

*[பெரிய + குடி]*

**பெரியகுடியானவன்** *periya-kuḏiyāṉavaṉ,* பெ. (n.) 1. தலைமை வேளாளன்; biggest tenant or cultivator in a village. 2. சிற்றூரின் பெருஞ்செல்வர்; mirasdār.

*[பெரிய + குடியானவன்]*

**பெரியகுணம்** *periya-guṇam,* பெ. (n.) 1. உயந்தபண்பு; nobility, liberal disposition, magnanimity, 2. உலகப் பற்றின்மை(வின்) superiority or indifference to worldly greatness, honours or pleasure.

*[பெரிய + குணம்]*

**பெரியகை** *periya-kai,* பெ. (n.) 1. தாராளமான கை(யாழ்.அக.); liberal or bountiful hand. 2. பணக்காரன்(இ.வ.); wealthy person 3. சாய்கால் மிக்க ஆட்சி(வின்); influential party.

*[பெரிய + கை]*

**பெரியகோயில்** *periya-koyil,* பெ. (n.) திருவரங்கம்; Thiruvarangam *'நஞ்சேவகனார். மருவிய பெரியகோயில்'* (திவ். திருமாலை,11.) 2. தஞ்சைப் பெரியகோயில்; Tanjore bigtemple.

*[பெரிய + கோயில்]*



**பெரியசம்பா** *periya-šambā,* **பெ.** (n.) ஆறுமாதத்திற் பயிராகும் சம்பா நெல்வகை (**விவசாய.1**); a kind of šambā paddy, maturing in six months.

**பெரியசீயர்** *periya-šiyar,* **பெ.** (n.) மணவாள மாமுனிகள்; an ācārya of the teṉkāli sri vaisṉavar.

*[பெரிய + சீயர்]*

skt.jiyar-**த.**சீயர்

**பெரிய சேரான்** *periya-cērāṉ,* **பெ.** (n.) தேன் சேரான்(**யாழ்ப்.**) glabrous marting-nut.

*[பெரிய + சேரான்]*

**பெரிய தக்காளி** *periya-takkāḻi,* **பெ.** (n.) தக்காளி வகை(M.M.**365**.); indian winter-cherry, physalus peruuiana.

*[பெரிய + தக்காளி]*

**பெரிய தகப்பன்** *periya-tagappaṉ,* **பெ.** (n.) **1.** தந்தையின் மூத்தஉடன்பிறந்தான்; father's elder brother. **2.** தாயின் மூத்த உடன் பிறந்தாளின் கணவன்; husband of mother's elder sister.

**மறுவ.** பெரியப்பன்

*[பெரிய + தகப்பன்]*

**பெரியதகரை** *periya-tagarai,* **பெ.** (n.) மரவகை(m.m. **155.**); West Indian bead tree.

*[பெரிய + தகரை]*

**பெரியதட்டு** *periya-taṭṭu,* **பெ.** (n.) கப்பலின் மேற்பகுதியான தளம்(naut.); deck.

*[பெரிய + தட்டு]*

**பெரியதம்பிரான்** *periya-tambirāṉ,* **பெ.** (n.) **1.** தம்பிரானுள் தலைவர்(**வின்**); chief among the non-brahmin saiva ascetics of a mutt. **2.** வண்ணார் முதலியோர் வணங்கும் சிவ திருமேனி; a form of siva, worshipped by washerman and others **3.** அங்காளம்மை(**துஞ்.**); a form of goddess Durgā.

*[பெரிய + தம்பிரான்]*

**பெரியதலை** *periya-talai,* **பெ.** (n.) பெரியவன்(**கொ.வ.**); a prominent person

*[பெரிய + தலை]*

**பெரியதனக்காரன்** *periya-daṉa-k-kāraṉ,* **1.** சிற்றூர் மணியக்காரன்(R.T.) village headman. **2.** சாதித் தலைவன்(**இ.வ.**); hereditary headman of a caste. **3.** சிற்றூரில் நில உடைமையாளர்; mirāsdār, chief landholder in a village.

*[பெரியதனம் → பெரியதனக்காரன்]*

**பெரியதனம்** *periya-daṉam,* **பெ.** (n.) **1.** பெருமை (**வின்.**); dignity, honour. **2.** மேட்டிமை (**வின்.**); pride, arrogance, haughtiness **3.** மேற்பார்வை (**வின்.**); superintendence **4.** பார்க்க, *பெரியதனக்காரன்* (**கொ.வ.**) see *periyataṉakkāraṉ.*

*[ பெரிய + தனம் ]*

*தனம் = தன்மை*

**பெரியதாக்கு–தல்** *periyadākku-,* **செ.குன்றாவி.** (v.t.). **1.** வளர்த்தல்; to cause to grow. இளங்கன்றைப் பெரியதாக்கும் பொறுப்பு இவருடையதானது(**உ.வ.**) **2.** பலவாக்கு; to mulfity. **3.** பருமனாக்கு; to cause to in create, big.

**க.** பெர்சிசு, பெச்சிசு

*[பெரியது + ஆக்கு ]*

ஆகு. (**த.வி.**) – ஆக்கு(**பி.வி**)

**பெரியதாய்** *pariya-tāy,* பெ. (n.) 1. தாயின் மூத்த உடன் பிறந்தாள்; mother's elder sister; 2. தந்தையின் மூத்த உடன் பிறந்தான் மனைவி; wife of father's elder brother.

**மறுவ.** பெரியம்மா

*[*பெரிய + தாய்*]*

**பெரியதாயி** *pariya-tāyi,* பெ. (n.) ஒரு சிற்றூர்த் தேவதை;(G. SM. D. I. i, **120.**) a village goddess.

*[*பெரியதாய் → பெரியதாயி*]*

**பெரியதிருநாள்** *pariya-tiru-nāḷ,* பெ. (n.) ஆண்டுதோறும் நடக்கும் பெரிய திருவிழா; (ஈடு. **10,4,10.**); the important annual festival in a temple.

*[பெரிய + திருநாள்]*

**பெரியதிருமடல்** *periya-tirumaḍal,* பெ. (n.) நாலாயிரத்தெய்வப்பனுவலில் திருமங்கையாழ்வார் இயற்றிய சிற்றிலக்கிய வகை; a poem in divviya-p-pirabandam by Tirumaṅgai-y-āḷvār.

*[பெரிய + திருமடல்]*

**பெரியதிருமொழி** *pariya-tirumoḻi,* பெ. (n.) நாலாயிரத்தெய்வப்பனுவில் திருமங்கை யாழ்வார் இயற்றிய சிற்றிலக்கிய (பிரபந்த)வகை; a poem in Tivya-p-pirabandam, by Tirumaṅgai-y-āḷvār.

*[பெரிய + திருமொழி]*

**பெரியதிருவடி** *periya-tiru-v-aḍi,* பெ. (n.) கருடாழ்வார்(ஈடு,**1,4,6**); Garuḍa, dist. fr. ciṟiya-tiru-v-aḍi.

*[பெரிய + திருவடி]*

**பெரியதிருவந்தாதி** *periya-tiru-v-andādi;* பெ. (n.) நாலாயிரத் தெய்வப் பனுவில் வெண்பாக்காளால் ஈறுதொடங்கியாக நம்மாழ்வார் இயற்றிய சிற்றிலக்கியவகை; a poem in veṉbā in Tivviya-p-pirabandam by Nammāḻvār.

*[பெரிய + திரு +* skṭ.anta *+* ādi.*த.அந்தாதி]*

**பெரியதிருவோலக்கம்** *periya-tiru-v-ōlakkam,* பெ. (n.) அடியாரது பெருங்குழு (வைண); a large assemble of devotees, as in front of a deity.

*[பெரிய + திரு + ஓலக்கம்]*

**பெரியதெள்ளுக்காய்** *periyateḷḷukkāy,* பெ. (n.) அவரைக்கொடி வகை(m.m. **238**); hegro bean cowitch,

*[பெரிய + தெள்ளுக்காய்]*

**பெரியதேவர்** *periyatēvar,* பெ. (n.) 1. ஆளும் அரசனுக்கு முன் ஆண்ட அரசன்; (கல்); the predecessor of a ruling king. 2. நந்திதேவர்; the sacred bull Nandi.

*[பெரிய + தேவர்]*

**பெரியநங்கை** *periyan-naṅgai,* பெ. (n.) *பெரியா நங்கை* (மூ.அ.) பார்க்க; see *periyā naṅgai.*

*[*பெரிய + நங்கை*]*

**பெரியநடை** *pariya-naḍai,* பெ. (n.) நல்லொழுக்கம்; noble courše of conduct.

*[* பெரிய + நடை *]*

**பெரியநம்பி** *periyanambi,* பெ. (n.) இராமாநு சரின் ஆசிரியர்களுள் ஒருவர்; (அஷ்டப். ஊசு. 18); vaiṢṉava ācārya, precepor of Rāmānuja.

[பெரிய + நம்பி]

**பெரியநறுவிலி** *periyanaṟuvili,* பெ. (n.) மரவகை(M.M.802); large sebesten, m.tr., cordia obliqua.

[பெரிய + நறுவிலி]

**பெரியநாள்** *periya-nāḷ,* பெ. (n.) திருநாள்; festival day.

[பெரிய + நாள்.]

**பெரியநோவு** *periya-nōvu,* பெ. (n.) கால் நடைகட்கு வரும் வெக்கை நோய் (கால். வி.53); rinderpest, cattleplague.

[பெரிய + நோவு]

**பெரியப்பச்சி** *periyappacci,* பெ. (n.), *பெரியப்பன்* பார்க்க; see *periyappaṉ;*

*[பெரிய + அப்பச்சி]*

பெரியப்பன் → பெரியப்பச்சி

**பெரியப்பன்** *periyappaṉ,* பெ. (n.), தகப்பனுடன் பிறந்த மூத்தவன்; senior paternal uncle; 2. தாயின் தமக்கை கணவன்; mother's elder slster's hustand.

*[பெரிய + அப்பன்]*

**பெரியப்பா** *periyappā,* பெ. (n.), *பெரியப்பன்* பார்க்க; see *periyappaṉ.*

*[பெரியப்பன் - பெரியப்பா. (வி.)]*

**பெரியபடி** *periya paḍi,* பெ. (n.), நிலைத்த கொள்ளளவுள்ள படி; a standand measure of capaciy.

*[பெரிய + படி]*

**பெரிய பணம்** *periya paṉam,* பெ. (n.), 1. கால் உருவா மதிப்புக் கொண்ட காசு (G. Sm. D.l.i. 293); a coin of the value of querter rupee. 2. இரண்டரை 'அணா' மதிப்புக் கொண்ட காசுவகை. (C. G. 154); big fanam = 2 1/2 annas.

*[பெரிய + பணம்]*

**பெரிய பிராட்டி** *periya piraṭṭi,* பெ. (n.), திருமகள்; lakshmi, as chief consort of visṉu. பெரிய பிராட்டியார் பக்கல் போலே (ஈடு,10,10,6)

*[பெரிய + பிராட்டி]*

**பெரிய பிள்ளை** *periya piḷḷai,* பெ. (n.), ஊர் அல்லது குடும்பத்திற்குத் தலைமையாக மதிக்கப்பட்டவன் (இட.வ.), aged man of a village or a family, held in respect.

*[பெரிய + பிள்ளை]*

**பெரிய புராணம்** *periya-purāṉam,* பெ. (n.), நாயன்மார் அறுபத்து மூவர் வரலாறு குறித்துச் சேக்கிழாரால் பாடப்பட்ட நூல்; a hagiologic poem containing the lives of the sixty. three Nāyaṉmār, by cēkkiḻār.

*[பெரிய + skṭ, purāṇa. த.புராணம்]*

**பெரியபுலு** *periya - pulu,* பெ. (n.), நூறு(யாழ்ப்.); cant for hundred, as a large ten.

*[பெரிய + பல்து (பத்து) → பலு → புலு]*

**பெரியபுனுகுப் பூனை** *periya pungugu-p-pūnai,* பெ. (n.), புனுகுப் பூனை வகை; large civet cat, viverra zebettia.

*[பெரிய + புனுகுப் பூனை]*

**பெரிய பூளை** *periya-pūḷai,* பெ. (n.), செடி வகை(m.m. 702); large poolay, m. sh. aerna javanica.

*[பெரிய + பூளை]*

**பெரிய பெயர்** *periya peyar,* பெ. (n.), பெரும் புகழ்(வின்); great fame, celebrity;

*[பெரிய + பெயர்]*

**பெரிய பெருமாள்** *periya perumāḷ,* பெ. (n.), **1.** திருவரங்கத்துத் திருமால்; god at srire Tiru-v-arangam. பெரிய பெருமாளரங்க ராடிரூசல் (அஷ்டப். ஊசல். **2.** பேரரசன்; (s.l.l. ii. **155**) paramount soverign, emperor. பெரியபெருமாள் படிமை ஒன்று.

*[பெரிய + பெருமாள்]*

**பெரிய பேச்சு** *periya pēccu,* பெ. (n.), நல்ல பேச்சு; agreat, noble nord, **2.** நீண்ட உரையாடல்; long discussion.

**க.** பெர்மாது.

*[பெரிய + பேச்சு]*

**பெரிய பொருள்** *periya poruḷ,* பெ. (n.), பரம்பொருள் (பரப்பிரமம்); Brahma, as the supreme being. "ஞானவானந்தமாம் பெரிய பொருளைப் பணிகுவாம்" (தாயு. திருவருள். பரசிவ. **2**)

*[பெரிய + பொருள்]*

**பெரியம்மா** *periyammā,* பெ. (n.), *பெரியம்மாள்* பார்க்க; see *periyammāḷ.*

*[பெரிய + அம்மா ]*

**பெரியம்மாள்** *periyammāḷ,* பெ. (n.), **1.** தகப்பனுடன் பிறந்த மூத்தோனின் மனைவி; senior paternal uncle's wife. **2.** தாயின் தமக்கை; mother'seldersister. **3.** வீட்டுத்தலைவி (இ.வ.); the elder **4.** lady or mistress of a house.

*[பெரிய + அம்மாள்]*

**பெரியம்மான்** *periyammāṉ,* பெ. (n.), **1.** தாயுடன் பிறந்த மூத்தவன்; eldest of mother's brother's. **2.** தந்தையினுடைய தமக்கையின் கணவன்; father's elder sister's husband.

*[பெரிய + அம்மான்]*

**பெரியம்மான் பச்சரிசி** *periyammāṉ-paccarisi,* பெ. (n.), செடி வகை (M.M. **27**); pillbearing shrge, small herb.

*[பெரியம்மான் + பச்சரிசி]*

*நிலத்தை யொட்டிப் படரும் அம்மான் பச்சரிசிச் செடிவகையுளொன்று.*

**பெரியம்மை** *periyammai,* பெ. (n.), **1.** *பெரியம்மாள்* (சொ.வ.) பார்க்க; see *periyammāḷ.* **2.** அம்மை நோய் வகை (சொ.வ.); small-pox, personifed as a deity. **3.** மூதேவி; goddens of misfortuse. மட்டில் பெரியம்மை வாகனமே (தனிப்பா. i, **96, 17**).

*[பெரிய + அம்மை]*

**பெரியமரம்** *periya-maram,* பெ. (n.), கடலோடிகளின் பெரிய கட்டுமரம்; a large catamaran.

க. பேர்மர

*[பெரிய + மரம்]*

**பெரிய மனசு** *periya manašu,* பெ. (n.), *பெரிய மனம்* பார்க்க; *periya-manam.*

*[பெரிய + மனம் → மனசு]*

**பெரியமனம்** *periya-manam,* பெ. (n.) 1. நன்மனம்; noble mind, magnanimity. 2. தொடர்பு பற்றாதும் கைம்மாறு கருதாதும் எல்லா உயிர்கள் மேலும் இயல்பாகச் செல்லும் இரக்க உணர்வு – அருள் (இ.வ.); favour.

*[பெரிய + மனம்]*

**பெரிய மனிதன்** *periya manidan,* பெ. (n.), 1. மேன்மையாளன்; great man. 2. செல்வமும் சாய்காலு முள்ளவன்; wealthy, influential man. 3. உயர்ந்த நிலையிலுள்ளவன்; man of position, official or otherwise. 4. அகவை முதிர்ந்தோன்; aged man. 5. வண்ணாரினத் தலைவன்(E.T.VII. 317); head man of a caste, as of washerman.

*[பெரிய +* skṭ-Manu-ša→ *மனுஷ்யா→ த. மனிதன்]*

**பெரிய பெண்** *periyapen,* பெ. (n.), 1. அகவை முதிர்ந்தவள்; aged woman. 2. தகுந்த நிலையிலுள்ளவள்; influential woman; woman of position. 3. பருவமடைந்தவள்; a girl who attainded puberty.

*[பெரிய + பெண்]*

**பெரியமனுசி** *periyamanusi,* பெ. (n.), *பெரிய பெண்* பார்க்க; see *periya pen.*

*[பெரிய +* skṭ. Mānusi- *மனுஷி → த. மனுசி]*

**பெரியமனுசியா–தல்** *periyamanuriyā,* செ.கு.வி. (n.),. பார்க்க; see *periyaḷāvalatal.*

*[பெரிய +* skṭ-Manusi-*மனுஷி → த. மனுசி + ஆ]*

**பெரியமாவிலிங்கம்** *periya-māviliṅgam,* பெ. (n.), மாவிலிங்க வகை; a species of garlic pear.

*[பெரிய + மாவிலிங்கம்]*

**பெரிய முப்பழம்** *periya-muppāḻam,* பெ. (n.), பாட்டின் மரபு கூறும் ஒரு பழைய நூல் (யாப். வி. பக். 516); an ancient treatise on poetics, not now extant.

*[பெரிய + முப்பழம்]*

**பெரிய மூக்கிரட்டை** *periya mukkiraṭṭai,* பெ. (n.), மூக்குத்திக்கொடிவகை(ட.) pointed-leaved hogweed.

*[பெரிய + மூக்கிரட்டை]*

**பெரியமூளை** *periya mūḷai,* பெ. (n.), மூளையின் மேற்பாகம் (இங். வை. 27); cerebrum, fore.brain. 2. அறிவாற்றல் மிக்கவன்; a person of great intellect.

*[பெரிய + மூளை]*

**பெரியமேளம்** *periya-mēḷam,* பெ. (n.), 1. நாகசுரம் முதலிய பெரிய இசைக் கருவிகள் கொண்டு வாசிக்கப்டும் மேளம்; music of big instruments, like clarionet, pipe drum and cymbals, dist ciṉṉa-mēḷam. 2. பெரும் படியாய்ச் செய்வது; anything done on a large scale. அவர் வேலைகளெல்லாம் பெரிய மேளம்.

*[பெரிய + மேளம்]*

**பெரியர்** *periyar.* பெ. (n.), *பெரியார்* பார்க்க; see *periyār.* "சான்றோர் பெரியராக் கொள்வது கோள்" (நாலடி. 165)

*[பெரியார் - பெரியர்]*

**பெரியலவங்கப்பட்டை** *periyalavaṅga-p-paṭṭai,* பெ. (n.), மரவகை; cassia cinnamon.

*[பெரிய + இலவங்கப்பட்டை]*

**பெரியவசூரி** *periyavašūri,* பெ. (n.), 1. *பெரியம்மை* பார்க்க; see *periyammai.*

*[பெரிய + வைசூலி→ வைசூரி→ வசூரி]*

**பெரியவடி** *periya-v-aḍi,* பெ. (n.), நீண்டவடி; a long foot.

க. பேரடி

*[பெரிய + அடி]*

**பெரியவர்** *periyavar,* பெ. (n.), 1. உயர்ந்தோர்; the great. பெரியவர் கேண்மை பிறை போல... நந்தும் (நாலடி. 125) 2. முதியவர்; the aged. 3. முன்னோர்; ancestors. எங்கள் பெரியவர் தேடிவைத்த சொத்து.

*[பெருமை → பெரியோர் → பெரியவர்]*

**பெரிய வரகு** *periya varagu,* பெ. (n.), வரகு வகை(Rd.M.); a large species of common millet.

*[பெரிய + வரகு]*

**பெரிய வராடி** *periya vārāḍi,* பெ. (n.), பாலையாழ்த்திற வகை (பிங்.); a secondary medody - type of the pālai class.

*[பெரிய + வராடி]*

**பெரிய வவசரம்** *periya v-avašaram,* பெ. (n.), உச்சிக் காலத்தில் கோயில் திருமேணிக்குப் படைக்கும் படையல்; noon meal offered before the chiefdeity in a temple.

*[பெரிய +skt. avasara. த.அவசரம்]*

**பெரியவள்** *periyavaḷ,* பெ. (n.), 1. அகவை முதிர்ந்தவள்; elderly woman. 2. பூப்பெய்தியவள்; a girl who has attained puberty.

*[பெரிய + (அ)வள்]*

**பெரியவளா—தல்** *periyavaḷ-ā-,* செ. கு. வி. (v.i.), பூப்பெய்துதல்; to attain pubery, as a girl.

*[பெரியவள் + ஆ –, → பெரியவளாதல்]*

**பெரியவன்** *periyavaṉ,* பெ. (n.), 1. உரிய அகவை அடைந்தவன்; grown-up man. 2. மூத்தோன்; senior, elder. "தம்பியை நோக்கிப்பெரியவன்.... என்றான்" (கம்பரா.சித்திர.57.) 3. பெரிய நிலையிலுள்ள வன்; bigwig.

*[பெரிய + (அ)வன்]*

க. பெர்மக

**பெரியவாகை** *periyavāgai,* பெ. (n.), *காட்டுவாகை,* பார்க்க; see *kāttu-vāgai.*

*[பெரிய + வாகை]*

**பெரியவாச்சான்பிள்ளை** *periya-v-āccāṉpiḷḷi,* பெ. (n.), கி.பி. 13 ஆம் நூற்றாண்டி னரும் நாலாயிரத் தெய்வப் பனுவலுக்கு உரையும் மற்றும் பல நூல்களும் இயற்றியவருமான ஒரு மாலிய ஆசிரியர் (உபதேசரத். 46); a vaišṇava ācārya, author of many works, and commentator of Tivya-p-pirpandam.

*[பெரிய + ஆசான் + பிள்ளை]*

**பெரியவாத்தி** *periya-v-ātti,* பெ. (n.), சிவப்புமந்தாரை; purple variegated mountain ebony.

**பெரியவாய்[1]** *periya-vāy,* பெ. (n.), அலப்பு வாயன்; one who talks loudly and boisterously.

**மறுவ.** *அகலவாய்*

*[பெரிய + வாய்]*

**பெரியவாய்[2]** *periyavāy,* பெ. (n.), மரவகை; half-spur, flowered nutmeg.

*[பெரிய + வாய்]*

**பெரியவாள்** *periya-vāḷ,* பெ. (n.), ஈர்வாள்; pit saw.

*[பெரிய + வாள்]*

**பெரியவீட்டுக்காரன்** *periya viṭṭu-k-kāraṉ,* பெ. (n.), **1.** செல்வமுடையவன்; big or wealthy man. **2.** பறையன்; a man of pariya caste.

*[பெரிய + வீட்டுக்காரன்]*

**பெரியவுடையநாயனார்** *periya-v-uḏaiyaāyaṉār,* பெ. (n.), தஞ்சைக் கோயில் இறைவன்; god bṟhadisvara of the Tanjore.

*[பெரிய + உடைய + நாயனார்]*

**பெரியவுடையார்** *periya-u-ḏaiyār,* பெ. (n.), சடாயு; (திவ். இயற். திருவிருத். **18.** வயா) jaḏāyu.

*[பெரிய + உடையார்]*

**பெரியவெண்ணம்** *periya-v-eṇṇam.* பெ. (n.), **1.** உயர்ந்த சிந்தை; nobleaspiration, great conception. **2.** வீண் பெருமை; high conceit, assumption.

*[பெரிய + எண்ணம்]*

**பெரிய வெள்ளிக்கிழமை** *periya-veḷḷi-k-k-kiḻamai.* பெ. (n.), ஏசுபெருமான் குறுக்கில் (சிலுவையில்) அறைந்து கொல்லப்பட்ட நாளின் ஆண்டுக் கொண்டாட்டம்; (கிறித்) good friday, the anniversary of the day on which jesus christ was crucified.

*[பெரிய + வெள்ளிக்கிழமை]*

**பெரியாண்டவர்** *periyāṉḏavar,* பெ. (n.), ஒரு தெய்வம்; a deity.

*[பெரிய + ஆண்டவர்]*

**பெரியாணங்கை** *periyāṉangai,* பெ. (n.), *பெரியா நங்கை* பார்க்க; see *periyā nangai.*

*[பெரியாள் + நங்கை]*

**பெரியாத்தாள்** *periyāttāḷ,* பெ. (n.), *பெரியம்மாள்* பார்க்க; see *periyammāḷ.*

*[பெரிய + ஆத்தாள்]*

*ஆத்தாள் = தாய்*

**பெரியாத்தை** *periyāttai,* பெ. (n.), *பெரியம்மாள்* பார்க்க; see *periyammāḷ.*

*[பெரியாத்தாள் - பெரியாத்தை]*

**பெரியாநங்கை** *periyā-naṅgai,* பெ. (n.), செடி வகை (பதார்த்த.544); large milkwort.

*[பெரிய + நங்கை]*

**பெரியாம்பல்** *periyāmbal,* பெ. (n.), அல்லி; water lilly.

*[பெரிய + ஆம்பல்]*

**பெரியாய்ச்சி** *periyācci,* பெ. (n.), *பெரியம்மாள்* பார்க்க; see *periyammāḷ.*

*[பெரிய + ஆய் → ஆய்= தாய் ஆய்ச்சி]*

**பெரியாயி** *periyāyi,* பெ. (n.), *பெரியம்மாள்* பார்க்க; see *periammāḷ.*

*[பெரிய + ஆய் → ஆயி]*

**பெரியார்**[1] *periyār,* பெ. (n.), **1.** மூத்தோர்; the aged. **2.** சிறந்தோர்; the great. "பெரியார் பெருமை சிறுதகைமை" (நாலடி. 170) **3.** அறிவர்; saints, sags. பெரியாரும் பணித்தார் (குறள், 381 பரி. அவ.) **4.** அரசர்; kings. "பெரியார் மனையகத்தும்....வணங்கார் குரவரையுங் கண்டால்" (ஆசாரக். 73).

**க.** பிரியர். : **பட.** கிரிய

*[பெருமை → பெரியார்]*

**பெரியார்**[2] *periyār,* பெ. (n.), திராவிட கழகத்தின் தனிப்பெருந்தலைவர். தன்மான இயக்க நிறுவனர்; சமய மூடநம்பிக்கைகளைச் சாடிய பகுத்தறிவுச் சிந்தனையாளர்; the great leader of Dravidar kazhagam and founder of self-respect. one who regects common ideas about religion.

*[பெருமை → பெரியார்]*



**பெரியாழ்வார்** *periyāḻvār,* பெ. (n.), ஆழ்வார் பதின்மருள் ஒருவர்; a vairḏava saint and hymnist, one of ten āḻvār. பட்டடர்பிரான் பெற்றான் பெரியாழ்வா ரென்னும் பெயர் (உப தேசரத். 18.)

*[பெரிய + ஆழ்வார்]*

**பெரியோர்** *periyōr,* பெ. (n.), *பெரியார்*[1] பார்க்க; see *periyār.* "பெரியோர் கண்டு கைவிட்ட மயல் (நாலடி." 43.) (திவா.)

*[பெரியார் → பெரியோர்]*

**பெரியோர்பெருமான்** *periyōr perumāṉ,* பெ. (n.), நான்முகன்; brahmā, as lord of sages. "மேலைப் பெரியோர் பெருமான் படைத்தான்" (சீவக. 2066.)

*[பெரியோர் + பெருமான்]*

**பெரியோன்** *periyōṉ,* பெ. (n.), உயர்ந்தோன்; great man. கருணையினாற் பெரியோனொருவன் (திருவாச. 44, 2) 2. கடவுள்; god as the great. "பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்" (சிலப். 5, 169)

*[பெரியன் - பெரியோன்]*

**பெரு–த்தல்** *peru-,* செ.கு.வி (v.i.), 1. பருத்தல்; to grow thick, large, stout. 2. மிகுதல்; to become numerous. "கரடியாதி பெருத்த " (விநாயகபு.)

ம. பெருகுக; தெ. பெருகு.

*[பல் → பரு→ பெரு]*

**பெருக்க** *perukka,* வி. எ. (adv.), மிகுதியாய்; greaty, intensely. ஏன் நீ பேராசை கொண்டு பெருக்கத் தவிக்கிறாய் (இட.வ.).

பெரு - பெருக்க

'அ' வி. எ. ஈறு.

**பெருக்கம்** *perukkam,* பெ. (n.), 1. வளர்ச்சி; increase, augmentation. 2. மிகுதி; multipliciy, plentiulness, abundancea "உண்மைப் பெருக்கமாந் திறமை." (திருவாச. 42, 7) 3.செல்வம். prosperity, opulenec, wealth. பெருக்கம் பெருமித "நீர்த்து" (குறள். 431). 4. வெள்ளம்; flood, deluge. "புதுப்பெருக்கம் போல" (நாலடி. 354) 5. நிறைவு; fulness, perfection . "பெருக்கத்து மதிதழுவி" (விநாயகபு) 6. நீடிப்பு; long continuance, as of the tāli' worn by a married woman. அவள் தாலிப் பெருக்கமாயிருக்கிறாள்.

*[பெரு → பெருகு → பெருக்கம்]*

**பெருக்கம் பண்ணுதல்** *perukkam paṇṇu,* செ. குன்றா.வி. (v.t.) களத்துப் பரவிய நெல்லைக் கையாற் கூட்டுதல்(யாழ்ப்.) to glean grains scattered on the threshing - floor.

*[பெருக்கம் + பண்ணு]*

**பெருக்கமரம்** *perukka-maram,* பெ. (n.), *பப்பரப்புளி* (L.) பார்க்க; see *papparappuḷi.*

*[பெருக்கம் + மரம்]*

**பெருக்கல்** *perukkal,* பெ. (n.), 1. குப்பை கூட்டுகை; sweeping. 2. ஓர் எண்ணை மற்றோர் எண்ணாற் சுட்டிய மடங்கு அதிகப்படுத்துகை; multiplication. 3. மேம்படுத்துகை; improving, making prosperous. "பின்யானிவனைப் பெருக்கலு முற்றனென்" (பெருங். உஞ்சைக், 37, 200)

*[பெருக்கு + அல்]*

'அல்' தொ. பெ. ஈறு)

**பெருக்கல் வாய்பாடு** *perukkal vāypāḍu,* பெ. (n.) எண்களைப் பெருக்குவதாலுண்டாம் தொகையைக் காட்டும் வாய்பாடு (கணக்); multiplication table. இரண்டாம் வகுப்பில் பெருக்கல் வாய்பாடு கற்பிக்கப்படுகிறது.

*[பெருக்கல் + வாய்பாடு]*

**பெருக்கலங்காரம்** *perukkalaṅgāram,* பெ. (n.), வியப்பணி (அதிசய வணி); (rhet.). (வீரசோ. அலங். 25, உரை) hyperbole.

*[பெருக்கல் + அலங்காரம்]*

(skt. alankāra *த. அலங்காரம்)*

**பெருக்கற்கணக்கு** *perukkaṟ-kaṇakku*, பெ. (n.), *பெருக்கல்*, பார்க்க; see *parukkal* (arith.)

*[பெருக்கல் + கணக்கு]*

**பெருக்கன்** *perukkaṉ*, பெ. (n.), பரும்படியானது (வின்); that which is coarse.

*[பெருக்கு → பெருக்கன்]*

**பெருக்காச்சவட்டு** *perukkāccavaṭṭū*, பெ. (n.), கவனமின்மை; indifference. (யாழ். அக.) 2. வெறுப்பு; dislike.

*[பெருக்கு + ஆ + சவட்டு]*

**பெருக்காலட்டை** *perukkāl-aṭṭai*, பெ. (n.), அட்டைவகை (இ.வ.); a kind of leech.

*[பெரு(மை) + கால் + அட்டை]*

**பெருக்காளர்** *perukkāḷar*, பெ. (n.), 1. சிறப்புடையோர்; grandees, noblemen. 2. கடை நிலையர் (சூத்திரர்); (பிங்) men of the sūdra caste.

*[பெருக்கு + ஆள் + அர்]*

**பெருக்காறு** *perukkāṟu*. பெ. (n.), பெருகியோடும் ஆறு; river in floods. செல்வமோ பெருக்காறு போலாம். (குமரே. ச. 67.)

*[பெருக்கு + ஆறு]*

**பெருக்கி** *perukki*, பெ. (n.), வித்தமிழ்து (விந்து); (சங். அக.); semen virile.

*[பெருக்கு → பெருக்கி.]*

'இ' வினைமுதல்குறித்த ஈறு.

**பெருக்கிவிடு–தல்** *perukki-viḍu-*, செ.கு.வி. (v.i.), ஓடி விடுதல்; to run away.

பெருகு (த. வி.) - பெருக்கு (பி. வி.)

பெருக்குதல் = அகலுதல், நீங்குதல், தொலைவாதல், ஓடுதல்.

*[பெருகு → பெருக்கு → பெருக்கி + விடு- தல்]*

**பெருக்கு[1]–தல்** *perukku*, செ. குன்றாவி. (v.t.), 1. விரியச் செய்தல்; to cause to increase or abound; to make greater. "வாரி பெருக்கி" (குறள். 512) 2. நீர் நிரப்புதல்; to fill, to cause to swell and overflow. வாய்க்காலால் ஏரியைப் பெருக்க வேண்டும். (உ. வ.) 3. மோர் முதலியற்றை நீர் கலந்து பெருகச் செய்தல்; to dilute with water, as buttermilk, "நீர் சுருக்கி மோர் பெருக்கி" (பதார்த்த. 1498) 4. குப்பை கூட்டுதல்; to sweep. 5. ஓர் எண்ணை மற்றோர் எண்ணாற் கூட்டிய மடங்கு அதிகப்படுத்துதல் (கணக்); to mulitply.

**தெ.** பெருக; **க.** பெர்சிசு; **ம.** பெருக்குக.

*[பல் → பரு - பெரு → பெருகு → பெருக்கு]*

பெருக்கு (பி. வி),

**பெருக்கு[2]** *perukku*, பெ. (n.), 1. வெள்ளம்; flood, inundation. "ஆற்றுப்பெருக்கற்று" (நல்வழி. 9) 2. கடல் நீரேற்றம்; ebb of the tide. 3. குருதியோட்டத்தின் மிகுதி; height of the circulation of the blood which is supposed to ebb and flodaily like the tide.

4. மிகுதி (வின்); influx, like the wealth. 5. *பெருக்கற்கணக்கு;* (யாழ். அக.) பார்க்க; see *perukkaṟkeṉakku.* 6. *பெருக்குத் தொகை* பார்க்க; see *perukku-t-togai.* 7. *பப்பரப்புளி* (மலை) பார்க்க; see *papparapuli,* baobab.

*[பெருகு + பெருக்கு]*

**பெருக்குக் கணக்கு** *perukku-k-kaṉakku,* பெ. (n.), *பெருக்கற்கணக்கு* (யாழ். அக.) பார்க்க; see *perukkaṟ-kaṉkku.*

*[பெருக்கு + கணக்கு]*

**பெருக்குத் தொகை** *perukku-t-togai,* பெ. (n.), இரண்டு எண்களைப் பெருக்கியதாற் கூடிய தொகை(கணக்); product.

*[பெருக்கு + தொகை]*

**பெருக்குமாறு** perukku - māṟuபெ.(n.) விளக்குமாறு (இ.வ.);broom.

*[பெருக்கு + மிலாறு→ மாறு]*

**பெருக்குமெண்** *perukkumeṉ,* பெ. (n.), மற்றொன்றைப் பெருக்குதற்கு உரிய எண் (கணக்.); multiplier.

*[பெருக்கு(ம்) + எண்]*

**பெருக்குரல்** *perukkural,* பெ. (n.), பாடுகையில் தோன்றும் வெடித்த குரல்; cracked voice (mus.) (திருவாலவா. 57,26)

*[பெரு(மை) + குரல்]*

**பெருக்கு வேளை** *perukku-vēḷai,* பெ. (n.), 1. கடலின் நீரேற்றக் காலம்; time of the flow of tide. 2. உடலில் குருதியோட்டம் மிகுந்த காலம்; time of the day when the circulation of the blood is at its height. 3. உச்சிப்போது (யாழ். அக.); midday.

*[பெருக்கு + வேளை]*

பெருகு = விரைவு, பெருகிய நிலை, உயர் நிலை.

**பெருக்கெடு—த்தல்** *perukkeḍu,* செ. கு. வி. (v.i.), வெள்ளம் அதிகமாதல்; to flood, as a river; to ebb, a tide.

*[பெருக்கு + எடு.,]*

**பெருக** *peruga,* வி.எ.*( adv)* நிரம்ப; abundantly, prosperously. 'பெருக வாழ்.'

*[பெருகு - பெருக.]*

'அ' வி. எ. ஈறு

**பெருகல்** *perugal,* பெ. (n.), மிகுதி; (பிங்.) abundance.

*[பெருகு + அல்]*

**பெருகளர்வா** *peru-gaḷarvā,* பெ. (n.), மரவகைm.m.; large tooth brushtree.

*[பெருகு + அளர்வா.]*

**பெருகளற்று வட்டம்** *perugaḷaṟṟu - vaṭṭam,* பெ. (n.), *பெருங்களிற்று வட்டம்* (பிங்.*ms.)* பார்க்க; see *peruṅgaḷṟru-vaṭṭam.*

*[பெரு + களிற்று + வட்டம்]*

**பெருகியல்** *perugiyal,* பெ. (n.), சாதிப்பெரும் பண் நான்கனுள் ஒன்று(கந்தபு. சூரனா. 23); a class of primary melody, types, one of four šādi-p-perum-paṉ. (mus.)

*[பெருகு + இயல்.]*

**பெருகியன் மருதம்** *perugiyaṉ-marudam,* பெ. (n.), பண் வகை (சிலப். 8,39.) a primary melody-type

*[பெருகியல் + மருதம்]*

**பெருகிலை** *perukilai,* பெரு.(n.) *வெள்ளைக் கண்ணி* (L.); Pink. tinted heart leaved glory tree.

**பெருகு—தல்** *perugu,* செ. கு. வி. (v.i.), 1. அளவு மிகுதல்; to increase in numbers, multiply, spread to abound. 2. நிறைதல்; (சூடா.); to become full; to be perfected. 3. நீர் மிகுந்தெழுதல்; to rise, swell, to over flow, as water பெருகு மதவேழம் (திவ். இயற். 2,75) 4. மேம்படுதல்; to be increased, augmented or enlarged, to grow great, prosper. "பண்பிலார் கேண்மை பெருகலிற் குன்ற லினிது" (குறள். 811) 5. முதிர்தல்; to come to maturity, as embryo. "பெருகுசூலிளம்பிடிக்கு" (கம்பரா. சித்திர. 10) 6. வளர்தல்; to grow தளிபெருகுந் தண்சினைய (பரிபா. 8,91). 7. ஆக்கந்தருதல் (வின்.); to bring prosperity, 8. தாலி அற்று வீழ்தல்(கொ.வ.); to snap, as the thread of the marriage badge, used euphemistically. 9. கேடுறுதல், (தொல். சொல். 17 உரை) (திருக்கோ. 218. உரை); to be injured, ruined, used euphemistically. 10. விளக்கணைதல்; (நேமி . சொல்.10. உரை); to be put out or extinguished, used euphemistically.

க. பெர்சு

*[பல் -பரு - பெரு - பெருகு.]*

**பெருகு[2]** *perugu,* பெ. (n.), தயிர்; (பிங்.) curdled milk.

தெ. பெருகு.

*[பெரு → பெருகு]*

**பெருகு[3]** *perugu,* பெ. (n.) அணிகல வகை; (அக.நி); an ornament.

*[பெரு → பெருகு]*

**பெருகுசாதி** *perugušādi,* பெ. (n.), பண்ணியற்றிற வகைகளுள் ஒன்று;(mus.) (சிலப். 13, 110–12, உரை); a sub-variety. of paṉṉiyaṟṟiram

*[பெருகு + சாதி]*

**பெருங்கட்டி** *peru-ṅkaṭṭi,* பெ. (n.), பிளவை; abscess.

*[பெரும் + கட்டி]*

**பெருங்கட்டு** *peru-n-kaṭṭu,* பெ. (n.), பெருஞ்சரக்கு மூட்டை; large bundle.

*[பெரும் + கட்டு]*

**பெருங்கட்டுக்கொடி** *peru-ṅ-kaṭṭu-k-koḍi,* பெ. (n.), பாலுள்ள கொடிவகை; (பதார்த்த. 325) a milcy creeper.

*[பெரும் + காட்டுக்கொடி]*

**பெருங்கடப்பு** *peruṅgaḍappu,* பெ. (n.), கடப்ப நெல் வகை(A.); a kind of paddy

*[பெரும் + கடப்பு]*

**பெருங்கடமை** *perun-gadamai,* பெ. (n.), பெரும்பொறுப்பு; duty

*[பெரும் + கடமை]*

**பெருங்கடி** *peru-ṅ-kadi,* பெ. (n.), படை நோய் வகை (யாழ். அக.); singworm.

*[பெரும் + கடி]*

**பெருங்கடுகு** *peru-ṅ-kadugu,* பெ. (n.),கடுகு வகை(இ.வ.); a kind of mustard.

*[ பெரும் + கடுகு ]*

**பெருங்கடிந்துரை** *peru-n-katindurai,* பெ. (n.), *பெருங்கண்டனம்;* reproachful language.

*[பெரும் + கடிந்துரை]*

**பெருங்கடை** *peru-in-kaḍai,* பெ. (n.), பெரிய கடைவீதி; big bazaar street.

*[ பெரும் + கடை]*

**பெருங்கண்டனம்** *peru-n-Kantanam,* பெ. (n.), பெருங்கடிந்துரை பார்க்க.see Perunkatinturai

*[பெரும் + கண்டனம்]*

**பெருங்கண்ணாடி விரியன்** *peru-ṅ-kaṇṇāḍi- viriya,* பெ. (n.), பாம்புவகை(M.M); large glass viper

*[ பெரும் + கண்ணாடி + விரியன்]*



**பெருங்கண்ணி** *perun̄-kanni,* பெ. (n.), பொறிவலை; toils.

*[பெரும் + கண்ணி]*

**பெருங்கணக்கு** *peru-ṅ- kaṇakku* பெ. (n.), **1.** பெருந்தொகை; large amount. **2.** பெரும் படியானது; that which is on a large scale. **3.** இறுமாப்பு; arrogance. அவர் பெருங் கணக்கிலே பேசுகிறார்.

*[பெரும் + கணக்கு]*

**பெருங்கணி** *peru-ṅ-kaṇi,* பெ. (n.), தலைமைக் கணியன்; chief astrologer. "ஆசான் பெருங் கணி யறக்களத் தந்தணர்" (சிலப். 22, 8)

*[பெரிய + கணி]*

**பெருங்கத்தரிசால்** *peru-ṅ-kattari-šāl,* பெ. (n.) கிளை விளக்குத்தண்டு (புதுவை.) candelanra.

**பெருங்கதை** *peru-ṅ-kadai,* பெ (n.) **1.** நீண்டகதை; Very long story **2.** மிகவும் அறிந்த செய்தி(வின்); general report, thing well known. **3.** பிள்ளையார் கதைப்படலத்தில்

இறுதிப்படிப்பு(யாழ்ப்.); last reading of Piḷḷaiyār-kadai, in a temple. **4.** உதயணன் வரலாறு பற்றியதும் பிருகத்து கதையைத் தழுவிய மைந்ததும் கொங்கு வேளிராற் பாடப் பெற்றதுமான தமிழிலக்கியம்; a Tamil poem by Kongu-Vēl containing the story of Udayaṇaṉ being an adoption of Brhatkata.

*[ பெரும் + கதை. ]*

**பெருங்கம்பு** *peru-ṅ-kambu,* பெ (n.) **1.** கம்புப்பயிர்வகை; large bulrush millet, pennistam.

*[ பெரும் + கம்பு ]*

**பெருங்கமுக்கம்** *peru-m-kamukkam,* பெ. (n.) *பெருமந்தணம்* பார்க்க; see *purumandanam.*

*[ பெரும் + கமுக்கம் ]*

**பெருங்கரப்பான்** *peru-ṅ-karappān,* பெ (n.) **1.** கரப்பான் வகை (தஞ்.சர.iii,**92**); a kind of eruption.

**பெருங்கரம்** *peru-ṅ-karam,* ஸ(n) கோவேறு கழுதை; *mule.* *“பெருங்கரத்துருவு பெற்றனன்”* (சேதுபு. பாவநா,**24**).

*[ பெரும் + கரம் ]*

**பெருங்கரணை** *peruṅ-karaṇai,* பெ.(n) *பெருங்கழலைப் பார்க்க; see peru-ṅ-kaḻalai.*

*[ பெரும் + கரணை ]*

**பெருங்கல்வம்** *perun-kalvam,* பெ. (n) பெரிய உரல்; (குழியம்மி); *big mortar*

*[ பெரும் + கல்வம் ]*

**பெருங்கலக்கம்** *Peruṅ-kalakkam, orr (n)(* மனஉலைவு; *lack of peace.*

*[ பெரும் + கலக்கம் ]*

**பெருங்கலக்குறுத்து—தல்** *peru-ṅ-kala-kuruttu-.* செ.குன்றாவி (v.t.) பெரிய குழப்பமுண்டுபண்ணுதல்; to create a big commotion or uproar. *‘கொடித்தேர் வீதியும் பீடிகைத் தெருவும் பெருங்கலக்குறுத்தாங்கு’* (மணிமே.**4.38**).

*[ பெரும் + கலக்குறுத்து. ]*

**பெருங்கலகம்** *peruṅ-kalagam,* பெ. (n) பெரும்பூசல்; disorder. dispute

*[ பெரும் + கலகம் ]*

**பெருங்கலம்** *peru-ṅ-kaiam,*-பெ. (n.) ஆயிரம் நரம்புடைய பேரியாழ்; a large lute having, **1,000** strips. *‘ஓங்கிய பெருங்கலந் தருக்கிய வுதயணன்’* (பெருங். இலாவாண.**1.74**).

*[ பெரும் + கலம் ]*



**பெருங்கலித்தொகை** *peru-ṅ-kali-t-togai-* பெ. (n.) இறந்துபட்ட இடைக்கழகத்து நூல்களுள் ஒன்று; a Tamil treatise of iḍai-c-saṅgaṅ not extant. *“இருங்கலி கடிந்த பெருங் கலித் தொகையொடு”* (சிலப். உரைப்பா. பக்.**7** அடிக்குறிப்பு).

*[ பெரும் + கலித்தொகை ]*

**பெருங்கலையன்** *peru-ṅ-kalaiyaṉ,* பெ. (n.) நெல்வகை (யாழ்.அக.); a kind of paddy.

*[ பெரும் + கலையன் ]*

**பெருங்கவர்ச்சி** *peru-ṅgavarchi,* பெ. (n) ஈர்ப்பாற்றல்; attraction.

*[ பெரும் + கவர்ச்சி ]*

**பெருங்கவி** *peru-ṅ-gavi,* பெ. (n.) **1.** பாவலர்; a kind of poetical compositi... அகலப்பா பாடவல்லவன் (யாப்.வி.பக்.513); a poet skilled in composing Agalappā.

*[ பெரும் +* Skt.kavi. *த. கவி ]*

**பெருங்கழலை** *peruṅ-kaḻalai,* பெ. *(n)* பெருங்கழலைக்கட்டி; *bigwart.*

*[ பெரும் + கழலை ]*

**பெருங்கள்ளி** *peruṅ-kaḷḷi,* பெ. (n.) **1.** சிறுமரவகை; white frangipani, s.tr., plumeria alba. **2.** ஈழத்தலரி; pagoda tree.

*[ பெரும் + கள்ளி ]*

**பெருங்களிப்பு** *peru-n-kalippu,* பெ. (n.) பெருமகிழ்ச்சி; great pleasure.

*[ பெரும் + களிப்பு ]*

**பெருங்களன்செய்—தல்** *peru-ṅ-kaḷaṉšey-,* செ.குன்றாவி. (v.t.) தெய்வத்தன்மைக்குரிய இடமாக அணியம் செய்தல்; to cleanse a ground and consecrate it. *'உளம் பெருங்களன் செய்ததுமிலை'* (திருவாச.5,35.)

*[ பெரும் + களன் + செய் ]*

**பெருங்களா** *pēru-ṅ-kaḷā,* பெ. (n.) மரவகை; large Bengal currant, s.tr., carissa carandas

*[ பெரும் + களா ]*

**பெருங்களிற்றுவட்டம்** *peru-ṅ-kaḷiṟṟu-vaṭṭam,* பெ. (n.) எழுநிரயத்தொன்று (பிங்.); a hell, one of eḷu-nirayam.

*[ பெருகளற்றுவட்டம் → பெருங்களிற்று வட்டம். பெருகு+அளறு + வட்டம் = பெருகளற்றுவட்டம் ]*

**பெருங்கற்றாழை** *peruṅ-kaṟṟāḷai,* பெ. (n.) கற்றாழை வகை; a kind of aloe. (நாஞ்.).

*[ பெரும் + கற்றாழை ]*



**பெருங்கறி** *peru-ṅ-kaṟi,* பெ. (n.) பெருங் கூட்டத்திற்குப் படைக்கச் செய்யப்படும் கறிவகை; (இ.வ.) curry specially prepared for supplying a large number of people.

*[ பெரும் + கறி ]*

**பெருங்கறையான்** *peru-ṅ-karaiyāṉ,* பெ. (n.) தாய்க்கறையான் பார்க்க; see tāy-k-kaṟaiyāṉ queen-ant found in every nest of termites.

மறுவ. சிதல்

*[பெரும் + கறையான் கறை + ஆன்]*

**பெருங்காக்கை பாடினியம்** *peru-ṅ-kākkai-pāḍiṉiyam,* பெ. (n.) பெருங்காக்கை பாடினியார் இயற்றிய யாப்பிலக்கண நூல் (வின்.); a treatise on prosody by peru-ṅ-kākkai-p-pi-niyār, not extant.

*[பெரும் + காக்கைபாடினியம்]*

**பெருங்காசிக்கம்பு** *peru-ṅ-kāši-k-kambu,* பெ. (n.) காசிக்கம்பு (G.Sm.D.I.i,219) பார்க்க; see kāši-k-kambu. a variety of kambu. (g.sm.d.i.i,219);

*[பெரும் + காசிக்கம்பு]*

**பெருங்காஞ்சி** *peru-ṅ-kāñji,* பெ. (n.) 1. ஒவ்வொருவரையும் கூற்றம் அணுகு மென்று சான்றோர் கூறுதலைப் பற்றிச் சொல்லும் புறத்துறைவகை (தொல்.பொ. 79,உரை.); (purap.) theme descrribing the teaching of the wise men about the transitoriness of life. 2. வீரர் படைமுகத்துத் தம் ஆற்றல் தோற்று வித்தலைக்கூறும் புறத்துறைவகை. (பு.வெ.4,6.) (purap.) theme describing the exhibition by warriors of their prowess on the field of battle.

*[பெரும் + காஞ்சி]*

**பெருங்காஞ்சொறி** *peru-ṅ-kāñjoṟi,* பெ. (n.) *காஞ்சொறி* (பாதார்த்த.486.); பார்க்க; see *kāñjoṟi.* climbing nettle.

*[பெரும் + காஞ்சொறி]*

**பெருங்காடு** *peru-ṅ-kāḍu,* பெ. (n.) பெரிய புதர்க்காடு extensive jungle. (பிங்.); 2. சுடுகாடு; burning-ground. '*பெருங்காட்டுப் பண்ணிய.......ஈமம்*' (புறநா.246.)

*[பெரும் + காடு]*

**பெருங்காடுதரிசு** *peru-ṅ-kāḍu-tariḍšu,* பெ. (n.) பெருங்காற்றரிசு பார்க்க; see peru-ṅ-kāṟṟarišu. (வின்.)

*[பெருங்காடு + தரிசு]*

(u.tar த. தரிசு)

**பெருங்காந்தாரி** *peru-ṅ-kāndāri,* பெ. (n.) மிளகுவகை (நாஞ்); a kind of pepper.

*[பெரும் + காந்தாரி]*

**பெருங்காப்பியம்** *peru-ṅ-kappiyam,* பெ. (n.) 96 சிற்றிலக்கியங்களுள், தன்னி கரில்லாத தலைவனைப் பற்றியதாய் நாற்பொருள் பயப்ப, நாடுநகர் முதலியவற்றைச் சிறப்பித்துப் பாடப்பெறும் தொடர்நிலைச் செய்யுள் வகை. (தண்டி.பொது.7.); epic poem dealing with the story of a peerless hero, explaining the four purusārttam and describing the excellencess of the country, city, etc.,

*[பெரும் + skt. kāvya. காவ்யம் → த. காவியம்]*

**பெருங்காயம்** *peru-ṅ-kāyam,* பெ. (n.) 1. மரவகை; asafoetida 2. ஒருவகை மரப்பிசின் (பிங்.) commercial resinous product of ferula; '*பெருங்காயத்தினது குழம்பைப் பூசி*' (சீவக.788,உரை.) 3. *பெருஞ்சீரகம்* பார்க்க; see *peru-ñ-giragam.*

*[பெரும் + காயம்]*

**பெருங்காயா** *peru-ṅ-kāya,* பெ. (n.) 1. காயாவகை; common ovate-leaved tree bilberry, s.tr., Edeule memeeylon, 2. சிறுமரவகை; oblong cordate-leaved tree bilberry, s.tr. memecylon malabaricum.

*[பெரும் + காயா ]*

**பெருங்கார்** *peru-ṅ-kār,* பெ. (n.) நெல்வகை (A.); a kind of paddy.

*[பெரும் + கார் ]*

**பெருங்காராமணி** *peru-ṅ-kārāmaṇi,* பெ. (n.) காராமணிவகை (வின்.); a kind of gram

*[பெரும் + காராமணி]*

**பெருங்காரை** *peru-ṅ-kārai,* பெ. (n.) 1. ஒருவகைச் சிறுமரம்; grey emeticnut, s.tr., randia ulignosa 2. காரைமீன்வகை; a large species of kārai fish.

*[பெரும் + காரை]*

**பெருங்கால்** *peru-ṅ-kāl,* பெ.(n.) 1. யானைக்கால்(வின்.); elephantiasis 2. பெரிய வாய்க்கால் major channel.

[பெரும் + கால்]

**பெருங்கால்[2]** *peru-ṅ-kāl,* பெ. (n.) பெருங்காற்று பார்க்க, see peru-ṅ-kāṟṟu. *'பெருங்காலெறிய'* (திருக்கருவை.பதிற்றுப்.) (வின்.)

[பெரும் + கால்]

**பெருங்காற்பிடி–த்தல்** *peru-ṅ-kāṟpiḍi-,* செ.குன்றாவி. (v.t.) கால் திமிர்ப்பட்டுப் போதல்(நாஞ்.); to have one's feet benumbed.

[பெருங்கால் + பிடி]

**பெருங்காற்றரிசு** *peru-ṅ-kāṟṟarišu,* பெ. (n.) பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாகப் பயிரிடப்படாத நிலம் (W.G.); land left waste for more than fifteen years.

[பெரும் + கால் + u,tar. த. தரிசு]

**பெருங்காற்று** *peru-ṅ-kāṟṟu,* பெ. (n.) புயற்காற்று; storm, gale.

[பெரும் + காற்று கால் – காற்று]

**பெருங்கிடை[1]** *peru-ṅ-kiḍai,* பெ. (n.) நெட்டிவகை; a large species of sola pith.

[பெரும் + கிடை]

**பெருங்கிடை[2]** *peru-ṅ-kiḍai,* பெ. (n.) நோயால் நெடுங்காலம் படுக்கையிற் கிடக்கை; continued illness.

[பெரும் + கிட – கிடை]

**பெருங்கிரந்தி** *peru-ṅ-kirandi,* பெ. (n.) 1. வயிற்றுநோய் வகை (வின்.); affection of the mesenteric gland mesenterit glands. 2. *பெருங்கிருமி* (இ.வ.) பார்க்க; see *peru-ṅ-kirumi*

[பெரும் + *skt.granthi.* த. கிரந்தி]

**பெருங்கிராமம்** *peru-ṅ-kirāmam,* பெ. (n.) ஐந்நூறு குடியுள்ள ஊர் (சூடா.); major village, having 500 families.

*[பெரும் + skt.grāma. கிராமம்]*

**பெருங்கிருமி** *peru-ṅ-kirumi,* பெ. (n.) வயிற்றுப்புழுப்போன்றதோ ருயிரி ; a parasitic mematoid-worm Ascaris lumbricoides.

[பெரும் + *skṭ.kṛmi.* த. கிருமி]

**பெருங்கில்லி** *peru-ṅ-killi,* பெ.(n) பெருங்கிட்டிப்புள்; *bigtipcat*

[பெரும் + கில்லி]

கில்லி = கிட்டிப்புள்

**பெருங்கிழங்கு** *peru-ṅ-kiḻaṅgu,* பெ. (n.) பெருமருந்து (மலை.) Indian birthwort.

[பெரும் + கிழங்கு]

**பெருங்கிழமை** *peru-ṅ-kiḻamai,* பெ. (n.) **1.** முழுவுரிமை (அக.நி.) entire or sole right, absolute title. **2.** மிகுநேயம் (அக.நி.). close friendship or intimacy.

[பெரும் + கிழமை]

**பெருங்கிளர்ச்சி** *pērun-kiḷarcci,* பெ. (n.) பெருங்கொந்தளிப்பு; *tumult.*

[பெரும் + கிளர்ச்சி]

**பெருங்கிளிச்சல்** *peru-ṅ-kiḷiccal,* பெ. (n.) நீலநிறமுள்ள கடல்மீன் வகை; a sea-fish, bluish, caesio chrysozona.

*[பெரும் + கிளிச்சல்]*

**பெருங்கிளுவை** *peru-ṅ-kiluvai,* பெ. (n.) கிளுவை (வின்.) பார்க்க; see kiḷuvai hill lalsam tree.

[பெரும் + கிளுவை]

**பெருங்கிளை** *peru-ṅ-kiḷai,* பெ. (n.) பரந்த சுற்றத்தாருடைய குடும்பம்; wide circle of relations.

[பெரும் + கிளை]

**பெருங்கிளையார்** *peru-ṅ-kilaiyar,* பெ. (n.) பள்ளர் வகையினர் (திருச்சி.வழ.); a subdivision of the paḷḷar caste.

**பெருங்கீரை** *peru-ṅ-kirai,* பெ. (n.) கீரைவகை (வின்.) a species of greens.

[பெரும் + கீரை]

**பெருங்கீழ்வட்டம்** *peru-ṅ-kiḻ-vaṭṭam,* பெ. (n.) ஏழுநிரயங் களுளொன்று hell (பிங்.), one of eḻu-naragam, q.v.

[பெரும் + கீழ் + வட்டம்]

**பெருங்கீற்று ரூபாய்** *peruṅ-kiṟṟu-rūbāy,* பெ. (n.) பழைய காசுவகை (சரவண. பணவிடு.63); an ancient.coin.

[பெரும் + கீற்று ரூபாய். E. Rupee த. ரூபாய்]

**பெருங்குட்டம்** *peru-ṅ-guṭṭam,* பெ. (n.) குட்டநோய் வகை; (இராசவைத்.) leprosy.

[பெரும் + குட்டம்]

**பெருங்குடல்** *peru-ṅ-kuḍal,* பெ. (n.) குடற் பிரிவு. (M.L.) large intestine, colon.

*[பெரும் + குடல்]*



**பெருங்குடி**[1] *peru-ṅ-kuḍi,* பெ. (n.) நில வுடைமையான்; land lord. (colas, ii,389.)

*[பெரும் + குடி]*

**பெருங்குடி**[2] *peru-ṅ-kuḍi,* பெ. (n.) 1. உயர்குடி; noble family 2. பெருங்குடிவாணிகர் பார்க்க; see peruṅguḍivāṇigar "விளங்கு பெருங்கு மாசாத்துவாணிகன்" (சிலப்.20,57–8)

*[பெரும் + குடி]*

**பெருங்குடியர்** *peru-ṅ-kuḍiyar,* பெ. (n.) பெருங்குடி வாணிகர் (சீவக.1756.உரை.) பார்க்க; see peru-n-kuḍi vāṇigar.

*[பெருங்குடி → பெருங்குடியார்]*

**பெருங்குடியாட்டம்** *peru-ṅ-kuḍi-y-aṭṭam,* பெ. (n.) நாட்டாண்மை; village headship "நடுவில் பெருங்குடியாட்டமும் என்னென்பது தான்" (ஈடு,3,5,6.)

*[பெருங்குடி + ஆட்டம்]*

ஆட்டம் = ஒரு சொல்லாக்க ஈறு.

**பெருங்குடிவாணிகர்** *peru-ṅ-kuḍi-vāṇigar,* பெ. (n.) வணிகருள் ஒரு பிரிவினர்; an ancient caste of merchants. '*பெருங்குடி வாணிகன் பெருமடமகளே*' (சிலப்.2,76.)

*[பெருங்குடி + வாணிகர்]*

**பெருங்குப்பை** *peru-ṅ-kuppai,* பெ. (n.) *பெரும்புழுதி* பார்க்க; see *perum puḻudi.*

*[பெரும் + குப்பை]*

**பெருங்குமிழ்** *peru-ṅ-kumiḻ,* பெ. (n.) மரவகை (பதார்த்த.215.) coomb teak.

*[பெரும் + குமிழ்]*

**பெருங்குயம்** *peru-ṅ-kuyam,* பெ. (n.) குயவர்க்கு அரசரளிக்கும் பட்டப்பெயர்; an ancient title, conferred on potters. '*குலாலற் கேற்பப் பெருங்குய மருளி*' (பெருங். வத்தவ.9,48.)

*[பெரும் + குயம்]*

**பெருங்குரல்** *peru-n-kural,* பெ. (n.) பேரொலி; great tone.

*[பெரும் + குரல்]*

**பெருங்குருகு** *peru-ṅ-kurugu,* பெ. (n.) 1. யானையுண்குரு (பிங்.); a fabulous bird. 2. தலைக்கழகத்து வழங்கிய ஓர் இசைத் தமிழ் நூல் (சிலப்.உரைப்பா.) a treatise on music of the talai-c-caṅgam, not now extant.

*[பெரும் + குருகு]*

**பெருங்குருந்து** *peru-ṅ-kurudu,* பெ. (n.) காட்டெலுமிச்சை (L.) பார்க்க; காட்டெலு மிச்சை indian wild-line.

*[பெரும் + குருந்து]*

**பெருங்குரும்பை**[1] *peruṅ-kurumbai,* பெ. (n.) சிறுசெடிவகை; bowstring hemp, stemless plant.

*[பெரும் + குரும்பை]*

**பெருங்குரும்பை**[2] *peru-ṅ-kurumbai,* பெ. (n.) **1.** கோட்டம்; costum. **2.** பூலாங்கிழங்கு; long zedoary.

**பெருங்குவியல்** *perun-kuviyal,* பெ. (n.) குப்பைமேடு; large heap.

*[பெரும் + குவியல் → குவியல்]*

**பெருங்குழப்பம்** *pērun-gulappam,* பெ. (n.) பெருங்குளறுபடி; great confusion.

*[பெரும் + குழப்பம்]*

**பெருங்குழி** *peru-ṅ-kuḻi,* பெ. (n.) **1.** பெரிய பள்ளம்; large pit. **2.** கடல்; sea. '*துன்பப் பெருங்குழிக்கே*' **(திருநூற்.20.)** **3.** முழு எண்களின் சதுரவாய்பாடு (arith.) squaring of integral numbers. opp. to ciṟu-kuḻi. **4.** முக்கால் குறுக்கம் கொண்ட நிலவளவு; superficial measure. **3/4** acre.

*[பெரும் + குழி]*

**பெருங்குழுவைந்து** *peru-ṅ-kuḻu-v-aindu,* பெ. (n.) ஐம்பெருங்குழு **(திவா.)** பார்க்க; see ai-m-peruṅkuḻu the five cheif officers of a king.

*[பெரும் + குழு + ஐந்து]*

**பெருங்குளவி** *peru-ṅ-guḷavi,* பெ. (n.) குளவிவகை **(யாழ்.அக.)**; a kind of wasp.

*[பெருங் + குளவி]*

**பெருங்குற்றம்** *pērun-guttam,* பெ. (n.) பெருந்தவறு; serious crime.

*[பெரும் + குற்றம்]*

**பெருங்குறட்டை** *peru-ṅ-kuraṭṭai,* பெ. (n.) காக்கணங்கொவ்வை mussel-shell creeper. **(மலை.)**; **2.** பெருமருந்து indian birthwort. **(சங்.அக.).**

*[பெரும் + குறட்டை]*

**பெருங்குறட்டை**[2] *peru-ṅ-kuṟaṭṭai,* பெ. (n.) தூக்கத்தில் விடும் உரத்த குறட்டை; noisy snoring.

*[பெரும் + குறட்டை]*

**பெருங்குறடு** *peru-ṅ-kuṟadu,* பெ. (n.) விறுகு முதலியன பிளப்பதற்காக அடியில் வைக்குந் தாங்குகட்டை **(பிங்.)** large block of wood, used as a support in hewing wood etc.

*[பெரும் + குறடு]*

**பெருங்குறவை** *peru-ṅ-kuṟavai,* பெ. (n.) **1.** பசுமை நிறமுள்ளதும் **13** விரலம்வரை வளர்வதும் நல்ல தண்ணீரில் வாழ்வதுமான மீன்வகை; murrel, a fresh-water fish, greenish, attaining **13** in. in length,

ophiocepha lusgacha. **2.** 8விரலம்வரை வளர்வதும் பசுமை நிறமுள்ளதும் நல்ல தண்ணீரில் வாழ்வதுமான மீன்வகை; a fresh-water fish, greenish, attaining **8** in. in lergth. liscognatlius lamta.

*[பெரும் + குறவை]*

**பெருங்குறி** *peru-ṅ-kuṟi,* பெ. (n.) *பெருங் குறிச்சபை* பார்க்க; see *peru-ṅ-kuri-c-cavvai.* (s.i.i.iv.**32.**)

*[பெரும் + குறி]*

**பெருங்குறிச்சபை** *peru-ṅ-kuṟi-c-cabai,* பெ. (n.) ஊர்ப் பேரவை; the great assembly of a village (or) town.

*[பெருங்குறி + சபை]*

**பெருங்குறிஞ்சா** *peru-ṅ-kuṟiñjā,* பெ. (n.) *பெருங்குறிஞ்சி* பார்க்க; see *peru-ṅ-kuriñji.*

*[பெரும் + குறிஞ்சா]*

**பெருங்குறிஞ்சி** *peru-ṅ-kuruñji,* பெ. (n.) **1.** கொடிவகை; a species of scammony swallowwart, **2.** பூடுவகை (பிங்.); a species of conehead, m.sh., strobilanthes consangwineus typica. **3.** குறிஞ்சிப்பாட்டு; a poem. *'கபிலர் பாடிய பெருங்குறிஞ்சியினும்'* (பரிபா.**19,77**,உரை.)

*[பெரும் + குறிஞ்சி]*

**பெருங்குறிமகாசபை** *peru-ṅ-kuṟi,* பெ. (n.) *பெருங்குறியவை* (i.m.p.tj.**1123.**) பார்க்க; see *peru-ṅ-kuri-y-avai.*

*[பெருங்குறி + மகாசபை]*

த. மா> skt.mahā

பெருங்குறியவையே அதன் சிறப்புநோக்கி பெருங்குறி மகாசபை என வழங்கப் பெற்றுள்ளது. இதனைத் தமிழில் பெருங்குறிப் பேரவை என்று வழங்கலாம்.

**பெருங்குறியவை** *peru-ṅ-kuṟi-y-avai,* பெ. (n.) ஊர்ப்பெருஞ்சபை; the great assembly of a village or town.

*[பெருங்குறி + அவை]*

**பெருங்குறைபாடு** *peruṅguraipatu,* பெ. (n.) பெருந்தீங்கு; bigdraw back.

*[பெரும் + குறைபாடு]*

**பெருங்குன்றூர் கிழார்** *peru-ṅ-kuṉṟūr-kiḻār,* பெ. (n.) பதிற்றுப் பத்தில் ஒன்பதாம் பத்தைப் பாடியர் புலவர்; the author of the ninth decade of patiṟṟu-p-pattu.

*[பெருங்குன்றூர் + கிழார்]*

**பெருங்கூட்டணி** *peru-n-kuttani,* பெ. (n.) பல அரசியல் கட்சிகளின் கூட்டு நடவடிக்கை; common all of some political party.

*[பெரும் + கூட்டணி]*

**பெருங்கூட்டம்** *perū-n-kuttam,* பெ. (n.) திரளான கூட்டம்; mass metting.

*[பெரும் + கூட்டம்]*

**பெருங்கூட்டாளி** *peru-ṅ-kuttali,* பெ. (n.) சிறந்த நண்பன்; good friend.

*[பெரும் + கூட்டாளி]*

**பெருங்கை** *peru-ṅ-kai,* பெ. (n.) **1.** பெரியகை பார்க்க; see periya-kai. (வின்.)**2.** யானை; elephant, as having a long trunk. 'பெருங்கைத் தொழுதியின்' (பதிற்றுப்.76.6.)

*[பெரும் + கை]*

**பெருங்கைக்காரன்** *peru-ṅ-kaik-k-āraṉ,* பெ. (n.) பெருஞ்செல்வம் படைத்தவன்; wealthily person.

*[பெரும் + கைக்காரன்]*

**பெருங்கையால்** *peru-ṅ-kai-y-āl,* பெ. (n.) பகன்றை (சிலப்.13, 157,உரை.) a plant.

*[பெருங்கை + அல்]*

**பெருங்கொச்சை** *pēru-ṅ-koccai,* பெ. (n.) இழிஞன்; mean fellow.

*[பெரும் + கொச்சை]*

**பெருங்கொடி** *peru-ṅ-koḍi,* பெ. (n.) **1.** பதாகை (பிங்.); large flag. **2.** பறக்கவிடும் பெரும்பட்டம் (வின்.) large paper kite

*[பெரும் + கொடி]*

**பெருங்கொடை** *peru-ṅ-koḍai,* பெ. (n.) எல்லோர்க்கும் ஏராளமாகக் கொடுக்கை; endow with gift.

*[பெரும் + கொடை]*

**பெருங்கொண்டலாத்தி** *peru-ṅ-koṇḍalātti,* பெ. (n.) பறவைவகை(F.); hoopoe, upupa epops.

*[பெரும் + கொண்டை + உலாத்தி]*



**பெருங்கொண்டையார்** *peru-ṅ-koṇḍaiyār,* பெ. (n.) தென்னாட்டு மாலியப் (வைணவ) பார்ப்பனரில் ஒரு வகுப்பினர்; a sect of vaisnava brahmins in the south, as from pēṇukoṇda.

*[பெரும் + கொண்டையார்]*

**பெருங்கொத்தரம்** *peru-ṅ-kottaram,* பெ. (n.) அரவகை; rough file, wood rasp.

*[பெரும் + கொத்து + அரம்]*

**பெருங்கொந்தளிப்பு** *pērun-kontalippu,* பெ. (n.) *பெருங்கிளர்ச்சி* பார்க்க. see *peru-ṅ-kiḷarcci.*

*[பெரும் + கொந்தளிப்பு]*

**பெருங்கொம்மட்டி** *peru-ṅ-kommaṭṭi,* பெ. (n.) கொம்மட்டிவகை (நாஞ்.); a kind of cucumber.

*[பெரும் + கொம்மட்டி]*

**பெருங்கொய்சகம்** *pēru-koycagam,* பெ. (n.) பெருஞ்கொச்சகம்; big pucker.

*[பெரும் + கொய்சகம்]*

கொய்சகம் → கொச்சகம்

**பெருங்கொள்ளை** *pērun-kollai,* பெ. (n.) *பெருந்திருட்டு* பார்க்க; see *peruntittru.*

*[பெரும் + கொள்ளை]*

**பெருங்கொன்றை** *peru-ṅ-koṉṟai,* பெ. (n.) கொன்றைவகை; a species of unarmed brasiletto. **2.** ஊதை(வாத) நாராயணம்; creamy peacock flower.

*[பெரும் + கொன்றை]*

**பெருங்கோட்டான்** *peru-ṅ-kōṭṭāṉ,* பெ. (n.) ஆந்தைவகை (பிங்.); a kind of large owl.

*[பெரும் + கோட்டான் கோடு = மரக்கிளை கோடு – கோட்டான் = மரக்கொம்பில் இருப்பது]*



**பெருங்கோடணை** *peru-ṅ-kōḍaṇai,* பெ. (n.) ஒருகட் பறைவகை; kettle-drum.

*[பெரும் + கோடணை]*

த. கோடணை > skt. ghōsaṇā

**பெருங்கோநங்கை** *peru-ṅ-ko-nangai,* பெ. (n.) பெருங்கோப் பெண்டு பார்க்க; see Peru-ṅ-kō-p-peṇḍu. *'பெருங்கோ நங்கை பெட்பவேறிய.....இள்ம்பிடி'* (பெருங். உஞ்சைக்.40,30.)

*[பெருங்கோ + நங்கை]*

**பெருங்கோப்பெண்டு** *peru-ṅ-kō-p-peṇḍu,* பெ. (n.) பட்டத்து அரசி; chief queen *'பெருங்கோப் பெண்டு மொருங்குடன் மாய்ந்தனள்'* (சிலப்.25,86.)

*[பெருங்கோ + பெண்டு]*

**பெருங்கோபம்** *pērun-kovam,* பெ. (n.) கடுஞ்சினம்; violent anger.

*[பெரும் + கோபம்]*

(skt. kopa → த.போகம்)

**பெருங்கோரை** *peru-ṅ-kōrai,* பெ. (n.) **1.** பூடுவகை (C.E.M.); spikenard herb. **2.** பாய்க்கோரை வகை; a kind of sedge used for matting.

*[பெரும் + கோரை]*

**பெருங்கோழியவரை** *peru-ṅ-kōli-y-avarai,* பெ. (n.) கொடிவகை (A.); a small climber along the banks of tidal creeks and rivers.

*[பெருங் + அவரை]*



**பெருங்கோழை** *pērun-kolai,* பெ. (n.) வீரமற்றவன்; big - slobber.

*[பெரும் + கோழை]*

**பெருங்கோள்** *perun-kol,* பெ. (n.) பெரிய வான் கோள்; big planet.

*[பெரும் + கோள்]*

**பெருங்கௌசிகனார்** *peru-ṅ-kaušiganār,* பெ. (n.) பத்துப் பாட்டினுள் ஒன்றான மலை படுகடாமியற்றிய ஆசிரியர்; a poet, author of Malaipaḍu-kiaḍām, one of pattu-p-pāttu, q.v.

*[பெரும் + கௌசிகனார்]*

**பெருச்சாளி** *peruccāḷi,* பெ. (n.) பெருத்த எலி (பிங்.); bandicoot bandicota mala barica, as a large rat. '*இறைவன் பெருச்சாளியைக் கடவி* (விநாயகபு.59,15.)

ம. பெரிச்சாலி

*[பெருத்த + எலி ] பெருத்தஎலி – பெருச்சாளி]*



**பெருஞ்சங்கு** *pērun-cankul,* பெ. (n.) பெரியசங்கு; big conch.

*[பெரும் + சங்கு]*

**பெருஞ்சச்சரவு** *pērun-cacharavu,* பெ. (n.) பெரும்பூசல்; big contention.

*[பெரும் + சச்சரவு]*

**பெருஞ்சகுனம்** *pērun-jagunam,* பெ. (n.) பெருநிமித்தம்; big omen.

*[பெரும் + சகுனம்]*

(skt. šakuna → த. சகுனம்)

**பெருஞ்சரக்கு** *peru-ñ-carakku,* பெ. (n.) பேரளவாக விற்கப்படும் பருத்திவிதை பாக்குப்போன்ற பண்டம்(G.Tp.Di.177.); goods sold in large quantities, as cotton seeds, areca-nuts, etc.

*[பெரும் + சரக்கு]*

**பெருஞ்சள்ளை** *perun-callai,* பெ. (n.) பெருந்தொல்லை; nuisance.

*[பெரும் + சள்ளை]*

**பெருஞ்சவளம்** *peru-ñ-javaḷam,* பெ. (n.) குந்தப்படைவகை (பிங்.) large-sized dart or lance, dist. fr. ciṟucavaḷam.

*[பெரும் + சவளம்]*

**பெருஞ்சன்னல்** *pērun-cannel,* பெ. (n.) பெரும்பலகணி; big-window.

*[பெரும் + சன்னல்]*

(port. janella → த. சன்னல்)

**பெருஞ்சாட்டை** *pērun-sattai,* பெ. (n.) பெருங்கசை; big-whip.

*[பெரும் + சாட்டை]*

**பெருஞ்சாண்நடவு** *peru-ñ-cāṇ-naḍavu,* பெ. (n.) நாற்றை விலகநடுகை (இ.வ.); mode of transplantation in which the seedlings are planted with large interspaces

*[பெருஞ்சாண் + நடவு ]*

**பெருஞ்சாந்தி** *peru-ñ-šāndi,* பெ. (n.) கோயிற் பெரிய திருவிழாவின் முடிவில் நடக்கும் பெரிய (அபிடேகம்) திருமுழுக்காட்டு; mahabhi sēkam at the end of the chief festival in a temple. '*கபாலீச்சரமமர்ந்தான் பெருஞ்சாந்தி காணாதே போதியோ?*" (தேவா.1119,10.)

*[பெரும் + சாந்தி ]*

skt. šanti. த. சாந்தி

**பெருஞ்சாமம்** *peru-ñ-cāmam,* பெ. (n.) ஏழரை நாழிகை கொண்ட காலவளவை(வின்.); a period of three hours.

*[பெரும் + யாமம் → சாமம் ]*

**பெருஞ்சாமரை** *perun-jamarai,* பெ. (n.) ஈயோட்டும் மயிர்க்குச்சம்; chowry.

*[பெரும் + சாமரை ]*

**பெருஞ்சாய்** *peru-ñ-cāy,* பெ. (n.) பேராற்றல்; great strength. '*சாயாப் பெருஞ்சாய்கெட*' (கம்பரா.நாக.21.)

*[பெரும் + சாய் ]*

**பெருஞ்சாலை** *pērun-salai,* பெ.(n.) பேரொழுங்கை (அகலச் சாலை); broadway.

*[பெரும் + சாலை ]*

**பெருஞ்சாவு** *peru-ñ-cāvu,* பெ. (n.) அகவையில் முதிர்ந்தோரது இறப்பு; death in old age.

*[பெரும் + சாவு சா—சாவு ]*

**பெருஞ்சிந்தனை** *pērun-cintanai,* பெ. (n.) கடுஞ்சிந்தனை; exlogitation.

*[பெரும் + சிந்தனை ]*

**பெருஞ்சிரங்கு** *peru-ñ-ciraṅgu,* பெ. (n.) சொறிவகை(M.L.); scalries itch.

*[பெரும் + சிரங்கு ]*

**பெருஞ்சிவிங்கி** *peru-ñ-civiṅgi,* பெ. (n.) *சிறுத்தை,* பார்க்க; see *širuttai. panthor.*

*[பெரும் + சிவிங்கி ]*

**பெருஞ்சிறப்பு** *peru-ñ-ciṟappu,* பெ. (n.) 1. பெரும் மதிப்புரவு; high honours. 2. உயர்ந்த கொண்டாட்டநேரம்; grand festive occasion.

*[பெருமை + சிறப்பு ]*

**பெருஞ்சின்னி** *peru-ñ-ciṉṉi,* பெ. (n.) செடிவகை (பதார்த்த.535.); a species of birth-leaved acalypha.

*[பெரும் + சின்னி ]*

**பெருஞ்சீரகம்** *peru-ñ-ciragam,* பெ. (n.) 1. சோம்பு; common anise, 2. பெருஞ்சீரக செடிவகை(L.); chinese anise,plant with aromatic seeds.

*[பெரும் + சீரகம் ]*

உலகில் முதன்முதற் சிறந்த முறையிற் சமையல் தொடங்கியதும் அதற்குச் சீரகத்தைப் பயன்படுத்தியதும் தமிழகமே (வ.வர.155)

**பெருஞ்சுவர்** *peru-n-cuvar,* பெ. (n.) நீளமான சுவர்; long wall. **1.** சீனநாட்டில் உள்ள பெருஞ்சுவர் உலகத்தின் நீளமான சுவராகும்.

*[பெரும் + சுவர்]*

**பெருஞ்சூட்டு** *peru-ñ-cūṭṭu,* பெ. (n.) தலையணிவகை (பிங்.); a kind of head ornament.

*[பெரும் + சூட்டு சூடு–சூட்டு]*

**பெருஞ்சூழ்ச்சி** *peru-ñ-cuñcci,* பெ. (n.) பெரும் ஏமாற்றுவேலை; do fraud.

*[பெரும் + சூழ்ச்சி]*

**பெருஞ்சூறாவளி** *perun-curāvaḷi,* பெ. (n.) பெருஞ்சுழல் காற்று; violent storm.

*[பெரும் + சூறாவளி]*

**பெருஞ்சூனியம்** *peru-ñ-cūṉiyam,* பெ. (n.) பெருவசியம்; pishogue.

*[பெரும் + SKṭ. ūnya த. சூனியம்]*

**பெருஞ்செக்கு[1]** *peru-ñ-cekku,* பெ. (n.) பெருஞ்செக்காலை; big oil-press.

*[பெரும் + செக்கு]*

**பெருஞ்செக்கு[2]** *peru-ñ-cekku,* பெ. (n.) 24வது விண்மீன்; the 24th nak-satra. (திவா.)

*[பெரும் + செக்கு]*

**பெருஞ்செங்கார்** *peru-ñ-ceṅgār,* பெ. (n.) நெல்வகை (A.); a kind of paddy

*[பெரும் + செம்(மை) + கார்]*

**பெருஞ்செய்** *peru-ñ-cey,* பெ. (n.) மேம்பாடுள்ள செயல்; great dead. *'பெருஞ்செய் யாடவர்'* (புறநா.199.)

*[பெரும் + செய்]*

**பெருஞ்செய்யாளன்** *peru-ñ-cey-āḷaṉ,* பெ. (n.) பெரிய வீரச்செயலுள்ளவன்; a man of great deeds. *'எஃகுளங்கிழிய. ...... அருங்கட னிறுத்த பெருஞ்செய்யாளன்'* (புறநா.282.)

*[பெருஞ்செய் + ஆளன்]*

**பெருஞ்செய்யான்** *peru-ñ-ceyyāṉ,* பெ. (n.) தேள்வகை (யாழ்.அக.); a kind of scorpion. **2.** பெரும்பூரான் (சங்.அக.) பார்க்க; see peru-m-pūrāṉ.

*[பெரும் + செய்யான்]*

**பெருஞ்செருப்படி** *peru-ñ-ceruppaḍi,* பெ. (n.) பூடுவகை (வின்.); a plant, croton plicatum.

*[பெரும் + செருப்படை → செருப்படி]*

**பெருஞ்சேரலிரும்பொறை** *peru-ñ-cēral-irum-porai,* பெ. (n.) பதிற்றுப் பத்தனுள் எட்டாம் பத்தினாற் புகழப்பட்ட சேரன்; a cēra king, the hero of the eighth decad of padiṟṟu-pattu.

*[பெருஞ்சேரல் + இரும்பொறை]*

**பெருஞ்சேனை** *peruñ-sanai,* பெ. (n.) பெரும்படை; large army.

*[பெரும் + சொல்]*

**பெருஞ்சொல்** *peru-ñ-col,* பெ. (n.) பலரறிசொல் (திவா.); word known to many.

*[பெரும் + சொல்]*

**பெருஞ்சொறி** *peru-ñ-cori,* பெ. (n.) தவளைச் சொறி; a kind of eruption.

*[பெரும் + சொறி]*

**பெருஞ்சொறிக்குட்டம்** *peru-ñ-cori-k-kuttam,* பெ. (n.) கொடியகுட்டநோய்வகை; a virulent form of leprosy.

*[பெருஞ்சொறி + குட்டம்]*

**பெருஞ்சோதனை** *peru-n-cōtanai,* பெ. (n.) ஆராய்ந்து தேடுதல்; act of searching.

*[பெரும்+ சோதனை]*

(skt.. šōdhana → த. சோதனை)

**பெருஞ்சோலி** *peru-ñ-cōli,* பெ. (n.) வெள்ளைக்கடம்பு; bridal couch plant.

*[பெரும் + சோலி]*

**பெருஞ்சோழி** *perun-cōli,* பெ. (n.) பெரும்சிப்பி; bigcowry.

*[பெரும் + சோழி]*

**பெருஞ்சோற்றுநிலை** *peru-ñ-jōrru-nilai,* பெ. (n.) போர்மேற்கொண்ட அரசன் படை யாளர்க்கு உண்டியளித்து முகமன் செய்தலைக்கூறும் புறத்துறை (purap.); theme of a king giving feast to his soldiers on the eve of battle. *'பிண்டமேய பெருஞ்சோற்று நிலையும்'* (தொல்.பொ.63.)

*[பெருஞ்சோற்று + நிலை]*

**பெருஞ்சோற்றுவஞ்சி** *peru-ñ-cōrru-vañji,* பெ. (n.) *பெருஞ்சோற்றுநிலை,* பார்க்க; see *peru-ñ-cōrru-nilai.* சோற்றுநிலை. *'பின்றாச் சிறப்பிற்பெருஞ்சோற்று வஞ்சியும்'* (சிலப். 25,144.)

*[பெருஞ்சோற்று + வஞ்சி]*

**பெருஞ்சோறு** *peru-ñ-ñ-cōru,* பெ. (n.) 1. அரசன்தன் படைத்தலைவர்க்கு அளிக்கும் பேருணவு; sumptuous feast given by a king to the generals of his army. *'உதியஞ் சேரல் பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை'* (அகநா.233.) 2. 2ஆம் விண் மீன். (திவா.); the second naksatra.

*[பெரும் + சோறு]*

**பெருந்தக்காளி** *peru-n-takkāli,* பெ. (n.) தக்காளி வகை(L.); Indian winter-cherry, psysalis peruiana

*[பெரும் + தக்காளி]*

**பெருந்தகரை** *peru-n-tagarai,* பெ. (n.) ஒருவகைச் சிறுமரம்(L.); west Indian bead tree, s.tr., leucaena glauca.

*[பெரும் + தகரை]*

**பெருந்தகளி** *peru-n-tagali,* பெ. (n.) பலமுகங்களையுடையவிளக்கு; multifaced oil-lamp.

*[பெரும் + தகழி→தகளி]*

**பெருந்தகை** *peru-n-tagai,* பெ. (n.) 1. பெருமையுள்ளவ–ன்–ள்; noble-minded person. *'பீடுகெழு சிறப்பிற் பெருந்தகை'* (நெடுநல்.106.) 2. பெருந்தன்மை பார்க்க, 3. மிக்க அழகு; great beauty. *'பெயர்ந்தான் பெருந்தகையினான்'* (பு.வெ.6,30.)

*[பெருமை + தகை]*

**பெருந்தடிமல்** *peru-n-tadimal,* பெ. (n.) ஒருவகைச் சுரநோய்(M.L.); influenza.

*[பெரும் + தடிமல் தடிமன்—தடிமல்]*

**பெருந்தண்வாழ்க்கை** *peru-n-taṇ-vālkkai,* பெ. (n.) நல்லறப்பெருமை கொண்ட இல்லற வாழ்க்கை; high dignity noble life. "விருந்து புறந்தரூஉம் பெருந்தண் வாழ்க்கையும்" (சிலம்பு. மனை.86.)

*[பெருமை + தண் + வாழ்க்கை]*

**பெருந்தரம்** *peru-n-taram,* பெ. (n.) 1. பேரலுவல்பணிவகை; a high office ஸ்ரீராஜராஜதேவர் பெருந்தரம்.....சேனாபதி மும்மடி சோழப் ரம்மாராயன்" (s.i.i.ii,161,3.) 2. தாராளமனம்(கொ.வ.) liberal mindedness.

*[பெரும் + தரம்]*

**பெருந்தரா** *peru-n-tarā,* பெ.(n.) *பெருந்தரம்,* 2. பார்க்க; இ.வ., கொ.வ.; see *peru-n-taram.*

*[பெரும் + தரம்→தரா]*

**பெருந்தலை** *peru-n-dalai,* பெ. (n.) தலைமைக்காரன்; head man. (இ.வ.)

*[பெரும் + தலை]*

**பெருந்தலைக்கறையான்** *peru-n-talai-k-karaiyān,* பெ. (n.) கறையான் வகை(வின்); large-headed white ant.

*[பெருந்தலை + கறையான்]*

**பெருந்தலைத்திமிங்கிலம்** *peru-n-talai-t-timingilam,* பெ. (n.) திமிங்கிலவகை(M.M.); sperm whale, Euphysetes macrocephalus, as having a huge head.

*[பெருந் + தலை + திமிங்கிலம்]*

**பெருந்தவறு** *peru-n-tavaru,* பெ. (n.) பெருங்குற்றம்; gross-offence.

*[பெரும் + தவறு]*

**பெருந்தன்மை** *peru-n-taṉmai,* பெ. (n.) 1. மேம்பாடு; high dignity, noble character 2. செருக்கு (அகந்தை) (யாழ்.அக.) selfconceit. 3. இறைமை; god-hood, 4. வள்ளன்மை; generosity.

*[பெரும் + தன்மை]*

**பெருந்தன்மையாளர்** *pērun-daṉmaiyalar,* பெ. (n.) நற்பண்பாளர்; gentleman.

*[பெரும்தன்மை + ஆளர்]*

**பெருந்தனம்** *peru-n-taṉam,* பெ. (n.) 1. சோழரது அரசாங்க பணிகளிலொன்று; an office of the state under cōḷa government. ஸ்ரீராஜராஜதேவர் பெருந்தனம் மும்மடி சோழ போசன் (s.i.i.ii,222.) 2. கணிகையரில் ஒரு பிரிவினர்(சிலப்,14,167, உரை.); a class of dancing-girls.

*[பெரும் + தனம்]*

**பெருந்தாதை** *peru-n-tādai,* பெ. (n.) *பெரியப்பன்* பார்க்க; see *periyappaṉ*. '*பெருந்தாதை சொல்லால்......அவனிகாப்ப*' (பாகவத.1. தன்மபுத்திர.41.)

*[பெரும் + தாதை]*

**பெருந்தாய்** *peru-n-tāy,* பெ. (n.) *பெரிய தாயார்* பார்க்க; see *periyatāyar.* '*பெருந்தாயுழைப்புகுந்தான்*' (உபதேசகா. சிவவிரத.259.)

*[பெரும் + தாய்]*

**பெருந்தாரா** *peru-n-tārā,* பெ. (n.) வாத்து வகை(வின்); goose, auser auser.

*[பெரும் + தாரா]*



**பெருந்தாழை** *peru-n-dāḷai,* பெ. (n.) *சீமைக்கற்றாழை*(L.) பார்க்க; see *šīmai-R-Raṟṟāḷai,* giant mexican lily,

*[பெரும் + தாழை]*

**பெருந்தாளி**[1] *peru-n-tāḷi,* பெ. (n.) பெருந்தகளி(இ.வ.) பார்க்க; see *peru-n-tagaḷi.*

*[பெரும் + தகளி→தாளி]*

**பெருந்தாளி**[2] *peru-n-tāḷi,* பெ. (n.) தாளிச் செடிவகை(வின்); a large climber.

*[பெரும் + தாளி]*

**பெருந்தானம்** *peru-n-tāṉam,* பெ. (n.) நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணாக்கு, உதடு, பல் தலையாகிய ஒலியெழும் எட்டு உறுப்புகள் (சிலப்.3,26,உரை.); parts of the body, from which speech proceds, eight in humber, viz., neñju, miḍaṟu, nākku, mūkku, aṇṇākku, udaḍu-pal, talai.

*[பெரும் +* skt *tana. த.தானம்]*

**பெருந்திகிரி** *peru-n-tigiri,* பெ. (n.) எல்லைச் சக்கரவாளத்துக்கும் அப்பாலுள்ள சக்கரவாளமலை; a mythical range of mountain cakkaravāḷam. '*பெருந்திகிரி வெற்புடையவே*' (துக்கயாகப்.403.)

*[பெரும் + திகிரி]*

**பெருந்திசை** *peru-n-tišai,* பெ. (n.) **1.** வடக்கு முதலிய முதன்மையான திசை; any of the four cardinal points **2.** நீண்ட நிலப்பரப்புள்ள திக்கு; a direction in which the land area is extensive. '*வடதிசை பெருந்திசை யாகலின்*' (சிலப்.5,94, உரை.)

*[பெரும் + திசை]*

**பெருந்திட்டம்** *perun-tittam,* பெ. (n.) வரைவுத்திட்டம்; great plan.

*[பெரும் + திட்டம்]*

**பெருந்திணை** *peru-n-tiṇai,* பெ. (n.) அகத்திணையேழனுள் ஒன்றானதும் ஒத்த தன்மையல்லாதவளுடனாவது நெறிமுறை மாறாக வாவது, தன்னைவிட அகவையில் முதிர்ந்தவளோடாவது, மனம் ஒவ்வாதவளோடாவது கூடும் காதல்; (akap.) improper love, as when it is in violation of customary rules or when the woman is older than the man or is of a different caste or does not consent, one of serven aga-t-tiṇai. q.v. "கைக்கிளை முதலாப் பெருந்திணையிறவாய்" (தொல்.பொருள்.1)

"பெரும்பகுதி மக்கள் மணமுறைகளுள் பெரும்பாலனவற்றைத் தன்னுள் அடக்கி நிற்பதால், பொருந்தாக்காமம் பெருந்திணை எனப்பட்டது. கவர்வு மணங்களும், இயற்கைக்கு மாறான எல்லாப் புணர்ச்சி வகைகளும் பெருந்திணையே: காதலொடு பொருந்தாமையும் நெறியொடு பொருந்தாமையும் பற்றி, பெருந்திணை பொருந்தாக்காமம் எனப்பட்டது." **(த.தி.பக்.16)**

*[பெரும் + திணை]*

**பெருந்திரட்டு** *peru-n-tiraṭṭu,* பெ. (n.) தத்துவராயர் தொகுத்த மறைமுடிபு (வேதாந்த) நூல்; the larger religious anthology compiled by tattuvarāyar, dist.fr,kurṟu-n-tir!!u.

*[பெரும் + திரட்டு]*

**பெருந்திராய்** *peru-n-tirāy,* பெ. (n.) பூடுவகை(M.M.); Indian chickweed, s.sh., mouugo spergula

*[பெரும் + திராய்]*

**பெருந்திருக்கை** *peru-n-tirukkai,* பெ. (n.) திருக்கைமீன் வகை; sting-ray, reddish brown, attaining 6 ft. across and 3 ft. in length, pteroplatea micrura.

*[பெரும் + திருக்கை]*

**பெருந்திருட்டு** *perun-tiruttu,* பெ. (n.) பெருங்கொள்ளை; great steal.

*[பெரும் + திருட்டு]*

**பெருந்திருப்பாவாடை** *peru-n-tiru-p-āvāḍai,* பெ. (n.) *பெருந்திருவமிழ்து*(ஈடு.); பார்க்க see *peru-n-tiru-v-amirdu.*

*[பெரும் + திரு+பாவாடை]*

**பெருந்திருவமிர்து** *peru-n-tiru-v-amirdu,* பெ. (n.) *பெருந்திருவமிழ்து* பார்க்க; see *peru-n-tiru -v-amiḻdu.*

*[பெரும் + திரு + அமிர்து. அமிழ்து → அமிர்து]*

**பெருந்திருவமிழ்து** *peru-n-tiru-v-amiḻdu,* பெ. (n.) இறைவனுக்குப் படைக்கும் பெரும்படையல் (நிவேதனம்); food offered to God in a large scale *'திருவிழா எழுந்தருளுகைக்கும் பெருந்திருவமிழ்து செய்து அருளுகைக்கும்'* (s.i.i.v,**365.**)

*[பெரும் + திரு + அமிழ்து]*

**பெருந்திருவி** *peru-n-tiruvi,* பெ. (n.) பெருஞ்செல்வமுள்ளவள்; wealthy lady. *'பெருந்திருவியார் மகள்கொல்'* **(சீவக.1969.)**

*[பெரும் + திருவி திரு + இ = திருவி திரு = செல்வம் 'இ'–பெ.ப.ஈறு]*

**பெருந்திரைப்பு** *pērun-tirappu,* பெ. (n.) பெருங்கொய்சகம்; (கொசவம்) big pucker.

*[பெரும் + திரைப்பு]*

**பெருந்தில்லை** *peru-n-tillai,* பெ. (n.) தில்லைமரவகை(யாழ்.அக.); a kind of tillai tree.

*[பெரும் + தில்லை]*

**பெருந்திவசம்** *peru-n-tivašam,* பெ. (n.) தலைத்திவசம்(இ.வ.); first annual ceremony of a decessed person.

*[பெரும் + திவசம்]*

**பெருந்திறனாளர்** *pēru-n-tiranālar,* பெ. (n.) பெருவல்லுநர்; great expert.

*[பெரும் + திறனாளர்]*

**பெருந்தீங்கு** *pērun-tingu,* பெ. (n.) பேரிடர்; risk.

*[பெரும் + தீங்கு]*

**பெருந்தீக்கோல்** *pērun-tikkol,* பெ. (n.) பெருஞ்சூட்டுக்கோல்; big pocker.

*[பெரும் + தீக்கோல்]*

**பெருந்தீக்குறி** *pērun-tikkuri,* பெ. (n.) பெருந்தீநிமித்தம்; great knell.

*[பெரும் + தீக்குறி]*

**பெருந்தீவட்டி** *peru-n-devatte,* பெ. (n.) பெருந்தீப்பந்தவிளக்கு; Portable light

*[பெரும் + தீவட்டி]*

**பெருந்தீவு** *peru-a-tivu,* பெ. (n.) எழுதீவு; the seven continents. (பிங்.)

*[பெரும் + தீவு]*

**பெருந்தீனிக்காரன்** *peru-n-tīṉi-k-kāṟaṉ,* பேருண்டியாளன்; glutton.

*[பெரும் + தீனி +காரன்.] உடையவனைக் குறிக்கும் ஈறு காரன்*

**பெருந்துக்கம்** *peru-n-tukkam,* பெ. (n.) மனச்சோர்வு; sadness.

*[பெரும் + துக்கம்]*

(skt. duhkha → *த. துக்கம்)*

**பெருந்துத்தி** *peru-n-tutti,* பெ. (n.) **1.** செடிவகை; common evening mallow. m.sh., abutilon Indicum **2.** துத்திச்செடிவகை; wrinkled leaved evening mallow, m.sh., abutilon cesiaticum.

*[பெரும் + துத்தி]*



**பெருந்தும்பை** *peru-n-tumbai,* பெ. (n.) தும்பைவகை; large species of white dead-nettle, leucas aphalotes.

*[பெரும் + தும்பை]*

**பெருந்துருத்தி** *peru-n-turutti,* பெ. (n.) நீர் வீசுங்கருவிவகை(சூடா.) ; a kind of syringe.

*[பெரும் + துருத்தி]*

**பெருந்துளசி** *peru-n-tuḷaši,* பெ. (n.) துளசி வகை; large basil, l.sh., ocimum gratissimum.

*[பெரும் + துளசி]*

**பெருந்துறை** *peru-n-tuṟai,* பெ. (n.) **1.** பெரியதுறைமுகம்; large seaport. '*பெருந்துறை மருங்கிற் பெயராது*' **(சிலப்.13,178.)** **2.** திருப்பெருந்துறை பார்க்க; Avuḍaiyārkoil. '*சீரார் பெருந்துறை நந்தேவன்*' **(திருவாச.1,15.)**

*[பெரும் + துறை]*

**பெருந்துன்பம்** *peru-n-tunpam,* பெ. (n.) பெருந்துன்பம்; deep distress.

*[பெரும் + துன்பம்]*

**பெருந்தூறு** *peru-n-tūṟu,* பெ. (n.) பெரும்புதர்(சூடா.); large bush, underwood.

*[பெரும் + தூறு]*

**பெருந்தெரு** *peru-n-teru,* பெ. (n.) நகரின் முதன்மைத் தெரு; main street *'நகரியிற் பெருந்தெருவிலே விலைக்கு விற்பாரை'* **(சிலப்.3,165–9,உரை.)**

*[பெரும் + தெரு]*

**பெருந்தேக்கு** *peru-n-tēkku,* பெ. (n.) தேக்கு(சங்.அக.); teak wood.

*[பெரும் + தேக்கு]*

**பெருந்தேட்டம்** *peru-n-tattam,* பெ. (n.) நுணுக்கத்தேடுதல்; act of searching.

*[பெரும் +தேட்டம் ]*

**பெருந்தேட்கொடுக்கு** *Peru-n-tēṭ-koḍukku,* பெ. (n.) தேட்கொடுக்கி வகை **(பதார்த்த.264);** a large species of Indian turnsole.

*[பெரும் + தேட் கொடுக்கு]*

**பெருந்தேவபாணி** *Peru-n-dēva-bāṇi* பெ. (n.) **1.** கடவுளரை வாழ்த்தும் இசைப்பாவகை **(சிலப்.6.35. உரை);** a kind of song in praise of gods, opp. to ciṟu-dēva- bāṇi **2.** பதினோராந் திருமுறையைச் சார்ந்ததும் நக்கீரதேவர் இயற்றியதுமான ஒரு சிற்றிலக்கியம்; a poem in praise of siva in padinōrān- tirumuṟai by Nakkera-dvar

*[பெரும் + தேவபாணி]*

**பெருந்தேவன்** *Peru-n-dēvaṉ,* பெ. (n.) தலைமைத் தெய்வம்; the Supreme Deity. *'உலகேழும் விழுங்கி யுமிழ்ந்திட்ட பெருந்தேவன்'* **(திவ்.திருவாய்.4,6,4.)**

*[பெரும் + தேவன்]*

**பெருந்தேவனார்** *Peru-n-dēvaṉār,* பெ. (n.) **1.** பாரதம் பாடிய கழகக் காலப் புலவர்; **(தொல்.பொ.72, உரை.பக்.231.)** a sangam poet, author of Tamil Bhāradam **2.** ஒன்பதாம் நூற்றாண்டில் பாரதவெண்பா பாடிய புலவர்; the author of pārada-veṇbā, 9th c **3.** பதினோராம் நூற்றாண்டினரான வீரசோழியவுரைகாரர்; the author of the commentary on vira-sōḻiyam, **11th** c

*[பெரும் + தேவன்+ஆர்+'ஆ' (உ.ப.ஈறு)]*

**பெருந்தேவி** *peru-n-dēvi,* பெ. (n.) பட்டத்து அரசி chie queen *'பாண்டியன் பெருந்தேவி வாழ்கென'* **(சிலப்.20.21.)**

*[பெரும் + தேவி+ தேவன் – (ஆ,பா.)– தேவி (பெ.பா)]*

**பெருந்தேன்** *peru-n-tēṉ,* பெ. (n.) **1.** தேனீக்கள் கட்டும் தேன்; honey secreted by bees *'குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந் தேனிழைக்கும்'* (குறுந்.2.) **2.** பெருந்தேனீ பார்க்க; *peru-n-tēṉ, 'பெருந்தேன் கண்படு வரையின்'* **(குறுந்.273)**

*[பெரும் + தேன்]*

**பெருந்தேனீ** *peru-n-tēṉi,* பெ. (n.) பெரிய தேனீவகை; (வின்.) large sized honey bee

*[பெரும் + தேன் + a]*

**பெருந்தையலிடு—தல்** *peru-n-taiyal-iḍu,* செ.குன்றா.வி (v.i.) நன்றாகத் தைப்பதற்கு முன் பெரும்படியாக நூலையோட்டுதல்; to stich a running shtch; to tack

*[பெரும் + தையல் + இடு]'இடு' (துவி)]*

**பெருந்தொகை** *peru-togai,* பெ. (n.) பெருந்திரள் பார்க்க; see peruntiral.

*[பெரும் + தொகை]*

**பெருந்தொடர்** *peru-n-toḍar,* பெ. (n.) எழுவாய் பயனிலை முடிந்த கிளவியம் (வாக்கியம்) சிலவற்றைப் பிணைத்து நடக்குந் தொடர்ந்த கிளவிபம் (தொல். சொல்.42, சேனா.); compound or complex

*[பெரும் + தொடர்]*

**பெருந்தொடை** *peran-toḍai,* பெ. (n.) 1. தொடையின் மேற்பகுதி; upper part of the thigh; thick part of the thigh *'வெள்ளம் பெருந்தொடை வரை வந்தது'* 2. இடுப்பு (இ.வ.); hip

*[பெரும் + தொடை]*

**பெருந்தொப்பி** *perun-toppi,* பெ. (n.) பெரிய கவிப்பு; top-hat.

*[பெரும் + U. topi. த. தொப்பி.]*

**பெருந்தொல்லை** *perun-tollai,* பெ. (n.) பெருந்துன்பம்; great nuisance.

*[பெரும் + தொல்லை]*

**பெருந்தொழுகை** *peru-n-tulukai* பெ. (n.) பெருமிறைத்தொழுகை; mass prayer.

*[பெரும் + தொழுகை]*

**பெருந்தோல்வி** *peru-tolvi,* பெ. (n.) படுதோல்வி; heavy fall.

*[பெரும் + தொழுகை]*

**பெருநகரத்தார்** *peru-nagarattār,* பெ. (n.) வணிகர்(I.M.P.Tj.142.); merchants.

*[பெரு + நகரம்+ 'அத்து' சாரியை] ஆர்*

**பெருநகர்** *peru-nagar,* பெ. (n.) மக்கள் தொகை மிக்க தலைமை மாநகரம்; Metro politan city

*[பெரும் + நகர்]*

**பெருநகை** *peru-nagai,* பெ. (n.) 1. பெருஞ்சிரிப்பு (பிங்); broad laugh laughter ridialous 2. பேரிகழ்ச்சி; being highly ridicuilous *'ஊரவர்க் கெல்லாம் பெருநகையாகி'* (கலித்.45.)

*[பெரு + நகை]*

**பெருநடை** *peru-naḍai,* பெ. (n.) 1. விரைந்த செலவு; fast walk' as of bullocks 2. புறக்கூத்துக்குரிய ஆடல்களுள் ஒன்று (சிலப்.3,16,உரை.); a mode of dancing. 3.உயர்ந்தவொழுக்கும் (சங்.அக); excellent conduct

*[பெரு + நடை]*

**பெருநந்தியாவட்டம்** *peru-nandiyā-vaṭṭam,* பெ. (n.) பெரு நந்தியாவட்டை பார்க்க; see perunantiyāvattai.

*[பெரு(மை) + நந்தியாவட்டம்]*

**பெருநந்தியாவட்டை** *peru-nandiyāvaṭṭai,* பெ. (n.) அடுக்கு நந்தியாவட்டம் பார்க்க;see adukku- nandiya vattam East Indian rosebay

*[பெரு(மை) + நந்தியாவட்டம் நந்தியாவட்டம் –நந்தியாவட்டை]*

**பெருநம்பி** *peru-nambi,* பெ. (n.) 1. இளவரசற்க்குரிய பட்டப்பெயர்; title of a royal prince *'பெருநம்பியாக வென்றான்'* (சீவக.2913.) 2. அரசர்க்குரிய மதிப்புரவு (விபவமெல்லாம்) பெறும் அமைச்சர் பட்டம்; title of a minister to whom royal honours are shown *'பெருநம்பி குலச்சிறை'* (தேவா.737,4)

*[பெரு + நம்பி]*

**பெருநம்பிகள்** *peru-nambigal,* பெ. (n.) கடிகைமாக்கள் (பிங்) பார்க்க; Radigai-mākkaḷ. panegyrists

*[பெரு + நம்பிகள்] 'கள்' (ப.பா.ஈறு)*

**பெருநரிவெங்காயம்** *peru-nariveṅgāyam,* பெ. (n.) செடிவகை(A); poison lily, s.sh crinum asiaticum. (a)

*[பெரு + நரிவெங்காயம்]*

**பெருநல்குரவு** *peru-nalgravu,* பெ. (n.) பெருவறுமை, பார்க்க; see peruvarumai.

*[பெரு + நல்குரவு]*

நல்குரவு = வறுமை

**பெருநறளை** *peru-neṟaḷai,* பெ.(n.) நீண்ட கொடிவகை; wolly heart vine (l) (செ.அக.)

*[பெரு + நறளை]*

**பெருநறுவிலி** *peru-neṟuvili,* பெ. (n.) 1. மரவகை; large sebesten, m.tr, cordia oblifua pypica 2. நறுவிலிவகை; a kind of felted leaved selerge sebesten, s.tr. cordia fulvasa (செ.அக.)

*[பெரு + நறுவிலி]*

**பெருநாட்டம்** *peru-nattam.* பெ. (n.) பெருவிருப்பம்; aspiration.

*[பெரு + நாட்டம்]*

**பெருநாடி** *peru-nāḍi,* பெ. (n.) மூல அடிப்படையான குருதிக்குழய், இரத்தக்குழாய் (M.L); aorta

*[பெரு + நாடி]*

**பெருநாணல்** *peru-nāṇal,* பெ. (n.) நாணல் வகை(m.m.509); dog bamboo,i.sh.) phragmites rox burghi

*[பெரு + நாணல்]*

**பெருநாத்திகர்** *perum-nathigar,* பெ. (n.) பகுத்தறிவாளர் (இன்மைக்கொள்கையர்); altheist.

*[பெரும் + நாத்திகர்]*

(skt. nāstikan → *த. நாத்திகர்)*

**பெருநாரை** *peru-nārai,* பெ. (n.) 1. நாரைவகை (பிங்); cyrus crane, Grus antigone 2. தலைக்கழகத்து வழங்கிய இசைநூல்களுள் ஒன்று (சிலப்.உரைப்பா.) ஒன்று a treatise on music, of the first saṅgam, not now extant.

*[பெரு + நாரை]*



**பெருநாவல்** *perunāval,* பெ. (n.) நாவல்வகை; (மலை) East Indian rose-apple

*[பெரு + நாவல்]*

**பெருநாள்** *peru-nāḷ,* பெ.(n.) 1. திருநாள்; festival, festive occasion *'ஒருபெரு நாளான் மணவணி காண'* (சிலப்.1,41.) 2. 27ஆவது விண்மீன் (சூடா.); the 27th naksatra 3. ஒரு முகம்மதியப் பண்டிகை; day of breaking the fast and enjoyment of the feast of Id. ul. Fitr. 4. நெடுங்காலம்; long period of time. *'பெருநா டெரிகின்றிலர்..... உனை'* (கம்பரா. இரணிய. 106.)

*[பெரு + நாள்]*

**பெருநாளிகம்** *peru-nāḷjgam,* பெ. (n.) நெருப்பை (அக்கினியை) வெளியிட்டழிக்கும் ஒருவகைத் தகரி (சுக்கிரநீதி,329.); a destrtuctive mechanisam, resembling a gun.

*[பெரு + நாளிகம்]*

**பெருநாளிருக்கை** *peru-nāḷ- irukkai,* பெ.(n.) அரசனது சிறப்பு நாளோலக்கம் (சிலப்.23.56.); great durbar of a king. *'திருநிலை பெற்ற பெருநாளிருக்கை'*

*[பெருநாள் + இருக்கை]*

**பெருநான்கெல்லை** *peru-nāṉgellai,* பெ.(n.) 1. சிற்றூர் அல்லது நிலத்தாக்கின் பேரெல்லை; bowndary, as of a village or block of land. opp.to ciru-nāṉgellai 2. எல்லை; boundary *'இப்பெருநான் கெல்லைக்குட்பட்ட இவ்வரைமா நிலமும்'* (s.i.i.iii.45.)

*[பெரு + நான்கு+எல்லை]*

**பெருநிந்தை** *peru-nintai,* பெ. (n.) பெருமிழிவு; great insult.

*[பெரு + நிந்தை]*

(skt. nindū - *நிந்தை)*

**பெருநிரவி** *peru-niravi,* பெ. (n.) கூட்டம்; (யாழ்.அக) gatherng

*[பெரு + நிரவி]*

**பெருநிலம்** *peru-nilam,* பெ.(n.) 1. நிலவுலகம்; earth. *'பெருநில முழுதாளும் பெருமகன்'* (சிலப்.1,31.) ;highest heaven *'அருளொடு பெருநில மளிக்கும்'* (திவ்,பெரியதி.1,1,9.)

*[பெரு + நிலம் நில்–நிலம்]*

**பெருநிலை** *peru-nilai,* பெ.(n.) (ஈடு,3,7,2 அரும்); 1. ஒருபக்கம் சார்தல் (பட்சபாதம்); partiality. 2. சான்று (சாட்சி); testimony 3. விடாப்பிடி; perseverance

*[பெரு + நிலை]*

**பெருநிலைநில்–தல் (பெருநிலைநிற்றல்)** *peru-nilai-nil,* செ.கு,வி(v.i.) உதவிசெய்தல்; to render assistance. *'உன்கிருததிரிமத்துக்குப் பெருநிலை நிற்பார்க்கன்றோ தெரிவது'* (ஈடு,6,2,5.) 2. சான்று சொல்லுதல்; to give testimony to accomplish,do.(ஈடு,3,7,2, அரும்);

*[பெரு + நிலை + நில்]*

**பெருநீர்** *peru-nir,* பெ. (n.) 1. கடல்; ocean,sea, *'பெருநீர் போகுமிரியன் மாக்களொடு'* (சிலப்,6,112.) 2. பெருநீர் முறை பார்க்க; see peru-nīr-muṟai

*[பெருமை + நீர்]*

**பெருநீர்முறை** *peru-nīr-muṟai,* பெ. (n.) மழைக்காலத்துப் பாய்ச்சல் முறையின்றித் தாராளமாக ஓடும் நீர்ப்பெருக்கு; water allowed to flow without any restraint or regulation during the rainy season (C.G)

*[பெருநீர் + முறை]*

**பெருநூல்** *peru-nul,* பெ.(n.) பெரிய நூல்; large book.

*[பெரும் + நூல்]*

**பெருநெஞ்சு** *peru-neñju,* பெ(n.) 1. செருக்கு (அகம்பாவம்)(வின்.); pride 2.மனவுறுதி (தைரியம்); courage *'அஞ்சாப் பெருநெஞ்சுள்ளவன்'*

*[பெரு–மை + நெஞ்சு]*

**பெருநெருஞ்சி** *peru-neruñji,* பெ. (n.) ஒருவகைச்செடி; a stout- stemmed herb with spiny fruits and slimy leaves.

*[பெரு + நெருஞ்சி]*

**பெருநெல்** *peru-nel,* பெ. (n.) 1. மட்டநெல்; carse paddy 2. நெல்வகை(வின்); a kind of paddy, longer in growing than other kinds

*[பெரு + நெல்]*

**பெருநெறி** *peru-neṟi,* பெ(n.) 1. பெருவழி; royal road, trunk road 2. வீடுபேறு; the path of salvation *'பேயனாகிலும் பெருநெறி காட்டாய்'* (திருவாச. 23,7.)

*[பெருமை + நெறி ]*

**பெருநையல்** *peru-naiyal,* பெ. (n.) 1. பெருவியாதி நோய்[1] பார்க்க; see peru-nōy 2. அம்மை (வைசூரி) (வின்.); small pox

*[பெரு + நையல்]*

**பெருநோக்காடு** *peru-nōkkāḍu,* பெ. (n.) பெரு நோய்[1](வியாதி)(M.C) பார்க்க; see peru-nōy

*[பெரு + நோக்காடு]*

**பெருநோய்[1]** peru- nōy[1], பெ. (n.) குட்டநோய்; leprosy

மறுவ. தொழுநோய்

*[பெரு + நோய்]*

**பெருநோய்[2]** *peru-nōy,* பெ. (n.) மாட்டுநோய் வகை; (மாட்டுவா.105.) rinder - pest

*[பெரு + நோய்]*

**பெருநோன்பு** *peru-nonbu,* பெ. (n.) உண்ணாநிலை; abstinence from good.

*[பெரு + நோன்பு]*

**பெருப்பம்** *peruppam,* பெ. (n.) பருமன்; bigness, thickness

*[பல்–பரு–பெரு, பெரு – பெருப்பம்]*

**பெருப்பி–த்தல்** *peruppi-,* செ.குன்றாவி (v.t.) **1.** பெரிதாக்குதல்; to magnify, enlarge. **2.** புனைந்து கூறுதல்; to exaggerate

*[பெரு–பெருப்பி (காரணவினை) 'பி' (கா.வி.ஈறு)]*

**பெருப்பு** *peruppu-,* பெ. (n.) பெருக்கை; becomming large, being stout. *'பணையே பிழைத்தல் பெருப்புமாகும்'* (தொல்.சொல்.339.)

*[பெரு–பெருப்பு 'பு' (சொ.ஆ.ஈறு)]*

**பெரும்பசலை** *peru-m-pašalai,* பெ. (n.) கொடிவகை(A.); large-flowered purslane, portulaca quadrifida.

*[பெரு+பசலை பசளை–பசலை விழ–வழலை–வயலை–பசளை]*



**பெரும்பசளி** *perum-pašaḷai,* பெ. (n.) பெரும்பசலை பார்க்க (இ.வ.) ; see perum-pašalai

*[பெரும்+பசளி] வயலை–பசலை–பசள*

**பெரும்பசிரி** *peru-m-paširi-,* பெ. (n.) கீரைவகை; (மூ.அ) a kind of greens

**பெரும்பஞ்சமூலம்** *peru-m-pañjamūlam,* பெ. (n.) வில்வம்,வாகை,பெருங்குமிழ், தழுதாழை, பாதிரி என்ற ஐந்து மரங்களின் வேர்களைக் கொண்டு செய்த கூட்டுமருந்து (யாழ்.அக); compound medicine of the roots of five trees, viz., vilvam, vāgai, peru-ṅ-kumiḻ, taḻutāḻai, pādiri.

*[பெரும்+பஞ்ச+மூலம் skt.pañcan-த.பஞ்ச மூலம்=வேர்]*

**பெரும்பஞ்சை** *peru-m-panjai,* பெ. (n.) பெருவறுமை பார்க்க. see peruvarumai

*[பெரும்+பஞ்சை]*

**பெரும்படி**[1] *peru-m-paḍi,* பெ. (n.) உயர்தரம்; grandeur.

*[பெருமை+படி]*

**பெரும்படி**[2] *peru-m-paḍi,* பெ. (n.) முருடு; coarseness, roughness **2.** தோராயம் rough calculation **3.** பருமன்; thickness, stoutness **4.** பெரும்போக்கு; liberal scale **5.** செருக்கு (அகந்தை) (இ.வ.); arrongance

*[பெரும்+படி+படி= முரட்டு, தடிமன், செருக்கு]*

**பெரும்படை** *peru-m-paḍai,* பெ. (n.) **1.** பெரிய தானை; large army **2.** இறந்த வீரன் புகழை நடுகல்லிற் பொறிப்பதைக் குறிக்கும் புறத்துறை (தொல்.பொ.60); (purap) theme describing the exploits of a hero and inscribing them on a naḍu-kal. **3.** தெய்வமாகிய நடுகற்குப் பெருஞ்சிறப்புப் படைத்தலைக்கூறும் புறத்துறை (தொல்.பொ.60,

உரை.); (purap.) theme describing the gift of valuable offerings to a nadu-gal.

*[பெரும்+படை]*

**பெரும்பண்** *peru-m-paṇ,* பெ. (n.) பதினாறு தலைமைப் பண்கள். பாலையாழ், செந்து, மண்டலியாழ், பௌரி, மருதயாழ், தேவதாளி, நிருபதுங்கராகம், நாகராகம், குறிஞ்சியாழ், ஆசாரி, சாயவேளார் கொல்லி, கின்னராகம், செவ்வழி,மௌசாளி, சீராகம், சந்தி (பிங்.) group of sixteen main melogy-types viz. pālaiyāḻ, sendu, maṇḍaliyāḻ, panri, marudayāḻ, dēvatāḻi,nirupaturiga rāgam, nāgarāgam, kuṟiñjiyāḻ, āḻāri, sāyavēḷār, kolli, kiṉṉarāgam, sevvaḻi, manrāli,širāgam, sandi.

*[பெரும் + பண்]*

**பெரும்பணி** *peru-m-paṇi,* பெ. (n.) கிடைத்தற்கரியது; that which is dear or scarce *'அவை தன்னை இவன் தான் லபித்தானாகை பெரும்பணியிறே'* (திவ்.பெரியதி.3,5,4, உரை.)

*[பெரும் + பணி]*

**பெரும்பத்து** *peru-m-pattu,* பெ. (n.) *பெரும்பற்று* பார்க்க (W.G.); see *peru-m-paṟṟu*

*[பெரும் + பத்து பற்று – பத்து பற்று = வயல், நிலம்]*

**பெரும்பதி** *peru-m-padi,* பெ. (n.) மருங்கிலூர் சூழ்பதி (வின்.); town surrounded by villages (w) *"போயோர் பெரும்பதியுட் பட்டேம்"* (சிலப்.9; 46)

*[பெரும் +பதி]*

**பெரும்பயறு** *peru-m-payaṟu,* பெ. (n.) காராமணி; chowlee-bean. *'அரிகாற் பெரும்பயறு நிறைக்குமூர'* (ஐங்குறு.47.)

*[பெரும் + பயறு ]*

**பெரும்பராக்கு** *peru-m-parākku,* பெ. (n.) உன்னிப்பாயிராமை (வின்.); carelessness, negligence, supineness

*[பெரும் + பராக்கு skt.parāk- க.பராக்கு= கவனமின்மை]*

**பெரும்பருந்து** *peru-m-parundu,* பெ.(n.) *பெரும்புள்*(யாழ்.அக); பார்க்க see *peru-m-puḷ*

*[பெரும் + பருந்து]*



**பெரும்பருவம்** *perum-paruvam,* பெ. (n.) ஈரம் மிகுந்திருப்பதால் உழுவதற்குத் தகுதியற்ற நிலம் (நாஞ்.); land unfit for ploughing owing to its being exceedingly moist.nā.

*[பெரும் + பருவம்]*

*த.* பருவம் → skt.parvan

**பெரும்பற்றப்புலியூர்** *peru-m-parra-p-puliyūr,* பெ. (n.) தில்லை (சிதம்பரம்); chidambaram *'பெரும்பற்றப் புலியூரானை'* (தேவா.12,1.)

*[பெரும் + பற்றப்புலியூர்]*

**பெரும்பற்றப்புலியூர்நம்பி** *peru-m-parra-p-puliyūr-nambi,* பெ. (n.) திருவால வாயுடையார் திருவிளையாடல் தொன்ம (புராண) நூலாசிரியர்; the author of Tiru-v- ālavāyu ḍaiyar-Tiruviḷai yaḍar tonmam

*[பெரும் பற்றப்புலியூர் + நம்பி]*

**பெரும்பற்று** *peru-m-parru,* பெ. (n.) அரசுக்கு உரிமையானநிலம்; (T.A.S; land, the proprietary right which lies in the hands of the government.

*[பெரும் +பற்று]*

*[பெரும் +பறவை]*

**பெரும்பறை** *peru-m-parai,* பெ. (n.) தோற்கருவிவகை; (சிலப்,3,2,உரை,பக்.106) a kind of large drum.

*[பெரும் + பறை]*



**பெரும்பறையன்** *peru-m-paraiyan,* பெ. (n.) பறையர் இனத்துள் ஒரு பிரிவு (பஞ்சம சாதி வகை) (M.M.654.); a sub sect of paraiyas

*[பெரும் + பறையன்]*

**பெரும்பனசை** *peru-m-panašai,* பெ. (n.) பெரும்பனையன்(வின்.) பார்க்க ; see peru-m panayan.

*[பெரும் + பனசை]*

**பெரும்பனையன்** *peru-m-panaiyan,* பெ. (n.) அம்மைநோய் (வைசூரி)வகை (வின்.) ; a virulent kind of small-pox with large pustules

*[பெரும் + பனையன் பனை–பனையன்= கொடுவாரிநோய்]*

**பெரும்பாடி காவல்** *perum-pādi-kāval,* பெ. (n.) தலைமைக்காவலன் (M.E.R. 407 of 1921);chief watchman

*[ பெரும் + பாடிகாவல்]*

**பெரும்பாடு** *peru-m-pāḍu,* பெ. (n.) 1. பேருழைப்பு; great effort great suffering, strain 2. வீட்டுவிலக்குக் குருதியிறைப்பு நோய்; excessice menstruation menorrhagia 3. கருப்பக்குறைப்பு; profuse bleeding from the womb, metrorrhagia (இ.வ)

*[பெரும் + பாடு]*

**பெரும்பாண்** *peru-m-pāṇ,* பெ. (n.) பெரும்பாணர் பார்க்க; see peru-m pāṇar. *'பெரும்பாணிருக்கையும்'* (மதுரைக்.342.)

*[பெரும் + பாண்]*

**பெரும்பாணர்** *peru-m-pāṇar,* பெ. (n.) யாழ் வாசிக்கும் பாணர்குல வகையார்; a division of pāṇar caste. *'அருட்பெரும் பாணனாரை'* (பெரியபு.திருநீலகண்டயாழ்ப்.3.)

*[பெரும் + பாணர்]*

**பெரும்பாணாற்றுப்படை** *peru-m-pāṇāṟṟu-p-paḍai,* பெ. (n.) பத்துப்பாட்டினுள் ஒன்றானதும் தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடியதுமான ஆற்றுப்படை வகை; a poem in praise of Toṇḍaimāṉ-iḷantiraiyaṉ, by kaḍiyalūr uruttiraṅgaṉṉaṉār, included in Pattu-p-pāṭṭu.

*[ பெரும்பாண் + ஆற்றுப்படை ]*

**பெரும்பாந்தள்** *peru-m-pāndaḷ,* பெ. (n.) பெரும்பாம்பு (வின்) பார்க்க; see *peru-mpāmbu.*

*[ பெரும் + பாந்தள் ]*

**பெரும்பாம்பு** *peru-m-pāmbu,* பெ. (n.) பெரிய பாம்பு; large snake. *பேழ்வாய்க் கிளர் பெரும் பாம்பினோடும்* (சீவக.2298). (திவா.)

*[ பெரும் + பாம்பு ]*

**பெரும்பாலார்** *peru-m-pālār,* பெ. (n.) மிகுதியான எண்ணிக்கையினவர்; the majority.

*[ பெரும் + பாலார் ]*

**பெரும்பாலும்** *peru-m-pāl-um,* பெ. எ. (adv) பெரும்பகுதி அளவு; for the most part, mostly, generally, commonly, customarily. பயிலுறவுற்றபடி பெரும்பாலுமிப் பெருந்திருநகர் படைப்பான் (கம்பரா.நகர.4.)

*[ பெரும் + பால் + உம். ]*

**பெரும்பாலை** *peru-m-pālai,* பெ. (n.) பெரும் பண்வகை (சிலப். பக். 454.); (mus.) a major melody-type.

*[ பெரும் + பாலை ]*

**பெரும்பாவி** *peru-m-pāvi,* பெ. (n.) கொடுந் தீவினையாளன்; great sinner, sad dog.

*[ பெரும் + பாவி ]*

skt. pāpin › த. பாவி

**பெரும்பாழ்** *peru-m-pāḻ,* பெ. (n.) 1. மூல முதல் (பிரகிருதி); primordial matter. *'சூழ்ந்தகன் றாழ்ந்துயர்ந்த முடிவில் பெரும் பாழேயோ'* (திவ். திருவாய். 10, 10, 10.) 2. பெருவெளி (திவா.) barren tract. 3. முற்று மழிவு; complete ruin.

*[ பெரும் + பாழ் ]*

**பெரும்பாழ் செய்–தல்** *peru-m-pāḻ-šey,* செ.குன்றாவி. (v.t.) முழுதும் அழித்தல்; to devastate entirely. *'பெரும்பாழ் செய்து மமையான்'* (பட்டினப். 270.)

*[ பெரும் + பாழ்செய் ]*

**பெரும்பாழ்வெளி** *peru-m-pāḻ-veḷi,* பெ. (n.) 1. *பெரும்பாழ்* 1, 2. பார்க்க; see *peru-m-pāḻ* 2. உச்சிக்குமேற் பன்னிரண்டு விரலங்கட்கு மேலுள்ளதாகக் கருதப்படுமிடம் (யாழ்.அக.); a mystic centre in the human body.

*[ பெரும் + பாழ்வெளி ]*

**பெரும்பாற்சொற்றி** *peru-m-pāṟ-coṟṟi,* பெ. (n.) பாற்சொற்றி வகை (வின்); a plant, aster acantha.

*[ பெரும் + பாற்சொற்றி ]*

**பெரும்பான்மை[1]** *peru-m-pāṉmai,* பெ. (n.) புகழுரை; praise. *'தலை மகளைப்பெரும் பான்மை கூறி'* (திருக்கோ. 164, உரை.)

*[ பெரும் + பான்மை ]*

**பெரும்பான்மை[2]** *peru-m-pāṉmai,* பெ.எ. (adv.) பெரும்பாலும்; for the most part, usually. *'பெரும்பான்மையு மறிதற் கரிதாட் விதி'* (இறை. 3 பாட்டு. 50.)

*[ பெரும் + பான்மை ]*

**பெரும்பானை மோர்** *peru-m-pāṉai-mor,* பெ. (n.) நீருணவு (நீராகாரம்); (இ.வ.) rice-water.

*[ பெரும் + பானை + மோர் ]*

**பெரும்பிடி** *peru-m-piḍi,* பெ. (n.) 1. கட்டாயப் படுத்திப் பெறுகை (வசூல்); exaction (w.) 2. ஒட்டாரம் (பிடிவாதம்); obstinacy. (இ.வ.)

*[ பெரும் + பிடி ]*

**பெரும்பிண்ணாக்குக் கீரை** *peru-m-piṇṇākku-k-kīrai,* பெ. (n.) கீரை வகை(M.M.); jews- mallow m.sh., corchorus olitorious.

*[ பெரும் + பிண்ணாக்குக் கீரை ]*

**பெரும்பிரண்டை** *peru-m-piraṇḍai,* பெ (n.) 1. பிரண்டை வகை; a large kind of square-stalked vine. 2. கொடிவகை (L.); leafless vanilla m.cl., vanilla wightiana

*[ பெரும் + பிரண்டை ]*



**பெரும்பிலா** *peru-m-pilā,* பெ. (n.) பொன்னா விரை (யாழ்.அக.) fetid cassia.

**பெரும்பிழுக்கை** *peru-m-piḻukkai,* பெ. (n.) வரிக் கூத்துவகை (சிலப். 3, 12, பக். 88.); a kind of masquerade dance.

*[ பெரும் + பிழுக்கை ]*

**பெரும்பிளவை** *peru-m-piḷavai,* பெ. (n.) அரசபிளவை; carbuncle, anthrax.

*[ பெரும் + பிளவை ]*

**பெரும்பிறிது** *peru-m-piṟidu,* பெ. (n.) இறப்பு; death, as a great change. *'பெரும்பிறி தின்மையி னிலேனு மல்லேன்'* (நற். 381.)

*[ பெரும் + பிறிது ]*

**பெரும்பீர்க்கு** *peru-m-pīrkku,* பெ. (n.) பீர்க்கு வகை; (பிங்.) a kind of sponge - gourd.

*[ பெரும் + பீர்க்கு ]*

**பெரும்பீளை** *peru-m-pīḷai,* பெ. (n.) *பெரும் பூளை* பார்க்க. see *peru-m pūḷai.* (பதார்த்த. 275.)

*[ பெரும் + பீளை ]*

பூளை – பீளை

**பெரும்புகழ்** *perum-pugal,* பெ. (n.) பெரும் பாராட்டு; high praise.

*[ பெரும் + புகழ் ]*

**பெரும்புதர்** *peru-m-putar,* பெ. (n.) பெரும் புதர்; shrub, big bushy plant.

*[ பெரும் + புதர் ]*

**பெரும்புயல்[1]** *peru-m-puyal,* பெ. (n.) 1. பெருங்காற்று; violent storm.

*[ பெரும் + புயல்.]*

**பெரும்புயல்[2]** *peru-m-puyal,* பெ. (n.) *பெரும் பெயல்* (பிங்.) பார்க்க *see perum peyal*

*[ பெரும் + புயல் ]*

**பெரும்புலர்காலை** *peru-m-pular kālai,* பெ. (n.) பொழுது புலர்தற்கு முன்னுள்ள விடியற்காலம்; early hours of the morning. *'பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி'* (தேவா. 523, 4.)

*[ பெரும் + புலர்காலை ]*

**பெரும்புலர்விடியல்** *perum-pular-vidiyal,* பெ. (n.) பெரும்புலர் காலை பார்க்க; see peru-m-pular-kālai. *'பெரும்புலர் விடியலு மாலை'* (குறுந். 234.)

*[ பெரும் + புலர் + விடியல் ]*

**பெரும்புலால்** *peru-m-pulāl,* பெ. (n.) பெருமீன்; large fish. (யாழ்.அக.)

*[ பெரும் + புலால் ]*

**பெரும்புலி** *peru-m-puli,* பெ. (n.) வேங்கைப் புலி; tiger, felis tigris.

*[ பெரும் + புலி ]*

**மறுவ:** கடுவா

**பெரும்புழுதி** *peru-m-Puludhi,* பெ. (n.) பெருங்குப்பை; loose soil.

*[ பெரும் + புழுதி ]*

**பெரும்புள்** *peru-m-pul,* பெ. (n.) 1. பெருங் கோட்டான் (பிங்.); rock-horned owl, bubo bengaleusis. 2. எட்டுக்காலுள்ள பெரிய பறவை (நிகண்டு); fabulous eight-legged bird.

*[ பெரும் + புள் ]*

**பெரும்புள்ளி** *peru-m-pulli,* பெ. (n.) பெரும்பணக்காரர்; (நிலக்கிழார்) feudal superior lord.

*[ பெரும் + புள்ளி ]*

**பெரும்புறக்கடல்** *peru-m-pura-k-kadal,* பெ. (n.) சக்கர வாளமாலையைச் சூழ்ந்துள்ள கடல்; outermost circumambient ocean beyond cakkaravāḷam. *'பெரும்புறக் கடலை யடலேற்றினை'* (திவ். பெரியதி. 7, 10, 1.)

*[ பெரும் + புறக்கடல் ]*

**பெரும்புறம்** *peru-m-puram,* பெ. (n.) பெருவெளி; outermost space. *'வாயிலின் பெரும்புறத் துய்த்தனர்'* (கம்பரா. இரணிய. 81.)

*[ பெரும் + புறம் ]*

**பெரும்பூ** *peru-m-pū,* பெ. (n.) நிலத்தின் ஆண்டு (வருட) வருவாய்; the annual agricultural produce. *'ஒன்பதாவது பெரும்பூ முதலிட்டு'* (s.i.i.v, 107.)

*[ பெரும் + பூ ]*

**பெரும்பூசணி** *peru-m-pūšaṇi,* பெ. (n.) சாம்பற் பூசணி. ash-gourd.

*[ பெரும் + பூசணி ]*

பூ + சுணை – பூசுணை – பூசணி



**பெரும்பூண்** *peru-m-pūn,* பெ. (n.) மார்பிற் பூணும் பேரணி; a big jewel worn on the chest. *'பெரும்பூண் மன்னவன்'* (பு.வெ. 10.)

*[ பெரும் + பூண் ]*

**பெரும்பூம்பாதிரி** *peru-m-pū-m-pādiri,* பெ. (n.) (L.) ஆட்டுக்கொம்பொதி பார்க்க; see ātti-k-kombodi long-leaved trumpet-tree. (l.)

*[ பெரும் + பூம்பாதிரி ]*

**பெரும்பூரான்** *peru-m-pūrān,* பெ. (n.) பூரான் வகை (சங்.அக.); a kind of centipede.

*[ பெரும் + பூரான் ]*

**பெரும்பூழை** *peru-m-pūḻai,* பெ. (n.) கதவிலிடும் வாயில் (யாழ்.அக.) wicket.

*[ பெரும் + புழை ]*

*[புழை – பூழை]*

**பெரும்பூளை** *peru-m-pūḷai,* பெ. (n.) செடி வகை; javanese wool plant m.sh., acrua javanica. (பட்டினப். 244, உரை.)

*[ பெரும் + பூளை ]*

**பெரும்பெயர்** *peru-m-peyar,* பெ. (n.) 1. பெரும்புகழ்; renown. *'பெரும்பெயர்ப் பெண்டிர்க்கு'* (சிலப். 28, 208.) 2. வீடு (மோட்சம்) final emancipation. *'அரும்பெறன் மரபிற் பெருபெயர் முருக'* (திருமுரு. 269.)

*[ பெரும் + பெயர் ]*

**பெரும்பெயர்ப்பொருள்** *peru-m-peyar-p-porul,* பெ. (n.) *பெரும்பொருள்* பார்க்க, see *perumporul. 'பெரும் பெயர்ப் பொருளிற் காணப்படுவதாகிய சிறப்பியல்பு'* (சி.போ.சிற்.பாயி.)

*[ பெரும் + பெயர்ப்பொருள் ]*

**பெரும்பெயருலகம்** *peru-m-peyar-ulagam,* பெ. (n.) விண்ணுலகம் heaven. *'பெரும்பெயருலகம் பெறீஇயரோ வன்னை'* (குறுந், 83.)

*[ பெரும் + பெயருலகம் ]*

**பெரும்பெயல்** *peru-m-peyal,* பெ. (n.) கனத்த மழை; heavyrain. *'பெரும் பெயல் பொழிந்த சிறுபுன்மாலை'* (முல்லைப். 6.)

*[ பெரும் + பெயல் ]*

பெய் – பெயல்

**பெரும்பேச்சாளர்** *peru-m-pēccalar,* பெ. (n.) சிறந்த பேச்சாளர்; great oraterar.

*[ பெரும் + பேச்சாளர் ]*

**பெரும்பேச்சு** *peru-m-pēccu,* பெ. (n.) **1.** பெரிய வெறும்பேச்சு; wide rumour. **2.** அலப் பற்பேச்சு; incessant talk, loquacity, **3.** புகழ்; fame. ***'பெற்றுடையான் பெரும் பேச்சுடையான்'*** **(தேவா. 1106, 5.)**

*[ பெரும் + பேச்சு ]*

**பெரும்பேது** *peru-m-pēdu,* பெ. (n.) **1.** பெரும் பித்து; excessive modness or distress, as in love. ***'பெரும் பேதுறுதல் களைமதி'*** **(கலித். 21.)** **2.** சாக்காடு; death, as the great distress. ***'வெந்திறற் கூற்றம் பெரும்பேதுறுப்ப'*** **(புறநா. 238, 10.)**

*[ பெரும் + பேது ]*

**பெரும்பொங்கல்** *peru-m-pongal,* பெ. (n.) **1.** சுறவ(தை)ப் பொங்கல், a festival (w.) **2.** சிற்றூர்த் தேவதைக்கு ஊராரிடும் பொங்கல்; offering of pangal to a village deity by the villagers in common. **(யாழ்.அக.)**

*[ பெரும் + பொங்கல் ]*



**பெரும்பொய்** *perum-pōy,* பெ. (n.) கட்டுக்கதை; untruth.

*[ பெரும் + பொய் ]*

**பெரும்பொருள்** *peru-m-poru!,* பெ. (n.) **1.** சிறப்புடைய பொருள்; a thing of great value. 'பெரும்பொரு ணீதிச் செங்கோற் பெருமகன்' **(சீவக.2534.)** **2.** அறம்; virtue . **(மணிமே.19,160, உரை.)** **3.** அறிவு; wisdom. 'பெருந்தவர் தம்மாற் பெரும்பொரு ளெய்த' **(மணிமே—19,160.)** **4.** பேரின்பவீடு (மோட்சம்); salvation 'பெரும்பொருளையுடையமுருக' **(திருமுரு. 269,உரை.)** **5.** அகப்பொருள் பற்றியதோர் நூல் **(சீவக.187,உரை.)**; a treatise on aga-p-poru!.

*[ பெரும் + பொருள் ]*

**பெரும்பொருள் விளக்கம்** *peru-m-poru! vi!akkam,* பெ. (n.) ஒரு அறநூல் **(புறத்திரட்டு)**; a poem on morals.

*[ பெரும் பொருள் + விளக்கம் ]*

**பெரும்பொழுது** *peru-m-po!udu,* பெ. (n.) கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் பருவங்கள் **(நம்பியகப்.11)**; seasons of the year, of which there are six, viz., kār,kūdir, mun-pani. pin-pani, i!a-vēnil, mu!uvēnil, dist. fr.ciru-podudu. *(நம்பியகப்* - II).

*[ பெரும் + பொழுது ]*

**பெரும்பொன்படு—தல்** *peru-m-ponpadu,* செ.கு.வி. (v.i.) தோற்றப் பொலிவுண்டாதல்; to be charming in appearance. ***'தொய்யிலெழுதி யிறுத்த பெரும்பொன் படுகம்'*** **(கலித்.64.)**

*[ பெரும் + பொன்படு —,]*

**பெரும்போக்கு** *peru-m-pōkku,* பெ. (n.) 1. பெருந்தன்மை; brood-mindedness, liberality. 2. சாக்காடு; death.

*[ பெரும் + போக்கு ]*

போ–போகு–போக்கு.

போக்கு = போதல், வழி, நடை, பழக்கம், முடிவு.

**பெரும்போகம்** *peru-m-pōgam,* பெ. (n.) 1. மிகுந்த விளைவு (கொ.வ.); bumper crop. 2. பேரின்பம்; supreme bliss. '*பெரும்போகம் பின்னும் புதிதாய்*' (திருக்கோ.9.)

*[ பெரும் + போகம் →பூ→ பூகம்→போகம்]*

**பெரும்பற்று** *perum-parttu,* பெ. (n.) மிகுந்த ஆசை; thick attachment.

*[ பெரும் + பற்று ]*

**பெரும் போட்டி** *perum-pōtti,* பெ. (n.) கடும் போட்டி; sever contest.

*[ பெரும் + போட்டி ]*

**பெருமக்கள்** *peru-makkaḷ,* பெ. (n.) 1. பெரியோர்; the great '*பெருமக்களுள்ள வர்தம் பெருமானை*' (திவ்.திருவாய்.3,7,5.) 2. ஊரலுவல் (காரியங்களை) மேற்பார்வை செய்யும் சவைப் பெரியோர்; members of a village assembly, as great men. '*ஸம்வத்ஸர வாரியப் பெருமக்கள்*' (s.i.i.iii,9.)

*[ பெரு + மக்கள் ]*

**பெருமகன்**[1] *peru-magaṉ,* பெ. (n.) நிலக்கிழார்; lord.

*[ பெரு + மகன் ]*

**பெருமகன்**[2] *peru-magaṉ,* பெ. (n.) 1. உயர்பண்பாளர் (பிங்.);. great man 2. தலைவன்; chief '*வயவர் பெருமகன்*' (பெரும்பாண்.101.) 3. அரசன்; king. '*வெண்குடைப் பெருமகன் கோயிலுள்*' (சீவக.183.) 4. அருகதேவன்; arhat. 'பெருமகன் றிருமொழி' (சிலப்.10,47.)

*[ பெரு + மகன் ]*

**பெருமகிழ்ச்சி** *peru-makilcci,* பெ. (n.) பெருவகை; great joy.

*[ பெரும் + மகிழ்ச்சி ]*

**பெருமகிழ்ச்சிமாலை** *peru-magilcci-mālai,* பெ. (n.) 96 வகைச் சிற்றிலக்கியங்களுள் கற்புடைப் பெண்டிர் பெருமையைக் கூறும் நூல்வகை(சது); a panegyric in which the greatness of chaste women is described one of 96 šiṟṟilakkiyams, q.v.

*[ பெரு + மகிழ்ச்சி + மாலை. ]*

**பெருமங்கலம்** *peru-maṅgalam,* பெ. (n.) 1. நன்னிகழ்ச்சி; auspicious festival. 2. வாழ்த்துப் பாடல்; benedictory song. '*பெரு மங்கலம் பாடுவார்*' (சீவக.308, உரை.) 3. அரசன் தன் பிறந்த நாளில் குடிகட்கு அருள் செய்வதைக் கூறும் புறத்துறை; (purap.) theme of a king rolbed in white on this birth day and bestowing powers on his subjects. '*பிறந்தநாள்வயிற் பெருமங்கலமும்*' (தொல். பொ.91.) 4. 96 வகைப் சிற்றிலக்கியங்களுள் அரசனது பிறந்த நாண் மங்கலத்தைக் கூறும் நூல் (சது.); poem descrilling the celebration of a king's birthday, one of 96 šiṟṟilakkiyams. q.v

*[ பெரு + மங்கலம் ]*

மங்கு–மங்கல்–மஞ்சல் = மங்கலான நிறம், அந்நிறக்கிழங்கு (மஞ்சள்) மஞ்சல்–மஞ்சள்.
மங்கல்–மங்கலம் மஞ்சளால் அல்லது மஞ்சள் நீரால் குறிக்கப்பெறும் நன்னிலைமை. திருமணம், திருமணத்தாலி, மங்கலநிகழ்ச்சி, மங்கலச் சின்னம், மங்கலவழக்கு, நன்மை, (வட.வர. 213.)

**பெருமஞ்சாடி** *peru-mañjāḍi,* பெ. (n.) 1. *ஆனைத் தெல்லு*(நாஞ்) பார்க்க; see *āṉai-t-tellu.* a climber.

*[ பெரு + மஞ்சாடி ]*

**பெருமஞ்சிகன்** *peru-mañjigaṉ,* பெ. (n.) மயிர்வினைஞன் (நாவிதன்)(தி.வா.); barber. '*பெருமஞ்சிகனுக்கு.... கூந்தற் கருமம்*' (சீகாளத்.பு. விடசங்க.66.)

*[பெரு + மஞ்சிகன்]*

**பெருமடை** *peru-maḍai,* பெ. (n.) தெய்வங்களுக்கிடும் சோற்றுப்படையல்; food offering to a deity. '*வளமிகு சிறப்பிற்றெய்வப் பெருமடை கொடுத்து*' (பெரியபு.கண்ணப்.19.).

*[பெரு + மடை]*

மடு–மடை

**பெருமடிப்பு** *peru-maḍippu,* பெ. (n.) கொய்சகம் (திரைப்பு); pucker.

*[ பெரும் + மடிப்பு ]*

**பெருமணம்** *peru-maṇam,* பெ.(n.) திருமணம்; marriage. '*பெருமணம் பண்ணி யறத்தினிற் கொண்ட*' (கலித். 96,36.)

*[பெரு + மணம்]*

மணத்தல் = கலத்தல், இருவர் மனம் ஒன்று கூடுதல்

மண → மணம் = திருமணம்

**பெருமணல்வட்டம்** *peru-maṇal-vaṭṭam,* பெ. (n.) ஏழு நிரயத்தொன்று. (பிங்.) a hell of sand, one of elu-naraam, q.v.

*[ பெரு + மணல்வட்டம் ]*

**பெருமத்தளி** *peru-matttaḷi,* பெ. (n.) முழவம்(திவ்.திருப்பள்ளி.9. வ்யா); akind of drum.

*[ பெரும் + மத்தளி(மத்தளி= வாச்சியவகை]*

**பெருமதிப்பன்** *peru-madippaṉ,* பெ. (n.) அதிக விலைபெற்ற பொருள்(ஈ.டு.). precious or valuable object.

*[பெரு + மதிப்பன்]*

**பெருமந்தனம்** *peru-m-manḍātanam,* பெ. (n.) இன்றியமையாத கமுக்கச் செய்தி; top-secreat.

*[பெரும் + மந்தனம்]*

**பெருமந்தாரை** *peru-mandārai,* பெ. (n.) *செம்மந்தாரை* பார்க்க; see - *mandārai,*purple variegated mountain ebony.

*[பெரு + மந்தாரை]*

**பெருமரம்** *peru-maram,* பெ. (n.) 1. மரவகை; toothed-leaved tree of heaven, 1. tr., ailan thus excels. 2. பீநாறி(மலை.); fetid tree 3. பெருங்கள்ளி; white frangipani.

ம. பெருமரம்

*[பெரு + மரம்]*

**பெருமருந்து** *peru-marundu,* பெ. (n.) கொடிவகை (பதார்த்த. 269) Indian birthwort, m.cl. aristolochia indica.

ம. பெருமருந்து

*[பெரு + மருந்து]*

**பெருமல்லிகை** *peru-malligai,* பெ. (n.) கொடிவகை (மூ.அ.); single-flowered Arabian jasmine, m.cl. jasmin sambac-heyneana.

*[பெரு + மல்லிகை]*

**பெருமலம்** *perumalam,* பெ. (n.) புன்கு, (சங்.அக.) indian beech.

*[பெரு + மலம்]*

**பெருமலரி** *perum-alari,* பெ. (n.) பெருங்கள்ளி; white frangipani.

*[பெரும் + அலரி.]*



**பெருமலை** *peru-malai,* பெ. (n.) மாமலை(மேரு);(பிங்) Mt. Meru.

*[பெரு + மலை.]*

**பெருமலைகலக்கி** *perumalai-kalakki,* பெ. (n.) பூடுவகை(வின்.); peacock-tailed Adiantum, adiantum caudatum. (w.)

*[பெரு + மலைகலக்கி.]*

**பெருமழை** *peru-maḻai,* பெ. (n.) கனத்த மழை; heavy. rain.

*[பெரு + மழை]*

**பெருமறைநூல்** *perumari-nul,* பெ. (n.) அறநூல்; book of charity. "தமிழர்களின் பெருமறைநூல் திருக்குறளாகும்."

*[ பெரும் + மறை +நூல் ]*

**பெருமனமுரிவு** *perumanamurivu,* பெ. (n.) பெருமனக் கசப்பு; great disappoint.

*[பெரும் + மனம் + முரிவு]*

**பெருமா** *peru-mā,* பெ. (n.) யானை; elephant.

*[பெரு + மா.]*

**பெருமாக்கோதையார்** *peru-mā-k-kōdaiyār,* பெ. (n.) சேரமான் பெருமாள் நாயனாரின் பிள்ளைப் பருவத்துப் பெயர்; name of saint cēramāṉ perumāḷ-nāyaṉār. given to him by his parents. 'அரனரு ளாற்பிறந்தார் பெருமாக் கோதையார்' (பெரியபு.சேரமான்.5)

*[பெரு + மா + கோதையார்.]*

ஈண்டுப் பெரு, மா எனு மீரடையும் ஒரே பொருளினவாய் அமைந்துள்ளமை காண்க. இவ்வடைகள் சிறப்புத்தன்மையை உணர்த்தும் ஒரு பொருட் பன்மொழிகள்.

**பெருமாட்டி** *perumāṭṭi,* பெ. (n.) தலைவி (திவா.) lady, mistress, princess. (செ.அக.)

*[பெரு மான் (ஆ.பா.) – பெருமாட்டி (பெ.பா.)]*

ஆளன் (ஆ) ஆட்டி (பெ) ஒ. நோ. திருவாளன் திருவாட்டி.

பெருமை + ஆட்டி = பெருமாட்டி

**பெருமாந்தம்** *peru-māndam,* பெ. (n.) குழந்தைநோய்வகை; a disease of children.

*[பெரு + மாந்தம்]*

மொத்து–மந்து–மந்து–மந்தம்.

மந்தம்–மாந்தம்=செரியாமையாற் குழந்தைகட் குண்டாகும் நோய்.

**பெருமாப்பு** *perum-āppu,* பெ. (n.) ஆப்புத்தள்ளி (புதுவை) பார்க்க; see āppu - t-taḷḷi.

பெரும் + ஆப்பு

**பெருமாமிசம்** *peru-māmicam,* பெ. (n.) மாட்டுக் கறி (இ.வ.); beef.

*[பெரு +SKṭ. māmsa. த. மாமிசம்.]*

**பெருமாள்** *perumāḷ,* பெ. (n.) 1. பெருமையிற் சிறந்தவ–ன்–ள்; person of eminence. 'பாண்பெருமாள்' (திவ். இராமானுச.11.) 2. சேரர் பட்டப்பெயர்; title of cēra king 3. திருமால்; Tiru-maī 4. கடவுள் (திருப்பு.); god.

ம. பெருமாள்

*[பெரும் + ஆள்.]*

**பெருமாள்கோயில்** *perumāḷ-koil,* பெ. (n.) 1. திருமால் கோயில் Tirumāl temple. 2. சின்ன காஞ்சிபுரம்; little conjeevaram (vaisṇ)

*[பெருமாள் + கோயில்.]*

**பெருமாள்கோயில் மாடு** *perumāḷ-kōil-māḍu,* பெ. (n.) திருமால் கோயில் எருது; temple bull. 2. உடம்பு கொழுத்தவன்(கொ.வ.); fat man.

*[பெருமாள் கோவில் + மாடு.]*

**பெருமாள்திருமொழி** *perumāḷ-tirumoḻi,* பெ. (n.) நாலயிரத் தெய்வப் பனுவலில் குலசேகராழ்வார் இயற்றிய பாடற்றொகுதி; the poems of kulacēekaraḻvār, collected in divya-p-pirapandam.

*[பெருமாள் + திருமொழி]*

**பெருமாள்மாடு** *perumāḷmāḍu,* பெ. (n.) ஊர் ஊராய்த் திரியும் இரப்பாளிகள் தெருவில் ஆட்டங் காட்டப் பழக்கியதும் புனைவு செய்யப் பெற்றதுமான எருது, Performing bull adovned with cowries etc., belonging to wandering medicants (E.T.Vi.194);

*[பெருமாள் + மாடு.]*

**பெருமான்** *perumāṉ,* பெ. (n.) 1. பெருமையிற் சிறந்தோன்; (பிங்.); nobleman, great person. 2. அரசன் (திவா.) king. 3. மூத்தோன் (திவா.); elder; elder brother. 4. கடவுள் (திவா.) god, as sīva, visṇu. *'பெருமானுரை பிடித்தேம்'* (கம்பரா. நிகும்பலை. 143.) 5. பெருமாட்டி; lady. *'தங்கா விருப்பிற் றம்பெருமான்'* (சீவக.2608.)

*[பெருமகன் + பெருமான்.]*

**பெருமானடிகள்** *perumāṉ-aḍigal,* பெ. (n.) 1. இறைவன்; divine being, a term of reverence *'பெரிய விடைமேல் வருவாரெம் பெருமா னடிகளே'* (தேவா.528,1.) *'வல்லத்துத் திருத்தீக்காலிப் பெருமானடிகளுக்கு'* (s.i.i.iii, 95.) 2. அரசர் தலைவர் பட்டப்பெயர்(கல்.); a title of kings and chieftains.

*[பெருமான் + அடிகள்.]*

**பெருமிடறு செய்—தல்** *peru-miḍaṟu-šey-,* செ.கு.வி. (v.i.) உரத்தழுதல்; to cry aloud; *'விழுந்து பெருமிடறு செய்து ஆர்த்தராய்க் கூப்பிட்டு'* (குருபரம். 537.)

*[பெருமி + டறு செய்,.]*

**பெருமிதச் செயல்** *perumida-c-cayal,* பெ. (n) நற்செயல்; *good deed*

*[பெருமை + மிதம் + செயல்.]*

**பெருமிதச் செய்கை** *perumida-c-cikai,* பெ. (n) *பெருமிதச் செயல்* பார்க்க; *see perumidaccayal.*

*[ பெருமை + மிதம் + செய்கை. ]*

**பெருமிதம்** *peru-midam,* பெ. (n.) 1. பேரெல்லை (தொல்.பொ.257. உரை); maximum limit, 2. மேம்பாடு; greatness. *'பெருக்கம் பெருமித நீர்த்து'* (குறள்.431.) 3. தருக்கு; pride, arrogance. *'பெருமை பெருமித மின்மை'* (குறள்.979.) 5. எண்வகை மெய்ப்பாடுகளுள் கல்வி முதலிய பெருமைகளில் மேம்படுகை; consciousness of one's greatness, one of eitht mey-p-pāḍu. q.v. *'கல்வி தறுக ணிசைமை கொடையெனச் சொல்லப்பட்ட பெருமித நான்கே'* (தொல்.பொ.57.)

*[பெரு(மை) → பெருமிதம்]*

**பெருமிதத்தன்மை** *pērumida-tanmai,* பெ. (n.) பெருந்தன்மை; dignity.

*[ பெருமிதம் + தன்மை ]*

**பெருமித வாழ்க்கை** *perumida-valkkai,* பெ. (n.) துன்ப நிலையிலும் மேம்பட்ட வாழ்க்கை வாழ்தல்; dignity life.

*[ பெருமிதம் + வாழ்க்கை ]*

**பெருமிழலைக்குறும்பநாயனார்** *peru-miḻalai-k-kurumba nāyaṉār,* பெ. (n.) நாயன்மார் அறுபத்துமூவருள் ஒருவர் (பெரியபு); a cannized šaiva saint, one of 63.

*[பெருமிழலை + குறும்ப நாயனார்]*

**பெருமிளகி** *peru-miḷagi,* பெ. (A.) நெல்வகை(a.); a kind of paddy

*[பெருமை + இளகி]*

**பெருமீன்** *peru-min,* பெ. (n.) யானைமீன் (திவா); a kind of large fish.

*[பெரு + மீன்]*



**பெருமுசுட்டை** *peru-mušuṭṭai,* பெ. (n.) **1.** கொடிவகை; many - flowered bindweed l clo i pornea staphylina. **2.** முசுட்டை வகை; malabar convolvulus. l.cl., i. pomaea malabārica.

*[பெரு + முசுட்டை]*

**பெருமுட்டை** *peru-muṭṭai,* பெ. (n.) பெருமரம் (மலை.); see perumaram.

*[பெரு + முட்டை]*

**பெருமுத்தரையர்** *peru-muttaraiyar,* பெ. (n.) கொடையாற்சிறந்த பண்டைச் சிற்றரசருள் ஒருவகையார்; a dynasty of chieftains of former days, renowned for their liberality. 'பெருமுத்தரையர் பெரிதுவந் தீயும் கருணைச் சோறு' (நாலடி,200.)

*[பெரு + முத்தரையர்]*

**பெருமுதலி** *peru-mudali,* பெ. (n.) தலைவன்; chief. '*எங்கண் முன்பெருமுதலி யல்லையோ*' (பெரியபு. கண்ணப். 117.)

*[பெரு + முதலி]*

**பெருமுதியன்** *peru-mudiyaṉ,* பெ. (n.) கோயில் அதிகாரிகளு ளொருவன்(T.A.S.iii 106); a temple official

**பெருமுயற்சி** *peru-muyarcci,* பெ. (n.) பேருழைப்பு; hard work.

*[பெரும் + முயற்சி]*

**பெருமுளை** *peru-muḷai,* பெ. (n.) இசைப்பாட்டு வகை (சிலப்.10,131,உரை.) ; a song.

*[பெரு + முளை]*

**பெருமுன்னறிவு** *pēru-munarivu,* பெ. (n.) முன்னறிதிறம்; fore thought.

*[பெரும் + முன்னறிவு]*

**பெருமுனைப்பு** *peru-munaippu,* பெ. (n.) பெருமுயற்சி பார்க்க; see perumuyarcci.

*[பெரும் + முனைப்பு]*

**பெருமூங்கில்** *peru-mūṅgil,* பெ. (n.) மூங்கில் மரவகை. (குறிஞ்சிப்.65, உரை.) large bamboo, **1.** tr. bambusa arundinaca.

*[பெரு + மூங்கில்]*

**பெருமூச்சு** *peru-mūccu,* பெ. (n.) நெட்டுயிர்ப்பு; sigh, long breath. '*பெருமூச்செழ விம்மின னிருந்தான்*' (பிரபோத. 37,6.)

*[பெரு + முச்சு]*

**பெருமூச்சுவிடு–தல்** *peru-mūccu-viḍu-,* செ.கு.வி. (v.i.) பெரிதாக மூச்சுவிடுதல்(வின்.); to heave a sigh.

*[பெருமூச்சு + விடு,]*

**பெருமூச்செறி–தல்** *peru-mūcceṟi-,* செ.குன்றா.வி. (v.t.) *பெருமூச்சு விடு–தல்* பார்க்க; see *perumūccuviḍu-.*

*[பெருமூச்சு + எறி,]*

**பெருமூத்திரம்** *peru-muttram,* பெ. (n.) நீரிழிவு நோய் (இராசவைத்.54.) diabeter

*[பெரு + மூத்திரம் மோள் + திரம் – மோத்திரம்–மூத்திரம்]*

**பெருமை** *perumai,* பெ. (n.) **1.** பருமை; bigness, largeness, **2.** மாட்சிமை; greatness, dignnity, excellence, eminernce, nobleness, grandeur. *'பெருமையுந் தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு'* (குறள்.974.); **3.** மிகுதி abundance, excess. *'இன்றில்லை யென்னும் பெருமை யுடைத்து'* (குறள்.336.) (திவா.). **4.** வல்லமை; power, might **5.** சீர்த்தி; celebrity, renown. **6.** செருக்கு; pride, vanity, haughtiness, *'அவன் பெருமையடிக்கிறான்'* **6. 7.** அருமை; dearness, difficulty, (சீவக.1709, உரை.)

க. பெர்மை

*[பல்–பரு–பெரு, பெரு–பெருமை. பெருமைக்கருத்து திரட்சிக் கருத்தின் வழிப்பட்ட பருமைக் கருத்தினின்றே தோன்றியுள்ளது. மதிப்பிற்கும் புகழிற்கும் ஏதுவான அறிவாற்றலதிகார செல் வங்களின் பருமையே பெருமை.]*

**பெருமைக்குணம்** *perumai-k-kunam,* பெ. (n.) *பெருமைப்பண்பு* பார்க்க; see *perumaippanpu*

*[பெருமை + குணம்]*

**பெருமைப்பண்பு** *perumai-p-panpu,* பெ. (n.) மாட்சிமைக்குணம்; noble character.

*[பெருமை + பண்பு]*

**பெருமைப்பாடு** *perumai-p-pāḍu,* பெ. (n.) *பெருமை,***6.** பார்க்க; see *perumai*

*[பெருமை + பாடு படு–பாடு]*

**பெருமைப்பெண்** *perumai-p-peṇ,* பெ. (n.) உரிமைச் சுற்றத்திலன்றிப்புறம்பே செல்வநோக்கித் தெரிந்தெடுக்கப்பட்ட மணப்பெண் (இ.வ.); bride chosen from a renowned or wealthy family, dist.fr. urimai-p-peṇ.

*[பெருமை + பெண் பெருமை = மதிப்பு, செல்வம், வளமை.]*

உறவுமுறை பற்றி மணத்தற்குரியவள் உரிமைப்பெண் என்றும் செல்வநிலை பற்றி மணத்தற்கு ஏற்றவள் பெருமைப் பெண் கூறுப.

**பெருமெண்ணிக்கை** *peru-menikgai,* பெ. (n.) பெருமளவு எண்ணிக்கை; large number.

*[பெரும் + எண்ணிக்கை]*

**பெருவங்கியம்** *peru-vaṅgiyam,* பெ. (n.) யானைத் துதிக்கை போலும் வடிவுள்ள இசைக்குழல் (புறநா.152, உரை.); long wind instrument shaped like an elephant's trunk.

*[பெரு + வங்கியம்]*

**பெருவசியம்** *peru-viciyam,* பெ. (n.) பெருங்கவர்ச்சி; pishogue.

*[பெரும் + வசியம்]*

**பெருவஞ்சி** *peru-vañji,* பெ. (n.) பகைவர் நாட்டை எரிகொளுத்துவதைக் கூறும் புறத்துறை. (பு.வெ.3,22.) (purap.) theme describing the setting fire to an enemy's country

*[பெரு + வஞ்சி]*

**பெருவட்டம்** *peru-vaṯṯam,* பெ. (n.) காட்டுமர வகை (வின்.); a kind of jungle tree.

*[பெரு + வட்டம்]*

**பெருவண்டு** *peru-vaṇḍu,* பெ. (n.) பறக்கும் தன்மை கொண்ட ஒருவகைக்குளவி; kind of flying insect of which the common kind has a narrow waist.

*[பெரும் + வண்டு]*



**பெருவண்ணம்** *peru-vaṇṇam,* பெ. (n.) இசைவகை. (பெரியபு.ஆனாய.28.) (mus.) a variety of melody-type.

*[பெரு + வண்ணம்]*

**பெருவண்ணான்** *peru-vaṇṇāṉ,* பெ. (n.) வண்ணாரச் சாதி வகை; an important division of the vaṇṇāṉ caste.

*[பெரு + வண்ணான்.]*

**பெருவண்மை** *peru-vaṇmai,* பெ. (n.) 1. பெருங்கொடை; generosity or munificence 2. அம்பெய்தற்குரிய நால்வகை இலக்குகளுள் பெரியதாகிய இலக்கு; a large or wide target for an arrow, one of four ilakku, q.v.

*[பெரு + வண்மை.]*

**பெருவயிறு** *peru-vayiṟu,* பெ. (n.) 1. பருத்த வயிறு; pot-belly, paunch 2. நீர்க்கோவை; dropsy; ascitis '*பெருவயிறு வயிறுவலி படுவன்வர்*' (திருப்பு.790.)

க. பெர் பசிறு. ம. பெருவயரு.

*[பெரு + வயிறு]*

**பெருவர்** *peruvar,* பெ. (n.) பெருமையுடையவர்; great persons. '*பெருவரா யுறையு நீர்மையர்*' (தேவா.852,9.)

*[பெரு – பெருவர்]*

**பெருவரகு** *peru-varagu,* பெ. (n.) வரகுவகை (விவசா.4); a kind of common millet .

**பெருவருத்தம்** *peru-varuttam,* பெ. (n.) பெருந்துன்பம்; sadness.

*[பெரும் + வருத்தம்]*

**பெருவரை** *peru-varai,* பெ. (n.) பெருமலை; Mt. Mēru, '*சிறந்த பெருவரையுடனும்*' (சிவதரு.கோபுர.30.)

*[பெரு + வரை]*

**பெருவரைமீன்** *peru-vari,* பெ. (n.) *அறிசா* (சங்.அக.) பார்க்க; see *ariśā a fish*

**பெருவல்லுநர்** *pēru-vallunar,* பெ. (n.) பெருந்திறனாளர்; expert.

*[பெரும் + வல்லுநர்]*

**பெருவலி** *peru-vali,* பெ. (n.) 1. மிகு வலிமை யுடையது; that which is very strong or powerful. '*ஊழிற் பெருவலி யாவுள*' (குறள்.380.) 2. பெருநோவு; (யாழ்.அக.) excessive pain.

*[பெரு + வலி]*

**பெருவலிப்பு** *pēru-valippu,* பெ. (n.) இசிவு நோய்; convulsion.

*[பெரும் + வலிப்பு]*

**பெருவலிமை** *pēru-valimai,* பெ. (n.) மிகுந்தஆற்றல்; greatstrength.

*[பெரும் + வலிமை]*

**பெருவலை** *peru-valai,* பெ. (n.) கடலில் மீ ன் பிடிப்பவர் பயன்படுத்தும் பெரிய வலை வகை (இ.வ.) ; a large sized net used by fishermen in the seas.

*[பெரு + வலை]*

**பெருவழக்கு**[1] *peru-vaḻakku,* பெ. (n.) **1.** பலரும் கையாளும் முறை; largely prevalent custom or usage. **2.** எல்லா விடத்திலும் நிறைந்திருத்தல்; omnipresence; *'எங்கணும் பெருவழக்காய்'* (தாயு.திருவருள், விலாச.1.)

*[பெரு + வழக்கு]*

**பெருவழி** *peru-vaḻi,* பெ. (n.) **1.** பெரும்பாதை (திவா.); highroad, trunk road. பெருவழி நாவற் கனியினு மெளியள்" (திவ். பெரியதி. **10,9,5)** **2.** வீடுபேறு; Path of salvation. "கருவழி யாக்குங் கணக்கையறுத்துப் பெருவழி யாக்கும்" (திருமந். **1374)** ம. பெருவழி

*[பெரு + வழி]*

**பெருவழக்கு**[2] *peru-vaḻakku,* பெ. (n.) பொதுநெறி; common method.

*[பெரு + வழக்கு]*

**பெருவள்ளி** *peru-vaḷḷi,* பெ. (n.) **1.** வள்ளி வகை. (பதார்த்த.**437.)** cultivated yam, m.cl. dioscorea sativa. (பதார்த்த.**437.)** **2.** ஒருவகைக் கிழங்குக் கொடி; ping-stalked yam, m.cl.dioscorea alata.

*[பெரு + வள்ளி]*

**பெருவளவாய்** *peru-vaḷa-vāy,* பெ. (n.) பேராற்றுக்கால்; big channel. "நாட்டுக்குப் பாயும் பெருவளவாயும்" **(S.I.I.ii.54)**

**பெருவளி** *peru-vaḷi,* பெ. (n.) சூறாவளி (சண்டமாருதம்); storm; hurricane *'பெண்ணையந் தோட்டம் பெருவளி புக்கற்றே'* (களவழி.**24.)**

*[பெரு + வளி]*

**பெருவளைப்பு** *peruvaippu,* பெ. (n.) பெரிய காவல்; utmost vigilence, extreme care. *'சிறுமுதுக்குறைவிதானே பெருவளைப்பிட்டுக் காத்த கற்பு'* (சீவக.**2077.)**

*[பெரு + வளை→வளைப்பு]*

**பெருவறுமை** *pēru-varumai,* பெ. (n.) பெருநல்குரவு; greatpoverty.

*[பெரும் + வறுமை]*

**பெருவனம்** *peru-vaṉam,* பெ. (n.) கடல்; sea. *'செறிந்த பன்மணிப்பெருவனம்'* (கம்பரா.முதற். **246.)**

*[பெரு + வனம்]*

*[பெ +* SKṭ Vana. *த. வனம்]*

**பெருவாகை** *peru-vāgai,* பெ. (n.) **1.** வாகை மரம்; siris, **1.** tr., Albizzia lebbek. **2.** வேலிப் பருத்தி (மலை.) ; stinking swallow wort.

*[பெரு + வாகை]*

**பெருவாடை** *peru-vāḍai,* பெ. (n.) பெருவளி பார்க்க; see peruvaḷi யுற்ற மரங்களி னடுக்க மெய்தா' (கம்பரா.மாயாசீ.**59.)**

*[பெரு + வாடை வட(க்கு)–வாடை]*

**பெருவாய்மலர்** *peru-vāy-malar,* பெ. (n.) இருவாட்சி; tuscan jasmine '*பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து*' (பதிற்றுப்.81,25.)

*[பெரு + வாய்மலர்]*

**பெருவாயன்[1]** *peru-vāyan,* பெ. (n.) **1.** அலப்பு பவன்; chatterbox. **2.** கழுதை (பாலவா.); donkey.

*[பெரு + வாயன் வாய்—வாயன்]*

**பெருவாயன்[2]** *peru-vāyan* பெ. (n.) **1.** கடகப்பெட்டி (இ.வ.); basket **2.** பெருமத்தளி (திவ். திருப்பள்ளி. 9, வ்யா) பார்க்க; *peru-mattali*

பெரு + வாயன்

**பெருவாயில்** *peru-vāyil,* பெ. (n.) கோபுரம்; tower. (திவா.)

*[பெரு + வாயில் வாய் → வாயில்]*

**பெருவாயின்முள்ளியார்** *peru-vāyin-mulliyār,* பெ. (n.) ஆசாரக்கோவை இயற்றிய புலவர்; a poet, the author of ācāra-k-kōvai.

*[பெருவாயின் + முள்ளியார்]*

**பெருவார்த்தை** *peru-vārttai,* பெ. (n.) பெருமையுடைய உரை; great word; notable utterence. '*மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டு சித்தர் கேட்டிருப்பர்*' (திவ்.நாய்ச்.11,10.)

*[பெரு + வார்த்தை]*

skt.vārttā > த. வார்த்தை

**பெருவாரல்வலை** *peru-vāral-valai,* பெ. (n.) மீன் பிடிக்கும் பெரிய வலைவகை (சிலப்.14,173,அரும்.); a large fishing net.

*[பெரு + வாரல்+வலை]*

**பெருவாரி[1]** *peru-vāri,* பெ. (n.) **1.** பெரு வெள்ளம்; great flood. '*தாமரையிறை வீழ்த்த பெருவாரி*' (பரிபா.9,4.) **2.** மிகுதி; abundancee, large numbers.

*[பெரு + வாரி]*

**பெருவாரி[2]** *peru-vāri,* பெ. (n.) **1.** பரவல் நோய்; cpidemie, pestilence. **2.** கொள்ளை நோய் வகை; bubonic plague.

*[பெரு + வாரி. வாரு—வாரி]*

**பெருவாரிக்காய்ச்சல்** *peruvāri-k-kāyccal,* பெ. (n.) *பெருவாரி[2]* , 2 பார்க்க; *see peru-vāri.*

*[பெருவாரி + காய்ச்சல்]*

**பெருவாழ்வு[1]** *peru-vālvu,* பெ. (n.) **1.** நிரம்பிய பேறு; great prosperity '*சகலசெல்வ யோகமிக்க பெருவாழ்வும்*' (திருப்பு.195.) **2.** பேரின்பம்; (திருப்பு.751.) heavenly bliss.

*[பெரு + வாழ்வு வாழ்—வு= வாழ்வு 'வு'— தொ. பெ. ஈறு.]*

**பெருவாழ்வு[2]** *peru-vālvu,* பெ. (n.) நல்வாழ்வு; well-being.

*[பெருமை + வாழ்வு]*

**பெருவாழைப்பூ** *peru-vāḻai-p-pū,* பெ. (n.) புடைவை வகை; a kind of saree. (இ.வ.)

*[பெரு + வாழைப்பூ]*

**பெருவிடை**[1] *peru-viḍai,* பெ. (n.) பெருவிளக்கவிடை; large answer.

*[பெரும் + விடை]*

**பெருவிடை**[2] *peru-vidai,* பெ. (n.) இறப்பு; death,, as taking final leave.

*[பெரு + விடை]*

**பெருவியாதி** *peru-viyādi,* பெ.(n.) பெருநோய்[2] பார்க்க; see *perunōy*[2] ***'சயரோகம் பெருவியாதி'*** **(கடம்ப.4. இலீலா.115.)**

*[பெரு + SKṭ-Vyādhi. த. வியாதி.]*

**பெருவிரல்** *peru-viral,* பெ. (n.) **1.** கட்டைவிரல்; thumb or big toe. **2.** நெல் எட்டுக்கொண்ட நீட்டலளவைவகை (சிலப்.3.100,உரை.); a lineal measure of the length of a thumb = eight nēl.

*[பெரு + விரல்]*



**பெருவிரியன்** *peru-viriyan,* பெ. (n.) விரியன் பாம்பு வகை; russell's viper.

*[பெரு + விரியன்]*



**பெருவிருந்து**[1] *peru-virundu,* பெ. (n.) சிறப்பு விருந்து; great feast.

*[பெரு + விருந்து]*

**பெருவிருந்து**[2] *peru-virundu,* பெ. (n.) ஊர் விருந்து (இ.வ.); caste-dinner, public feast.

*[பெரு + விருந்து]*

**பெருவிருப்பம்** *peru-viruppam,* பெ. (n.) பேராவல்; earnestdesire.

*[பெரும் + விருப்பம்]*

**பெருவிலை** *peru-vilai,* பெ. (n.) மிக்கவிலை; great worth; high price. ***'பெருவிலை யாரத்தோடு' (கம்பரா. விடை. 119.)***

*[பெரு + விலை]*

**பெருவிலையர்** *peru-vilaiyar,* பெ. (n.) பெருந்தகையர்; eminent person.

*[பெருமை + விலையர்]*

**பெருவிலையன்** *peru-vilaiyan,* பெ. (n.) மிக்கவிலை பெறுவது; a thing of high value. '*பெருவிலையனான ரத்னத்தை*' (திவ். பெரியதி. 2, 7, 6. வ்யா.)

*[பெருவிலை → பெருவிலையன்]*

**பெருவிழா** *peru-viḻā,* பெ. (n.) பெரிய திருவிழா; great festival; *'தேவர்கோற் கெடுத்த பெருவிழா'* ***(மணி, மே. 3, 34–5)***

*[பெரு + விழா]*

**பெருவிளா** *peru-viḷā,* பெ. (n.) மரவகை; tooth brush true

*[பெரு + விளா]*

**பெருவிறல்** *peru-viṟal,* பெ. (n.) **1.** மிகுவலி; great power. 'பெருவிரல் வேந்தன்' (பெருங். உஞ்சைக்.39,40) **2.** பெருவிறலாளி (தொல். சொல்.57,உரை பார்க்க **3.** *முருகக்கடவுள்; skanda.* 'ஆலமர் செல்வனணிசால் பெருவிறல்' (கலித்.81,9)

*[பெரு + விறல்]*

**பெருவிறலாளி** *peru-viṟal-āḷi,* பெ. (n.) மிக்க வலிமையுடையவன் very strong or powerful man *'பெருவிறலாளி யென்ன'* (பெரியபு. இயற்பகை.17.)

*[பெரு + விறல்+ஆள் → ஆளி]*

**பெருவிறைச்சி** *peru-viraicci,* பெ. (n.) மாட்டிறைச்சி; beef.

*[பெரு + இறைச்சி]*

**பெருவினைத்திறம்** *peru-vinittiram,* பெ. (n.) வினையாண்மைத்திறம்; will-power.

*[பெரும் + வினைத்திறம்]*

**பெருவினையம்** *pēru-viniyam.* பெ. (n.) செய்வினை; witchcraft.

*[பெரும் + வினையம்]*

**பெருவீடு** *peru-vidu* பெ. (n.) பிற்பகலில் மாடுகளை மேய விடுகை;letting out cattle in the afternoon, for grazing "சிறுவீடன்றியே பெருவீடும் விடும்படியாய்" (திவ். திருப்பள்ளி. 4, வ்யா.)

*[பெரு + வீடு]*

**பெருவு–தல்** *peruvu-,* செ.கு.வி. (v.i.) தூக்கத்தில் அச்சத்தாற் பிதற்றுதல்(வின்.); to talk in sleep.

*[வெருவு – பெருவு]*

**பெருவெக்கை** *peru-vekkai,* பெ. (n.) மாட்டு நோய்வகை (மாட்டுவா.108); a kind of cattle disease. பெருவெதுப்பு பார்க்க; see peruveduppu.

*[பெரு + வெக்கை]*

**பெருவெதுப்பு** *peru-veduppu,* பெ. (n.) மாட்டு நோய்வகை (மாட்டுவா.156); a kind of cattle disease.

*[பெரு + வெதுப்பு]*

*வெதும்பு – வெதுப்பு*

**பெருவெழுத்து** *peru-v-eḻuttu,* பெ. (n.) 'நமசிவாய' என்ற ஐந்தெழுத்து (பஞ்சாக்கர) மந்திரத்திற் சிவபெருமானைக் குறிக்கும் 'சி' என்ற எழுத்து; letter 'ši' in the incantation namašivāya indicating šiva. '*பிஞ்செழுத்து மேலைப் பெருவெழுத்தும்*' (கொடிக்.4)

*[பெரு + எழுத்து]*

**பெருவெள்ளம்**[1] *peru-vellam,* பெ. (n.) ஊழிப்பெருவெள்ளம்; the deinge. "உண்ணாத பெருவெள்ளம் உண்ணாமல் தான் விழுங்கி உய்யக் கொண்ட கண்ணாளன்" (திவ். பெரியதி. 2,6,7)

*[பெரும் + வெள்ளம்]*

**பெருவெள்ளம்**[2] *peru-vellam,* பெ. (n.) பெருமழையால் உண்டாகும் வெள்ளப் பெருக்கு; flood of a river caused by heavy rains.

*[பெரும் + வெள்ளம்]*

**பெருவெளி** *peru-veḷi,* பெ. (n.) **1.** விரிந்த வெளியிடம்; open space. *'துவாத சாந்தப் பெருவெளியில்'* (குமர. பிர. மீனாட். பிள்ளை. 42.) **2.** திறந்தவெளி; the ethereal expanse. **3.** வாலறிவு; (phil.) pure intelligence.

*[பெரு + வெளி]*

**பெருவெளிச்சம்** *pēru-veliccam,* பெ. (n.) பொலிவுச்சுடரொளி; brightness.

*[பெரும் + வெளிச்சம்]*

**பெருவேம்பு** *peru-vēmbu,* பெ. (n.) மலை வேம்பு (மூ.அ) பார்க்க; see peru-vēmbu persian lilac.

*[பெரு + வேம்பு]*

**பெருவேளை** *peru-vēḷai,* பெ. (n.) நாய்வேளை; a sticky plant that grows best in sandly places.

*[பெரு + வேளை]*

**பெல்லம்** *pellam,* பெ. (n.) *வெல்லம்* (இ.வ.) பார்க்க; see *vellam.*

க., பட பெல்ல

*[வெல்லம் – பெல்லம்]*

**பெல்லி**[1] *pelli,* பெ. (n.) துறட்டின் முனைக் கொக்கி(யாழ்ப்.); hook tied to the end of a pole.

தெ. பெல்ல
பிளந்த வாயையுடைய கருவி

பில் → பிள் → புள் → புல் → பெல் → → பெல்லி 'இ' வினைமுதலீறு

**பெல்லி**[2] *pelli,* பெ. (n.) சூனியவித்தை; witchcraft, magic. அவளைப் பில்லி அடித்துவிட்டது. (W.)

Sinh. *pilli*

*[பில்லி → பெல்லி]*

**பெள்[1]—தல் (பெட்டல்)** *peḷ-,* செ.குன்றாவி. (v.t.) **1.** விரும்புதல்; to desire. *'பிரித்தலும் பெட்டலும்'* (தொல்.பொ.147.) **2.** காதலித்தல்; to love. *'பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை'* (குறள்.141.) **3.** நினைத்தல்; to intend. *'பெட்டவைசெய்யார்'* (இனி.நாற்.23.)

*[பிள் → பெள் + தல் – பெட்டல்]*

**பெள்[2]—தல் (பெட்டல்)** செ.கு.வி. (v.i.) மிகுதல்; to be immoderate *'வெண்டிங்கள் பெட்ப நகுகின்றது'* (சீவக.1662.)

*[பிள் → பெள் + தல் – பெட்டல்]*

**பெள்³–தல் (பெட்டல்)** *peḷ-*, செ.குன்றாவி.(v.t.) காப்பாற்றுதல்; to protect. 'பெட்டல் என்பது புறந்தருதல்' (தொல். சொல். 332, இளம்பூ)

*[பிள் → பெள் + தல் → பெட்டல்]*

**பெற்றதகப்பன்** *peṟṟa-tagappaṉ*, பெ. (n.) தந்தை; father.

பெற்றதகப்பன் என்பது செஞ்ஞாயிறு என்பது போன்றது. பெற்ற என்பது இனமில்அடைமொழி.

*[பெற்ற + தகப்பன்]*

**பெற்றதாய்** *peṟṟa-tāy*, பெ. (n.) பெற்றெடுத்த தாய்; own mother. '*பெற்றதாய் நீயே*' (திவ்.இயற்.பெரியதிருவந்.5.)

பேணிவளர்ப்பவளாகிய செவிலியும் தாய் எனப்படுதலின் 'பெற்ற தாய்' என்பதில் உள்ள பெற்ற என்பது இன அடையாம்.

*[பெற்ற + தாய்]*

**பெற்றபிள்ளை** *peṟṟa-piḷḷai*, பெ. (n.) சொந்த மக–ன்–ள்; own child. '*தாமரையோன் பெற்ற பிள்ளையை*' (திருக்கோ.129.)

*[பெற்ற + பிள்ளை]*

*பிள்ளை= தாய் வயிற்றிலிருந்து பிரிந்தது*

**பெற்றம்** *peṟṟam*, பெ. (n.) **1.** பெருமை; greatness. 'பெற்றமாளிகை (திவ்.பெரிய.10,1,10.) **2.** காற்று; wind, air. '*பெற்றம் பெற்றவன்*' (பாரத.வாரணா.11.) **3.** மாடு (தொல்.பொ.594.); bull or cow. **4.** எருமை (தொல். சொல்.408, உரை.); buffalo. **5.** விடையோரை; tauras of the zodiac.

*[பெறு (பேறு) பெற்று–பெற்றம்]*

**பெற்றவர்** *peṟṟavar*, பெ. (n.) பெற்றோர் பார்க்க; see peṟṟōr '*பித்தர் போற் பின்றொடர்ந்தனர் பெற்றவர்*' (பிரபுலிங். வசவண்.3.)

*[பெற்ற + அவர்]*

**பெற்றவன்** *peṟṟavaṉ*, பெ. (n.) தகப்பன்; father. '*பெற்றவ னாளித்த மோலி யிளையவன் பெற*' (கம்பரா.விபீட.136.)

*[பெற்ற + அவன்]*

**பெற்றார்** *peṟṟār*, பெ. (n.) பெற்றோர் பார்க்க; see peṟṟōr பெற்றார். '*பெற்றார் தளைகழல*' (திவ்.இயற்.1,20.)

*[பெற்றோர் → பெற்றார்.]*

**பெற்றான்** *peṟṟāṉ*, பெ. (n.) பெற்றவன் பார்க்க; see peṟṟavaṉ **2.** கணவன்; husband. '*பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர்*' (குறள்.58.)

*[பெறு → பெற்றான்]*

**பெற்றி** *peṟṟi*, பெ. (n.) **1.** இயல்பு; nature; natural property. '*பெற்றி பிழையா தொருநடையாகுவர் சான்றோர்*' (நாலடி.343.) **2.** தன்மை; character, quality. 'உறாஅமை முற்காக்கும் பெற்றியார்ப் பேணிக் கொளல்' (குறள்.442.) **3.** வகை; method, manner, order. '*அப்பெயர் புணர்ந்த பெற்றியும்*' (காசிக.பஞ்சநத.1.) **4.** செயன்முறை; course of action '*மாருதி வடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி*'

(கம்பரா.விபீடண.108.) 5. பெருமை; greatness, esteem (திருக்கோ.373, உரை.) 6. நிகழ்ச்சி; event, occurrence. *'உற்றபெற்றி யுணர்த்துவாம்'* (கம்பரா. கைகேசி.63.) 7. பேறு; acquisition, boon *'யோகத்தின் பெற்றியாலே'* (கம்பரா. சவரி.8.) 8. நோன்பு (விரதம்); fasting. *'பெறுகதில் லம்மவிவ் வூருமோர் பெற்றி'* (சிலப்.குன்றக்.)

*[பெறு → பெற்றி]*

**பெற்றிமை** *peṟṟimai,* பெ. (n.) 1. பெற்றி, 5. பார்க்க; see peṟṟi. பெற்ற மேறுதல் பெற்றி மையோ' (தேவா.488,10.) 2. செய்யவேண்டு முறை; conduct, behaviour. *'பெற்றிமை யொன்றறியாத தக்கனது'* (தேவா.622,6.) 3. சாதி; class, division. *'பேதாய் திதியாகும் பெற்றிமையின்'* (சி.போ.1,1,1.)

*[பெற்றி – பெற்றிமை]*

**பெற்று** *peṟṟu,* பெ. (n.) 1. பெருக்கம் (தொல்.சொல்.305) bigness, greatness. 2. அடுக்கு; pile. (தொல்.சொல்.305,உரை.) 3. சாய்கால்; influence. *'அவன் பக்கற் பெற்றுடையரா யிருப்பர்களிறே'* (ஈடு,6,10,2.) 4. எருது; bill 'பெற்றொன் றேறி' (தேவா.428,8.)

*[பெறு–பெற்று]*

**பெற்றோர்** *peṟṟōr,* பெ. (n.) சிறந்த பேறுபெற்ற தாய் தந்தையர்; parents.

*[பெறு–பெற்ற+அவர் பெற்றவர்– பெற்றோர்.]*

**பெறங்கவலை** *peṟaṅkavalai,* பெ. (n.) *பெருங்கண்வலை.* பார்க்க; see *peru-ṅ-kaṇvalai.* (இ.வ.)

*[பெருங்கண்வலை–பெறங்கவலை]*

**பெறாப்பேறு** *peṟā-p-pēṟu,* பெ. (n.) கிடைத்தற்கரிய பேறு; rare luck or fortune. *'பெறாப்பேறு பெற்று வைத்து'* (பெரியபு. குங்கிலி.11.)

*[பெறு + ஆ + பேறு]*

*'ஆ' எ. ம. இ. நி.*

**பெறால்** *peṟāl,* பெ. (n.) மீன்முதுகிற் புள்ளி; (இ.வ.) spots on the back of a fish.

**பெறு–தல்**[1] *peṟu,* செ.குன்றாவி. (v.t.) 1. அடைதல்; to get, obtain, secure, possess, "கையுறப் பெற்றக்கால்" (நாலடி. 5.) 2. பேறுயிர்த்தல்; To bring forth, bear, as childran. *'பெற்றாளொருபிள்ளையென் மனையாட்டி'* (தனிப்பா. i, 235, 1.) 3. பிறப்பித்தல்; to be get, generate. *'தான் பெற்ற புதல்வன்'* (நாலடி. 197). 4. அறிதல்; to know, *'எல்லா யாம் பெற்றேம்'* (பரிபா. 8, 83.) பெறு[2]–தல், peru செ.கு.வி. (v.i.) விலைத்தகுதியுடையதாதல்; to be worth; to be worthy of; to fetch a price. *'அப்பண்டம் அவ்வளவு பெறுமா?"*

*[பெறு → பெறுதல்]*

**பெறுக்கல்** *peṟukkal,* பெ. (n.) அரிசி; rice. *'முறியாப் பெறுக்கன் முப்பழம்'* (பதினொ. திருவிடை. வை.16.

*[பெறு–பெறுக்கு–பெறுக்கல்]*

**பெறுக்கு–தல்** *peṟukku,* செ.குன்றா.வி. (v.t.) பொறுக்குதல்; to gather pickup, as stones. பெறுக்கினர் சிலைகளைப் பெருஞ் சினத்தராய் (பிரபுலிங். சித்தரா. 21)

*[பொறுக்கு–பெறுக்கு;]*

**பெறுத்து–தல்** *peṟuttu,* செ.குன்றா.வி. (v.t.) அடைவித்தல்; to cause to obtain. *'நிலைபெறுத்தலும் நீக்கலும்'* (கம்பரா. பாயி.1) 2. உண்ணுதல்; to eat. *'அவற்றைப் பெறுத்திப் போந்தான்'* (திவ். பெரியாழ். 2,9,9).

*[பெறு–பெறுத்து]*

**பெறுமானம்** *peṟu-māṉam,* பெ. (n.) 1. மதிப்பு; value. *'அந்த ஆயிரம் பொன் பெறுமானமுள்ளது.'* 2. கடன் தீர்க்கும் தகுதி; solvency. அவன் பெறுமானமுள்ள புள்ளி

*[பெறு + மானம் (சொ.ஆ.ஈறு]*

**பெறுதி** *peṟudi,* பெ. (n.) 1. ஊதியம்; Gain, profit. *'பெறுதி விரும்பினை யாகுவை'* (மணி.மே 25, 115) 2. அடையத்தகும் பொருள்; that which is sought to be got or reached; goal. *'மறைகளினிநு தியிடவரிய பெறுதியை'* (திருப்பு. 928). 3. *பெறுமதி* பார்க்க,

*[பெறு–பெறுதி]*

**பெறுமதி** *peṟumadi,* பெ. (n.) 1. தகுதி; worth, value. 2. திறமை; ability. 3. உறுதி; Validity, security. 4. பரிசு; prize, reward.

*[பெறு–பெறுமதி*
*மதி (சொ.ஆ.ஈறு.]*

**பெறுமாதம்** *peru-mādam,*பெ. (n.) பேறுகாலம்; the month of parturition.

*[பெறு + மாதம்]*

**பெறுமுரி** *peṟu-muri,* பெ. (n.) சம்பளம்; *wages,*"பரிசுரத்தார் பெறுமுரியாகப் பெற்று" (S. I. I. iii, 30)

**பென்னம்பெரிய** *peṉṉam periya,* பெ.எ. (adf.) மிகப்பெரிய; Very large.

*[சின்னஞ்சிறிய xபென்னம்பெரிய]*

**பென்னம்பெருத்த** *peṉṉam-perutta,* பெ. (adf.) பென்னம்பெரிய; பார்க்க; see peṉṉam periya.

*[சின்னஞ்சிறுத்த xபென்னம்பெருத்த]*

**பென்னாங்கொட்டை** *peṉṉāṅkoṭṭai,* பெ. (n.) பேன்கொட்டை. cocculus indicus. பார்க்க; see peṉ-Koṭṭai.

*[பென்+ ஆம் + கொட்டை]*

**பெறுவது கொள்வார்** *peṟuvadu-koḷvār,* பெ. (n.) விலைமகளிர்; prostitutes. *'பெறுவது கொள்வாரும் கள்வரும் நேர்'* (குறள், 813.)

*[பெறுவது + கொள்வார்ன]*

**பென்னை** *peṉṉai,* பெ. (n.) யானை (சங்.அக.); elephant.

**பே[1]** *pē,* தமிழ் நெடுங்கணக்கில் 'ப்' என்ற மெய்யெழுத்தும், 'ஏ' என்ற உயிர்நெடிலும் சேர்ந்து வருவது உயிர்மெய் எழுத்து; the compound of p and ē.

*[ ப் + ஏ = பே ]*

**பே[2]** *pē,* பெ. (n.) அச்சம்; fear. பே முதிர் கடவுள்" (குறுந்.87) அச்சத்தை உணர்த்தும் பேம்—ஒலிக்குறிப்புச் சொல்

*[ பேம் → பே ]*

**பே[3]** *pē,* பெ. (n.) **1.** நுரை(பிங்); foam. seum, froth '*பேஎநாறுந் தாழ்நீர்ப் பனிச்சுனை*" (இறை.7, உரை)**2.** மஞ்சு (வின்.) cloud

**பே[4]** *pē,* இடை. (part.) இல்லை என்னும் பொருள்தரும் சொல்; (வின்.) a prefix meaning no

**பேஎம்** *pēem,* பெ. (n.) *பே²(திவா)* பார்க்க; *see pē².*

*[பேம் → பேஎம்]*

**பேக்கலாண்டி** *pēkkal-āmdi,* பெ. (n.) மூடன்;(இ.வ) simpleton, foolishfellow.

u.bevakif

*[பே → பேக்கு → பேக்கலாண்டி]*

பேக்கு—பேக்கலாண்டி பே—அச்சம், வெறுமை பே—பேக்கு அறிவிலி.

**பேகணி—த்தல்** *pēgani,* செ.கு.வி. (v.i.) **1.** குழப்பமுறுதல் ; to be distressed. *இழக்கப்புகா நின்றா யென்று பேகணியா நின்றேன்"* (ஈடு,9,4,3,)**2.** நிறம் வேறுபடுதல் to change colour; to become pallid '*பேகணித்துப்பிற்காலித்துப் போகக்கவ்வ அக்கினி*' (திவ்.பெரியதி.2,4,2,. வ்யா)

*[பேழ்கணி—பேகணி]*

**பேகணிப்பு** *pēgaṇippu,* பெ. (n.) **1.** துன்பம் (துக்கம்) (ஈடு, **9, 6, 6**); sorrow, distress. **2.** நிறம் வேறுபடுகை; (திவ். பெரியதி. **2, 4, 2.**வ்யா.அரும்.) becoming pallid.

*[பேழ்கணி — பேகணி — பேகணிப்பு,]*

'பு'. சொ.ஆ.ஈறு.

**பேகம்[1]** *pēgam,* பெ. (n.) தவளை (பிங்.); frog.

skt.bhēka

*[பேஎம் — பேகம்]*

'பே' ஒலிக்குறிப்பு



**பேகன்[1]** *pēgan,* பெ. (n.) ஆண் தவளை. (யாழ்.அக.); male of the frog.

*[பேஎம் — பேகம் — பேகன்]*

**பேகன்[2]** *pēgan,* பெ. (n.) கடைவள்ளல்கள் எழுவருள் ஒருவன்; a liberal chief, one of seven kadai-vaḷḷalgaḷ. '*பெருங்கன் னாடன் பேகனும்*' (சிறுபாண். 87)

*[பாகன் → பேகன்]*

**பேகி** *pēgi,* பெ. (n.) பெண்தவளை (யாழ்.அக.); female frog.

*[பேஎம் – பேகன்]* (ஆ.பா.) – பேகி (பெ.பா)

**பேச்சடைப்பு** *pēccaḍaippu,* பெ. (n.) பேச முடியாமற் செய்யும் நோய்;(M.L) loss of voice, aphonia.

*[ பேச்சு + அடைப்பு ]*

**பேச்சல்** *pēccal,* பெ. (n.) பேசுகை (யாழ்.அக.); speaking.

*[ பேசு → பேசல் → பேச்சல் ]*

'அல்' தொ.பெ.ஈறு.

**பேச்சழி–தல்** *pēccaḻi-,* செ.கு.வி. (v.i.) சொன்ன சொல் தவறுதல் (யாழ்.அக.); to fail to keep one's word.

*[ பேச்சு + அழி– ]*

**பேச்சற்றவன்** *pēccaṟṟavaṉ,* பெ. (n.) **1.** பேசமாட்டாதவன் (யாழ்.அக.); one who is speechless or dumb. **2.** பேசா நோன்பு (மௌன விரதம்) பூண்டவன்; one who has taken a vow of silence. **3.** உறுதிமொழி தவறுபவன்(வின்.); one who fails in his word.

*[ பேச்சு + அற்றவன்]*

**பேச்சுறுதி** *pēccuṟudi,* பெ. (n.) ஒப்பந்தத்தில் முடிவான பேச்சு (யாழ்.அக.); decision in bargaining.

*[ பேச்சு + உறுதி]*

**பேச்சாட்டுத்துணை** *pēccāṭṭu-t-tuṇai,* பெ. (n.) பேச்சுக்குத் துணையானவன் (யாழ்.அக.); companion, as one to talk with.

[பேச்சு + பேச்சாடு → பேச்சாட்டு

*பேச்சாட்டு + துணை]*

ஆடு → ஆட்டு

**பேச்சாடுதுணை** *pēccāḍu-tuṇai,* பெ. (n.) பேச்சாட்டுத் துணை (இ.வ.); பார்க்க. *see pēccāṭṭu-t-tuṇai.*

*[ பேச்சாடு + துணை]*

'ஆடு'(து.வி.)

**பேச்சாளர்** *pēccaḷar,* பெ. (n.) சொற் பொழிவாளர்; skilful orator.

*[ பேச்சு + ஆளர்]*

**பேச்சாளி** *pēccaḷi,* பெ. (n.) **1.** சொல் வன்மையுள்ளவன்; good speaker. **2.** சொல்லுறு தியுள்ளவன்; a man who keeps his word.

*[ பேச்சு + ஆள்→ ஆளி]*
*ஆளி → 'இ' வினைமுதலீறு*

**பேச்சாற்றல்** *pēccarrtal,* பெ. (n.) மேடைப் பேச்சுத்திறம்; skilful oration 'திரு.வி.க. பேச்சாற்றல் வாய்ந்தவர்'

*[ பேச்சு + ஆற்றல்]*

**பேச்சி** *pēcci,* பெ. (n.) *பேய்ச்சி* பார்க்க; see *pēycci.*

*[ பேய்ச்சி – பேச்சி]*

**பேச்சி²** *pēcci,* பெ. (n.) *பேயத்தி* பார்க்க; see *pēyatti.*

*[ பேயத்தி – பேச்சி]*

**பேச்சு** *pēccu,* பெ. (n.) **1.** பேசுகை; speaking. *'பேரமளிப் பேச்செலாம்'* (பாரத. அருச்சுனன்றவ. **63**) **2.** மொழி; speech, language. **3.** புகழ்(வின்.); praise. (w.) **4.** உரையாடல்(கொ.வ.); conversation, talk. **5.** செய்தி; errand, message, verbal communication, report. **6.** பொய்ச்செய்தி; rumour. **7.** சொல்; word utterence. *'பேயர்தாம் பேசுமப் பேச்சை'* (திவ். பெரியதி. **9, 7, 7**) **8.** கட்டுரை; discourse, harangue. *'பிண்டியும் போதியும் பேணுவார் பேச்சினை'* (தேவா. **83, 10**)

*[ பேசு – பேச்சு]*

**பேச்சுக்காரன்** *pēccu-k-kāran,* பெ. (n.) **1.** சொல்வன்மையுடையவன் (வின்.); good speaker. **2.** வாயாடி; talkative man.

*[ பேச்சு + காரன்]*

**பேச்சுக்கிடம்** *pēccukkiḍam,* பெ. (n.) **1.** பேசுமுரிமை; liberty of speech. **2.** பழிக்குக் கரணியம்; occasion or room for slander. 'முறைப்படி அவருக்குச் செய்தி தெரிவிக்காதது பேச்சுக்கு இடமாகி விட்டது.

*[ பேச்சுக்கு – இடம்]*

**பேச்சுக் குற்றம்** *pēccu-k-kuṟṟam,* பெ. (n.) சொற்குற்றம்; defect in speech.

*[ பேச்சு + குற்றம்]*

**பேச்சுக்கொடு-த்தல்** *pēccu-k-koḍ.,* செ.கு.வி. (v.i.) **1.** மந்தணமறியச் சொல்லாடுதல் (வின்.); to speak with one in order to obtain secrets to sound (w.) **2.** பேச்சு நீடித்தல் (யாழ்.அக.); to prolong one's talk. **3.** பொழுது போக்காகச் சொல்லாடுதல் (இ.வ.); to keep oneself engaged by talking with.

*[ பேச்சு + கொடு]*

கொடு (து.வி.)

**பேச்சுத்தட்டு-தல்** *pēccu-t-taṭṭu,* செ.கு.வி. (v.i.) **1.** சொல் தடுமாறுதல்; to stammer, stutter; to hesitate **2.** சொன்னசொல் தவறுதல்; to break one's word. **3.** பிறர் கூற்றை மறுத்தல்; to go against the expressed wishes of a person.

*[ பேச்சு + தட்டு]*

**பேச்சுத்தடித்தல்** *pēccu-t-taḍittal,* பெ. (n.) சொல் கடுமையாகை (கொ.வ.) ; growing hot in speech.

*[ பேச்சு + தடித்தல்]*

தடி → தடித்தல்.

'அல்' தொ.பெ.ஈறு

**பேச்சுத்தடுமாறு-தல்** *pēccu-t-taḍumāṟu-,* செ.கு.வி. (v.i.) **1.** சொல் குழறுதல்; to be confused, puzzeled or disconcerted in speaking (w.) **2.** உறுதிமொழி தவறுதல் (இ.வ.) ; to break one's word.

*[ பேச்சு + தடுமாறு]*

**பேச்சுத்தப்பு—தல்** *pēccu-t-tappu-,* செ.கு.வி. (v.i.) பேச்சழி பார்க்க; see pēccali.

*[ பேச்சு + தப்பு—]*

**பேச்சுத்தாராளம்** *pēccu-t-tārāḷam,* பெ. (n.) **1.** வெறும் வாய்ச்சொல் (இ.வ.); empty speech, speech not followed by action. **2.** சொல்வன்மை (வின்.) fluency of speech, eloquence. **3.** உரையாடற் றிறம் (வின்.); ability in conversation, politeness in address.

*[ பேச்சு + தாராளம்]*

**பேச்சுத்திராணி** *pēccu-t-tirāṇi,* பெ. (n.) பேச்சுத்தாராளம் (வின்.); 2. பார்க்க; see pēccu-t-tārāḷam.

*[ பேச்சு + திறன் → திறனி → திராணி]*

**பேச்சுத்துணை** *pēccu-t-tuṇai,* பெ. (n.) பேசிப் பொழுது போக்குதற்குத் துணையாக இருக்கும் ஆள் (கொ.வ.); companion, as one to speak with.

*[ பேச்சு + துணை]*

**பேச்சுநிதானம்** *pēccu-nidāṉam,* பெ. (n.) பேச்சுறுதி. (இ.வ.) பார்க்க; see pēccurudi.

*[ பேச்சு +* Skt nādāna.*த. நிதானம்]*

**பேச்சுப்பிடுங்கு—தல்** *pēccu-p-piḍuṅgu,* செ.கு.வி. (v.i.) சொல்லாடி மந்தணத்தை யறிதல்(வின்.); to fish out secrets from another's talk; to pump cleverly.

*[ பேச்சு + பிடுங்கு]*

**பேச்சுமூச்சில்லாமை** *pēccu-mūccillāmai,* பெ. (n.) **1.** அமைதி; absence of activity, quietness. *'பேச்சு மூச்சில்லாத பேரின்ப வெள்ளமுற்று'* (தாயு. எந்நாட். ஆனந்த. 1) **2.** அடங்கி யிருக்கை (இ.வ.); quiet submission.

*[ பேச்சு + மூச்சு + இல்லாமை]*
*பேச்சு + மூச்சு. எதுகை நோக்கி இரட்டித்து வந்த மரபிணை மொழி]*

**பேச்சுமூச்சு** *pēccu-muccu,* உயிருள்ள தென்பதைக் காட்டும் பேச்சும் மூச்சும் (வின்.) signs of life, as speech and breath.

*[ பேச்சு+ மூச்சு]*

மரபு இணைமொழி.

**பேச்சு வல்லபம்** *pēccu-vallabam,* பெ. (n.) *பேச்சுத்திராணி* (வின்.) பார்க்க; see *pēccu-t-tirāṇi*

*[ பேச்சு+ வல்லபம்.*
*வல்லவம்→ வல்லபம்]*

**பேச்சுவளர்—த்தல்** *pēccu-vaḷar-,* செ.கு.வி. (v.i.) பேச்சுக்கொடு (யாழ்.அக.) பார்க்க ; see pēccuvaḷar

*[ பேச்சு+ வளர்]*

**பேச்சுவளர்தல்** *pēccu-vaḷardal,* பெ (n.) **1.** நீண்டஉரையாடல் ;prolonged speech or conversation **2.** வாய்ச்சண்டையில் வசவு மிகுகை ;growing abusive in quarrel.

*[ பேச்சு+ வளர்தல்]*

*'தல்' [தொ.பெ.ஈறு]*

**பேச்சுவாயன்** *pēccu-vāyaṉ,* பெ. (n.) வாயாடி (யாழ்.அக); talkative person.

*[ பேச்சு + வாயன்]*

**பேச்சுவார்த்தை** *pēccu-vārttai,* பெ. (n.) **1.** உரையாடல்; talk **2.** நட்பு; amicable or speaking terms **3.** மறுத்துரைத்தல் (யாழ்.அக); dispute.

*[ பேச்சு+* SKṭ. Vārttā. *த. வார்த்தை]*

**பேச்சுறுதி** *pēccuṟdi,* பெ. (n.) உறுதிமொழியை நிறைவேற்றுந்தன்மை; faithfulness to one's word

*[ பேச்சு + உறுதி ]*

**பேச்சைமடி–த்தல்** *pēccai-maḍi,* செ.கு.வி (v.i.) **1.** சொன்ன சொல் மாறுதல் (வின்.); to eduivocate. **2.** வீண் தருக்கம் பேசுதல் (கொ.வ.); to argue perversely

*[ பேச்சு→ பேச்சை+மடி]*

மடி=மறுத்தல்,தவறுதல்,மாறுதல்

**பேச்சோடுதுணை** *pēccōḍu-tuṇai,* பெ. (n.) பேச்சாட்டுத்துணை பார்க்க; see pēccāṭṭu-t-tuṇai. *"திருவாருக்குப் போகிறேன் பேச்சோடு துணையாய் நீயும் வருகிறாயா?"*

*[ பேச்சாடு→ பேச்சோடு+துணை ]*

**பேசகம்**[1] *pēsagam,* பெ. (n.) (யாழ்.அக) **1.** ஆந்தை; owl. **2.** மஞ்சு; clould **3.** யானை வாலினடி; the roof of elephan'ts tail **4.** யானை வாலின் நுனி; tip of elephant's tail



**பேசகம்**[2] *pēšagam,* பெ. (n.) வாயில் (யாழ்.அக); gate

*[ பேழகம்→ பேசகம் ]*

**பேசகி** *pēcagi,* பெ. (n.) யானை (சங்.அக); elephant

*[ பேழ்→ பேழகி→ பேசகி ]*



**பேசங்கை** *pēcarigai,* பெ. (n.) மலங்கழிக்கை; going to stool ḍist fr.aṟpa-carikai (இ.வ)

**பேசல்** *pēšal,* பெ (n.) **1.** பேசுகை; talking, speaking, *'பேசிற்றே பேசலல்லால்'* (திவ்.திருமாலை.25) **2.** வஞ்சின் முடிக்கை; fulfilling one's vow. *'வாளினாற் பேசலல்லால்'* (சீவக.257)

*[ பேசு+அல்] (தொ.பெ.ஈறு)*

**பேசலாத்தி** *pēšalātti,* பெ. (n.) இராப்பாலை (A); a garden tree with smooth grey bark

**பேசாத பேச்சு** *pēcāda-pēccu,* பெ. (n.) 1. தகுதியற்ற சொல்; improper talk 2. வெறுப்பூட்டும் சொல்; indecent or obscene talk

*[பேசாத + (எ.ம.பெ.எ) + பேச்சு]*

**பேசாதிரு—த்தல்** *pesādiru.,* செ.கு.வி செயலற்றிருத்தல்; to keep quiet. வாத்யங்கள் வாய்த்தால் கூத்தாடுவாருடம்பு பேசாதிராதிறே" (திவ். பெரியதி. 1,2,1, வ்யா. பக். 59)

*[பேசு → பேசாது+இரு.]*

'ஆ' எ. ம. இ.

**பேசாமடந்தை** *pēša-madandai,* பெ. (n.) வாய் வாளாமை பூண்ட பெண் (கொ.வ); reticent, silent women

*[பேசு → பேசா + மடந்தை]*

*('ஆ' எ.ம.இ.நி.)*

**பேசாமை** *pēšāmai,* பெ. (n.) வாய்வாளாமை (மௌனம்); silence, as observed by ascetics. *'அருட்பெற்றோர்கள் பெற்ற பெருமை......... பேசாமை யாகுமெனவே'* (தாயு.பரிபூரண.2.)

*[பேசு → பேசாமை]*

'ஆ' எ. ம. இ.

*'மை'* ப.பெ.ஈறு.

**பேசார்** *pēšār,* பெ. (n.) ஊமைகள்; the dumb. *'பேணாமாக்கள் பேசார் பிணித்தோர்'* (மணி மே.28.223)

*[பேசு→ பேசார்]* 'ஆ' (எ.ம.இடநில) *'ர்'* (ப.பா.ஈறு)

**பேசாவழக்கு** *pēšā-valakku,* பெ. (n.) பயனற்ற வழக்கு(C.G.); a naseless or vexatious suit

*[பேசு + ஆ (எ.ம.இ.நி.) + வழக்கு]*

**பேசாவெழுத்து** *pēšā -v-eluttu,* பெ. (n.) *'நமசிவாய'* என்ற ஐந்தெழுத்து (ஐந்க்கர) மந்திரத்திற் சிவபெருமானைக் குறிக்கும் *'சி'* என்ற எழுத்து. பேசுமெழுத்துடனே பேசாவெழுத்தினையும்

*[பேசு + ஆ (எ.ம.இ.நி) + எழுத்து]*

**பேசி** *pēši,* பெ. (n.) (யாழ்.அக)1. சதை; muscle. 2.நரம்பு; tendon. 3. பூமொட்டு; bud 4. இடியேறு; thunderbolt 5. முட்டை; egg

பேசுவது போல் உள் நிலையை வெளிப்படுத்துவனவும் பேசி எனப்பட்டன.

**பேசு[1]—தல்** *pēšu,* செ.கு.வி (v.i) 1. சொல் லாடுதல்; to talk, speak. 2. வஞ்சினமுடித்தல்; to fulfil a vow. *'வாளினாற் பேசலல்லால்'* (சீவக.259) 3. வீணை நரம்பு முதலியன இசைத்தல்; to sound, as a lute string *'கையாழ் (பிடில்) நரம்பு (தந்தி) நன்றாகப் பேசவில்லை'* 4. நாடி முதலியன துடித்தல்; to feat, as the pulse. *'கையில் பித்தநாடி பேசவில்லை'* 5. உரக்கப்பேசுதல்; to make noise, to roar. *'தரங்கநீர் பேசிலும்'* (திவ்.பெரியதி.8,2,7,)



**பேசு²–தல்** *pēšu-,* செ.குன்றாவி. (v.t) 1.சொல்லுதல்; to tell, say. *'வாயினாற் பேசறேற்றேன்'* (சீவக.257) 2.பலமுறை சொல்லுதல்; to repeat manytimes. *'ஈன்றுழாய் மாயனையே பேசியே'* (திவ்.இயற். பெரியதி.38) 3. போற்றுதல் to praise. *'பேசாத நாளெல்லாம் பிறவாநாளே'* (தேவா.12,1) செயலைப்பேசிமுடிவு செய்தல்; to deal, bargain negotiate verbally,as a business. 4. வைதல்; to abuse, vilify.

**பேசுமெழுத்து** *pēšu-m-eḻuttu,* பெ. (n.) நமசிவாய என்னும் ஐந்தெழுத்தில் ஆற்றலை உணர்த்தும் *'வ'* என்றவெழுத்து; the letter 'va' in the incantation 'namašivāya; indicating siva- sakti. வைகரிவாக்கு; *'பேசுமெழுத்துடனே'* (கொடிக்.4) 2. articulate utterance *'ஊமையெழுத்தொடுபேசு மெழுத்துறின்'* (திருமந்.2158)

*[பேசு + எழுத்து]*

**பேசுலம்** *pēšulam,* பெ. (n.) செடிவகை (இ.வ.); a plant - Arum colocasia

**பேசுலி** *pēšuli,* பெ. (n.) *பேசுலம்* (இ.வ.) பார்க்க; *see pēšulan.*

**பேசுவாய்** *pecuvāy,* பெ. (n.) வாயடிப்பவன்; talkative person

*[பேசு + வாய்]*

**பேசுவாயன்** *pēšu-vāyaṉ,* பெ. (n.) 1. பரிந்து பேசுவோன்; intercessor. வாயாடி; talkative person

*[பேசு + வாயன்]*

**பேடகம்²** *pēḍgam,* பெ. (n.) பண்டைக்காலத்து வழங்கிய ஒருவகைத்துகில் (சிலப்.14,108,உரை); a garment of ancient times

**பேடணம்** *pēḍaṇam,* பெ. (n.) 1. பொடி செய்கை; grinding,pulverising 2.திரிகைக்கல்; grinding - stone.



**பேடன்** *pētḍaṉ,* பெ. (n.) ஆண்தன்மை மிகுந்த அலி; hermaphrodite with male characteristics predominating.
பேடன் வந்தான் (நன்.263,உரை)

*[பேடு → பேடன்]*

*பெண்மைவிட்டு ஆண்மை அவாவுப்பேடு ஆண்பால்.*

**பேடா** *pēḍā,* தெப்பம்; raft float

*[பேடு → பேடா]*

**பேடாடல்** *pēḍātḍal,* பெ. (n.) *பேடு²* (சிலப்.3,14, உரை, பக்.90). பார்க்க; see *pēdu*

*[பேடு + ஆடல்]*

**பேடாப்போ–தல்** *pēḍa-p-pō* செ.கு.வி. (v.i.) உலாவப்போதல்; to walk for recreation.

*[பேடு + ஆ + போ]*

**பேடி[1]** *pēḍi,* **பெ.** (n.) **1.** பெண்தன்மை மிகுந்த அலி; hermphrodite with female charactristics predominating. *'பெண்ணவா யாணிழந்த பேடி'* (நாலடி.251) **2.** ஆண்மை யின்மை; impotence. **3.** நடுவிரல்; middle-finger *'சுட்டுப்பேடி'* (சிலப்.3,18 உரை, மேற்கோள்,பக்.95); **4.** அச்சம்; fear.

*[ பேடு → பேடி ]*

**பேடி[2]–த்தல்** *pēḍi,* **செ.கு்.வி.** (v.i.) அஞ்சுதல்; to be afraid.

*[ பே →பேடு → பேடி ]*

**பேடி[3]** *pēḍi,* **பெ.** (n.) விலங்கு (C.G.); fetters.

*[ பேடு → பேடி ]*

**பேடிகை** *pēḍigai,* **பெ.** (n.) *1. கூடை; (யாழ்.அக)* basket. *2. உறை; (அக.நி.)* cover.

*[ பேடு → பேடிகை ]*

**பேடிசங்காட்டு–தல்** *pēḍišaṅ - kāṭṭu.,* **செ.கு.வி.** (v.i.) **1.** மாய்மாலஞ்செய்தல்; to play the hypocrite **2.** போலிவேலை செய்தல்; to counterfeit a work

*[ பேடிசம் → காட்டு–தல்]*

**பேடிசம்** *peticam,* **பெ.** (n.) மாய்மாலம் (யாழ்.அக); imposition, deception

*[ பேடு → பேடியம் → பேடிசம் ]*

**பேடிசெய்–தல்** *pēḍi-šey,* **செ.குன்றாவி** (v.t.) விலங்கிடுதல்; to handcuff

*[ பேடி +செய்–தல் ]*

**பேடியாடல்** *pēḍi-y-āḍal,* **பெ.** (n.) பேடு[2] பார்க்க; see *pēḍu.* காமனாடிய பேடியாடலும் (சிலப்.6,57)

*[ பேடி +ஆடல்]*

**பேடியெழுத்து** *pēḍi-y-leuttu,* **பெ.** (n.) ஆய்த வெழுத்து (வின்.); the letter 'ஃ'as neither male nor female

*[ பேடி +எழுத்து ]*

**பேடு** *pēḍu,* **பெ.** (n.) **1.** பெண்பால்; female sex *'பேடலியாணர் போலும்'* (தேவா.249,1) **2.** பெண் பறவை; female of birds *'பேடுஞ் சேவலும்'* (மலைபடு.141,உரை) **3.** சிறுமை; smallness (பிங்) **4.** ஒருசார் விலங்குகளின் பெண்; female of certain quadrupeds. *'தெய்வமாக வைத்த எருமையாகிய பேட்டின் கொம்போடே' (கலித்.114. உரை)* **5.** சிற்றூர்; small town, village. **6.** நடுவிரல்; the middle fonger *'சுட்டும் பேடும்'* (சிலப்.3,18,உரை) **7.** உள்ளீடின்றிப் பயனற்றது; what is unproductive, useless or kernelless *'இந்தந் தேங்காய் பேடு'*(உ.வ) **8.** *பேடி[1]* **1.**பார்க்க **9.** கூத்துப் பதினொன்றனுள் ஒன்றானதும் வாணனால் சிறையிடப்பெற்ற தன்மகன் அநிருத்தனைச்சிறைமீட்டுப்பிரத்தியுமானன் ஆடியதுமான கூத்து; dance of piratiyumṉaṉ when he relelased his son Aniruttaṉ from the prison of vāṇaṉ, one of **11** kuttu.g.r

*[ பெள் →பேடு]*

**பேடுமூஞ்சி** *pēḍu-mūñji,* **பெ** (n.) பெண்முகம் (யாழ்.அக) ; feminine face

*[ பேடு +மூஞ்சி]*

**பேடை** *petai,* **பெ.** (n.) பறவையின் பெண்பால் (பிங்.); female of birds , hen *'மிழற்றேன்மின் குயிற்பேடைகாள்'* (திவ்.திருவாய்.9,5,1)

ம. பேட. க. ஹேடே

*[பெள் → பேடு → பேடை]*

**பேடை²** *pēḍai,* பெ. (n.) கூடை (யாழ்.அக); basket

*[பெள் + பேடை]*

**பேண்** *pen,* பெ. (n.) 1. புறந்தரல் (தொல்.சொல்.338); protection 2. விருப்பம் (தொல்,சொல்.338); desire 3. *பேண்மரம்* (வின்.) பார்க்க; *see pēn-maram*

*[பெல் → பெண் → பேண்]*

**பேண்மரம்** *pēṇ-maram,* பெ. (n.) துலாத்தாங்கு மரம் (வின்.); the stand of a picottah

*[பேண் +மரம்]*

**பேணகம்** *pēṇagam,* பெ. (n.) பணிகாரவகை (வின்.); a kind of pastry.

*[பேண் +அகம் → பேணகம்]*

**பேணம்** *pēṇam,* பெ. (n.) 1. மதிப்பு; tenderness, recard, esteem. 2. பதனம்; care, caution. 3. பேணுகை; nurture, fostering.

*[பேண் → பேணம்]*

**பேணரவு** *pēṇaravu,* பெ. (n.) பேணல் பார்க்க; see pēṇal

*[பேண் → பேணரவு]*

**பேணல்** *pēṇal,* பெ. (n.) 1. பேணுகை; nurturing, fostering. 2. மிகுவிருப்பம்; intense desire. 3. கருதுகை (அரு.நி); thinking 4. மிகுகை (அரு.நி); increasing.

*[பேண் → பேணல்]*

**பேணலர்** *pēṇalar,* பெ. (n.) பகைவர்; foes.

*[பேண் +அல்+ அர்]*

*('அல்' எ. ம. இ. நி)*

**பேணாமாக்கள்** *pēṇā-mākkaḷ,* பெ. (n.) எதிரிகள்; helpless, friendless persons *"பேணாமாக்கள் பேசார் பிணித்தோர்* (மணிமே.28,223)

*[பேண் +ஆ +மாக்கள்]*

*'அல்' எ. ம. இ. நி.*

**பேணாமை** *pēṇāmai,* பெ (n.) பகைமை; enmity. *"பேணாமை பேணப் படும்* (குறள்.866)

*[பேண் +ஆ +மை]*

*('அல்' எ. ம. இ. நி)*

**பேணார்** *pēṇār,* பெ. (n.) பகைவர்; foes. *பேணா ரகநாட்டு'* (பு.வெ.3,4.)

*[பேணு +ஆ+அர்]*

*('அல்' எ. ம. இ. நி)*

**பேணி** *pēṇi,* பெ. (n.) பணியாரம் (இந்துபாக); a kind of sweet meat

*[பண் → பணி → பேணி]*

**பேணியார்** *pēṇiyār,* பெ. (n.) விரும்பப் பட்டோர்; lovers. *"பேணியார் பெட்ப செயின்'* (குறள்.1257)

*[பேண் + பேணி + ஆர்]*

**பேணிவளர்த்தல்** *pēnivalartal,* பெ. (n.) பாதுகாத்து வளர்த்தல்; help to grow.

*[ பேணி + வளர்த்தல் ]*

**பேணுகை** *pēnukai,* பெ. (n.) பேணி வளர்த்தல் பார்க்க;

*[ பேண் → பேணுகை ]*

**பேணு–தல்** *pēṇu,* செ.குன்றாவி (v.i.) 1.போற்றுதல்; to treat tenderly, to cherish. *"தந்தை தாய்ப்பேண்"* (ஆத்தி சூ.) 2. போற்றி காத்தல்; to protect. *"பேணித் தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்"* (புறநா.9) 3. மதித்தல்; to regard,esteem,value. *"குன்று.... தெய்வம் பேணித்திசை தொழுதனிர் சென்மின்"* (பரிபா.15,48) (திவா) 4. விரும்புதல்; disire. *'பேணான்வெகுளி'* (குறள்.526) 5. ஒப்புரவு; to treat courteously. *'பிறர் தன்னைப் பேணுங்கா னாணலும்'* (திரிகடு.6) 6. வழிப்படுதல்; to worship. *'அமரர்ப் பேணியும்'* (பட்டினப்.200) 7. பொருட் படுத்துதல்; to care for,mind *"துவலைத் தண்டுளி பேணார்"* (நெடுநல்.34) 8. கழுவாய் செய்தல்; to attend carefully, talk particular car of. *'பாணியுந்தூக்கு நடையும் பெயராமை பேணி'* (பு.வெ.12,ஒழிபு.19)9. ஒப்பனை செய்தல்; to adorn. *'பேணி நிறுத் தாரணி'* (கலித்.104) 10. கருதுதல் (திவா); to purpose, intend. 11. குறித்தல் (சூடா); to mark out 12. உட்கொள்ளுதல்; to take in , swallow. "விளங்கு பொறகலத்தில் விரும்புவன பேணி" (சிறுபாண். 244) 13. அறிதல்; to know. *'பேணாதொருத்தி பேதுற'* (பரிபா.7,67). 14. ஒத்தல்; to resemble *'பெருநறாப் பேணியவே கூர்நறா வார்ந்தவள் கண்'* (பரிபா.7,63).

*[ பேண் → பேணு ]*

**பேணுநர்** *pēṇunar,* பெ. (n.) போற்றிக்காப்போர்; guardians. *'பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ'* (மணிமே.14;47)

*[ பேணு → பேணுநர் ]*

**பேத்தல்** *pēttal,* பெ. (n.) பிதற்றுமொழி; incoherent talk; meaningless speech.

*[ பிதற்று → பேத்து → பேத்தல்]*

**பேத்தி**[1] *pētti,* பெ. (n.) பேர்த்தி; grand - daughter *'பேத்திமாருண்டு பண்ணும்'* (பணவிடு.255)

*[ பேர்→ பேத்தி ]*

**பேத்தி**[2] *pētti,* பெ. (n.) பேயத்தி; corr of

*[ பேயத்தி→ பேத்தி ]*

**பேத்து–தல்** *pēttu,* செ.குன்றா.வி (v.i.) *பிதற்று(கொ.வ.)* பார்க்க; *see pētattu*

*[ பிதற்று → பேத்து ]*

**பேத்துவம்** *pēttuvam,* பெ. (n.) 1. அமுதம்; nectar 2. நெய்; chee. (சங்.அக)

*[ பேத்து → பேத்துவம் ]*

**பேத்தை** *pēttai,* பெ. (n.) 1. மீன்வகை; globe-fish, genus, tetrodon 2. 9 விரலம் வளர்வதும் பழுப்புநிறம் உள்ளதுமான மீன்வகை; globe-fish, brown, attaining 9 in. in length, Tetrodon nigro punctatus. 3. பற்பேத்தை (யாழ்.அக); பார்க்க gum boil 4. வயிற்றுவீக்கம் (யாழ்.அக); bloated belly

*[ பேத்து → பேத்தை ]*



**பேதறு—த்தல்** *pēdaṟu,* செ.குன்றாவி (v.i.) கலக்கமொழித்தல்; to clear doubt. *'மாருதி வந்துன்னைப்பேதறுத்து'* (கம்பரா.மீட்சி.166)

*[ பேது + அறு → பேதறு ]*

**பேதிக்கிழங்கு** *pēdi-k-kiḻaṅgu,* பெ. (n.) 1. கொடிவகை; jalap, m.le Impomaea Purga. (சா.அக.)

**பேது**[1] *pēdu,* பெ. (n.) 1. மயக்கம்; bewilderment, confusion, consternation. *'நல்லவை பேதுறார் கேட்டல்'* (இனி. நாற். 9.) 2. பித்துப் பிடித்தல்; delirium, mental derangement. *'சாயலாடான் பேது கண்டு'* (சீவக. 1744.) 4. அறிவின்மை; ignorane. *'பிழை யென்னாய் பேதுறீஇ'* (பு.வெ. 11, கைக்கிளை. பெண். 8.)

skt. bhēda. க. பேது

*[ பித்து→பேத்து → பேது ]*

**பேதுறவு** *pēduṟavu,* பெ. (n.) 1. மயக்கம்; bewilderment, mental derargement, mental. *'பேணிலா தவர் பேதுற வோட்டினோம்'* (தேவா. 497, 10.) 2. துன்பம் (சங்.அக.); distress.

*[ பேதுறு → பேதுறவு ]*

**பேதுறு—தல்** *pēduṟu-,* செ.கு.வி. (v.i.) 1. மயங்குதல்; to be bewilered. *'பேதுறுகின்ற போன்ற பெருமழைக் கண்கள்'* (சீவக.2544.) 2. பித்துப் பிடித்தல் (வின்.); to become insane. 3. வருந்துதல்; to be distressed. *'பேதுற்ற விதனைக் கண்டு'* (பரிபா. 18, 12.) 4. அறியா திருத்தல் (பு. வெ. 11, கைக்கிளை. பெண். 8.); to be ignorant.

*[பேது + உறு → பேதுறு—தல்]*

**பேதுறு—த்தல்** *pēduṟu,* செ.குன்றாவி. (v.t.) வருத்துதல்; to cause distress. *'உயிரைப் பேதுறுத்து'* (சீவக. 2766.)

பேதுறு → பேதுறுத்தல். (கா.விளை.)

*[பேது + உறு ]*

**பேதை** *pēdai,* பெ. (n.) 1. அறிவிலி (பிங்.); simpleton, ignorant person, dolt. *'பிள்ளைமை விளம்பினாய் பேதை நீயெனா'* (கம்பரா. யுத். மந்திரப். 72.) *'மடிமடிக் கொண்டொழுகும் பேதை'* (குறள்.603) 2. பெண்; woman, as simple minded. *'பசந்தது பைந்தொடிப் பேதை நுதல்'* (குறள். 1238.) 3. பாலை நிலப் பெண்; (இறை. 1, 18.) woman of desort tract. 4. மகளிர் பருவம் ஏழனுள் ஐந்து வயது முதல் ஏழு அகவை வரையுள்ள பருவத்துப் பெண் (பிங்.); girl between theages of five and seven. 5. வறியவன் (பிங்.); poor person. 6. கள் (சது.); toddy, vinous liquor. 7. அலி (பிங்.); hermaphrodite.

தெ. அம்பேத

*[பேது – பேதை]*

**பேதைப்படு—த்தல்** *pēdai-p-paḍu-,* செ.குன்றாவி. வி. (v.t.) மடமையாக்குதல்; to make foolish. *'பேதைப் படுக்கு மிழவூழ்'* (குறள். 372.,)

*[பேதை + படு]*

**பேதைப்பருவம்** *pēdai-p-paruvam,* பெ. (n.) அறியாப் பருவம்; age of innocence.

*[பேதை + பருவம்]*

**பேதைப்புத்தி** *pēdai-p-putti,* பெ. (n.) ஏமாளி; weak intellect; folly, credulity, indiscretion. (w.)

*[பேதை +* SKṭ. nuddhi. *த. புத்தி]*

**பேதைப்பெண்** *pēdai-p-peṇ,* பெ. (n.) இளம்பெண்; young lady.

*[பேதை + பெண்]*

**பேதைமை** *pēdaimai,* பெ. (n.) மடமை; folly, ignorance, credulouse ness. *'பேதைமை யன்ற தறிவு'* (நாலடி. 249.)

*[ பேதை – பேதைமை]*

மை. ப. பெ. ஈறு

**பேதைபாதம்** *pēnda-pādam,*பெ. (n.) பெண் தெய்வத் திருவுருவின் காலில் அணியும் அணிவகை;an ornament for the log of an idol. "திருக்கழற் கீழிடும் பேதைபாதமும்" (S.I.I.viii,39)

*[ பேதை + பாதம்]*

**பேதமை** *pēndamai,* பெ. (n.) உய்த்துணராமை (தொல். பொ. 248, இளம்பூ); lack of discernment.

*[பேதை→ பேதமை]*

**பேந்தவலை** *pēnda-valai,* பெ. (n.) கண்கள் சிறியவாகப் பின்னிய வலை (இ.வ.); small-eyed net. (loc.)

**பேந்தவிழி—த்தல்** *pēnda-viḻi-,* செ.கு.வி. (v.i.) மருண்டு விழித்தல் (கொ.வ.) ; to stare, roll the eyes in bewilder ment.

*[பே → பேந்து → பேந்த + விழி]*

**பேந்து—தல்** *pēndu-,* செ.கு.வி. (v.i.) மருளுதல்; to be bewildered. *'பேந்திப் பேந்தி விழிக்கிறான்'*

*[பே – பேந்து]*

**பேம்** *pēm,* பெ. (n.) அச்சம்; fear, dread, terror. *'பேந்தரு பேய்வனம்'* (சீவக. 1181.)

*[பே² → பேம்]*

**பேய்¹** *pēy,* பெ. (n.) **1.** அச்சுறுத்தும் ஆவி; devil, goblin, fiend. *'சுழலு மழல்விழிக் கொள்ளிவாய்ப் பேய்'* (பதினொ. மூத்த. 1.) **2.** காட்டுத்தன்மை (வின்.); wildness, as of vegetation **3.** தீமை (வின்.); evil. (w.) **4.** வெறி; madness, as of a dog; frenzy.

*[பே – பேய்]*

**பேய்²** *pēy,* பெ. (n.) இல்லை யென்னும் பொருள் கொண்ட சொல் (அக.நி.); a term meaning 'no'.

*[பே⁴ – பேய்]*

**பேய்க்கஞ்சான்** *pēykkañjāṉ,* பெ. (n.) சாணாக்கியப் பூண்டிலுள்ள பூச்சிவகை (சங்.அக.); a worm infesting cāṇākki-p-pūṇḍu.

**பேய்க்கடம்பை** *pēy-k-kaḍambai,* பெ. (n.) மரவகை(L.); a tree

*[பேய்[1] + கடம்பை]*

**பேய்க்கடுக்காய்** *pēy-k-kaḍukkāy,* பெ. (n.) **1.** பெரிய மரவகை; crape myrtle, **2.** பூமருது, **1.** பார்க்க; see *pūmarudu.*

*[பேய் + கடுக்காய்]*

**பேய்க்கண்** *pēy-k-kaṇ,* பெ. (n.) **1.** சுழல்விழி; rolling eyes, as of a demoniac. **2.** அஞ்சத் தக்க விழி; frightful eyes, as of a devil.

*[பேய் + கண்]*

**பேய்க்கண்டல்** *pēy-k-kaṇḍal,* பெ. (n.) சிறுமர வகை (வின்.); simple cymed mangrove

*[பேய் + கண்டல்]*

**பேய்க்கருங்காலி** *pēy-k-karuṅgāli,* பெ. (n.) கருங்காலிவகை (L.); tamarind like cutch, m.tr.,

*[பேய் + கருங்காலி]*

*[கருங்கால் – கருங்காலி]*

**பேய்க்கரும்பு** *pēy-k-karumbu,* பெ. (n.) நாணல் வகை (A.); kaus, a large and coarse grass

*[பேய் + கரும்பு]*

**பேய்க்களா** *pēy-k-kaḷā,* பெ. (n.) களாவகை (மலை.); a species of whortleberry.

*[பேய் + களா]*

**பேய்க்கற்றாழை** *pēy-k-kāṟṟāḻai,* பெ. (n.) காட்டுக் கற்றாழை (பதார்த்த. **369.**) பார்க்க; kāṭṭu-k-kaṟṟaḻai. century-plant.

*[பேய் + கற்றாழை]*

**பேய்க்கனவு** *pēy-k-kāṉavu,* பெ. (n.) தீக்கனவு; night mare.

*[பேய் + கனவு]*

**பேய்க்கனி** *pēy-k-kaṉi,* பெ. (n.) பேயன் வாழை (தைலவ. தைல. **113.**); பார்க்க *see pēyaṉvāḻai.*

*[பேய் + கனி]*



**பேய்க்காஞ்சி** *pēy-k-kāñji,* பெ. (n.) புண்பட்ட வீரனைக் கங்குல் யாமத்துப் பேய் காத்தமை கூறும் புறத்துறை (தொல். பொ. **79.**); (purap.) theme describing the protection of a wounded warrior by a demon during night.

*[பேய் + காஞ்சி]*

**பேய்க்காடு** *pēy-k-kāḍu,* பெ. (n.) பேய் வதியுங் கானகம் (வின்.); haunted jungle

*[பேய் + காடு]*

**பேய்க்காலெறும்பு** *pēy-k-kāleṟmbu,* பெ. (n.) எறும்புவகை (வின்.); a kind of small black ant with long feet.

*[ பேய்க்கால் + எறும்பு ]*

**பேய்க்காளான்** *pēy-k-kāḷāṉ,* பெ. (n.) காளான் வகை (யாழ்.அக.); toadstool, fungi.

*[பேய் + காளான்]*

**பேய்க்காற்று** *pēykkāṟṟu,* பெ. (n.) சுழல் காற்று; whirlwind.

ம. பேய்க்காத்து

*[பேய் + காற்று]*

**பேய்க்குணம்** *pēy-k-kuṇam,* பெ. (n.) அருவருக் கத்தக்க தீக்குணம்; bad, unsociable, peevish disposition.

*[பேய் + குணம்]*

**பேய்க்கும்மட்டி** *pēy-k-kummaṭṭi,* பெ. (n.) பேய்க் கொம்மட்டி (யாழ்.அக.) பார்க்க; see pēy-k-kommaṭṭi.

*[பேய்க்கொம்மட்டி – பேய்க்கும்மட்டி]*

**பேய்க்குரவை** *pēy-k-kuravai,* பெ. (n.) போருக்குச் செல்லும் அரசன் செலுத்தும் தேர்க்கு முன்னும் பின்னும் பேய் ஆடுவதைக் கூறும் புறத்துறை (பு. வெ. 7, 19.); (puṟap.) theme describing the dance of demons both in front and in rear of a chariot led by a warrior-king.

*[பேய் + குரவை]*

**பேய்க்குருந்து** *pēy-k-kurundu,* பெ. (n.) மர வகை; raceme-flowered wild lime.

*[பேய் + குருந்து]*

**பேய்க்குறை** *pēy-k-kuṟai,* பெ. (n.) சினம் கொண்டு பேய் செய்யுங் கேடு; evil or disaster, resulting from the malice of an unpropitiated devil.

*[பேய் + குறை]*

**பேய்க்குன்றி** *pēy-k-kuṉṟi,* பெ. (n.) குன்றி வகை (யாழ்.அக.); a kind of crab's-eye.

*[பேய் + குன்றி]*

**பேய்க்கூண்டு** *pēy-k-kūṇḍu,* பெ. (n.) செய்வினை பயிற்றுமிடம் (வின்.); place where the black arts are taught.

*[பேய் + கூண்டு]*

**பேய்க்கூத்து** *pēy-k-kūttu,* பெ. (n.) 1. பேயாட்டம்; devil dance. 2. குழப்பம்; confusion.

*[பேய் + கூத்து]*

**பேய்க்கொடை** *pēy-k-koḍai,* பெ. (n.) வாரியிறைக்கும் ஈகை; lavish and indiscriminate giving.

*[பேய் + கொடை]*

**பேய்க்கொம்மட்டி** *pēy-k-kommaṭṭi,* பெ. (n.) கொடி வகை (யாழ்.அக.); colocynth.

*[பேய் + கொம்மட்டி]*

**பேய்க்கோட்டாலை** *pēy-k-kōṭṭālai,* பெ. (n.) 1. *பேய்க் கோளாறு* பார்க்க; see *pēy-k-kōḷāṟu.* 2. *பேய்க்குறை*(வின்.) பார்க்க; see *pēy-k-kuṟai.*

*[பேய் + கொள்தல் → கோடல் → கோட்டாலை]*

**பேய்க்கோட்டி** *pēy-k-kōṭṭi,* பெ. (n.) **1.** *பேய்க் கோளாறு* பார்க்க; see *pēy-k-kōḷāṟu.* **2.** *பேய்த்தனம்* பார்க்க; see *pēy-t-taṉam.*

*[பேய் + கோட்டி]*

*கொள் → கோள் → கோட்டி*

**பேய்க்கோயில்** *pēy-k-kōyil,* பெ. (n.) பேய் உறையும் சிறு கோயில் (M.M. **681.**); devil temple.

*[பேய் + கோயில்]*

**பேய்க்கோலம்** *pēy-k-kōlam,* பெ. (n.) **1.** பேயின் வடிவம்; devil-like appearance. என் பணிந்த பேய்க் கோலம் (பதினொ. அற்புதத்திரு. **29.**) **2.** அழகிழந்த (அவ) தோற்றம்; appearance of wretchedness. "ஒண்டொடியிப் பேய்க் கோலங் கொண்டு" (பிரபுலிங். அக்க. துற. **55.**)

*[பேய் + கோலம்]*

**பேய்க்கோள்** *pēy-k-kōḷ,* பெ. (n.) பேய் பிடிக்கை; demoniac possession.

*[பேய் + கோள்]*

கொள் → கோள்

**பேய்க்கோளாறு** *pēy-k-kōḷāṟu,* பெ. (n.) பேய் பிடித்தலாலுண்டான இயல்பல்லாச் செய்கை; violent actions of a demoniac, as whirling the head.

*[பேய் + கோளாறு]*

**பேய்க்காண்(ணு)—தல்** *pēy-kāṇ,* செ.கு.வி. (v.i.) பேய் பிடித்தல்; to be possessed. 'பேய் கண்டாற் போல்' (திருக்கோ. **84,** உரை)

*[பேய் + காண்.,]*

**பேய்ச்சக்காலெறும்பு** *pēycca-k-kāl-eṟumbu,* பெ. (n.) பேய்க்காலெறும்பு பார்க்க; see pēy-k-kālerumbu.

*[பேய்க்காலெறும்பு – பேய்ச்சக்காலெறும்பு]*

**பேய்ச்சத்தம்** *pēy-c-cattam,* பெ. (n.) பேரொலி (வின்.); hideous noise, as of a devil.

*[பேய் +* SKṭ.sabda. *த. சத்தம்]*

**பேய்ச்சாளை** *pēy-c-cāḷai,* பெ. (n.) கருநிறச் சாளைமீன்வகை (வின்.); interior cāḷai fish.

*[பேய் + சாளை]*



**பேய்ச்சி** *pēy-cci,* பெ. (n.) **1.**பெண்பேய்; demoness. "பேய்ச்சி பாலுண்ட பிரான்" (திவ்.இயற்.3.28) **2.** பேய் பிடித்தவள்; woman under possession of a demon

*[பேயன்– பேய்ச்சி(பெ.பா)]*

**பேய்ச்சீந்தில்** *pēy-c.cindil,* பெ. (n.) ஒருவகைச் செடி (ஆகாசகருடன்); (சங்.அக) a climbing chrub

*[பேய்+ சீந்தில்]*

**பேய்ச்சீயக்காய்** *pēy-c.ciyakkāy,* பெ. (n.) கொடிவகை;copius narrow- leaved soap-pod

*[பேய்+ சீயக்காய் சீக்காய் → சீயக்காய்]*

**பேய்ச்சுண்டை** *pēy-c-cuṇḍai* பெ. (n.) மலைச்சுண்டை; (M.M. 829) prickly nightshade.

*[பேய் + சுண்டை]*

**பேய்ச்சுரை** *pēy-c-curai,* பெ. (n.) சுரை வகை; wild melon. 'கைப்பறா பேய்ச்சுரையின் காய்' (நாலடி.116)

*[பேய் + சுரை]*

**பேய்ச்செயல்** *pēy-c-cayal,* பெ. (n.) தீ நடத்தை; devilisim., black magic.

*[பேய் + செயல்]*

**பேய்ச்சேட்டை** *pēy-c-cēṭṭai,* பெ. (n.) *பேய்க் கோளாறு* பார்க்க; see *pēy-k-kōḷāru.*

*[பேய் + சேட்டை]*

**பேய்ச்சொறி** *pēy-c-coṟi,* பெ. (n.)
1. பெருஞ்சொறி வகை; itch, scabies.
2. சிரங்குவகை; nettle rash, urticaria.

*[பேய் + சொறி]*

**பேய்த்தக்காளி** *pēy-t-takkāḷi,* பெ. (n.) சீமைத் தக்காளி (வின்.) பார்க்க šīmai-t-takkāli; tomato.(w)

*[பேய் + தக்காளி]*

**பேய்த்தண்ணீர்** *pēy-t-taṇṇir,* பெ. (n.) சாராயம் (வின்.); ardent spirits. (w)

*[பேய் + தண்ணீர்]*

**பேய்த்தத்து** *pēy-t-tattu,* பெ. (n.) சிரங்கு வகை; (M.L) nettle rash, urticaria.

*[பேய் + தத்து]*

**பேய்த்தனம்** *pēy-t-taṉam,* பெ. (n.) 1. முட்டாள்தனம்; fiendishness, ferocious ness, devilishness. 'இந்தப் பேய்த்தனமேன்' (தாயு. பாயப்புலி. 23) 2. பித்து; madness. 3. புல்லறிவு (சங்.அக.); foolishness.

*[பேய் + தனம்]*

**பேய்த்.தாரை** *pēy-t-tārai,* பெ. (n.) ஊதுகருவி வகை; a large trumpet.

*[பேய் + தாரை]*



**பேய்த்தி** *pēytti,* பெ. (n.) பேய்ச்சி; demoness "சிறுபேய் பெரும்பேய்த்தியைச் சென்றுபற்றும்" (நீலகேசி.8)

**பேய்த்திமிட்டி** *pēy-t-timiṭṭi,* பெ. (n.) பேய்க் கொம்மட்டி (சங்.அக.) பார்க்க; see pēy-k-kommaṭṭi.

*[பேய்க்கொம்மட்டி – பேய்த்திமிட்டி]*

**பேய்த்தும்பை** *pēy-t-tumbai,* பெ. (n.)
1. காசித்தும்பை; (M.M. 911); flower tumhai.
2. *பேய் மருட்டி* M.M. பார்க்க; see *pēymaruṭṭi.*

*[பேய் + தும்மை]*

**பேய்த்தும்மட்டி** *pēy-t-tummaṭṭi,* பெ. (n.)
1. *பேய்க் கொம்மட்டி* (சங்.அக.) பார்க்க; *see pēy-k-kommaṭṭi.* 2. *பேய்ச்சுரை* பார்க்க; *see pēy-c-curai.*

*[பேய் + தும்மட்டி]*

**பேய்த்தேர்** *pēy-t-tēr,* பெ. (n.) கானனீர்; mirage. பேய்த் தேர்ப்பின் குடங்கொண்டு நீர்க்குச் செல்வார். (தேவா. 1145, 10)

*[பேய் + தேர்]*

**பேய்நடம்** *pēy-naḍam,* பெ. (n.) வெறியாட்டு (திவா.); dancing under the influence of a demon.

*[பேய் + நடம்]*

**பேய்நரி** *pēy-nari,* பெ. (n.) வெறிபிடித்த நரி;rabid fox. "பேய்நாய் பேய்நரி முதலியவற்றின் கடிகளுக்கு" (குஞ். சர. iii 102)

*[பேய்+நரி]*

**பேய்நவரை** *pēy-navarai,* பெ. (n.) நான்கு விரலம் வளர்வதும் பழுப்புப் புள்ளியும் வெள்ளை நிறமுடையதுமான நவரை மீன்வகை; red mullet, silvery, spotted with brown, attaining 4 in. in length.

*[பேய் + நவரை]*



**பேய்நாய்** *pēynāy,* பெ. (n.) வெறி பிடித்த நாய்; (M.L.) rabid dog.

*[பேய் + நாய்]*

**பேய்நாய்க்கடி** *pēy-nāy-k-kaḍi,* பெ. (n.) பேய் நாய்க்கடிச் சன்னி (M.L.) பார்க்க; see pēynāy-k-kaḍic-caṉṉi.

*[பேய் + நாய்க்+ கடி]*

**பேய்நாய்க்கடி சன்னி** *pēnāy-k-kaḍisaṉṉi,* பெ. (n.) வெறிநாய்க்கடியால் உண்டாகும் சன்னிவகை; ;(M.L.) hydrophobia.

*[பேய் + நாய்க்கடி + சன்னி]*

*(skt. janni.* த. *சன்னி.)*

**பேய்நிலை** *pēy-nilai,* பெ. (n.) எண்வகை மணத்துள் (பைசாசம்) ஒன்று (இறை. 1, 22); a form of marriage.

*[பேய் + நிலை]*

**பேய்ப்பசலை** *pēy-p-pasalai,* பெ. (n.) *பேய்ப்பசளை* (மூ.அ.) பார்க்க; *see pēy-p-pašaḷai.*

*[பேய்ப்பசளை – பேய்ப்பசலை]*

**பேய்ப்பசளை** *pēy-p-pašaḷai,* பெ. (n.) பசலை வகை (மூ.அ.); a wild species of purslane, porfulaca.

*[பேய் + பசளை]*

**பேய்ப்பந்து** *pēy-p-pandu,* பெ. (n.) எறிவாற்பந்து விளையாட்டு; (இ.வ.) game of throw-ball.

*[பேய் + பந்து]*

**பேய்ப்பயல்** *pēy-p-payal,* பெ. (n.) வெறுக்கத்தக் கோன்; (சண்டாளன்) devilish fellow.

*[பேய் + பயல்]*

**பேய்ப்பலவன்** *pēy-p-palavan,* பெ. (n.) படுவன் கீரை; (மலை) a kind of greens.

*[பேய் + பலவன்]*

**பேய்ப்பலா** *pēy-p-palā,* பெ. (n.) *காட்டுப் பலா,* (L) பார்க்க; *jungle jack.*

*[பேய் + பலா]*

**பேய்ப்பள்ளி** *pēy-p-paḷḷi,* பெ. (n.) *பேய்க் கூண்டு* (வின்.) பார்க்க; see *pēy-k-kūṇḍu.*

*[பேய் + பள்ளி]*

**பேய்ப்பாகல்** *pēy-p-pāgal, பழுபாகல்* (M.M). பார்க்க; see *paḻu-pāgal.* prickly carolaho

*[பேய் + பாகல்]*

**பேய்ப்பாட்டு** *pēy-p-pāṭṭu,* பெ. (n.) **1.**பேய்க்குப் பாடும் பாடல் (வின்.); song in praise of devils **2.** பெருங்குரலிற்பாடும் பாட்டு (இ.வ); loud song **3.** வசைமொழி ; abuse

*[பேய் + பாட்டு]*

**பேய்ப்பாதிரை** *pēy-p-pādirai,* பெ. (n.) பாதிரிவகை (நாநார்த்த.263); a variety of pādiri plant

*[பேய் + பாதிரை]*

**பேய்ப்பாலை** *pēy-p-pālai,* பெ. (n.) *நச்சறுப்பான்,* (சங்.அக) பார்க்க; *naccaruppān.* Indian ipecacuanha

*[பேய் + பாலை]*

**பேய்ப்பாற்சொற்றி** *pēy-p-pāṟ-coṟṟi,* பெ. (n.) நீர்ப்பூடுவகை (சங்.அக); an aquatic plant

*[பேய் + பாற் சொற்றி]*

**பேய்ப்பிடி** *pēy-p-piḍi,* பெ. (n.) **1.** விடாப்பிடி; vicelike grip **2.** *பேய் மருட்டி*(சங்.அக) பார்க்க; see *pēy-maruṭṭi*

*[பேய் + பிடி]*

**பேய்ப்பிரம்பு** *pēy-p-pirambu,* பெ. (n.) பிரம்பு வகை (யாழ்.அக); a kind of rattan.

*[பேய் + பிரம்பு]*

**பேய்ப்பிள்ளை** *pēy-p-piḷḷai,* பெ. (n.) **1.** அடங்காப் பையன்; disobedient, intractable child **2.** அறிவிலாத பிள்ளை; foolish child

*[பேய் + பிள்ளை]*

**பேய்ப்பீர்க்கு** *pēy-p-pīrkku,* பெ. (n.) **1.** கொடி வகை; bitter luffa. *'சுரையொடு பேய்ப்பீர்க்குஞ் சுமந்த'* **2.** பீர்க்குவகை (M.M. 438); snake luffa,

*[பேய் + பீர்க்கு]*

**பேய்ப்புடல்** *pēy-p-puḍal,* பெ. (n.) பூடுவகை (பதார்த்த.354.); wild snake gourd

*[பேய் + புடல்]*

**பேய்ப்புடோல்** *pēy-p-pudōl,* பெ. (n.) *பேய்ப்புடல்* (இ.வ.) பார்க்க; see *pēy-p-pudal.*

**பேய்ப்புத்தி** *pēy-p-putti,* பெ. (n.) அறிவின்மை (வின்.); imprudence,folly rashness

*[பேய் +* SKṭ. nuddhi. *த. புத்தி]*

**பேய்ப்புகையிலை** *pēy-pugaiyilai,* பெ. (n.) காட்டுப்புகையிலை (சித். அக.); a kind of tobacco.

*[பேய் + புகையிலை]*

**பேய்ப்புல்** *pēy-p-pul,* பெ. (n.) ஒட்டுப்புல் (பதார்த்த.378); sticking grass.

*[பேய் + புல்]*

**பேய்ப்பூலா** *pēy-p-pūlā,* பெ. (n.) செடிவகை; buck - torn

*[பேய் + பூலா]*

**பேய்ப்பெண்** *pēy-p-peṇ,* பெ. (n.) அறிவில்லாத பெண்; foolish girl *'பேச்சரவங் கேட்டிலையோ பேய்ப் பெண்ணே'* (திவ்.திருப்பா.7.)

*[பேய் + பெண்]*

**பேய்ப்போக்கு** *pēy-p-pōkku,* பெ. (n) ஒழுங்கற்ற ஒழுக்கம், irregular, absurd conduct. (w.)

*[ பேய்+போக்கு]*

**பேய்பிடித்தல்** *pēy-piḍittal,* பெ. (n.) பேயால் பற்றப் படுதல்; being possessed by a devil; obsession.

*[ பேய் + பிடித்தல் ]*

**பேய்மருட்டி** *pēy-Maruṭṭi,* பெ. (n.) செடிவகை(பதார்த்த. 243.); malabar catamint, s.sr; anisomeles malabarica.

*[ பேய் + மருட்டி ]*

**பேய்மழை** *pēy-Malai,* பெ. (n.) பெருமழை; Heavy fall of rain.

*[ பேய் + மழை]*

**பேய்மனம்** *pēy-Maṇam,* பெ. (n.) 1. அறிவற்ற மனம்; distracted, foolish mind. *'என்பேய் மனமால் கொண்டதே'* (திருநூற்.1.) 2. இழிந்த மனம்(வின்); vile heart, carnal mind.

*[ பேய் + மனம்]*

**பேய்மாடி** *pēy-mādi,* பெ. (n.) *புளிநறளை* (மலை.) பார்க்க; see *puḷinaraḷai.*

*[ பேய் + மாடி ]*

**பேய்மிரட்டி** *pēy-miraṭṭi,* பெ. (n.) (மூ.அ.) 1. *பேய்மருட்டி* பார்க்க; see *pēy maruṭṭi.* 2. *கிலுகிலுப்பை* பார்க்க; *see kilukiluppai* species of rattle work.

*[ பேய்மருட்டி → பேய் மிரட்டி ]*

**பேய்மிளகாய்** *pēy-miḷagāy,* பெ. (n.) சீமைப் பச்சை மிளகாய் (A.); cayenne peper.

*[ பேய்+மிளகாய் ]*



**பேய்முகம்** *pēy-mugam,* பெ. (n.) பேய்மூஞ்சி (வின்); hideuns face.

*[ பேய்+முகம் ]*

**பேய்முசுட்டை** *pēy-mušuttai,* பெ. (n.) 1. *சமுத்திரப்பாலை* (வின்) பார்க்க; see *samullira-t-pālai* elephant creeper. 2. கொடிவகை. malabar creeper. 3. ஒருவகைச் சொறிசிரங்கு (இ.வ.); nettle rash, urticaria.

*[ பேய்+முசுட்டை ]*

**பேய்முசுட்டைக்கடி** *pēy-mušuṭṭai k-kaḍi,* பெ. (n.) உடம்பிற் செந்நிறப் புள்ளிவிழும் நோய்வகை (M.L.); purpura, a disease marked by livid spots on the skin.

*[ பேய்முசுட்டை + கடி ]*

**பேய்முல்லை** *pēy-mullai,* பெ. (n.) *பேய்முசுட்டை* (சங்.அக.) பார்க்க; see *Peymusuttai.*

**பேய்முன்னை** *pēy-munnai,* பெ. (n.) 1. மரவகை; charcoal tree. 2. சமுத்திரப்பாலை; elephant creeper. (l.)

*[பேய்+முன்னை ]*

**பேய்மூஞ்சி** *pēy-mūñci,* பெ. (n.) ஒழுங்கற்ற முகம் (கோரமுகம்.) (வின்); hideous face.

*[ பேய் + மூஞ்சி ]*

**பேய்மை** *pēymai,* பெ. (n.) பேயின் தன்மை; devilishness. '*பேய்மையாக்குமிப் பேதை தமைக்கள்வனொடுடனாய்*' (வீரசோ.யாப்.5, உரை.)

*[பேய் + மை 'மை' ப.பெ.ஈறு]*

**பேய்முள்ளி** *pēy-muḷḷi,* பெ. (n.) காட்டு முள்ளி (சித்.அக.); Wild thorny plant.

*[ பேய் + மூஞ்சி ]*

**பேய்வரகு** *pēy-varagu,* பெ. (n.) காட்டுவரகு (சித்.அக.); Wild ragi.

**பேய்வழிபாடு** *pēy-vaḻipādu,* பெ. (n.) பேயை வழிபடுதல்; devil-worship.

*[பேய் + வழிபாடு]*

**பேய்வாதுமை** *pēy-vādumai,* பெ. (n.) வாதுமை வகை (இ.வ.); Wild almond.

**பேய்விட்டாட்டு—தல்** *pēy-viṭṭāṭṭu,* செ. குன்றாவி. (v.t.) *பேயாட்டு* (வின்) பார்க்க; see *pēyāṭṭu.*

*[ பேய் + விட்டு + ஆட்டு ]*

**பேய்வித்தை** *pēy-vittai,* பெ. (n.) சல்லியம்; witchcraft. (w)

*[ பேய் + வித்தை ]*

**பேய்வெருட்டி** *pēy-verutti,* பெ. (n.) *பேய்மருட்டி* (நாமதீப.344) பார்க்க; see *pēy-marutti*

*[ பேய் + மருட்டி – பேய்வெருட்டி ]*

**பேயகத்தி** *pēy-agatti,* பெ. (n.) *சீமையகத்தி*(L) பார்க்க; see *cimai-y-agathi* large feat letted aglandular senna.

*[பேய் + அகத்தி]*

**பேயத்தி** *pēy-atti,* பெ. (n.) அத்திவகை (L.); devil fig, s.tr., ficus hispida.

*[பேய் + அத்தி]*

**பேயம்** *pēyam,* பெ. (n.) நீர் முதலியன போன்ற பருகலுணவு (சங்.அக.); food taken in by drinking or sipping, as water, milk, etc.

*[பெய்–பேய்–பேயம்]*

**பேயம்பழம்** *pēyampalam,* பெ. (n.) பேயன் வாழையின் பழம் (இ.வ.); fruit of pēyan-vālai.

*[ பாயம் → பேய் → பேயன் + பழம்]*

**பேயம்மையார்** *pēy-ammaiyār,* பெ. (n.) *பேயார்* (யாப்.வி.) பார்க்க; see *pēyār.*

*[ பேய் + அம்மையார்]*

**பேயமன்று** *pēya-manru,* பெ. (n.) மதுக்குடிக்குமிடம்; liquor-saloon. '*பேயமன்றினினின்று பிறங்கெரி*' (கம்பரா. இலங்கையெரி 14.)

*[ பேயம் + மன்று]*

**பேயருளாந்தை** *pēy-arulāndai,* பெ. (n.) *பாலையுடைச்சி* (L.)பார்க்க; see *pālai-y-uticci,* indian calosanthes.

**பேயவரை** *pēy-avarai,* பெ. (n.) *கோழியவரை*1. பார்க்க; see *kōli-y-avari,* sword-bean. 2. பொன்னாவிரை fetid cassia.

*[ பேய் + அவரை]*

**பேயன்**[1] *pēyan,* பெ. (n.) 1. பேய்பிடித்தவன்; demomac. 2. பித்தன் (பைத்தியக் காரன்); madman '*பேயனாகிலும் பெருநெறிகாட்டாய்*' (திருவாச. 23,7.)

*[ பேய் + அன் 'அன்' ஆ,பா.ஈறு]*

**பேயன்**[2] *pēyan,* பெ. (n.) *பேயன்வாழை* (பதார்த்த.727.) பார்க்க; see *pēyanvālai.*

*[ பாயம்→ பேயம்→ பேயன்]*

**பேயன்வாழை** *pēyan-vālai,* பெ. (n.) வாழை வகை; a kind of banana,

*[ பாயம்→ பேயம்→ பேயன் + வாழை]*

**பேயனார்** *pēyanār,* பெ. (n.) ஐங்குறுநூற்றின் ஐந்தாம் நூறாகிய முல்லைத்திணையைப் பாடிய பழைய புலவர்; an ancient poet, author of the fifth hundred in Inguru-nūru.

*[ பேய + அன் + 'ஆர்' 'ஆர்' உயர்வுப் பன்மை ஈறு]*

**பேயாட்டம்** *pēy-āttam,* பெ. (n.) பேய்க்கூத்து; devil dance. 2. பேய்த்தன்மை; fiendishness ferociousness. 3. கலக்கம்; confusion, disorder.

*[ பேய் + ஆட்டம்]*

*ஆடு–ஆட்டம்*

**பேயாட்டி** *pēy-āṭṭi,* பெ. (n.) 1. மருளேறு வருவித்துக் குறிசொல்லச் செய்வோன்(வின்); one who makes a person possessed and causes him to utter oracles 2. *பேயோட்டி,* (சங்.அக.) 1. பார்க்க; see *pēyōṭṭi.*

*[பேயாடி → பேயாட்டி]*

**பேயாட்டு—தல்** *pēy-āṭṭu-,* செ.குன்றாவி. (v.t.) 1. குறிசொல்லுதற்குப் மருளோறச் செய்தல் (வின்); to cause a person to be possessed for making him utter oracles 2. *பேயோட்டு* (இ.வ.). பார்க்க; see *pēyōṭṭu*

*[பேய் + ஆட்டு]*

**பேயாடி** *pēy-āḍi,* பெ. (n.) 1. வெறியாடுபவன் (இ.வ.); a person under demoniac possession. 2. *பேயாட்டி* (வின்) பார்க்க; see *pēyāṭṭi.*3. *பேயாட்டி* (வின்) பார்க்க; see *pēyōṭṭi.*

*[பேய் + ஆடி]*

**பேயாடு—தல்** *pēy-ḍu,* செ.குவி. (v.i.) பேய்பிடித்தாடுதல் (வின்); to whirl the head through demoniac possession.

*[பேய் + ஆடு]*

**பேயாமணக்கு** *pēy-āmaṇakku,* பெ. (n.) ஆமணக்குவகை(L.); red physic nut,

*[பேய் + ஆமணக்கு]*

**பேயார்** *pēyār,* பெ. (n.) பேயாழ்வார் பார்க்க; see pēyāḻvār '*பொய்கையார் பூதத்தார் பேயார்*' (உப தேசரத்.4.) 2. *காரைக்காலம்மையார்* பார்க்க; *Rārairrāḷ-ammaiyār.* a canonized saiva saint, '*பேயார்க்கு மடியேன்*' (தேவா.737.4.)

*[பேய் – பேயார் 'ஆர்' உயர்வுப்பன்மை ஈறு.]*

**பேயாரால்** *pēyārāl,*பெ. (n.) இரண்டடி நீளத்துக்கு மேல் வளர்வதும் மங்கல் (கபில) நிறமுடையதுமான நன்னீர் மீன்வகை; eel, rich brown, attaining more than 2ft. in length.

*[பேய் + ஆரால் → ஆரால்]*



**பேயாவாரை** *pēyāvārai,* பெ. (n.) *பேயாவிரை* (இங்.வை.) பார்க்க; see *pēyāvirai.*

*[பேய் + ஆவாரை ஆவிரை—ஆவாரை]*

**பேயாவிரை** *pēy-āvirai,* பெ. (n.) செடிவகை; negro coffee.

*[பேய் + ஆவிரை]*

**பேயாழ்வார்** *pēyāḷvār,* பெ. (n.) நாலாயிரத் தெய்வப்பனுவில் இயற்பாவைச் சார்ந்த மூன்றாந்திருவந்தாதி இயற்றியவரும் ஆழ்வார் பதின்மருள் ஒருவருமான பெரியார் (உபதேசாத்.6.); a vaisṇava saint, author of the third Tiru.v-andādi of iyarpā,in Nālāyira-p.pirapandam.

*[பேய் + ஆழ்வார்]*

**பேயிரதம்** *pēy-iradam,* பெ. (n.) *பேய்த்தேர்* (இலக்.அக.) பார்க்க; see *pēy-t-tēr.*

*[பேய் + skṭ. rasa. த. இரதம்]*

**பேயீடு** *pēy-īḍu,* பெ. (n.) பேயின் தொந்தரவால் உண்டாவதாகக் கருதப்படும் பிள்ளைநோய்; a disease of children, attributed to the influence of evil spirtis, *'புள்ளீட்டுக்கும் பேயீட்டுக்கும் பிழைக்கப்பெற்றதென்கிறார்'* (திவ்.பெரியாழ். 2,5,9,வ்யா.பக்.343.)

**பேயுடுப்பை** *pēy-uḍuppai,* பெ. (n.) செடிவகை; (விவசா.6.); a plant.

**பேயுமிதல்** *pēyumidal,* பெ. (n.) பேய் முதலியன ஒருவன் அரத்தத்தை உறிஞ்சியுண்டு கொல்லுகை (j.) sucking the blood of a person either killing or greatly injuring him, as a denil or vampire.

*[ பேய் + உமிழ்தல் → உமிதல்.]*

**பேயுள்ளி** *pēy-u!!i,* பெ. (n.) நரிவெங்காயம்(வின்); indian squill.

*[ பேய் + உள்ளி]*

**பேயூடம்** *pēyūḍam,* பெ. (n.) அமிழ்தம்; nectar. 2. சீம்பால்; beestings. 3. வெண்ணெய்; (யாழ்.அக) butter.

skt. pēyūsa

**பேயூமத்தை** *pēyūmattai,* பெ. (n.) *மருளூமத்தை* (மலை.) பார்க்க; see *maru!-ūmathai.* cockle.bur.

*[ பேய் + ஊமத்தை]*

**பேயெரி-த்தல்** *pēyeri,* பெ. (n.) மந்திரத்தாற் பேயை எரித்துப் போக்குதல்; to burn out a devil by magic.

*[ பேய் + எரி]*

**பேயெள்** *pēye!,* பெ. (n.) *காட்டெள்,* 2. (A) பார்க்க; see *kāttel,* wild sesame.

*[ பேய் + எள்]*

**பேயேற்று-தல்** *pēy-ēṟṟu,* செ.கு.வி (v.i.) *பேயையுருவேற்று* (வின்) பார்க்க; see *pēyaiy uru-v-ēṟṟu.* (w.)

*[ பேய் + ஏற்று]*

**பேயையுருவேற்று-தல்** *pēyai-y-uru-v-ēṟṟu,* செ.கு.வி. (v.i.) ஒருவனைப் பேய்பிடிக்கச் செய்தல் (வின்); to cause a dene to possess a person.

*[ பேய் + ஐ + உரு + ஏற்று]*

**பேயொலி** *pēyoli,* பெ. (n.) பெருங்கூப்பாடு; hideous noise, as of a devil.

*[ பேய் + ஒலி]*

**பேயோட்டி** *pēyōṭṭi,* பெ. (n.) 1. பேயை ஓட்டுவோன்; exorcist. (loc.) 2. மரவகை (யாழ்.அக.); a tree.

*[ பேய் + ஓட்டி]*

**பேயோட்டு-தல்** *pēyōṭṭu,* செ.குன்றாவி. (v.t.) பேயை மந்திரத்தால் வெளியேற்றுதல்; to exorcise.

*[ பேய் + ஓட்டு]*

**பேயோடாடி** *pēyōḍāḍi,* பெ. (n.) பேயுடன் ஆடுபவன், சிவன் (பிங்.); siva, as ḍancing with devils.

*[ பேய் + ஓடு + ஆடு + இ]*

*'இ' வினைமுதலீறு*

**பேயோணான்** *pēyōṇāṉ,* பெ. (n.) ஓந்தி வகை (வின்); large bloodsucker.

*[ பேய் + ஓணான்]*

**பேர்[1]–தல்** *pēr,* செ.கு.வி. (v.i.) **1.** சிதைதல்; to become loose, to be detached. கட்டடம் பேர்ந்து போயிற்று **2.** பிரிதல்; to separate. "உமையோ டென்றும் பேரானை" **(தேவா.872,5) 3.** போதல்; to depart, go away. "பேர்ந்தும் பெயர்ந்தும்" **(திவ்.திருவாய்.5,3,3) 4.** அழிதல்; to be annihilated. "பேர்கின்ற தாகும் பிறப்பு" **(அறநெறி. 169.) 5.** பிறழ்தல்; to flop, as a fish. "கெண்டைக் குலம்....பேர்கின்றவே" **(திருவிருத்.11.) 6.** அசைதல்; to move. பேருங் கற்றைக் கவரி **(கம்பரா.முதற்.98.) 7.** குறைதல்; to lesser, diminish. "பேராச் சிறப்பின்" **(தொல்.பொ.102.) 8.** பின் வாங்குதல்; to draw back, retreat, as a warrior. "பொருதகர் தாக்கற்குப் பேருந்த கைத்து" **(குறள்.486) 9.** முறைபிறழ்தல்; to go out of order. "வினையைப் பேராம லூட்டும் பிரான்" **(சி.போ.2,2.) 10.** நிலைமாறுதல்; to change. பேதிப்பன"நீயவை பேர்கிலையால்" **(கம்பரா. இரணிய.110)**

*[பெயர்–பேர்]*

**பேர்[2]–த்தல்** *pēr,* செ.குன்றாவி. (v.t.) **1.** இடம்விட்டு நீக்குதல்; to change, remove. "என்றவனைப் பேர்த்திங்ஙன் மீட்டுத் தருவாய்" **(சிலப்.9,38.) 2.** அழித்தல்; to destroy, annihilate. **3.** புரட்டுதல்; to turn over. "வன்கழுகு பேர்த்திட்டுக் கொத்தும்" **(நாலடி.48) 4.** முறித்தல்; to break. "பேர்த்தனை மாசகடம் பிள்ளையாய்" **(திவ்.இயற்,2,10) 5.** மாற்றுதல்; to alter, distort.

*[ பெயர்–பேர் பேர்த்தல் (காரண வினை)]*

**பேர்[3]** *pēr,* பெ. (n.) **1.** ஒருவருக்கோ அல்லது ஒரு பொருளுக்கோ இடும் பெயர்; name "பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்" **(நாலடி.175) 2.** ஆள்; per son, individual. "அயற்பேரைக் காய்தி" **(கம்பரா.சரபங்.30) 3.** உயிரி; living thing "விசும்பிற் செல்வதோர் பேர் செலாது". **(கம்பரா. நாகபா.156.) 4.** புகழ்; praise, fame. "பேர் பரந்த பிரமாபுர மேவிய பெம்மான்" **(தேவா,62,3) 5.** மிகக்குறைந்த அளவுள்ளது; that which is nominal; mere name or pretest. 'ஒரு பேர்காணும் வேண்டுவது.' **(ஈடு.9,3,1)**

தெ. பேரு; க. பெசர்; ம. பேர்; பட; கெசரு

*[பெயர் → பேர்]*

**பேர்[4]** *pēr,* பெ. (n.) பெருமை (அக.நி.); largeness

*[பல் – பரு–பெரு பெரு–பேர்]*

**பேர்க்கடமை** *pēr-k-kaḍamai,* பெ. (n.) ஆள்வரிவகை (I.M.P.Cg.529.); a tax on individuals.

**பேர்க்குடி** *pēr-k-kuḍi,* பெ. (n.) அடிமை; slave 'உன் பேர்க்குடியாக இருக்கிறேன்'. **(திருநெல்லை.)**

*[ பெயர் → பேர் + குடி ]*

**பேர்கெட்டவன்** *pēr-keṭṭavaṉ,* பெ. (n.) கயவன் (இ.வ.); rogue, scoundral.

*[ பெயர்கெட்டவன் → பேர்கெட்டவன்]*

**பேர்கேட்டவன்** *pērkēṭṭavaṉ,* பெ. (n.) நாடறிந்தவன் (நெல்லை); a well-known person.

*[பேர் + கேட்டவன்]*

**பேர்கொடு—த்தல்** *pēr kodu,* செ.கு.வி. (v.i.) **1.** புகழ்தருதல்(கொ.வ.); to give a good name, to bring credit. **2.** குறிப்புப் பெயரிடுதல்(கொ.வ.); to nick name. (colleq.) **3.** ஒருகுறிக்கோளுக்காகச் சூளேற்றி (ஞானஸ்நானம் செய்து) பெயரிடுதல்; to baptise, as giving a name to a child.

*[ பேர் + கொடு]*

**பேர்சொல்லாதது** *pēš-ollādadu,* பெ. (n.) இரவில் பேர் வழங்கத்தகாத வசம்பு, ஊசி முதலிய பொருள்கள்; particular thing not named at night, as sweet flag, needle etc. **2.** அக்கி(இ.வ.); herpes.

*[பேர் + சொல்லாதது.]*

**பேர்சொல்லாதவன்** *pēršollādavan,* பெ. (n.) முடிதிருத்துவோன்(இ.வ.); barber, as not to be named at night.

*[பேர் + சொல்லாதவன்]*

**பேர்சொல்(லு—)—தல்** *pērsol,* செ.குன்றாவி. (v.t.) ஒருவரது புகழைத் தாங்கிநிறுத்துதல் to hold one's fame.

*[பேர் + சொல்(லு)]*

**பேர்அட்டவணை** *pērattavaṇai,* பெ. (n.) பெயர்ப்பட்டியல்; index of names.

*[ பேர் + அட்டவணை]*

**பேர்த்தி** *pērtti,* பெ. (n.) மகனது அல்லது மகளது மகள்; grand-daughter, **2.** பாட்டி(இ.வ.); grandmother.

*[ பெயர்த்தி—பேர்த்தி பேரன் (ஆ.பா. பெயர்த்தி (பெ.பா.)]*

**பேர்த்து** *pērttu,* வி.எ. (adv.) **1.** பேர்த்தும் பார்க்க; see pērttum. "ஒருதலையாப் பேர்த்துள்ள வேண்டா பிறப்பு" (குறள்.357) **2.** மாற்றாக; in return. "பேர்த்து நாய் கௌவினா ரீங்கில்லை" (நாலடி.70)

*[ பெயர்த்து—பேர்த்து]*

**பேர்த்தும்** *pērttum,* வி.எ. (adv.) மறுபடியும்; again. 'பின்னைப் பழம்பொருட்கும் பேர்த்துமப் பெற்றியனே' (திருவாச. 7,9)

*[ பேர்த்து → பேர்த்தும்]*

**பேர்ந்தும்** *pērndaum,* வி.எ. (adv.) *பேர்த்தும்* பார்க்க; see *pērttum.*

**பேர்படை—த்தல்** *pēr-paḍai,* செ.கு.வி. (v.i.) *பேர்பெறுதல்* பார்க்க; see *pēr-peru.* "பேர்படைத்த விசையனுடன்" (பாரத. கிருட்டிண.1.)

*[ பெயர்—பேர் + படை—,]*

**பேர்பாதி** *pēr-pādi,* பெ. (n.) சரிபாதி; exactly half. just half.

*[பேர் + பாதி]*

*ஒகோ. செம்பாதி*

**பேர்பெறு—தல்** *pēr-peru,* செ.கு.வி. (v.i.) **1.** பெயர் கொள்ளுதல்; to bear a name. "மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர் பெற்ற" (நாலடி.59) **2.** புகழ்பெறுதல்; to be famous.

*[பேர் + பெறு—தல்]*

**பேர்மகிழ்** *pērmagiḻ,* பெ. (n.) பெருமகிழ்ச்சி; great mirth. "பேர்மகிழ் செய்யும் பெருநறா" (பரிபா.7,63.)

*[பெயர்–பேர் + மகிழ்]*

**பேர்வாசி[1]** *pēr-vāši,* பெ. (n.) பேர்மட்டுமுள்ளது; being only nominal. 'பேர்வாசியே யாம்படி நாம் புண்ணிமைத்த இருவகைப்பட்ட தர்மங்களையும் போக்குவார்'(A.டு.1,6,9) 2. ஒருவன் பெயரைக் குழந்தைக்கிடுவதால் அதற்குண்டாவதாகக் கருதும் குணம்(கொ.வ.); mcharacterintics believed to be aquired by a child being named of to a person.

**பேர்வாசி[2]** *pēr-vāši,* பெ. (n.) செம்பாதி; exaitly half.

**பேர்மல்லி** *pērmalli,* பெ. (n.) *கஞ்சாங்கோரை,* பார்க்க; (சங்.அக.), see *kañjaṅ-kōrai,* white basil.

**பேர்வரி** *pēr-vari,* பெ. (n.) *ஆள்வரி(தல்)* பார்க்க; see *āḷ-vari.*

**பேர்வழி** *pērvaḻi,* பெ. (n.) **1.** பெயர்ப்பட்டி (கொ.வ.) list of names, roll, register. **2.** மரபுவழி; genealogy. **3.** ஆள்; person, individual. அந்தப் பேர்வழி யார்?

*[பேர் + வழி]*

**பேர்வழிப்பட்டோலை** *pērvaḻi-.paṭṭōlai,* பெ. (n.) **1.** பேரேடு; ledger. **2.** பேர் பெயர்ப்பட்டியலின் நிரல்; index of names.

*[பேர்வழி + பட்டோலை]*

**பேர்வை[1]த்தல்** *pēr vai,* செ.குன்றாவி. (v.t.) **1.** பெயரிடுதல்; to charister, to name. **2.** குறிப்புப்பெயரிடுதல்; to nickname.

*[பேர் + வை 'வை' (து.வி.)]*

**பேர்வைத்தல்[2]** *pērvaittal,* பெ. (n.) **1.** பெயரிடும் சடங்கு; ceremony of namingachild. **2.** குறிப்புப் பெயரிடுகை; nicknaming.

*[பேர் + வைத்தல்]*

**பேரகத்தி** *pēragatti,* பெ. (n.) சிறியமரவகை; (யாழ்.அக.) west indian sesban.

*[பெரு→ பேர் + அகத்தி]*

**பேரகத்தியம்** *pēr-agattiyam,* பெ. (n.) அகத்தியமுனிவர் இயற்றியதாகக் கூறப் படுவதும் இறந்துபட்டதுமான இலக்கண நூல்; a grammar, attributed to Agastya, not now extant.

*[பெரு→ பேர் + அகத்தியம்]*

**பேரகலம்** *pērar-akalam,* பெ. (n.) பெருமகலம்; broadness.

*[பெரு→ பேர் + அகலம்]*

**பேரச்சம்** *pēr-atcham,* பெ. (n.) பெருந்திகில்; extreme fear.

*[பெரு→ பேர் + அச்சம்]*

**பேரசம்** *pērašam,* பெ. (n.) அகன்ற சதுப்பு நிலம்; large swap.

*[பெரு→ பேர் + அசம். அயம்–அசம்]*

**பேரட்டிக்கீரை** *pēraṭṭi-k-kcrai,* பெ. (n.) பெரும்பிண்ணாக்குக் கீரை(m.m.); see perum-piṇṇākku-k-kirai, jews-mallow.

*[புரட்டிக்கீரை—பேரட்டிக்கீரை.]*

**பேரடம்** *pēraḍam,* பெ. (n.) வெண்ணொச்சி (மூ.அ.); five-leaved chaste tree.

**பேரடி—த்தல்** *pēr-aḍi,* செ.குன்றாவி. (v.t.) பேரைப்பதிவுப் புத்தகத்தினின்று நீக்குதல்; to remove a name from a register.

*[பேர் + அடி —,]*

**பேரடிபடு[1]—தல்** *pēr-aḍipaḍu,* செ.குன்றாவி. (v.t.) எங்கும் பேசப்படுதல்; to talk about, famous. கு"ஊழல் முறையீட்டில் அமைச்சர் பேர் அடிபடுகிறது"

*[பேர் + அடிபடு]*

**பேரடிபடுதல்[2]** *pēr-aḍipaḍudal,* பெ. (n.) எங்கும் பேசப்படுகை; being talked about; being famous.

*[பேர் + அடிபடுதல்]*

**பேரண்டம்[1]** *pēr-aṇḍam,* பெ. (n.) 1. வியனுலகு (சங். அக.); universe. 2. மண்டையோடு (சங்.அக.); skill. 3. மூளை (சங்.அக.); brain.

*[பெரு→பேர் +அண்டம்]*

(skt. aṇḍa → *த. அண்டம்)*

**பேரண்டம்[2]** *pēr-aṇḍam,* பெ. (n.) நரி (யாழ்.அக.); fox



**பேரணி[1]** *pēr-aṇi,* பெ. (n.) 1. படையின் பின்னணி (பிங்.); the rear of an army. '*பேரணியி னின்ற பெருங்களிறுகள்*' (சீவக.277, உரை.) 2. நடுப்படை; maind body or centre of an army. 3. *பேரணிகலம்* (பிங்.); பார்க்க 4. கிம்புரி; ornamental ring put on the tusks of elephants and other animals. '*பேரணி யிலங்கொளி மருப்பிற் களிறும்*' (பரிபா.13,35.)

*[பல்→பரு→பெரு பெரு→பேர்+அணி]*

**பேரணி[2]** *pēr-aṇi,* பெ. (n.) ஒருங்கு திரளுதல்; assembly of an organisation.

*[பல் + பரு + பெரு + பேர் + அணி]*

**பேரணிகலம்** *pēr-aṇi-kalam,* பெ. (n.) பெரும்பதக்கம்; a big ornament worn on the chest. '*பேரணிகல மணிந்த முலையாரும்*' (சீவக.2340,உரை.)

*[பெரு→பேர் + அணிகலம்]*

**பேரணை** *pēr-aṇai,* பெ. (n.) 1. பெரிய அணைக்கட்டு; big dam. 2. பெருந்தடை; great obstacle. '*சீர்த்த பேரணை தன்னையும் சிந்தின*' (கம்பரா.முதற்போர்.13.)

*[பெரு → பேர் + அணை]*

**பேரத்தி** *pēr-atti,* பெ. (n.) நரிமுள்ளிச்செடி; indian night shade.

**பேரதிர்ச்சி** *pērathircci,* பெ. (n.) பெருந்திகில்; great shock

*[பெரு→ பேர் + அதிர்ச்சி]*

**பேரநீதி** *pēra-nithi,* பெ. (n.) பெருஅநீதி; great injustice.

*[பெரு→ பேர் +* skṭ a-niti. *த.அநீதி]*

**பேரப்பன்** *pēr-appan̲,* பெ. (n.) தந்தையின் தமையன்(s.i.i.ii,94,20.); father's elder brother.

*[பேர் + அப்பன்]*

**பேரப்பிள்ளை** *pēra-p-pil̤l̤ai,* பெ. (n.) *பேரன்,* பார்க்க; see *pēran̲.*

*[பேரன் + பிள்ளை]*

**பேரம்**[1] *pēram,* பெ. (n.) **1.** விற்பனை sale, trade. **2.** ஒப்பந்தத்திற்கு முன்பேசும் விலைப்பேச்சு; bargaining higgling and haggling. 'பேரஞ் சொல்லாமற் சரியாக சொல்லு **3.** அருவிலை; high value.

skt. bēra. தெ. பேரமு; க.பேர

*[ பெயரம்—பேரம்]*

**பேரம்**[2] *pēram,* பெ. (n.) **1.** வடிவம் (நன். 273,மயிலை.); form, shape. **2.** உடம்பு; body. **3.** (விக்கிரகம்) திருவுருவச்சிலை; idol. *'உத்சவ பேரம்'*

*[பேர்→ பேரம்]*

**பேரம்பலம்** *pēr-ambalam,* பெ. (n.) தில்லைத் திருக்கோயிலிலுள்ள பெருமன்றம்; sacred hall in chidambaram. *'சேயவன் திருப்பேரம்பலம்'* (பெரியபு. பாயி.8.)

*[பெரு→ பேர் + அம்பலம்]*

**பேரம்பேசுதல்** *pēram-pēšudal,* பெ. (n.) *பேரம்*[1] பார்க்க, see *pēram*[1]

*[பேரம் + பேசுதல்]*

**பேரமட்டி** *pēramaaṭṭi,* பெ. (n.) *பேராமுட்டி.* பார்க்க; see *pērāmuṭṭi* (யாழ்.அக.)

*[பேராமுட்டி,—பேரமட்டி]*

**பேரமுட்டி** *pēramutti,* பெ. (n.) *பேராமுட்டி* பார்க்க; see *pērāmuṭṭi* (யாழ்.அக.)

*[பேராமுட்டி – பேரமுட்டி]*

**பேரரசன்** *pēr-arašan̲,* பெ. (n.) பேரரசை ஆளும் மன்னன்; மாமன்னன்; emperor.

*[பேர்+ அரசன்]*

**பேரரசு** *pēr-arašu,* பெ. (n.) பல நாடுகளைக் கொண்ட பரந்த நிலப்பரப்பைத் தன் நேரடிக் கட்டுப்பாட்டில் கொண்டு ஆட்சி நடத்தும் அரசு; empire.

*[பேர்+ அரசு]*

**பேரரத்தை** *pēr-arattai,* பெ. (n.) மருந்துச் செடிவகை,(பதார்த்த.984.) big galangal.

*[பெரு → பேர்– அரத்தை]*

**பேரவை** *per-avai,* பெ. (n.) 1. சட்டமன்றம்; legislature assembly. 2. குறிப்பிட்ட ஒரு தரப்பினர் தங்களுக்காக ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பு: forum, union. மாணவர் பேரவை, தொழிற்சங்கம் பேரவை.

**பேரவைத்தலைவர்** *pēr-avai-t-talaivar,* பெ. (n.) மக்களவை, மாநிலங்களவை, சட்டமன்றம் ஆகியவற்றில் அவை நடவடிக்ககளை நடுவர் போல் இருந்து நடத்திடும் பொறுப்புவகிப்பவர்; speake of the parliament or the state legislative assembly.

*[பேரவை + தலைவர்]*

**பேரருவி** *pēr-aruvi,* பெ. (n.) பெரிய அருவி; (சூடா.) huge waterfall

*[பெரு→ பேர் + அருவி]*

**பேரருளாளன்** *pēr-aruḷ-āḷaṉ,* பெ. (n.) 1. மிக்க இரக்கமுள்ளவன்; most gracious one, as god *'பேரருளாளர் போலும்'* (தேவா.439,1.) 2. சின்ன காஞ்சீபுரத்திற் கோயில் கொண்டுள்ள திருமால் (குருபரம்.170.); visṇu, as worshipped at little conjeevaram.

*[பெரு→ பேர் + அருளாளன்]*

**பேரருளுடைமை** *pēr-aruḷ-uḍaimai,* பெ. (n.) சிவனெண் குணத்துள் ஒன்றாகிய மிகுந்த அருளையுடைமை(குறள்,9,உரை.) being of boundless grace, one of šivaṉ-eṇ-guṇam, q.v.

*[பெரு→ பேர் + அருளுடைமை]*

**பேரலை** *pēr-alai,* பெ. (n.) கடலின் தோன்றும் பெரிய அலை; ground-swell.

*[பெரு→ பேர் + அலை]*

**பேரவ்வை** *pēr-avvai,* பெ. (n.) பெரியதாய்(தல்); elder maternal aunt.

*[பெரு→ பேர் + அவ்வை]*

**பேரவரை** *pēr-avarai,* பெ. (n.) அவரை வகை(வின்); a large species of Egyption bean

*[பெரு→ பேர்+ அவரை]*

**பேரவியல்** *pēr-aviyal,* பெ. (n.) பெரும்பொங்கல்:(யாழ்ப்.) cooking rice on a large scale, as for a company of religious mendicants.

*[பெரு→ பேர் + அவியல்]*

**பேரழகு** *pēralaku,* பெ. (n.) பொலிவான அழகு; good looking.

*[பெரு→ பேர் + அழகு]*

**பேரழை–த்தல்** *pēr-aḻai,* செ.கு.வி. (v.i.) வருகைக் கணக்கெடுத்தல்(புதுவை); to take the roll-call or attendance.

*[பேர் + அழை–,]*

**பேரளவு** *pēr-aḷavu,* பெ. (n.) 1. பேரறிவு; great wisdom. *'பேரளவுடைய அர்ஜூனன்'* (ஈடு,2,8,6.) 2. பெருஞ்சிறப்பு; great respect. *'ஆர்புனை வேந்தற்கப் பேரளவியற்றி'* (மணிமே.5,116.) 3. பெருமளவு; large quantity.

*[பெரு→பேர் + அளவு]*

**பேரறம்** *pēraram,* பெ. (n.) *பேய்க்கொடை* பார்க்க; see *peykkodai.*

*[பெரு→பேர் + அறம்]*

**பேரறிவாளன்** *pēr-arivāḷaṉ,* பெ. (n.) உயர்ந்த அறிவுடையவன்;person of mature under standing, wise man. '*உலகவாம் பேரறி வாளன் திரு*' (குறள்,215.)

*[பெரு→பேர் + அறிவாளன்]*

**பேரறநூல்** *pērara-nul,* பெ. (n.) திருமறைநூல்; moral instruction look. திருக்குறள் இனம், மொழிபாகுபாடின்றி அனைவருக்கும் பொதுவான பேரற நூலாகும்.

*[பெரு→பேர் + அறநூல்]*

**பேரறநெறி** *perara-neeri,* பெ. (n.) நயன்மைநெறி; moralethics.திருக்குறள் அனைத்து மொழியினர்க்கும் நயன்மை கூறும் அற நூலாகும்.

*[பேரறம் + நெறி]*

**பேரறிவு**[1] *pēr-arivu,* பெ. (n.) தீமை செய்தார்க்கும் தீமை செய்யாதிருக்கும் நல்லறிவு; good-sense. **2.** அறிவினுள் எல்லாந் தலையென்பதீயசெறுவார்க்கும் செய்யாவிடல்.(கு.203).

*[பெரு→பேர்+ அறிவு]*

**பேரறிவு**[2] *pēr-arivu,* பெ. (n.) **1.** பகுத்தறிவு; sense of discrimnation. **2.** நூலறிவு; divine knowledge; spiritual knowledge **3.** மூதறிவு; uncommon mental powers, high mental attainments; great wisdom. '*தம்பேரறிவு தோன்ற நல்லந்துவனார் செய்யுட்செய்தார்*' (கலித்.142,உரை.)

*[பெரு→பேர் + அறிவு]*

**பேரறிவுத்திறம்** *pērarivu-t-tiram,* பெ. (n.) பகுத்தறிவுத்திறம்; knowledge of common sense.

*[பேரறிவு + திறம்]*

**பேரறுகு** *pēr-arugu,* பெ. (n.) அறுகுவகை(வின்); elephant bermuda grass.

*[பெரு→பேர் + அறுகு]*

**பேரன்** *pēraṉ,* பெ. (n.) **1.** மகன் அல்லது மகளின் மகன்; grandson, as bearing the grandfather's name. **2.** பாட்டன்; grandfather '*உங்கள் பேரனார்தந் தேசுடை யெழுத்தே யாகில்*' (பெரியபு.தடுத்தாட்.60.)

*[பெயரன்–பேரன்]*

**பேராசிரியர்**[1] *pēr-āśiriyar,* பெ. (n.) தொல் காப்பியத்திற்கும் திருக்கோவையார்க்கும் உரையிட்ட ஆசிரியர்; a commentator of Tolkāppiyam and Tiru-k-kōvaiyār.

*[பெரு→பேர் + ஆசிரியர்]*

**பேராசிரியர்**[2] *pēr-āśiriyar,* பெ. (n.) பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும் பணியாற்றும் உயர்நிலைப் பதிவுபெற்ற ஆசிரியர்; professor. தேவநேயப்பாவாணர் சேலம் நகராண்மைக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றினார். (உ.வ.)

*[பெரு(மை)→பேர் + ஆசிரியர்]*

**பேராசிரியை** *per-āsiriyai,* பெ. (n.) பெண் பேராசிரியர்; women professor.

பேராசிரியன் ஆ.பா
பேராசிரியை பெ.பா.

**பேராசை** *pēr-ācai,* பெ. (n.) 1. பெருவிருப்பம்; intense desire. *'பேராசை வாரியனை'* (திருவாச.8,2.) 2. மிக்க பொருளாசை; avarice, *'பேராசைக் காரனைப் பெரும்புளுகன் வெல்லுவான்'*

*[பெரு → பேர் + ஆசை]*

**பேராசைக்காரன்** *pērašai-k-kāran,* பெ. (n.) பொருளாசை கொண்டவன்; avarice perspm.

*"பேராசைக் காரனடா பார்ப்பான்"*

*[பேராசை + காரன்]*

*'காரன்' வினைமுதணர்த்தும் ஆண்பாலீறு*

**பேராட்டி** *pēr-aṭṭi,* பெ. (n.) பெருமையுடையவள்; lady of ominence. *'பேராட்டி சீராட்டும் பிள்ளையார்'* (கோயிற்பு.பாயி.7.)

*[பெரு→ பேர் + ஆட்டி]*

*'ஆட்டி'* பெ. பா. ஈறு.

**பேராண்டி** *pēr-āṇḍi,* பெ. (n.) பேரன்; grandson

*[ பேர் → பேரன் → பேரான் → பேராண்டி ]*

**பேராண்டு** *pēr-āṇḍu,* பெ. (n.) அறுபது ஆண்டு (வருடங்) கொண்ட காலம் (வின்); jupiter cycle of 60 years.

*[ பெரு – பேர், பேர் + ஆண்டு ]*

'யாண்டு → ஆண்டு

**பேராண்முல்லை** *pēr-āṇ-mullai,* பெ (n.) சினமிக்க மன்னன் போர்க்களத்தைக் கைக் கொண்டதைக் கூறும் புறத்துறை;(பு.வெ.8,26.) (purap) theme describing a wrathful king becomming master of the situation in a battle- field.

*[பெரு →பேர்+ ஆண் + முல்லை]*

**பேராண்மை**[1] *pēr-āṇmai,* பெ. (n.) வினைத்திறம்(வல்லமை); manly strenth.

*[பெரு → பேர் + ஆண்மை]*

**பேராண்மை**[2] *pēr-āṇmai,* பெ. (n.) 1. மிக்க வீரம்; great valour or prowess; heroism. 'போரண்மை என்ப தறுகண்' (குறள் 773) 2. மானம்; honour. "பேராண்மை வேண்டுபவர்" (குறள்,962) 3. அரிய வீரச் செயல்(திவா); heroic exploit, feat of arms.

*[பெரு→பேர்+ஆண்மை]*

**பேராண்வஞ்சி** *pēr-āṇ-vañji,* பெ. (n.) பகைவர் பொரும் செருவைத்தொலைத்த தலைமை யையுடைய வீரர்க்குப் பெரிதுங் கொடுத்தலைக் கூறும் புறத்துறை;(பு.வெ.3,9.) theme describing gifts made to soldiers who put the enemy's army to rout.

*[பெரு→பேர் + ஆண் + வஞ்சி]*

**பேராத்தி** *pēr-ātti,* பெ. (n.) *தும்பை*[1] பார்க்க;(சங்.அக) see *tumbai*[1] white dead nettlce.

*[பேர்+ஆத்தி.]*

**பேராந்தை** *pēr-āṇdai,* பெ. (n.) 1. நிலாமுகிப்புள் (பிங்); greek partridge. 2. ஆந்தைவகை; rock-horned owl. *'மலையின்கட் பேராந்தை யோடு கூடி யொலிக்கும்'* (புறநா.170,உரை)

*[பெரு →பேர்+ஆந்தை]*

**பேராப்பணம்** *pērāppaṇam,* பெ. (n.) 1. கணக்கின் விடை; solution of a mathematical problem 2. தீர்ந்த முடிவு; net result 3. நிகர ஊதியம் (லாபம்); net profit

*[பெயர் →பேர்+ஆ+பணம்] 'ஆ' எதிர்மறை இடைநிலை*

**பேராபத்து** *pērāpattu,* பெ. (n.) பெருமிடர்; great misfortune.

*[பெரும் +* skt.a-pad. *த.ஆபத்து]*

**பேராமட்டி** *pērā-maṭṭi,* பெ. (n.) *பேராமுட்டி* பார்க்க;(யாழ்.அக) see *pērāmuṭṭi*

*[பேராமுட்டி– பேராமட்டி]*

**பேராமணக்கு** *pēr-āmaṇakku,* பெ. (n.) *ஆமணக்கு;*(மூ.அ) castor plant. பார்க்க; see *āmaṇakku.*

*[பெரு–பேர்+ஆமணக்கு]*

**பேராமல்லி** *pēr-ā-malli,* பெ. (n.) **1.** *பேராமல் லிகை*(வின்) பார்க்க; see *pērāmalligai* **2.** கொத்த மல்லிவகை;(மூ.அ) a kind of coriander.

*[பெரு–பேர்+ஆ+மல்லி]*

**பேராமல்லிகை** *pēr-ā-malligai,* பெ. (n.) **1.**பெருமல்லிகை; single flowered a rabian jasmine.

*[பெரு → பேர்+ஆ + மல்லிகை]*

**பேராமுட்டி** *pēr-ā-muṭṭi,* பெ. (n.) **1.** செடிவகை (பதார்த்த.**469**) ; pink-tinged white sticky mallow

*[பெருமை + ஆ + முட்டி]*

**பேராயம்** *pēr-āyam,* பெ. (n.) *எண்பேராயம்* (திவா)பார்க்க; see *eṇpērāyam,* the eight groups of retinues.

*[பெரு →பேர்+ஆயம்]*

**பேராயிரம்** *pēr-āyiram,* பெ. (n.) இறைவனுக் குள்ள ஆயிரம் பெயர்கள்(தேவா.**896.5**); the thousand names of any particular deity.

*[பேர் + ஆயிரம்]*

**பேரார்வம்** *pēr-arvam,* பெ. (n.) மிகுவிருப்பம்; burning desire.

*[பெரு → பேர் + ஆர்வம்]*

**பேராரம்** *pēr-āram,* பெ. (n.) முத்தாலான அணிகலவகை; a large necklace of pearls. *'நிலவுவீசு பேரார நிபுடமாலை'* (தக்கயாகப்.**106.**)

*[பெருபேர் + ஆரம்]*

**பேராரால்** *pēr-āral,* பெ. (n.) இரண்டடிநீளம் வளர்வதும் பழுப்பு நிறமுள்ளதுமான மீன்வகை (பதார்த்த.**919**); thorny backed eel, rich brown, attaining more than 2ft.in.length

*[பெரு →பேர் + ஆரல்→ஆரால்]*



**பேராலவட்டம்** *pēr-ālavaṭṭam,* பெ. (n.) பெரியவிசிறிவகை; a large, ornamental, circular fan. (பிங்.) (சீவக.**1906,** உரை)

*[பேர்+ஆலவட்டம்]*

**பேராவல்** *pēraval,* பெ. (n.) வேணவா; earnest desire.

*[பெரும்+ஆவல்]*

**பேராளன்** *pēr-āļaṉ,* பெ. (n.) **1.** பெருமை யுடையவன்; renowned personage. *'உம்பராளும் பேராளன்'* (திவ்.பெரியதி,7,4,4.) **2.** பல பெயர்களைப் பெற்றவன்; one who bears several names. "பேராளன் பேரோதும் பெரியோரை" (திவ். திருநெடுந்.20) **3.** 5ஆவது விண்மீன் (பிங்); the fifth makṣatra **4.** 4ஆவது விண்மீன்;(சூடா) nakṣatra

*[பேர்+ஆளன்]*

**பேராளி** *pēr-āļi,* பெ. (n.) **1.** ஒருவன் பெயரைக் கொண்டவன்–வள்; namesake **2.** புகழ் வாய்ந்தவன்–வள்(யாழ்.அக); famous person.

*[பேர்+ஆளி]*

'இ' வினைமுதலீறு

**பேராற்றல்** *pērār-artal,* பெ. (n.) போரிடும் ஆற்றல்; superior skill great power.

*[பெருமை + ஆற்றல் → பேராற்றல்]*

**பேராறு** *pēr-āṟu,* பெ. (n.) **1.** மலையிற் பிறந்து கடலில் நேரே கலக்கும் நீரோட்டம்; river rising in a mountain and emptying into a sea. **2.** மேல்கடலிற் கலக்கும் ஓர் ஆறு; a river flowing west-wards from the western ghats. *'அரசன் பேராற்றங் கரையினின்று போந்து'* (சிலப்.25, 180, அரும்.) **3.** கிருட்டிணா நதி; the river krishā "நிறைந்து வரும் பேராறு மி ழிந்து" (கலிங்.355)

*[பெரு→பேர்+ ஆறு]*

**பேரானந்தம்** *pēr-āṉandam,* பெ. (n.) மேலான மகிழ்ச்சி (பரமானந்தம்); supreme bliss. *'பற்றிய பேரானந்தம் பாடுதுங் காணம்மானாய்'* (திருவாச.8,28)

*[பெருமை + skt.ā-nanda. த.ஆனந்தம்]*

**பேரி**[1] *pēri,* பெ. (n.) **1.**முரசு; kettle-drum. *'சங்குபேரி முழங்கிய தானையே'* (கம்பரா.எழுச்.28) **2.** பறை(வின்);drum

*[பெரு→பேர் → பேரி]*



**பேரிகை** *pērigai,* பெ (n.) *பேரி*[1] (சிலப்.3.27.உரை) பார்க்க; see *perī*[2]

skt bhērikā

*[பேரி + பேரிகை]*

'இகை' சொல்லாக்க ஈறு

**பேரிசு** *pērigai,* பெ (n.) **1.** கணக்கின் மொத்தத்தொகை; sum or aggregate of an account. **2.** ஊரார் கட்டும் மொத்தவரி; total amount of a revenue assessment.

*[பெரு→பேரி → பேரிசு]*

**பேரிசை** *pēr-iśai,* பெ. (n.) **1.** பெரும்புகழ்; great renown. *'பேரிசை நன்னன்'*

(மதுரைக்.618) 2. கடைச்சங்கத்து வழங்கிய ஓர் இசை நூல் (இறை.5 உரை); a treatise on music, of the last sangam, not now extant.

*[பெரு → பேர்+ இசை]*

**பேரிடர்** *pēritar,* பெ. (n.) பெருந்துன்பம்; great trouble.

*[பெரு → பேர் + இடர்]*

**பேரிடு–தல்** *pēir-idu-,* செ.கு.வி. (v.i.) பெயரிடு–தல் பார்க்க; see peyaridu '*மானிட சாதியின் பேரிடு மாதர்காள்*'. (திவ்.பெரியாழ்.4,6,2)

*[பெயிரிடு – தல் → பேரிடு – தல்]*

**பேரியம்** *pēriyam-,* பெ. (n.) *பேரி*[1] பார்க்க; see *pēri* '*பேரியங்கண் முருடாகுளி*'. (கம்பரா. இராவ.தானை.12.)

*[பெரு → பேர் + இயம்]*

**பேரியல்** *pēr-iyal,* பெ. (n.) பெருந்தன்மை; noble character.'*தில்லைப் பேரியலூரார்*'. (திருக்கோ.311.)

*[பெரு → பேர் + இயல்]*

**பேரியல்பு** *pēr-iyalpu,* பெ. (n.) கெழுதகைமை; good manner.

*[பெரு → பேர் + இயல்பு]*

**பேரிரக்கம்** *pēr-irakkam,* பெ. (n.) கழிவிரக்கம்; repentance.

*[பெரு → பேர் + இரக்கம்]*

**பேரியற் காஞ்சி** *pēr-iyar-kāñji,* பெ. (n.) கேட்டினியல்புகளைப் புலவர் எடுத்துக் கூறுந்துறைவகை (திவா); theme in which a poet describes the nature of evil

*[பெரு→பேர் + இ+காஞ்சி]*

**பேரியாழ்** *pēriyāl,* பெ. (n.) 1. நால்வகை யாழ்களுள் இருபத்தொரு நரம்புள்ளது (சிலப்.3,26.உரை); a lute of ṟā strings, one of four yāḷ.

*[பெரு→பேர்+யாழ்]*

**பேரியாறு** *pēr-i-yāṟu,* பெ. (n.) 1. *பேராறு*1,2 பார்க்க; see *pērwnāṟu*1,2 2. கங்கைப் பேரியாற்று (சிலப்.28,121) பெருமலை விலங்கிய பேரியாற்றடைகரை (சிலப்.25,22).

*[பெரு→பேர்+யாறு]*

**பேரிரவல்** *pēriraval,* பெ. (n.) மாற்றுப் பெயரில் இலங்குதல்; benami transaction (loc)

*[பெயர்→பேர் + இரவல்]*

**பேரிரைச்சல்** *pērai-chal,* பெ. (n.) பெருங்கூச்சல்; uproar.

*[பெரு→ பேர்+ இரைச்சல்]*

**பேரிருக்கை** *pērirukkai,* பெ. (n.) *தோணா முகம்*(வின்) பார்க்க; see *tōṇāmugam*,town surrounded by a moat

*[பெரு – பேர் + இருக்கை]*

**பேரிரைப்பை** *pēriraippai,* பெ. (n.) அசை போடும் விலங்குகளின் மேல் வயிறு(கால்.வி.); first stomach of ruminants, rumen

*[பெரு → பேர் + இரைப்பை]*

**பேரிரையான்** *pēr-iraiyān,* பெ. (n.) மிகுதியாக உண்போன்; glutton. *'நிற்குங் கழிபே ரிரையான்க ணோய்'* (குறள்.946)

*[பெரு →பேர் + இரையான்]*

**பேரில்** *pēri,* இடை (prep.) 1. மீது; on, about. அவன் பேரில் குற்றமில்லை. 2. பிறகு; after. அவன் சொன்னதன்பேரில் வந்தான்

*[பேர் → பேரில் 'இல்' (ஐந்தாம்வே.2. 62.2)]*

**பேரிலக்கம்** *pērilakkam,* பெ. (n.) பின்ன மல்லாத முழுவெண்; integer,whole number.

*[பெரு→பேர் + இலக்கம்]*

**பேரிழப்பு** *pērilappu,* பெ. (n.) மிகுந்த இழப்பு; great loss better loose.

*[பெரும் → பேர்+இழப்பு → பேரிழப்பு]*

**பேரிழவு** *pērilavu,* பெ. (n.) 1. மிகுந்த இழப்பு; great calamity. 2. தொல்லை (கொ.வ.); worry, bother.

*[பெரு→பேர் + இழவு]*

**பேரிளம் பெண்** *pēriḷam,peṇ* பெ. (n.) 1. எழுவகைப் பருவ மகளிருள் முப்பத்திரண்டு அகவைக்கு மேல் நாற்பது அகவை வரையுள்ள பெண் (பிங்); women between the ages of 32 and 40. 2. முப்பதுக்கு மேல் ஐம்பத்தைந்து வரை அகவையுள்ள பெண் (கொக்கோ.); women between the ages of 30 and 55.

*[பெரு → பேர் + இளம் + பெண்]*

**பேரிளமை** *pēriḷamai,* பெ. (n.) 1. இளமை தொடக்கம்; early period of youthfulness. "அணைந்த பேரிளமையாலே தனை நனிமதித்து" (திருவாலவா.13.15) 2. இளமை–முதுமை இடைப்பட்ட அகவை;middle age. "நகரத்தோமும் பேரிளமையோமும்" (s.I.I.i.65)

*[பெரு→பேர் + இளமை]*

**பேரின்பம்** *pērinbam,* பெ. (n.) 1. மேலான இன்பம் (பிங்); supreme bliess "அளவில் பேரின்பத் தடியரோ டிருந்தமை" (திவ். திருவாய். 10.3.11) 2. வீட்டின்பம்; heavenly bliss, salvation. "பேரின்பத் தோங்கும்..... நாதப்பறை" (திருவாச.198).

*[பெரு→பேர்+இன்பம்]*

**பேரின்ப வாழ்வு** *pērinba vālvu,* பெ. (n.) வீட்டுலக வாழ்வு; blissful life. "நம்முடனாம் பேரின்ப வாழ்வு சேர்வார்" (குஞ்சிப்பு.தழுவ.65)

*[பேரின்பம் + வாழ்வு]*

**பேரீகம்** *pērigam,* பெ (n.) 1. வட்டத்திருப்பி (மலை); Indian pareira 2. பிரண்டை(சங்.அக.) square. stalked vine.

**பேரீச்சு** *pēriccu,* பெ. (n.) *பேரீந்து*(பதார்த்த.525) பார்க்க; see *pērindu*

*[பேரீந்து – பேரீச்சு]*

**பேரீஞ்சு** *pērinju,* பெ. (n.) *பேரீந்து* பார்க்க; see *pērindu*

*[பேரீந்து – பேரீஞ்சு]*

**பேரீந்து** *pērindu,* பெ. (n.) ஈந்துவகை(சூடா.); date.palm

*[பெரு→பேர் + ஈந்து]*

**பேரு**[1] *pēru,* பெ. (n.) சிற்றூரில் நீர்பாய்ச்சு வோனுக்குக் கொடுக்கும் வரி(R.T); a fee paid to a person authorised to distribute water for irrigation

*[பெரு – பேரு]*

**பேரு**[2] *pēru,* பெ. (n.) **1.** கடல்; sea, ocean **2.** ஞாயிறு; sun **3.** தீ; fire **4.** பொன்மலை (யாழ்.அக.); Mt.Mēru.

skt. pēru

*[ பெரு – பேரு]*

**பேருண்டி** *pēr-uṇḍi,* பெ. (n.) **1.** மிகுதியாயுட் கொள்ளும் உணவு (பிங்); gluttony. **2.** ஒரு நாளிற் கொள்ளும்இன்றியமையா உணவு; principal meal.

*[பெரு→ பேர் + உண்டி]*

**பேருண்டிக்கலம்** *pērunti-k-kalam,* பெ. (n.) பெருஞ்சமையல் ஏனம்; a big cooking vessel.

*[பேருண்டி +கலம்]*

**பேருண்டிக்காரன்** *pērunti-k-karan,* பெ. (n.) *பேருண்டியாளன்* பார்க்க; see *peruntiyalan.*

*[பேருண்டி +காரன்]*

**பேருண்டியாளன்** *pēr-uṇḍi-y-āḷaṉ,* பெ. (n.) மிகவுண்போன்;glutton.

*[பேருண்டி + ஆளன்]*

**பேருண்டிவேட்கை** *pērunti-vetkai,* பெ. (n.) பெருந்தீனி வேட்கை; voracity of appentite.

*[பேருண்டி + வேட்கை]*

**பேருதவி** *pērudavi,* பெ. (n.) பெருநன்றி; help in dire distress, great farour. "பேருதவிக் கைமாறா" (திவ்.திருவாய்.8,1,10)

*[ பெரு → பேர் + உதவி]*

**பேருபகாரம்** *pērubakāram,* பெ. (n.) *பேருதவி* பார்க்க; see *pēr-udavi.*

*[பெரு → பேர் +* skṭ. upa- kāra. *த. உபகாரம்]*

**பேருவகை** *pēruvagai,* பெ. (n.) பெருமகிழ்ச்சி; great joy.

*[பெரும் → பேர் + உவகை]*

**பேருமரி** *pēr-umari,* பெ. (n.) வழலையும்(சோப்பும்) கண்ணாடியுஞ் செய்ய உதவும் உமரிவகை;(யாழ்.அக.) a plant that yiedls a coarse kind of barilla for soap and glass.

*[ பெரு → பேர் + உமரி]*

**பேருயிர்** *pēr-uyir,* பெ. (n.) **1.** கடவுள்; god, as Supreme Being. *'உண்டுமிழ்ந்தளந்த பேருயிரேயோ''* (திவ்.திருவாய்8.1.5) **2.** பெருங்காற்று;(தைலவ.தைல) boisterous wind

*[ பெரு → பேர் + உயிர்]*

**பேருரியோன்** *pēruuriyōṉ,* பெ. (n.) தோல்வினைஞன்; cobbeer (தைலவ.தைல)

*[ பெரு→பேர் +உரி→உரியோன்]*

**பேருறக்கம்** *pēr-urakkam,* பெ (n.) 1. பெருந்தூக்கம்; sound sleep. *'ஈதென்ன பேருறக்கம்'* (திவ்.திருப்பா.12) 2. இறப்பு; death. "உறங்கினார் பேருறக்கங் கொண்டார்" (அருட்பா.1.நெஞ்சறி. 477).

*[பேர் +உறக்கம்]*

**பேரூர்** *pēr-ūr,* பெ. (n.) 1. நகரம்; city *'காவலன் பேரூர் கனையெரி யூட்டிய'* (மணிமே.2,54) 2. மருத நிலத்தூர் (இறை.கள.1,19); large town in an agricultural tract. 3. கோயம்புத்தூர் மாவட்டத்து அமைந்த சிவன் கோயில் a siva shrine in coimbatore District *கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர்'* (பெரியபு. ஏயர்கோன்.88)

*[பெரும் + ஊர் → பேரூர்]*

**பேரூர்ப்புராணம்** *pērūr.p.purāṇam,* பெ. (n.) கோயம்புத்தூர் மாவட்டத்திள்ள பேரூர்ச் சிறப்பைப் பற்றிக் கச்சியப்ப முனிவரியற்றிய தொன்மம்; a purāṇam in verse on pērūr in coimbatore district, by kacciyappa . muṉivar.

*[பேரூர் + புராணம்]*

**பேருழைப்பு** *pērulaippu,* பெ. (n.) பெரும்பாடு; great strain.

*[பெரு→ பேர் + உழைப்பு]*

**பேருள்ளம்** *pēr-ullam,* பெ. (n.) பெருந்தகைப்பண்பு; charity mind.

*[பெரு→ பேர் + ஊக்கம்]*

**பேரெடு—த்தல்**[1] *pēr-eḍu,* செ.கு.வி (v.i.) புகழ்பெறுதல்; to become famous.

*[பெரு→பேர் +எடு—,]*

**பேரெடு—த்தல்**[2] *pēreḍu,* செ.குன்றாவி (v.i.) பட்டியலிலிருந்து பெயரை நீக்கி விடுதல்; to strike off the roll

*[பெயர் + எடு—,]*

**பேரெண்** *pēr-ṉen,* பெ. (n.) 1. பெருந்தொகை; high number 2. நாற்சீர் ஈரடியாய் வரும் அம்போதரங்கவுறுப்பு வகை (காரிகை, செய்.10 உரை); (pros.) a variety of ambōdaraṅgam consisting of double line of four feet each.

*[பெரு→ பேர்+ எண்]*

**பேரெல்லை** *pēr-ellai,* பெ. (n.) செய்யுளின் அடிப் பெருமைக்கு அமைந்த வரையறை; maximum limit, as of the number of lines in a verse, opp. to ciṟṟellai

*[பெரு→ பேர்+ எல்லை]*

**பேரெல்லைவெண்பா** *pēr-ellai-veṇbā,* பெ. (n.) எட்டடி வெண்பா(யாழ்.அக); a veṇba having eight lines.

*[பேரெல்லை + வெண்பா]*

**பேரெலி** *pēreli,* பெ. (n.) பெரிய எலிவகை; a kind of large rat பன்மயிர்ப்பேரெலி (சீவக. 1898)

க.பேரிலி

*[பெரு→ பேர் + எலி]*

**பேரெலுமிச்சை** *pērelumiccai,* பெ. (n.) எலுமிச்சை வகை; citron lemon.

*[பெரு→ பேர் + எலுமிச்சை]*

**பேரெள்** *pērel,* பெ. (n.) எள்வகை; a species of large sesame.

*[பெரு→ பேர்+ எள்]*

**பேரேடு** *pērēḍu,* பெ. (n.) பேர்வழி இனக்கணக்கு; ledger.

*[பெரு → பேர் + ஏடு]*

**பேரேலம்** *pērēlam,* பெ. (n.) ஏலவகை; great cardamom.

*[பெரு → பேர் + ஏலம்]*

**பேரேற்ற பண்டாரம்** *pērḍēṟṟāpaṇram,* பெ. (n.) தமிழ்ச் சிவனிய வேளாளருக்குத் திருவாங்கூர் அரசர் வழங்கும் பட்டப்பெயர்(நாஞ்); a title conferred by the Travancore kinds on the Tamil šaiva vēḷāḷas

*[பேர் + ஏற்ற + பண்டாரம்]*

**பேரை** *pērai,* பெ. (n.) நீர்(அக.நி); water.

**பேரொலி** *pēroli,* பெ. (n.) பெருங்கூச்சல்; loud noice.

*[பெரு→ பேர் + ஒலி]*

**பேரொளி** *pēroḷi,* பெ. (n.) **1.** மிகுந்த ஒளி; great light, lustre. "பேரொளியேசேர்வன" (திருவிருத்.14) **2.** ஞாயிறு; sun **3.** திங்கள்; moon. "பேரொளியைக் கூடி யரவங் கொள்ளுநாள்" (சைவச பொது.13) **4.** கடவுள் god, as the supreme light. "சித்தாந்தப் பேரொளியை" (தாயு,பொருள்.2)

*[பெரு → பேர் + ஒளி]*

**பேல்¹(லு)–தல்** *pēl-,* **செ.குன்றா.வி.** (v.t.) **செ.கு.வி.** (v.i.) *பேள்* பார்க்க; *see pēḷ.*

*[பீர் → பீல் → பேல்]*

**பேல்¹** *pēl,* பெ. (n.) விரைவு; speed, swiftness.

*[பீர் → பீல் → பேல்]*

**பேல்²** *pēl,* பெ. (n.) கால் நரம்பில் உண்டை கட்டும் குதிரை நோய்வகை; a horse-desease characterised by tumour in the leg. (அசுவசா. 117.)

**பேலகம்** *pēlakam,* பெ. (n.) தெப்பம்; (யாழ்.அக.) boat.

*[பேல் → பேலகம்]*

**பேலம்** *pēlam,* பெ. (n.) **1.** விதை; testicle. **2.** சிறுபங்கு; small portion or share. **3.** போகை; going.

**பேலவம்** *pēlavam,* பெ. (n.) மெல்லியது; softness. (யாழ்.அக.)

**பேலி** *pēli,* பெ. (n.) குதிரை; *horse.* (சங்.அக.)

*[பீல் → பேல் →பேலி]*

**பேலிகை** *pēligai,* பெ. (n.) பேளிகை (சங்.அக.) பார்க்க; see pēligai.

*[பேல் → பேலிகை]*

**பேழ்** *pēl,* பெ. (n.) பெருமை (பிங்.); largeness, rastness

*[பிள் → (பெல்) → பேழ்]*
மு.தா. (பக்.216)

**பேழ்கணி–த்தல்** *pēḻkaṇi,* செ.கு.வி (v.i.) **1.** அஞ்சுதல்; to be afraid. "*உமையானவள் பேழ்கணிக்க..... விடமுண்டதென்னே*". (தேவா.**444,1**) **2.** கண்மூடுதல்; to close one's eyes, as in sleep. "பேழ்கணித்து.... துயில் கொண்டார்" (பெரியபு. திருநாவுக்.**275**) **3.** மருண்டு விழித்தல்; to stare in fear. '*பிற்பானின்று பேழ் கணித்தால்*' (திருவாச.**45,7**) **4.** *பேகணி* பார்க்க; see *pēlaṇi.*

*[ பேழ் + கணி ]*

**பேழ்வாய்** *pēḻ-vāy,* பெ. (n.) பெரியவாய்; large mouth. '*பிறழ்பற் பேழ்வாய்.... பேய் மகள்*'. (திருமுரு.**47**.)

*[ பெள்→ பேள்→ பேழ் + வாய் ]*
*பேழ்வாய்= அகன்றவாய். மு.தா. (பக்–261)*

**பேழி** *pēḻi,* பெ. (n.) புடைவை; saree (அக.நி)

*[ பிள் → பிளி → பேழி ]*

**பேழை**[1] *pēḻai,* பெ. (n.) பெருமை; largeness. '*பேழைவார் சடை*' (தேவா.**853,6**)

*[ பேழ் + ஐ ]*

**பேழை**[2] *pēḻai,* பெ. (n.) **1.** பெட்டி; chest, box, coffer, ark. **2.** கூடை(வின்.); basket.

*[ பேழ் + பேழை ]*

**பேழைமரம்** *pēḻai-maram,* பெ. (n.) பெரிய மரவகை; carey's myrtle-bloom.

*[ பேழை + மரம் ]*

**பேள்(ளு)தல்** *pēl,* செ.கு.வி. (v.i.) மலங்கழித்தல்; to ease oneself.

*[ பேல் → பேள் ]*

**பேளிகை** *pēḷikai,* பெ. (n.) உண்டெஞ்சிய எச்சில் (பிங்.) ; food left on the plate ofter eating.

*[பேழ் → பேள் → பேளிகை ]*

**பேறக்காசி** *pēṟakkāši,* பெ. (n.) நாய்முள்ளி (சங்.அக.); Indian nighshade.

**பேறு** *pēṟu,* பெ. (n.) **1.** பெறுகை; receiving, obtaining. '*மக்கட் பேறு*' (குறள்.**61**) **2.** அடையத்தக்கது; anything worth obtaining. 'விழுப்பேற்றி னஃதொப்ப தில்' (குறள்,**162**) **3.** ஊதியம் (பிங்.) ; profit, gain. **4.** அருட்கொடை (வின்.); boon, blessing. **5.** நன்கொடை; gift, prize, reward. **6.** பயன்; advantage, benefit, result **7.** தகுதி (வின்.); worth, merit, desert.**8.** மகப்பெறுகை; childbirth. **9.** முகத்தலளவையில் ஒன்றைக் குறிக்கும் சொல்; term meaning 'one' in measuring out grains. (தைலவ.தைல.) **10.** புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் ஆகிய பதினாறு வகைப்பட்ட செல்வம் (அபி.சிந்); acquisition, of which there are **16**, viz, pugaḻ, kalvi, veṟṟi, nan-makkḷ, poṉ, nel,nallūḻ, nugarcci, arrivu, aḻagu, perumai, iḷamai, tuṇivu, nōy-iṇmai, vāḻnāḷ **11.** செல்வம் (யாழ்.அக.); wealth. **12.** நல்லூழ் (யாழ்.அக.); good fortune.

13. நிலப்பயன்வகை( G.Tn.D.I.189); a kind of land tenure. 14. இரை; prey, food. *'பேற்றொடாழ் புனன் மூழ்கியெழுந்திடும்புள்"* (இரகு.திக்குவி.62.)

*[ பெறு → பேறு ]*

**பேறுகாலம்** *pēṟu-kālam,* பெ. (n.) மகப் பெறுங்காலம்; time of parturition or delivery.

*[ பேறு + காலம் ]*

**பேன்** *pēṉ,* பெ. (n.) தலை முடியிலுண்டாகும் சிற்றுயிரி; louse; pediculi. *"ஈரும் பேனுமி ருந்திறை கூடி"* (பொருந.79)

**பேன்குத்து-தல்** *pēṉ-kuttu,* செ.கு.வி. (v.i.) பேனை நசுக்குதல்(வின்.); to crackor crush lice

*[ பேன் + குத்து-தல் ]*

**பேன்கொட்டை** *pēṉ-koṭṭai,* பெ. (n.) *காக்காய் கொல்லி* பார்க்க; see *kākkāy-kolli.* cocculus - indicus.

**பேனம்** *pēnam,* பெ. (n.) நுரை; froth, foam, *'பேன வெண்குடையவாய'* (கம்பரா. பிரமாத்.145)

**பேனவாகி** *pēnavāki,* பெ. (n.) இடி; thunder. (யாழ்.அக.)

**பேனன்** *pēṉaṉ,* பெ. (n.) 1. கதிரவன்; sun 2. திங்கள்; moon. (யாழ்.அக.)

**பை[1]** *pai,* தமிழ்நெடுங்கணக்கில் 'ப்' என்ற மெய்யும் 'ஐ' என்ற உயிரும் சேர்ந்து உருவான உயிர்மெய் எழுத்து; the compound of 'ப்' and 'ஐ'

*[ ப் + ஐ = பை ]*

**பை[2]** *pai,* பெ. (n.) 1. பசுமை (பிங்.); greeness, freshness. 2. நிறம் (வின்.); colour 3. இளமை; youth. *'பைதீர் பாணரொடு'* (மலைபடு.40) 4. அழகு; (திவா.) beauty. *'பைவண்ண மணிக்கூடந்தனில்'* (பாரத. கிருட்டிணன்.33) 5. உடல்வலி; strength, vigour, *'நும் பைதீர் கடும் பொடு'* (பெரும் பாண்.103)

*[ பசு → (பசி) → (பயி) → பை → பை ] மு.தா. (பக்.45)*

**பை[3]-த்தல்** *pai,* செ.கு.வி. (v.i.) 1. பசுமை யாதல்; to become green or greenish. (சூடா.) 2. விளங்குதல்; to look bright *'பைத்த சோதி'* (தக்கயாகப்.467)

*[ பசு → (பசி) → (பயி) → பை → பை ] மு.தா. (பக்.45)*

**பை[4]** *pai,* பெ. (n.) 1. துணிதோல் முதலிய வற்றால் அமைந்த கொள்கலம்; sack, purse, satchel. *"தோற்பையுணின்று ......கூத்தன் புறப்பட்டக் கால்"* (நாலடி.26) 2. பாம்புப்படம்; hood of a cobra. *'அரவம்.....பைவிரித்தென'.* (மணிமே.20, 1054) 3. சிறுநீர்ப்பை முதலிய உடலுள்ளுறுப்பு; bladder, duct, pouch, as in animal bodies. 4. 500 அல்லது 1000 உரூபா. இரண்டு பை அந்தப் பாவலர் பெற்றார் (உ.வ.)

**பை⁵–த்தல்** *pai,* பெ. (n.) **1.** விரித்தல்; to spread the hood, as a bobra. *'பைத்த பாம்பின் நத்தி யேப்ப'* (பெருந.**69**) **2.** சினங்கொள்ளல்(பிங்.); to be angry **3.** பொங்குதல்; to be tumultuous, as the sea. *'பைத்தாவத் திரை சிந்திய... நித்திலம்* (சீவக.**1766.**) **4.** மிகுதல் (அக.நி.); to be excessive. *'பைத்தபல் பீடை'* (விநாயகபு.**73,36**)

*[பை → பை–த்தல்]*

**பைக்கம்** *paikkam,* பெ. (n.) ***பயிக்கம்(வின்.)*** பார்க்க, *see payekkam.*

*[பயிக்கம் → பைக்கம்]*

**பைக்கலம்** *pai-k-kalam,* பெ. (n.) பச்சைக் குப்பி; green flask. கள்ளினிரும் பைக்கலம். (மதுரைக்.**228.**)

*[பை + கலம்]*

**பைகிரி** *paikiri,* பெ. (n.) நாய்; dog (சங்.அக.)

**பைகோமட்டம்** *paikō-maṭṭam,* பெ. (n.) மட்டக்குதிரைச் சாதிவகை; pegu pony. *'பைகோ மட்டங்களாக'* (பிரதாப.விலா.**18**)

**பைகோவைச்சிவப்பு** *paikōvai-c-civappu,* பெ. (n.) ஒரு வகைச் சிவப்பு மணி; pegu ruby.

**பைங்கண்** *pai-k-kaṇ,* பெ. (n.)**1.** குளிர்ந்த கண்; tender eye. *'பைங்கண்ணன் புன் மயிரன்'* (இறை.**1**.பக்.**7**) **2.** பசியவுடம்பு; tenderbody. *'பைங்கண் மாஅல்'* (பரிபா.**3,82**) **3.** சினத்தால் பசிய கண்; eye fuming with anger. (பரிபா.**5,27**) **4.** பச்சென்ற விடம்; fresh, green spot. ''பைங்கட் புனத்த பைங்கூழ்.'' (குமர.பிர.நீதிநெறி.**61**)

*[பை + கண்]*

**பைங்கிளி** *pai-ṅ-kiḷi,* பெ. (n.) **1.** பச்சைக்கிளி; parrot with green plumage *'பைங்கிளிப் பாய்கலை....கொற்றவை.'* (பு.வெ.**1,20.**) **2.** அழகிய இளம் பெண்; young, beautiful lady.

*[பை + கிளி]*

**பைங்கால் நிலம்** *pai-ṅ-kāl-nilam,* பெ. (n.) நன்செய்நிலம்; wet field. "பைங்கால் நிலத்தைப் பருமரக் காடென்று" (சரவண. பணவிடு.**142**

*[பைங்கால் + நிலம்]*

**பைங்கிணறு** *pai-ṅ-kiṉaṟu,* பெ. (n.) குட்டை (S.I.I.vii,**41**); small pond.

*[பை + கிணறு]*

**பைங்குலைத்தாரு** *pain-kulaitaru,* பெ. (n.) இளநீர்க்குலை; cluster of tender coconet. *'பத்திபட நிறைத்த பைங்குலைத் தாரும்* (பெருங்.**2;2:176**).

*[பை + குலை + தாறு]*



**பைங்குழி** *pai-n-kuli,* பெ. (n.) கருத்தங்கும் இடம்; womb. (பிங்.)

*[ பை + குழி ]*

**பைங்கூதாளம்** *painku-talam,* பெ. (n.) பசிய தூதுவளை; green climbing bringan. *"பைங்கூ தாளமும் வெண்பூஞ்சள்ளியும்"* (பெருங்.2:12:22)

*[ பை + கூதாளம் ]*

**பைங்கூழ்** *pai-ṅ-kūl,* பெ. (n.) 1. இளம்பயிர்; tender crops. *'பைங்கூழ் களைகட் டதனெடு நேர்'* (குறள்.550) 2. விளைநிலம்' cultivated land. *'உமிழ்வோ டிருபுலனுஞ் சோரார்'* (ஆசாரக்.33) 3. நோய்; (சது.) disease.

*[ பை + கூழ் ]*

**பைங்கூன்** *painkūn,* பெ. (n.) *காவட்டம் புல்;(சங்.அக.)*பார்க்க; see *kāvatham-pul citronella grass.*

*[ பை + கூன் ]*

**பைங்கேழ்க்கலிங்கம்** *painkel, k-kalinkam,* பெ.(n.) பசியநிற ஆடை; green cloth *"பைங்கேழ்க் கலிங்கமும் பட்டுத் தூசும்'* (பெருங்.1:42:207).

*[ பை + கேழ் + கலிங்கம் ]*

**பைங்கேழ்த்தாமம்** *painkel-t-tamam,* பெ. (n.) பசிய நிறமுடைய மாலை; green garland *'பைங்கேழ்த் தாமம் பக்கம் வளைகு'* (பெருங்.2:16:145).

*[ பை + கேழ் + தாமம் ]*

**பைங்கொடி** *pai-ṅ-kodi,* பெ. (n.) 1. பச்சிலைக் கொடிவகை; a fragrant creeper, *'பைங்கொடி நறைக்காய்'* (திருமுரு.190) 2. பெண்; woman.

*[ பை + கொடி]*

**பைசந்தி** *pai-šandi,* பெ. (n.) *பைங்குழி* பார்க்க (பிங்.); *see painkuli.*

*[ பை + சந்து → பைசந்தி ]*

**பைசாரம்** *paicāram,* பெ. (n.) இருப்பிட வட்டாரம்; locality. *'கச்சிப்பேட்டுக் கீழைப் பைசாரத்து'.*

*[ பிசாரம் → பைசாரம் ]*

**பைசு** *paicu,* பெ. (n.) பால்; milk. (சா.அக.)

*[ பிசு → பைசு ]*

**பைசுனம்** *paicuṇam,* பெ. (n.) 1. கருசத்தனம்; miserliness, niggardliness. 2. புறங்கூறுகை; backbiting. (சங்.அக.)

*[ பிசுனம்→ பைசுனம் ]*

**பைஞ்சாய்** *pai-ñ-cāy,* பெ. (n.) *பஞ்சாய்*[1] பார்க்க; *see pañjāy 'பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே'* (ஐங்குறு.155)

*[ பை + சாய்]*

**பைஞ்சேறு** *pai-ñ-cēru,* பெ. (n.) சாணம்; cowdung, as greenish. *'பைந்சேறு மெழுகிய படிவ நன்னகர்'* (பெரும்பாண்.298)

*[ பை + சேறு]*

**பைஞ்ஞிணம்** *pai-ñ-ñiṇam,* பெ. (n.) புதிய இறைச்சி: fresh meat. '*பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள் ளமலை*' (புறநா.177)

*[ பை + நிணம் → ஞிணம் → பைஞ்ஞிணம்]*

**பைஞ்ஞீல்** *pai-ñ-ñil,* பெ. (n.) *பைஞ்ஞீலம்* (திவா) பார்க்க; *see pai-ñ-ñilam.*

*[ பைஞ்ஞீலம் → பைஞ்ஞீல் ]*

**பைஞ்ஞீலம்[1]** *pai-ñ-ñilam,* பெ. (n.) *பைஞ்ஞீலம்* (சூடா.) பார்க்க; see *pai-ñ-nilam*

**பைஞ்ஞீலம்[2]** 1. பசியநீலம்; greenish sapphire (யாழ்.அக.) 2. வாழைவகை; a bpecies of plantain.

*[ பை + ஞீலம் ]*

**பைஞ்ஞீலி** *pai-ñ-ñili,* பெ. (n.) பைஞ்ஞிலம் பார்க்க, see pain-nilam. (பிங்.)

*[ பை + ஞிலி ]*

**பைத்தம்** *paittam,* பெ. (n.) 1. கிறுக்கு; Insanity, mania, craziness. 2. மூடத்தனம்; folly.

*[ பித்தம் → பைத்தம் ]*

**பைத்தல்** *pait-t-tal,* பெ. (n.) 1. பசுமை; *green* 2. சினம்; *angry*

*[ பை → பைத்தல் ]*

**பைதலங்கடும்பு** *paitalam-katumpu,* பெ. (n.) பசி துன்பமுடைய சுற்றம்; neighbour who has hungry, *"விருந்தலும் உண்டென பைதலங்கடும்பே"* (புறநா.139).

*[ பை + தலம் + கடும்பு ]*

**பைத்து** *paittu,* பெ. (n.) பைது[1] பார்க்க; (திவா.) see paidu.

*[ பசுமைத்து → பைத்து ]*

**பைதல்** *paidal,* பெ. (n.) 1. இளையது; that which is young or small. '*பைதல் வெண்பிறை*' (தேவா.628,5) "*சிறுகிளிப் பைதலே*' (திவ்.திருவாய்,9,5,6) 2. சிறுவன்; boy. '*பைதலை யித்தனை பொழுது கொண் டிருப்பதோ*' (கம்பரா. பிணிவீட். 2) 3. துன்பம்; sorrow, affliction. '*பைத லுழப்ப தெவன்*' (குறள்.1172) 4. குளிர்; cold, chilliness. "*பனிப்படு பைதல்*" (பரிபா.11,75)

*[ பை→ பைதல்]*

**பைதா** *paidā,* பெ. (n.) வண்டிச்சக்கரம்; wheel of a cart.

*[ வை → வையா → வைதா → பைதா ]*



**பைதாவடை—த்தல்** *paidā-v-adai,* செ.கு.வி. (v.i.) வண்டிச்சக்கரத்தை அச்சில் கோத்தல்(நாஞ்); to fit the weel in the axle of acart.

*[ பைதா + அடை —த்தல்]*

**பைதாவரைத்தல்** *paida-v-araidal,* பெ. (n.) வண்டிக்கூட்டில் சக்கரம் உரசுகை; rubbing of the weel against the body of the cart.

*[பைதா + அரைத்தல்]*

**பைதிரம்** *paitiram,* பெ. (n.) நாடு; country, district. '*வளனறு பைதிரம்*' (பதிற்றுப்.19,18)

*[பை → பைதிரம்]*

**பைது** *paidu,* பெ. (n.) **1.** பசுமை; greenness, freshness. '*நிலம் பைதற்ற புலங்கெடு காலையும்*' (பதிற்றுப்.23) **2.** ஈரம்; moisture, dampness. '*நிலம் பைதறச் செல்கதிர் ஞாயிறு செயிர் சினஞ் சொரிதலின்*' (கலித்.20)

*[பை → பைது]*

**பைந்தார்** *pai-n-tār,* பெ. (n.) செவ்விமாலை; garland of fresh flowers, '*பனிமலர்ப் பைந்தார்*' (பு.வெ.9,1)

*[பை + தார்]*

**பைந்தினை** *pai-n-tiṉai,* பெ. (n.) **1.** தினை (பிங்.) பார்க்க; *seetinai.* italian milet. **2.** கருந்தினை (மலை.) பார்க்க, see *karu-n-tiṉai,* black Intalian millet.

*[பை + தினை]*

**பைந்து** *paindu,* பெ. (n.) பந்து; ball. '*தன்மலர் நறுபைந் தூழறிந் துருட்டா*' (பெருங்.மகத.8,64)

**பைந்தொடி** *pai-n-todi,* பெ. (n.) **1.** பொன் வளையல்; golden bracelet. "பைந்தொடி சோரும்" (குறள்.1234) **2.** பெண்; with golden bracelet. "உடம்பா டெனவறி பைந்தொடியே" (வீரசோ.யாப்.18)

*[பை + தொடி]*

**பைந்நாகம்** *pai-n-nāgam,* பெ. (n.) **1.** நாகப்பாம்பு; cobra, as hooded. '*பைந்நாகப் பாய்சுருட்டிக்கொள்*' (பெருந்தொ.1875) **2.** பன்னாங்கு பார்க்க, see pananku top-cover, as of a palanquin. '*திருப்பல்லக்குப் பைந்நாக முதலானவை*' (கோயிலொ.94)

*[பை + நாகம்]*

**பைப்பய** *pai-p-paya,* கு.வி.எ. (adv.) மெல்லமெல்ல; slowly, softly, gently. '*காமம் பைப்பயக் கழிய*' (சீவக.2760)

*[பையப்பைய → பைப்பய]*

**பைய** *pai-ya,* கு.வி.எ. (adv.) மெல்ல;by degrees slowly; softly, gently. "பைய நகும்" (குறள். 1098)

**பைபீலம்** *paipilam,* பெ. (n.) எறும்பு; ant. (யாழ்.அக.)

**பைபீலிகை** *paipilikai,* பெ. (n.) எறும்பு; ant. (யாழ்.அக.)

**பைம்பல்** *paimpal,* பெ. (n.) **1.** பம்பல்[3] பார்க்க, joviality. **2.** *பம்பல்*[4] பார்க்க, *luxuriance.*

*[பம்பல் → பைம்பல்]*

**பைம்பூண்** *pai-m-pūṉ,* பெ. (n.) பசும்பொன்னாற் செய்யப்பட்ட அணி; ornament made of fine gold. '*பைம்பூ ணடல் வேந்தன்*' (பு.வெ.8,1)

*[பை + பூண்]*

**பைம்பொன்** *pai-m-pon,* பெ. (n.) **1.** பசும்பொன்; fine gold. '*பைம்பொன் செய்ஞ்ஞரும்*' (மணிமே.28,36) **2.** மேருமலை; mt. meru. (அக.நி.)

*[பை + பொன்]*

**பைம்மறி–த்தல்** *pai-m-mari,* செ.குன்றாவி. (v.t.) **1.** உட்புறத்தை வெளிப் புறமாகத் திருப்புதல்; to turn a thing inside out, as a bag. '*பைம்மறியாப் பார்க்கப் படும்*' (நாலடி.42) **2.** பையின் வாயை மூடுதல்; to close the mouth of a bag. '*பைம்மறித் தியற்றியன்ன ....... குரம்பை*' (தேவா.632,8)

*[பை + மறி–]*

**பைம்மை**[1] *paimmai,* பெ. (n.) பசுமை; greenness, green colour. (திவா.)

*[பை + பைம்மை]*

**பைம்மை**[2] *paimmai,* பெ. (n.) கன்னிமடத்தில் சேர்ந்து றையும் பெண்துறவி;

*[பை +அம்மை]*

**பைமறி** *pai-mari,* பெ. (n.) பையின் உட்புறத்தை வெளிப்புறமாகத் திருப்புகை; (மணிமே.அரும்.பக்.504) turning a bag inside out;

*[பை + மறி]*

**பைமாசு** *paimāsu,* பெ. (n.) 19–ஆம் நூற்றாண்டில் ஆங்கில அரசால் இந்தியாவில் செய்யப்பட்ட நிலவளவு; land measurement made early in the nineteenth centurey by the british in india.

**பைமாத்தார்** *paimattar,* பெ. (n.) நிலஅளவு செய்யும் ஊழியர்; surveyor.

**பைமை**[1] *paimai,* பெ. (n.) *பைம்மை*[1] பார்க்க, see *paimmai* (w.)

*[பை + பைமை]*

**பைமை**[2] *paimai,* பெ. (n.) *பைம்மை*[2] பார்க்க, see *paimmai2* (w.)

**பைய** *paiya,* கு.வி.எ. (adv.) மெல்ல; by degrees, slowly, softly. '*பையநகும்*' (குறள்.1098)

*[பை + பைய]*

**பையம்** *paiyam,* பெ. (n.) **1.** கூடை; basket. **2.** *கோரை* பார்க்க; see *kōrai,* sedge.

*[வையம் → பையம்]*

*வையம் = வட்டமானது.*

**பையர** *pai-y-ara,* பெ. (n.) *பையரவு* பார்க்க; see *pai-y-aravu.* '*பையர விழுங்கப்பட்ட.... மதியம்*' (சீவக.1540)

*[பை +அர]*

**பையரவு** *pai-y-aravu,* பெ. (n.) நச்சுப் பையையுடைய நாகம்; hooded, cobra, '*பையர வலகுலார்த முள்ளமும் பளிங்கும்போல*' (கம்பரா.மிதிலை.16)

*[பை +அரவு]*

**பையல்** *paiyal,* பெ. (n.) **1.** சிறுவன்; boy, little, fellow. '*அளிய னம்பைய லென்னார்*' (திவ்.திருமாலை.37) **2.** தகுதியற்றவன்;

unworthy, mean fellow. '*அப்பையல் அதுதனக்கு எளிவரவாக நினைத்திருக்குமே*' (ஈடு,3,6,ப்ர.)

*[பை → பையல்] மு.தா.பக்.45*

**பையன்** *paiyan,* பெ. (n.) **1.** *பையல்*[1] பார்க்க, see *paiyal*[1], **2.** மகன் (கொ.வ.); son.

*[பை → பையல் → பையன்]*

**பையா—த்தல்** *paiyā.,* செ.கு.வி. (v.i.) **1.** வருந்துதல்; to be distressed, to suffer pain. '*அரவம் வைகிக்கேட்டுப் பையாந்திசினே*', (நற்.144) **2.** அச்சந் தோற்றுதல்; to show signs of fear. '*பையாக்க விழிக்கத் தொடங்கினான்*' (ஈடு,5,10,3).

*[பை → பையா → பையாத்தல்] மு.தா.*

**பையாப்பு** *paiyāppu,* பெ. (n.) துன்பம்; distress, suffering. அதனால் '*பையாப்புற்ற நம்முடைய சுற்றத்தை*' (புறநா.221,உரை.) '*பையாப் போடு பசிகாட்டி*' (கலிங்.557)

*[பை → பையா → பையாப்பு]*

**பையுள்** *paiyul,* பெ. (n.) **1.** நோய்; (தொல்.சொல்.341) disease. **2.** துன்பம்; (திவா.) suffering '*மெல்லிய நெஞ்சு பையுள் துர*' (கலித்.137,8) **3.** சிறுமை (சூடா.); poverty, adversity. **4.** மயக்கம்; (திருக்கோ. 19, உரை.) confusion

*[பை → பையுள்]*

**பையெனல்** *pai-y-enal,* பெ. (n.) **1.** மெதுவாதற்குறிப்பு; being slow or gentle. '*கையிற் சுட்டிப் பையென வெண்ணி*' (புறநா.257) **2.** ஒளிமழுங்குதற்குறிப்பு; being dim, dull. '*பாடுநர் கடும்பும் பையென் றனவே*' (புறநா.238) **3.** வருந்தற் குறிப்பு; being distressed. "பையென்ற நெஞ்சத்தேம்" (கலித்.118)

*[பை + எனல்]*

**பையோடதி** *pai-y-ōḍadi,* பெ. (n.) பச்சைக் கொடி; (தைலவ.தைல.) green creeper.

**பையோலை** *pai-y-ōlai,* பெ. (n.) பச்சோலை; green ola. '*பனைப் பையோலை*' (திருவாலவா.27,68)

*[பை + ஓலை]*

**பைரவமாத்திரை** *pairava-māttirai,* பெ. (n.) ஒருவகை மருந்துக்குளிகை (பதார்த்த.1209); a medicinal pill.

**பைரவரசம்** *pairava-rašam,* பெ. (n.) இதளியகூட்டிச் செய்யும் மருந்துவகை; a medicine prepared with mercury.

**பைரி**[1] *pairi,* பெ. (n.) இராசாளி வகை; peregrine falcon.

*[வைரி → பைரி]*

**பைவாதல்** *[பைவருதம்] pai-vā-,* செ.கு.வி. (v.i.) துன்புறுத்தல்; to be distressed "பைவருங் கேளிரும் பதியும் கதறமெய் விரும்போது" கந்தரலங்.84

**பொ[1]** *po,* தமிழ் நெடுங்கணக்கில் '*ப்*' என்ற மெய்யெழுத்தும், '*ஒ*' என்ற உயிரெழுத்தும் சேர்ந்து உண்டான உயிர்மெய்யெழுத்து; the compound of ப் and ஒ.

*[ ப் + ஒ = பொ ]*

**பொ[2]–த்தல்** *po,* செ.குன்றாவி. (v.t.) **1.** துளைத்தல்; to perforate, puncture, make a hole or opening. *"பொத்த நூற்கல்லும்" (நாலடி.376)*

**பொ[3]–த்தல்** செ.கு.வி. (V.i.) கொப்புளித்தல்; to be blistered தீப்பட்டுக் கை பொத்தது (உ.வ.).

**பொக்கசம்** *pokkašam,* பெ. (n.) *பொக்கிசம்* பார்க்க; see *pokkišam*

**பொக்கசவைப்பு** *pokkaša-vaippu,* பெ. (n.) புதைந்து கிடைக்கும் செல்வம் (திரவியம்) (யாழ்.அக); treasure trove, hidden treasure

*[ பொக்கசம் + வைப்பு ]*

**பொக்கணந்தூக்கி** *Pokkaṇa-n-tūkki,*பெ. (n.) 1. சுரைக்கொடி வகை (சங்.அக); a kind of curai plant. 2. *முடக்கொற்றான்* (மாட்டுவா.142) பார்க்க; see *muḍakkoṟṟān.*

*[ பொக்கணம் + தூக்கி ]*



**பொக்கணப்பிச்சி** *pokkaṇa-p-picci,* பெ. (n.) *முடக்கொற்றான்;* ballon-vine. (மலை) பார்க்க; see *muḍakkoṟṟān.*

*[ பொக்கணம் + பிடிச்சி ]*

**பொக்கணம்** *pokkaṇam,* பெ. (n) **1.** சோழியப்பை; beggar's bag, wallet, '*சுத்திய பொக்கணத்து.... கோலத்தினீர்*' (திருக்கோ.242) **2.** பெருமருந்து; (மலை) பார்க்க; see *peru - marundu* indian birthwort.

*தெ. பொக்கணமு. க.ம. பொக்கணம்*

**பொக்கணி** *pokkaṇi,* பெ. (n.) 1. தவசம் முதலியன குத்தும் உரல்; rice mortar. 2. விரிந்த தொப்புள் (யாழ்ப்.); large,open navel. 3. நீர்மக்கலம் (யாழ்.அக); a kind of drinking vessel.



**பொக்கணை** *pokkaṇai,* பெ. (n.) **1.** மரம் கல் முதலியவற்றிலுள்ள பொந்து; hole in a tree,stone or ground,cleft ina rock. **2.** *பொக்கணி,1* பார்க்க; see *pokkaṇi*

*[ பொக்கணி → பொக்கணை ]*

**பொக்கம்** *pokkam,* பெ. (n.) 1. பொய்; lie,false hood. '*பொக்கம் பலயேசி*' (தேவா.326,7) **2.**

வஞ்சகம்; deceit, *'பொய்யும் பொக்கமும் போக்கி'* (தேவா.1210,4) **3.** குற்றம்; fault. *'பொன்னங் கழல்பரவாப் பொக்கமும் பொக்கமே'*. (தேவா.1017,1)

*[ பொக்கு → பொக்கம்]*

**பொக்கணவன்** *Pokkaṇavaṉ* பெ. (n.) சிவபெருமான் (தஞ்.சர.i,79); siva.

*[ பொக்கணம்→ பொக்கணவன்]*

**பொக்கிப்பரு** *Pokki-p-paru,* பெ. (n.) செவிப்புண் வகை (பரராச.i.134); a kind of boil in the ear

**பொக்கம்**[2] *Pokkam,* பெ. (n.) **1.** மிகுதி; abundance. *'செறியிருட் பொக்க மெண்ணீர்'* (திருக்கோ.382) **2.** உயரம்; eminence, height **3.** பொலிவு; (பிங்.) bloom, splendour, *'புடைபரந்து பொக்கம்பரப்ப'* (பதினொ.ஆளு. திருவுலா) **4.** அச்சம்; awe. *'நீ எனக்குப் பொக்கங்காட்ட வேண்டாம்'*

*[ பொங்கு → பொக்கம்]*

**பொக்கல்** *pokkal,* பெ. (n.) பொக்கை பார்க்க. see pokkai.

*[ பொய் → பொக்கல்]*

**பொக்கல்வாய்** *pokkaḷ-vāy,* பெ. (n.) *பொக்கை வாய்* பார்க்க; see *pokkaḷvay.*

**பொக்களம்** *pokkalam,* பெ. (n.) *பொக்குளம்* பார்க்க; see *pokkuḷam.*

**பொக்கன்** *pokkan,* பெ. (n.) தோற்றப் பொலிவுள்ளவன்; man of fine appearance, handsome man. *'துடியிடையாள் துணை முலைக்குச் சேர்வதாகும் பொக்கான்காண்'* (தேவா,619,2)

*[ பொக்கம் → பொக்கன்]*

**பொக்கிப்பயல்** *pokki-p-payal,* பெ. (n.) தறிதலை; (உ.வ.) vagabond.

*[ பொறுக்கி → பொக்கிப்பயல்]*

**பொக்கிப்பரு** **1.** கருவூலம், treasury. **2.** கருவூலப்பணி office of a treasurer. "பொக்கிசம் முத்திருளப்பபிள்ளை" (I.M.P.Rd.)

**பொக்கிப் பிளவை** *Pokki-p-piḷavai,* பெ. (n.) பிளவை வகை (பரராச.i.49); a kind of carbuncle

**பொக்கிப்போ–தல்** *pokki-p-pō,* செ.கு.வி. (v.i) **1.** கொப்புளமுண்டாதல்; to be blistered, scalded. **2.** புண்கட்டியுண்டாதல்; to breakout with boils.

*[ பொக்கு + போ ]*

**பொக்கிலவணம்** *pokki-lavaṇam,* பெ. (n.) **1.** உப்புவகை; (யாழ்.அக) a kind of salt.

**பொக்கினதுப்பி** *pokkiṉatuppi,* பெ. (n.) *பெருமருந்து,* பார்க்க; see *peru-marundu.* Indian birthwort. (சங்.அக)

**பொக்கு–தல்** *pokku-,* செ.குன்றாவி. (v.t) கொப்புளங்கொள்ளுதல்; to be blistered' *'உடம்பெல்லாம் பொக்கிவிட்டது.'*

*[ பொருக்கு → பொக்கு–தல்]*

**பொக்கு²** *pokku,* பெ. (n.) **1.** மரப்பொந்து; (பிங்) hollow in a tree. **2.** குற்றம்; (திவா) defect, fault, blemish *'பொக்குப்பை'* (திருப்பு.432). **30** உள்ளீடு முற்றாத தவசம்; imperfectly matured grain. **4.** தவச நொறுங்கு; grit.

*[பொல் → பொக்கு]*



**பொக்கு³** *pokku,* பெ. (n.) பொருக்கு (வின்.); flake, scale.

*[பொருக்கு → பொக்கு]*

**பொக்குப்பொக்கெனல்** *pokku-p-pokkeṉal,* பெ. (n.)

1. ஒலிக்குறிப்பு; chewing noisily,as a toothless person.*'அவன் பொக்குப் பொக்குன்று சாப்பிடுகிறான்.'* (உ.வ)

2. விரைவுக்குறிப்பு (வின்.); being in haste.

"பொக்குப் பொக்கென்று வேலையைப் பார்!"

3. தீக்கொழுந்து விட்டுவிட்டெரிதற் குறிப்பு; flickering of flame.

*[பொக்கு + பொக்கு + எனல்]*

**பொக்குமல்லி** *pokkumalli,* பெ. (n.) பூச்செடி (இக்.வ); a flowering plant.

*[பொக்கு +மல்லி]*

**பொக்குமுத்து** *pokku-muttu,* பெ. (n.) சூதுமுத்து (இ.வ.); false pearl.

*[பொக்கு +முத்து]*

**பொக்குவாய்** *pokku-vay,* பெ. (n.) **1.** பொக்கைவாய் பார்க்க; (யாழ்.அக) see pokkaivāy.

*[பொக்கு + வாய்]*

**பொக்குள்** *pokkul,* பெ. (n.) கொப்பூழ்; navel.

*க. பொக்குள்*

*[கொப்புள் → பொக்குள்]*

**பொக்குளம்** *Pokkuḷam,* பெ. (n) கொப்புளம்; (சங்.அக) boil.

*க.பொக்குழி ம.பொக்குலி*

*[கொப்புளம் → பொக்குளம்]*

*இடமாற்று (ஒ.நோ.) தசை > சதை*

**பொக்குளி–த்தல்** *pokkuḷi,* செகு.வி. (v.i.) கொப்புளங்கிளம்புதல் (யாழ்ப்); to rize in blisters.

*[கொப்புளி → பொக்குளி]*

**பொக்குளிப்பான்** *pokkḷippāṉ,* பெ. (n.) அம்மைநோய் வகை; measles.

*[கொப்புளிப்பான் → பொக்குளிப்பான்]*

**பொக்கெனல்** *pokkeṉal,* பெ. (n.) விரைவுக் குறிப்பு; abruptness "பொக்கெனக் கொடுபோய்" (பாரத. வார.131)

*[ பொக்கு + எனல்]*

**பொக்கை** *pokkai,* பெ. (n.) 1. சிறுதுளை; little hole, crack. 2. மூளியாயிருக்கை; having a part deformed, dented or broken 3. நோய் முதலியவற்றின் நொறுங்கு; grit. 4. குற்றம்; fault, blemish. "நீடுபொக்கையிற் பிறவியைப் பழித்து." (தேவா.242,10)

*[ பொ → பொக்கை]*

**பொக்கை²** *pokkai,* பெ. (n.) மோர்க்கூழ் (இ.வ.); porridge.

*[ புற்கை → பொக்கை]*

**பொக்கைப்பல்** *pokkai-p-pal,* பெ. (n) ஓட்டை யான பல்வரிசை; a row of teeth with gaps.

*[பொக்கை + பல்]*



**பொக்கைவாய்** *pokkai-vāy,* பெ. (n.) பற்போன வாய்; toothless mouth. *'பொக்கை வாயாக்கினார் சூரியனை,'* (தனிப்பா.ii,25, 56)

*[ பொக்கை + வாய்]*

**பொகடி** *pogaḍi,* பெ. (n.) மகளிர் காதணி வகை; a kind of ear-ornament, *'காதிற் பொகடி யொருசோ டொழிய'* (விறலிவிடு,830) *க.புகடி.*

*[ பூடி → பொகடி]*

**பொகில்** *pokil,* பெ. (n.) அரும்பு; bud, *'பொகில் பிடித்தலருஞ்சந்தப் பொதும்பர்'* (இரகு. குசனயோ. 63)

*[ போகில் + பொகில்]*

**பொகு-த்தல்** *poguttal* செ.குன்றாவி (v.t) ஒட்டை செய்தல் (யாழ்.அக); to make a hole.

*[பொ → பொகு]*

**பொகுட்டு** *poguṭṭu,* பெ. (n.) 1. கலங்கல் நீரில் எழும் குமிழி; bubble formed in turbit water."திரை நுரைமென் பொகுட்டு... அரிவை" (பரிபா.11,27) 2. தாமரை அல்லது கோங்கின் பூவிலுள்ள கொட்டை (நன்.387, மயிலை); pericarp of the lotus or common caung flower. "அரும்பொகுட் டனைத்தே யண்ணல் கோயில்" (பரிபா.பக்.174) 3. மலை (கிங்); mountain

**பொகுவல்** *poguval,* பெ. (n.) பறவைவகை; a bird. *'செவிசெஞ் சேவலும் பொகுவலும்'* (புறநா.238)

*[ பொகு + பொகுதல்]*

**பொங்கடி** *poṅgaḍi,* பெ. (n.) 1. யானை; elephant. *'பொங்கடி படிகயம்'* (அகநா,44) 2. அரிமா (நிகண்டு) lion;

*[பொங்கு+அடி]*

**பொங்கத்தம்** ponkattam, பெ. (n.) *பொங்கத்தம் பொங்கோ* பார்க்க; *'கலிநன்றி புகன்ற பொங்கத்தங் கொண்டு'* (திவ்.பெரியதி.10,2,10)

**பொங்கத்தம்பொங்கு** pongattam-pongu, பெ. (n.) *பொங்கத்தம் பொங்கோ* பார்க்க; see pongattam pongō, 'அந்தச் சப்தானுகாரம் பொங்கத்தம் பொங்கு என்கிற இது' (திவ்.பெரியதி.10,2,1,வ்யா.)

**பொங்கத்தம்பொங்கோ** pongattam-pongu, பெ. (n.) போரில் தோற்றவர் ஆடிக் கொண்டு கூறும் அடைக்கலக் குரல் (திவ்.பெரியதி,10,2); exclamation of surrender by defeated warriors with a particular kind of dance.

**பொங்கம்** pongam, பெ. (n.) **1.** மிகுதி; increase, abundance. 2. மகிழ்ச்சி (வின்.); exultation, joy (ய) 3. ஒழுங்கு; accuracy, regularity. *'பொங்கமாய்ப் படிந்தது'*. (இன்.வ) **4.** நெற்றி; (யாழ்.அக) forehead. **5.** பொங்கர்,4 (சங்.அக) பார்க்க; **6.** நறுமணம்; (சங்.அக). fragrance. **7.** பொலிவு; bloom, splendour *'பூடணமும் பொங்கமும்'* (பணவிடு.365)

*தெ. பொங்கு*

*[ பொங்கு → பொங்கம் ]*

**பொங்கர்** pongar, பெ. (n.) **1.** மரக்கொம்பு; branch of a tree. *'வேங்கை யிருஞ்சினைப் பொங்கர்'* (மதுரைக்.296) **2.** மலை; (பிங்) hill, mountain. **3.** சோலை; (சிலப்,10,69,உரை) grove **4.** இலவு (பிங்); red-flowered silk cotton tree. **5.** வாடற்பூ; faded flower. *'தாதுசோர் பொங்கர்'* (சிலப்.10,69)

*[பொங்கு → பொங்கர்]*

**பொங்கல்** *pongal,* பெ. (n.) **1.** பொங்குகை; boiling, bubbling, leaping. **2.** கடுஞ்சினம்; violent anger. **3.** மிளகு, சீரகம், உப்பு, நெய் முதலியன கலந்து அட்ட பொங்கல்; a preparation of boiled rice seasoned with salt, pepper, cumin seeds and ghee. *'பூவும் புகையும் பொங்கலுஞ் சொரிந்து'* **4.** ஞாயிறு சுறவ வோரையிற் செல்லும் நாளான சுறவ(தை)த்திங்கள் முதல் நாளன்று ஞாயிறுபோற்றி வழிபட்டு அதற்குப் பொங்கல் படையலிட்டுச் செய்யும் திருவிழா; solar festival; when the sun enters Capricorn and Takes a northward course, being the first day of the month tai, when Pongal is prepared as an offering. **5.** உயர்ச்சி (சூடா); height. **6.** பருமை; largeness. *'பொங்கல் வெம்முலைகள்'* (சீவக.2805)**7.** மிகுதி; (பிங்) fulness,excess **8.** கள்; toddy. *'பூவும் புகையும் பொங்கலுஞ் சொரிந்து'* (சிலப்.69, அரும்) **9.** பொலிவு; (பிங்) bloom, splendour.

*க. பொங்கலு*

*[பொங்கு → பொங்கல்]*



**பொங்கல் வரிசை** *pongal-varišai,* பெ. (n.) **1.** திருமணம் முடித்த பெண்களுக்குப் பெற்றோர் பொங்கல் விழாவையொட்டிச் செய்யும் சீர் வரிசை; present sent to a married woman by her parents on pongal day. **2.** பெரியோர்க்குப் பொங்கல் நாளில்

செய்யும் பரிசு; present sent to a superior on poṅgal day.

*[பொங்கல் + வரிசை]*

**பொங்கல்வை[1]–த்தல்** *poṅgal-vai,* செ.கு.வி (v.i) தெய்வத்துக்குப் பொங்கற் சோறு சமைத்தல்; to boil rice for offering to a deity.

**பொங்கல்வை[2]–த்தல்** *poṅgal-vai,* செ.குன்றாவி. v.t அழித்தல்; to injure,destory.

*[பொங்கல் + வை]*

பொங்கலாடு–தல் *poṅgal-āḍu,* செ.கு.வி (v.i) பஞ்சுபோலப் பரவியெழுதல்; to rise sponge-like,as silk cotton. '*பெய்து புறந்தந்து பொங்கலாடி*' (பதிற்றுப்,55,14).

*[பொங்கல்+ஆடு]*

**பொங்கலாண்டி** *poṅgal-āṇḍi,* பெ (n.) *பொங்கலாள்* (வின்.) பார்க்க; see *poṅgal-āḷ.*

*[பொங்கல்+ஆண்டி]*

**பொங்கலாள்** *poṅgal-āḷ,* பெ (n.) **1.** சமையற் காரன்; cook. **2.** தானே சமைத்துத் தனியே உண்போன்; one who cooks his own food and lives by himself.

*மறுவ. பொங்கலாண்டி*

*[பொங்கல் + ஆள்]*

**பொங்கலிடு–தல்** *poṅgal-iḍu,* செ. குன்றா.வி (v.i) *பொங்கல்வை 1* பார்க்க; see *poṅgalvai.*

*[பொங்கல் + இடுதல்]*

**பொங்கலோ பொங்கல்** *pongalo-ponkgal,* பெ. (n.) பொங்கல் விழாவில் பானையிற் பால் பொங்கும் போதும், மாட்டுப் பொங்கலில் மாட்டை ஓட்டி விடும் போதும் மகிழ்சியுடன் கூறும் ஓர் ஆரவாரச்சொல்; loud exclamation of joy on the occasion of boiling milk for pongal or of starting a bull in māṭṭu-p-poṅgal.

*[பொங்கலோ + பொங்கல்]*

**பொங்கழி** *poṅgaḻi,* பெ. (n.) தூற்றாப்பொலி; unsifted paddy on the threshing-floor. '*பொங்கழி யாலைப் புகையொடும் பரந்து*' (சிலப்.10,151)

**பொங்கற்காரன்** *poṅgaṟ-kāraṉ,* பெ. (n.) *பொங்கலாள்* பார்க்க; see *poṅgal!*

**பொங்கற்சாதம்** *poṅgaṟ-cādam,* பெ. (n.) **1.** *பொங்கல்,3* பார்க்க; see *poṅgal.* **2.** கஞ்சி சுவறும்படி சமைத்த சோறு; boiled rice with the water not strained off, but left to steep.

*[பொங்கல் + சாதம்]*

**பொங்கற்படி** *poṅgaṟ-padi,* பெ. (n.) **1.** சுறவ(தை)ப் பொங்கலன்று கொடுக்கும் அன்பளிப்பு; money-presents given on the poṅgal day.

*[பொங்கல்+படி]*

**பொங்கற்பண்டிகை** *ponkar-paṇḍigai,* பெ (n.) தமிழ் மக்கள் ஆண்டுதோறும் சுறவ (தை) மாதம் முதல் நாளில் பொங்கலிட்டுக் கொண்டாடும் விழா; poṅgal festival.

*[பொங்கல் + பண்டிகை]*

பொங்கல் பண்டிகை என்பது உழவர் திருநாள். அறுவடையான பின், புதிரி என்னும் புது நெல்லைச் சமைத்து நன்றியறிவுடன் வழிபடு தெய்வத்திற்குப் படைத்துண்பதே பொங்கல். நீர்வளம் மிகுந்த பாங்கரில் முப்பூ விளையும். (பூவென்பது வெள்ளாமை.) நீர் வளமில்லா இடங்களில் மாரி நீர்த்தேக்கத்தால் ஒரு வெள்ளாமைதான் விளைக்க முடியும். ஆகவே, சிலை (மார்கழி) அல்லது சுறவை (தை) மாத அறுவடையே நாடெங்கும் நிகழும். ஆதலால், தைப்பொங்கல் பெரும் பொங்கல் எனப்பெறும்.

செந்நெற் பச்சரிசியைப் பெரும்பாலும் தவிடு போக்காமல் சரி நீர் வைத்துச் சமைத்து, பருப்புக்குழம்புடன் உண்பது பொங்கல் மரபு. "*பருப்புக் கேட்கும் பச்சரிசிச் சோறு, செருப்புக் கேட்கும் சித்திரை மாத வெயில்!*" என்பது பழமொழி. பொங்கற் பானையில் உலை பொங்கி வந்தவுடன் சிறிது வழிய விடுவது பொங்கல் அடையாளமாகக் கருதப் பெறும், இதுவே உழுதுண்பார் பொங்கல்.

அக்காரடலை (சருக்கரைப் பொங்கல்) அக்காரவடிசில் (சருக்கரை நெய்ப்பொங்கல்) நெய்ப்பொங்கல், மிளகுப்பொங்கல், வெண் பொங்கல் முதலிய சுவைமிக்க பொங்கல் வகைகளெல்லாம் உழுவித் துண்பாரும் செல்வருமான பிறர் பொங்கல். பால் பொங்க வைப்பது இடையர் பொங்கல். சல்லிக் கட்டென்றும் மஞ்சு விரட்டென்றும் மாடு விடுதல் என்றும் நடைபெற்றுவருவது பண்டை முல்லைநில வழக்கம் (ஏறுதழுவல்).

திணை நிலைக் காலத்தில் உழவர் வழிபட்ட தெய்வம் விண்ணோர் தலைவனான வேந்தன் (இந்திரன்) திணைமயக்கம் ஏற்பட்ட பின், பாலை நிலத் தெய்வமான காளியும் நடுகல் தெய்வங்களும் வழிபடு தெய்வங் களாயின. சிவநெறியும் திருமால் நெறியுமான பெருமதங்கள் தோன்றிய பின், உழுவித் துண்பார்தம் கொள்கைப்படி சிவனையோ திருமாலையோ வழிபட்டு வருகின்றனர்.

ஆங்கிலக் கல்வியினாலும், நயன்மை (நீதிக்கட்சி) ஆட்சியினாலும், தமிழரிடையே மறுமலர்ச்சி யுண்டாயிருப்பதால் பொங்கல் பெருநாள் ஒரு நாட்டினத் திருநாளாகத் தமிழரனைவராலும் ஒருவகைப் புத்துணர்ச்சியு டன் இன்று கொண்டாடப்பட்டு வருகின்றது. பிராமணர் பொங்கலைச் சங்கராந்தி என்பர்.

பொங்கல் உழவர்க்கே சிறப்பாக வுரிய பெரும் பண்டிகையாயினும் அரசியலாரும் உழவரல்லாத பிற பொதுமக்களும் இப் பெருநாளைக் கொண்டாடி உழவரை ஊக்குவதுடன்; நன்றியறிவாகவும் தந்நலங் கருதியும், நிலமுள்ள ஏழையுழவர்க்குக் கடனடைக்கவும் குலவெருதுகள் வாங்கவும் பொருளுதவியும், பொறியியற் கருவிகள், நல்விதைகள், வல்லுரங்கள் முதலியன இலவசமாக வழங்கியும்; நிலமில்லாத வுழவர்க்கு அவற்றோடு நிலமும் வழங்கியும் பெரு நிலக்கிழவரும் சிறுநிலக்கிழவரும் 'நிலமில்லா வுழவருமாகிய முத்திறத்தார்க்கும் புதிய அறிவியல் முறைகளைக் கற்பித்தும்; உழைப்பினால் பெருவிளைவு காட்டுபவர் பண்ணையாராயின் (மிராசுதார்) பட்டம் சின்னம் சலுகை முதலியவற்றாலும் எளியவராயின் நன்கொடையினாலும் சிறப்பித்தும்; சூத்திரன் என்னும் சிற்றிழிவையும் தீண்டாதான் என்னும் பேரிழிவையும் அடியோ டகற்றியும்; எதிர்கால வுழவராவது தாய்மொழிச் செய்தித்தாளைப் படித்துத் தம் அறிவைப் பெருக்கிக் கொள்ளுமாறு, இலவசக் கட்டாயத் துவக்கக் கல்வியை விரைந்தேற்படுத்தியும்; உணவுப் பொருள் விளைவுப் பெருக்க இயக்கத்தை ஓங்கச் செய்வாராக.

"*பகடு நடந்த கூழ்*" என்று நாலடியார் கூறியபடி, உழவுத் தொழிற்குதவும் எருது களையும், பிந்தி யுதவக்கூடிய கன்று களையும், பாலுணவளிக்கும் பெற்றங்களையும் (பசுக்களையும்) போதிய ஊட்டங் கொடுத்தும் மிகைவேலை வாங்காதும், நோய் மருத்துவஞ் செய்தும், உடையவர் பேணுமாறு கருத்தாய்க் கவனித்தும்; பேணாதவரைத் தண்டித்தும்; கால்நடைப் பண்ணைகளை ஆங்காங்கு ஏற்படுத்தியும்; அரசியலார் உழவுத் தொழிலை ஊக்குவாராக.

*உழவர் வாழ்க! உழவெருதுகள் வாழ்க!*

—பாவாணர்

**பொங்கற்பருக்கை** *pongar-parukkai,* பெ. (n.) பொங்கலன்று புதிதாக அறுத்துக்குத்திச் சமைத்த பச்சரிசிச்சோறு; food of raw rice cooked on the pongal day. *'பொங்கற் பருக்கை பூராப் பிடியோ?'*

*[பொங்கல் + பருக்கை]*

**பொங்கற்பானை** ponkar-pānai, பெ. (n.) 1. சுறவ(தை)ப்பொங்கற்குப் பயன்படுத்தும் புதுப்பானை; new mud-pot used to boil rice for the pongal feast. 2. வயிறு பெருத்தவன்; pot-belly.

*[பொங்கல்+பானை]*



**பொங்காரம்** pongāram, பெ. (n.) 1. பொங்குகை (யாழ்.அக); increase, overflow. 2. மிகுதுயரம்.(வின்.); sadness, grief, sorrow 3. சீற்றம்; Anger. "பூசலைப் பார்த்துப் பழைய பொங்காரந் தீராமல்" (தெய்வச். விறலிவிடு.479) 4. வளையளுப்பு (இ.வ); glass-gall.

*[பொங்கு+பொங்காரம்]*

**பொங்கித்தெளித்தல்** pongi-t-telittal, பெ. (n.) வீட்டுக்கூரையில் ஆந்தை தங்கியதற்குக் கழுவாயாகப் பொங்கலிட்டுப் பாற்கஞ்சியை வீட்டில் தெளிக்குஞ்சடங்கு (யாழ்ப்.); purificatory ceremony of boling rice in milk and sprinkling the house with the soup, because an owl has alighted on the roof.

*[பொங்கி + தெளித்தல்]*

**பொங்கிவழி—தல்** pongi-vali, செ.கு.வி (v.i) 1.சோறு முதலியன கொதித்துப் புறத்துவடிதல்; to boil over,as rice or milk. 2. செல்வம் பெருகுதல்; to abound to overflowing,as wealth.

*[பொங்கு + வழி]*

**பொங்கு—தல்** *pongu,* செ.கு.வி (v.i.) 1. காய்ந்து கொதித்தல்; to boil up, bubble up by heat. 2. கொந்தளித்தல்; to foam and rage, as the sea. *'பொங்குநீர் ஞாலம்'* (நாலடி.72). 3. மிகுதல் (பங்); to increase *'மகிழ்ச்சி பொங்கி'* (காசிக.சயிலே.23). 4. பருத்தல்; to expand. swell, as with joy. *'வன் கொங்கை பொங்க'* (திருவாச.9,8) 5. மேற்கிளர்தல்; to shoot up. *'நெய்ம்மலி யாவுதி பொங்க'* (புறநா.15) 6. ஊக்கம் கொள்ளுதல்; to be elated, spirited. *'போர்த்தொழில் வேட்கை பூண்டு பொங்கினார்'* (கம்பரா.படைத்.1) 7. வைகுளுதல்; to burust in anger.*'பொங்கி மறத்திடை மான மேற்கொண்டு'* (பு.வெ.5,6) 8.செருக்குதல்; to be haughty. *'பொங்குதலின்றிப் புரையோர் நாணிப்பண்'* (தொல்.பொ. 426) 9. நுரைத்தெழுதல்; to ferment, effer vesce. *'தோசைமா கள்ளு முதலியன பொங்கும்'* 10. விளங்குதல்; to bebright, attractive. *'பொங்குவெண்ணுலு பொடியணி மார்பிற் பொலிவித்து'* (தேவா.876,2) 11. மயிர் சிலிர்த்தல்; to stand on end,as hair or mane. *'எரிமயிர் பொங்க'* (திவ்.திருப்பா.23) 12. வீங்குதல்; to be swollen,as a boil or sore. *'பதைத்தடி பொங்கு நங்காய்'* (திருக்கோ.228) 13.விரைதல்; to be swift, rapid. *'பொங்குநடை*

....*விடையாமவரூர்தி* (தேவா.535,2) **14.** துள்ளுதல்; to jump, leap. '*ஏழை யிரும்புகர் பொங்க*' (கலித்.107) **15.** கண் சூடுகொள்ளுதல்; to be inflamed, as eyes. **16.** உயர்தல் (பிங்); to rise, grow high. **17.** செழித்தல்; to a bound, flourish; to be fruitful. **18.** ஒலித்தல்; to sound, roar, to cook. '*பொங்கின சிலம்புகள்*' (கம்பரா.உண்டாட். 63)

*தெ.க.பொங்கு. ம.பொங்குக.*

*[பொங்கு → பொங்குதல்]*

**பொங்கு[2]** *poṅku-,* செ.குன்றாவி.(v.t.) சமைத்தல்(கொ.வ.); to cook.

**பொங்கு[3]** *poṅgu-,* பெ. (n.) **1.** செல்வச் செழிப்பு; prosperity. '*உன்பொங்கு குங்க*' (யாழ்ப்.) **2.** நற்பேறு; goodluck, fortunte '*பொட்டைப்பயலுக்கு இந்தப் பொங்கு விளையுமோ*' (ஆதியூரவதானி,38)

**பொங்குகாலம்** *poṅgu-kālam,* பெ. (n) பொங்குங்காலம் பார்க்க, see poṅgun-kālam. '*பொங்குகாலந்தழைக்கும்*' (குமரே.சத.48)

*[பொங்கு + காலம்]*

**பொங்குகிறவன்** *poṅgukiravaṉ,* பெ. (n.) சமையற்காரன் cook.

*[பொங்கு + கிறு + அ + அன்]*

**பொங்குங்காலம்** *poṅgu-ṅ-kālam,* பெ. (n.) செழிப்புக்காலம்; period of waxing prosperity, opp. to maṅgu-ṅ-kālam. '*பொங்குங்காலம் புளி பூக்கும், மங்குங்காலம் மா காய்க்கும்*'

*[பொங்கும் + காலம்]*

**பொங்குசனி** *poṅgu-šaṉi,* பெ. (n.) வாழ்நாள் இரண்டாமுறை வரும் ஏழரையாண்டுச்சனி; the second period in a person's life of ēḻavai-y-āṇḍu-c-caṉi.

*[பொங்கு +* SKṭ. sani. *த. சனி]*

**பொங்குநீர்க்கிணறு** *poṉkuneer-k-lomari,* பெ. (n.)இயல்பாக நீர்ப்பெருக்கு பொங்கி மேலெழும்பி, நிலத்தில் வழிந்தோடும் ஆழ்துளைக்கிணறு.

*[பொங்கு + நீர்+கிணறு]*

**பொங்குமுட்டி** *poṅgu-muṭṭi,* பெ. (n.) சமையற்பானை; pot for boiling rice.

*[பொங்கு + முட்டி]*

**பொங்கோலம்** *poṅgōlam,* பெ. (n.) குழந்தைநலங் கருதி வேண்டுதல் கட்டும் வித்துக்களையுடைய மரம்; child's amulet tree.

*[பொங்கு+கோலம்]*

**பொச்சக்கயிறு** *pocca-k-kayiṟu,* பெ. (n.) கொச்சக்கயிறு; rope made of cocoanut fibre (உ.வ)

*[பொச்சம்+கயிறு]*

**பொச்சடி** *poccadi,* பெ. (n.) வெறுநாக்கு அடிக்கை; smacking the lips, as in eating or in token of aversion or contempt.

*[பொய் → பொச்சடி]*

**பொச்சம்** *poccam,* பெ. (n.) **1.** குற்றம்; fault, defect, moral evil. '*பொச்சமில் போகமும்*' (காஞ்சிப்பு.திருநெறி.2) **2.** பொய்; lie, falsehood. '*பொச்சமி லன்பும்*' (திருவிளை.நாட்டுப்.31)

3. அவா; greediness, avidity. 4. தேங்காய் மட்டை (யாழ்ப்.); fibrous husk of cocoanut. 5. உணவு; (யாழ்.அக) food

*[ பொக்கம் → பொச்சம் ]*

**பொச்சரிப்பு** *poccari-p-pu,* பெ. (n.) *பொறாமை* பார்க்க; see *poramai.* (தஞ்சை.வழக்கு)

*[ பொச்சு → அரிப்பு ]*

**பொச்சா–த்தல்** *poccā,* செ.குன்றா.வி. (v.t) 1,மறத்தல்; to forget. *'புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க'* (குறள்.719) 2. இகழ்தல்; to deride, ridicule *'கொடையளிக்கட் பொச்சாவார்'* (ஆசாரக்.67)

**பொச்சாப்பன்** *poccāppaṉ,* பெ. (n.) மறதியுள்ளவன்; forgetful person, *'மடிமானி பொச்சாப்பன்'* (தொல்.எழுத்.சிறப்புப்.பக்.4)

*[பொச்சாப்பு → பொச்சாப்பன்]*

**பொச்சாப்பு** *poccāppu,* பெ. (n.) 1. மறதி; forgetfulness, *'பொச்சாப்புக் கொல்லும் புகழை'* (குறள்.532) 2. பொல்லாங்கு (வின்.); badness, evil, wickedness(ய.) 3. குற்றம் (பிங்.); fault, 4. உறுதியின்றி மனநெகிழ்ந்திருக்கை; instability of mind. *'வன்சொல் பொச்சாப்பு'* (தொல்.பொ. 279)

*[பொச்சா → பொச்சாப்பு]*

**பொச்சாலி** poccāli, பெ. (n.) சாலிநெல்வகை (வின்.); a kind of cāli paddy.

*[பொச்சா → பொச்சாலி]*

**பொச்சு[1]** poccu, பெ. (n.) 1. see பொச்சம்' 2. பழத்தின் சேதமடைந்த பகுதி; blighted part, as in jack-fruits, mangoes, etc., 3. see பொச்சம், 4 (யாழ்ப்.) பார்க்க;(பிங்.) see poccam.

*[பொச்சம் → பொச்சு]*

**பொச்சு[2]** poccu, பெ. (n.) 1. பெண்குறி மயிர்; crines mulbrifries pudendi, 2. பெண்குறி; pudendum muliebre. 3. எருவாய் (வின்.); anus (ய) 4. மயிர்க்கொத்து (வின்.); quantity of hair,

*க. பொச்சு*

**பொச்செரிப்பு** pocceripu, பெ. (n.) பொறாமை; jealousy.

*[பொச்சு → எரிப்பு]*

**பொச்சை[1]** poccai, பெ. (n.) 1. காடு; forest, copse. *'பொச்சையிடை......வெட்டுங்கொலை வேடர்'* (திருப்பு.7) 2. கரிகாடு (பிங்.); burnt jungle (பங்) 3. சிறுமலை (சூடா); hillock. 4. மலை (திவா.) hill mountain. 5.புழுக்கூடு; nest of insects. 'பொச்சையிற் கையிடாதே' (வின்.)

*[பொற்றை → பொச்சை]*

**பொச்சை[2]** *poccai,* பெ. (n.) குற்றம்; fault. *'பொச்சையர் கடனனி பொருமல் கொள்வதே'* (கந்தர்.தருமகோ.19)

*[பொச்சம் → பொச்சை]*

**பொச்சை[3]** *poccai,* பெ. (n.) தொப்பை வயிறு; paunch, pot-belly. *'பொக்கையிட்டுப்பாந்துமாக வவன் வளர்ந்து'* (ஆதியூரவதானி.8)

*தெ. பொட்ச. க. பொஜ்ஜெ*



**பொசி¹–தல்** *poši,* செ.கு.வி, (v.i) 1. கசிதல்; to ooze out, percolate.'*நெல்லுக் கிறைத்த நீர் ...புல்லுக்கு மாங்கே பொசியுமாம்*' (மூதுரை.10) 2. வடிதல் (வின்.); to flow freely, as tears, milk, stream. (ய.) 3. செய்தி வெளியாதல்; (பாரத. அருச்சுனன்றவ.40) to leak out,as a report or secret. 4. மனமுருகுதல் (வின்.); to melt, be softened,as the heart in benevolence.

*[பொசி → பொசி–தல்]*

**பொசி²** *poši,* பெ. (n.) 1. கசிவது; that which oozes. 2. ஊனீர்; secretion in the body. '*பொசியினான் மிடைந்து புழுப்பொதிந்த உடம்பு*' (தேவா.812,6)

**பொசி³** *poši,* பெ. (n.) துத்தம் (சங்.அக); sulphate of copper or zing.

**பொசி⁴–த்தல்** *poši,* செ.குன்றா.வி. (v.t) 1. உட்கொள்ளுதல்; to eat, feed on. '*நின்மாலியாந் தீர்த்தம் புசியாதிருந்துமிலோம்*' (சிவரக. தேவர்முறை.12) 2. வினைப்பயன் எதிர்கொள்ளுதல்; to experince, as the fruits of past actions.

*[புசி → பொசி]*

**பொசிக்கை** *pocikkai,* பெ. (n.) கால்நடைகளுக்கு வரும் ஒருவகைக் காய்ச்சல்; malarial fever affecting cattle.

*[பொசுக்கு → பொசிக்கை]*

**பொசிவு** *pošivu,* பெ. (n.) 1. நெகிழ்வு; ductility. '*பொசிவுறு பசும்பொன்*' (கம்பரா, ஊர்தேடு.99) 2. கசிவு (வின்.); oozing,issuing gently.

*[பொசி → பொசிவு]*

**பொசுக்கு¹–தல்** *pocikku,* செ.குன்றாவி. (v.i) 1. சாம்பலாக எரித்தல்; to burn to ashes. 2. வெதுப்புதல்; to scorch,burn,as the sun. 3. தீயில் வாட்டுதல்; to singe, toast. 4. துன்பப்படுத்துல்; to persecute, afflict.

*[பொசுங்கு → பொசுக்கு]*

**பொசுக்கு²–தல்** *pošukku,* செ.குன்றாவி. (v.i) மலக்காற்றுவிடுதல் (வின்.); to break wind.

**பொசுக்குநோவு** *pošukku-nōvu,* பெ. (n.) ஆட்டுநோய்வகை(C.E.M); a disease of sheep and goats.

*[பொசுக்கு → நோவு]*

**பொசுக்கெனல்** *pošukkeṉal,* பெ. (n.) விரைவுக்குறிப்பு; suddenness,quickness.

*[பொசுக்கு + எனல்]*

**பொசுங்கல்** *pošungal,* பெ, (n.) 1. கருகினது; that which is signed,scorched or burnt. 2. மந்தன்; one who speaks or acts with hesitation. 3. வலுவற்றவன்; weak,

insignificant person. 4. சிறுதூற்றல்; slight drizzling. *'மழை உறைத்துப் பெய்யவில்லை, பொசுங்கலாயிருக்கிறது'.*

*[பொசுங்கு–பொசுங்கல்]*

**பொசுங்கு[1]–தல்** *pośuṅgu,* செ.கு.வி, (v.i) 1. எரிக்கப்படுதல்; to burn,to be consumed,as hair,paper. 2. காய்தல்; to be scorched slightly,as grain. 3. வாட்டப்படுதல் (வின்.); to be signed, toasted. 4.அழிவுறுதல்; to be ruined. 'அந்தக் குடும்பம் பொசுங்கிவிட்டது.'

*[பொசு → பொசுங்கு]*

**பொசுங்கு[2]–தல்** *pośuṅgu,* செ.கு.வி. (v.i) இணங்குதல்; to be united,to agree. *'இருவருக்கும் பொசுங்காது'*

**பொசுபொசு–த்தல்** *pośu-pośu-,* செ.கு.வி. (v.i) 1. கமுக்கம் பேசுதல்(யாழ்.அக); to whisper,murmur in secret. 2. மெதுவாகக் கசிதல்; (யாழ்.அக) to ooze out slowly. 3. எரிச்சலுண்டாகும்படி அடிக்கடி பேசுதல்; to be unfortunate. 4. மழைதுளித்தல் (சங்.அக); to drizzle.

**பொசுபொசுப்பு** *pośu-pośuppu,* பெ. (n.) அடிக்கடி நெருக்கிக் கேட்கும் தொந்தரவு; being importunate. "அவர் பொசு பொசுப்புத் தாங்க முடியவில்லை."

*[பொசுபொசு+பு]*

**பொசுபொசெனல்** *pośu-pośeṉal,* பெ. (n.) 1. எளிதில் எரிதற்குறிப்பு; being burnt easily. 2. இலேசாய்ப் பெய்தற்குறிப்பு;raining slighly 3.விரைவுக்குறிப்பு being sudden,as the explosion of a gun.

**பொட்டல்** *poñju,* செ.கு.வி. (v.i) செழித்தல்; to prosper, thrive. *'மாடு கன்று பொஞ்சாது'.*

*[பொங்கு → பொஞ்சு]*

**பொஞ்சு[2]–தல்** *poñju,* செ.கு.வி. (v.i.) பொசுங்கு[2]பார்க்க; see pośuṅgu.

*[பொசுங்கு → பொஞ்சு]*

**பொட்ட** *poṭṭa,* கு.வி.எ, (adv) விரைவாக; suddenly, swiftly. *'பொட்ட வல்லுயிர் போவதன் முன்னம்'* (தேவா.20,26) 2. முழுதும்; entirely. *'பொட்டத்துற்றி மாரிப்பகை புணர்த்த'* (திவ்.பொரியாழ்.3,5,1)

**பொட்டகத்துத்தி** *poṭṭaga-t-tutti,* பெ, (n.) காட்டுக்கத்தூரிச்செடி; muskmallo.

*[பொட்டல் → துத்தி]*

**பொட்டகத்தூரி** *poṭṭa-kattūri,* பெ,(n.) *பொட்டகத் துத்தி* பார்க்க; see *irattuga-t-tutti*

*[பொட்டல் → கத்தூரி]*

**பொட்டச்சி** poṭṭacci, பெ. (n.) பெண்; women, used in contempt.

*[பெள் → பேடு → பேடை → பெட்டை → பெட்டைச்சி → பொட்டச்சி]*

*'சி'* – *பெண்பாலீறு*

**பொட்டணம்** *poṭṭaṇam,* பெ. (n.) 1. சிறுமூட்டை; small bundle, parcel. 2. ஒத்தடமிடும் சீலைப்பந்து; bundle of drugs, leaves, etc. tied in a piece of cloth and used in fomentation.

*தெ. பொட்டணமு. க. பொட்டண.*

*[பொட்டலம் → பொட்டணம்]*

**பொட்டணம் போடு—தல்** *pottanam-pōdu.,* செ.கு.வி. (v.i) ஒத்தடமிடுதல்; to apply fomentation.

*[பொட்டணம் + போடு—,]*



**பொட்டணமொற்று—தல்** *pottanam-orru-,* *பொட்டணம்* (வின்.) போடு பார்க்க; see *pottanam-pōdu*

*[பொட்டணம் + ஒற்று—தல்]*

**பொட்டணி** *pottani,* பெ. (n.) *பொட்டணம்* பார்க்க; see *pottanam.*

*[பொட்டணம் + பொட்டணி]*

**பொட்டரி—த்தல்** *pottari,* செ.குன்றா.வி. (v.t) ஆடையைப் பூச்சியரித்தல் (வின்.); to fret a garment, as moths.

*[பொட்டு+அரி]*

**பொட்டல்** *pottal,* பெ. (n.) **1.** பாழிடம்; barren or aride tract, waste land, 'பூமி சில பொட்டலற (தாயு.எந்நாட்.1242) **2.** திறந்த வெளியிடம்; open space. '*அந்திக்கடைப் பொட்டல்*', '*கோவலன் பொட்டல்*'. **3.** தலை வழுக்கை (இ.வ.); baldness.

*[பொட்டு → பொட்டல்]*

**பொட்டல்வெளி** *pottal-veli* பெ. (n.)மேய்ச்சல் புல்வெளி; grass land, moor land.

*[பொட்டல்+வெளி]*

**பொட்டலஅஞ்சல்** *pottala-ancal,* பெ. (n.) சிப்ப அஞ்சல் parcel post

*[பொட்டலம்+அஞ்சல்]*

**பொட்டலம்** *pottalam.* பெ. (n.) *பொட்டணம்,1* பார்க்க; see *pottanam.*

**பொட்டளி** *pottali.* பெ. (n.) *பொட்டணம்*1 (யாழ்.அக) பார்க்க; see *pottanam.*

**பொட்டி[1]—த்தல்** *potti.* செ.கு.வி. (v.i) திறத்தல்; to open. '*கடிதக்கட்டைப் பொட்டித்துப் பார்த்தான்*'.

*[பொள் → பொட்டு → பொட்டி]*

**பொட்டி[2]** *potti.* பெ. (n.) விலைமகள்; prostitute. '*பொட்டியாளாசை கொஞ்ச மட்டினிலே மாறாது*'. (கவிகுஞ்.3)

*[ பெட்டை → (பெட்டி) → பொட்டி]*

**பொட்டி[3]** *potti.* பெ. (n.) **1.** கதவுகளில் அமைந்த வேலை வகை; see *pottippu.* **2.** பெட்டி; box.

*[பெட்டி → பொட்டி]*

**பொட்டிப்பிழைப்புளி** *pottippailaippuli,* பெ. (n.) ஒருவகைத் தச்சுக்கருவி(C.E.M.); panel-plane.

*[பொட்டிப்பு + இழைப்புளி]*



**பொட்டிப்புக்கதவு** *poṭṭippu-k-kadavu,* பெ. (n.) கதவுவகை(C.E.M.); panel door,

*[பொட்டிப்பு+கதவு]*

**பொட்டிமகன்** *poṭṭi-magaṉ,* பெ. (n.) 1. கணிகையின் மகன்; prostitute's son. 2. கெட்டிக்காரன் (வின்.); a clever fellow,used in contemt *'செக்காரப் பொட்டி மக்கள் வாசல் வழிப்போகோமே'* (தனிப்பா.i,142,39)

*[ பொட்டி + மகன்]*

**பொட்டில்** *poṭṭil,* பெ. (n.) ஊர்வலம் முதலியவற்றில் வெடியோசை செய்யுங்கருவி (வின்.); machine with pistolets to make a cracking noise in a procession.

*[ பொட்டு → பொட்டில்]*

**பொட்டில்சுடு-தல்** *poṭṭil-cutu,* செ.கு.வி. (v.i) நெற்றியின் பக்கத்துக்குறியில் கைத் துமுக்கியாற் சுடுதல் (வின்.); to fire a pistol (ய.)

*[ பொட்டில் + சுடு]*

**பொட்டிலம்** *poṭṭilam,* பெ. (n.) *பொட்டணம்* 1, (யாழ்.அக) பார்க்க; see *pottanam1*

**பொட்டிலி** *poṭṭili,* பெ. (n.) *பொட்டில்* (வின்.) பார்க்க; see *pottil.*

*[பொட்டு → பொட்டிலி]*

**பொட்டிலுப்பு** *poṭṭil-uppu,* பெ. (n.) வெடியுப்பு; saltpetre,nitrate of potash

*க. பெட்டலுப்பு*

*[பொட்டில் + உப்பு]*

**பொட்டு[1]** *poṭṭu,* பெ. (n.) 1. நெற்றியிலிடும் வட்டக்குறி; round mark, red white or black, worn on the forehead. *'பொட்டணியா ணுதல்'* (திருக்கோ. 303) 2. பொன்னாற் செய்த ஒருவகைத்தாலி; gold ornament in the shape of small metal cups strung together and worn round the neck. *'அரக்கியர் கட்டிய பொட்டுகள் தொட்டறுபட்டிடும்'* (இராமநா.சுந். 18.) 3. ஒருவகையணி; a kind of jewel. *'திருக்கைப்பொட்டு'* (S.I.I. ii, 16.) 4. கன்னத்தின் மேற்பொருத்து; temple of the head. 5. சிறுமை; trifle. 'பொட்டான வேர்களும்' (இராமநா.) 6. வட்டவடிவான குறி; dot, spot, mark 7. துளி; drop. மழை ஒரு பொட்டுக்கூட விழவில்லை. 8. புழு; worm (பிங்) 9. பூச்சிவகை; moth. பொட்டரித்த ஆடை 10. *பொட்டுப்பூச்சி* (வின்.) பார்க்க; 11. ஒன்று என்னும் எண்ணைக் குறிக்கும் புள்ளி; dot, representing one 12. தகுதியின்றிப் பிறரை ஏமாற்றிப் பெறும் நன்மதிப்பு (வின்.); repute or esteem obtained by imposing on others. 13. நுழைவழி (வின்.); hole or opening to creep through; as in a hedge.

*தெ.க. பொட்டு*

*[பொள் + து = பொட்டு]*

**பொட்டு²** *pottu,* பெ. (n.) **1.** உழுந்து முதலிய தவசங்களின் தோலோடு கூடிய சிறுதுகள்; chaft; husk with particles of grain. **2.** பொடி; dust. 'குலக்கிரி பொட்டெழ' (திருப்பு. 740) **3.** பொடுகு; dandruff '*அவன்தலை பொட்டெழுந்தி ருக்கிறது*'.

*[பொற்று → பொட்டு]*

**பொட்டு³–தல்** *pottu,* பெ. (n.) செ.கு.வி. (v.i.) வெடித்தல்; (இ.வ.) to burst.

**பொட்டுக்கட்டுதல்** *pottu-k-kattutal,* பெ. (n.) தேவகணிகையாக கோயிற்குரிமையாக்கும் பெண்ணுக்குத் தாலிகட்டுஞ் சடங்கு; ceremony of dedicating a dancing girl to a temple by tying the marriage badge round her neck.

*[பொட்டு + கட்டுதல்]*

**பொட்டுக்கம்பு** *pottu-k-kambu,* பெ. (n.) 1. கம்புவகை(A.); a kind of bulrush - millet.

*[பொட்டு + கம்பு]*

**பொட்டுக்கருகல்மணி** *pottu-k-karugal mani,* பெ. (n.) கறுப்பு மணிகள் கோத்த ஒரு வகைத்தாலி; string of black beads and discs, worn by girls and women, used by Telugus as a marriage badge also.

*[பொட்டு + கருகல் + மணி]*

**பொட்டுக்கறிவள்ளி** *pottu-k-karivalli;* பெ. (n.) *செவ்வள்ளி* (L.) பார்க்க; see *cevvalli.* purple yam. tred

*[பொட்டு + கறிவள்ளி]*

**பொட்டுக்காரை** *pottu-k-kārai,* பெ. (n.) 1. காரைமீன் வகை (வின்.); a kind of fish.

*[பொட்டு + காதை]*

**பொட்டுக்காறை** *pottu-k-kārai,* பெ. (n.) மகளிர் கழுத்தணிவகை; a kind of neck-ornament, '*பொட்டுக்காறை யெந்த ஈளுவன் வீட்டில் இருக்குதோ*' (விறலிவிடு. 701.)



**பொட்டுக்குத்து–தல்** *pottu-k-kuttu,* பெ. (n.) பச்சைகுத்துதல்; the tattoo with a kind of vegetable extract.

*[பொட்டு + குத்துதல்]*




**பொட்டுக்குலை–தல்** *pottu-k-kulai,* பெ. (n.) செ.கு.வி. (v.i.) மதிப்பிழத்தல் (யாழ்.அக.) to lose honour or esteem.

*[பொட்டு + குலை–தல்]*

**பொட்டுக்குற்று–தல்** *pottu-k-kurru-,* பெ. (n.) செ.கு.வி. (v.i.) பார்க்க; பொட்டுக்குத்து; (யாழ்.அக.)

*[பொட்டு + குற்று–தல்]*

**பொட்டுக்கேடு** *poṭṭu-k-kēḍu,* பெ. (n.) தகாத பெருமதிப்பை யிழக்கை (வின்.); loss of ill-deserved reputation.

*[பொட்டு + கேடு]*

**பொட்டுத்தாமரை** poṭṭu-t-tā-marai, பெ. (n.) *கண்டு பாரங்கி* பார்க்க; indian lotus croton.

*தெ.ம. புட்டத்தாமர. க. பொட்டதாவர.*

**பொட்டுத்தாலி** *poṭṭu-t-tāli,* பெ. (n.) பொட்டு வடிவான மங்கல நாண்; marriage badge with dises or small cups strung together.

*[பொட்டு + தாலி]*



**பொட்டுத்துவரை** poṭṭu-t-tuvarai, பெ. (n.) மரவகை (L.) ; anaimalai calaminder-wood, m.tr.,

*[பொட்டு + துவரை]*

**பொட்டுப்பூச்சி** *poṭṭu-p-pūcci,* பெ. (n) சிலந்திப்பூச்சி வகை (வின்.); small round bodied venomous spider with long legs.

*[பொட்டு + பூச்சி]*



**பொட்டுப்பொட்டெனல்** *poṭṭu-p-poṭṭeṉal,* பெ.(n) ஒலிக்குறிப்பு வகை; expr. signifying sound of an thing dropping down.

*[பொட்டுப்பொட்டு + எனல்]*

**பொட்டுப்பொடி** *poṭṭu-p-poḍi,* பெ. (n.) சிறுபண்டம்; knick-knack *'அவன் பொட்டுப் பொடிகளையெல்லாம் அள்ளிக்கொண்டு போய் விட்டான்'* (இ.வ.)

*[பொட்டு + பொடி]*

**பொட்டுவெடி** *poṭṭu-veḍi,* பொட்டுப் போன்ற வடிவமைப்புக் கொண்ட சிறுபட்டாசு வகை.

**பொட்டெழுத–தல்** *poṭṭeḻu,* பெ. (n.) அழிவுறுதல்; to be ruined; to crumble to dust. *'ஒளித்திட்ட சூர் பொட்டெழுக்குத்தும் ராவுத்த'.* (திருப்பு. 724).

*[பொட்டு + எழு–தல்]*

**பொட்டெனல்** *poṭṭeṉal,* பெ. (n.) விரைவுக் குறிப்பு; expr. signifying quickness, suddenness, agility. *'பொட்டெனவே யயோத்திப்பட்டணமெல்லாம் வந்து'.* (இராமநா. அயோத்.12.)

*[பொட்டு + எனல்]*

**பொட்டை**[1] *poṭṭai,* பெ. (n.) 1. குருடு; blindness. *'கண்பொட்டையாயினும் அம்பட்டனான்'.* (தனிப்பா.1, 171, 23.) 2. கண்ணொளி மழுக்கம்; blear-sight

*[பொல் → பொள் → பொற்று → பொத்து → பொத்தை → பொட்டை]*

*உள்ளீடற்றது—பயனற்றது.*

**பொட்டை**[3] *poṭṭai,* பெ. (n) சூதாடுவோர் குழூஉக்குறி; a cant in gambling. *'அடியிது பொட்டையீதென்பர்'* (கந்தபு. கயமுகனுற். 168.)

*[பொள் → பொற்று → பொத்தை → பொட்டை]*

**பொட்டைக்கண்** *poṭṭai-k-kaṇ,* பெ. (n.) குருட்டுவிழி; blind eye

*[பொட்டை + கண்]*

**பொட்டைச்சி**[1] *poṭṭaicci,* பெ. (n.) பார்க்க, பொட்டச்சி.

*[பெட்டை → பொட்டை → பொட்டைச்சி]*

*'சி'* பெண்பாலீறு

**பொட்டைச்சி**[2] *poṭṭaicci,* பெ. (n.) ferm of *பொட்டையன்,* 2. (வின்.) பார்க்க; see *poṭṭaiyaṉ*

*[பெட்டைச்சி → பொட்டைச்சி]*

**பொட்டையன்**[1] *poṭṭaiyaṉ,* பெ. (n.) குருடன்; blind man; "பொட்டையாய் புகலாய்," (தனிப்பா. 171,23.).

*[பொட்டை → பொட்டையன்]*

**பொட்டையன்**[2] *poṭṭaiyaṉ,* பெ. (n.) பெண்வழிச் செல்லும் ஆடவன்; henpecked husband

*[பெட்டையன் → பொட்டையன்]*

**பொடி—தல்**[1] *poḍi-,* பெ. (n.) செ.கு.வி. 1. தூளாதல்; to be broken to pieces, as rice; to become pulverised; *'சிரம்பொடிந்து சிந்தவே'* (கம்பரா. மூலபல. 93) 2. தீய்தல்; to be blighted, as grain. *'பொறாதார் தங்கண் பொடிவதெவன்'* (கலித்.105.) 3. ஒளி மழுங்குதல்; to lose brightness. *'கண்ணெலாம் பொடிந்தலற'* (தேவா. 805.8.) 4. கெடுதல் (வின்.); to perish; to be destroyed (w.) 5. சினங்கொள்ளுதல்; to be angry. *'தன் கைகால் தப்புச் செய்ததென்று பொடிய விரகுண்டோ'* (திவ். திருப்பா. 28. உரை.பக்.244)

**பொடி**[2]**—த்தல்** *poḍi-,* செ.குன்றா.வி. (v.t.) 1. கண்டித்தல்; to rebuke, check. *'பொடிகிற தாய்மாரைக்குறித்து'* (ஈடு, 7, 3, 4.) 2. வெறுத்தல்; to despise, dislike. *'பொடிந்த நின் செவ்வி காட்டெனா'* (புறநா. 160.)

**பொடி**[3]**—த்தல்** *poḍi-,* செ.குன்றாவி. (v.t.) 1. துகளாக்குதல்; to pulverises reduce to dust or powder. 'எழுமலை பொடித்த.... வள்ளிதுணைக் கேள்வன் (கல்லா 1.) 2. கெடுத்தல்; to spoil, destroy. *'அது கண்பொடித்த நாள்'* (கம்பரா. காட்சி. 28.) 3. தோற்றுவித்தல்; to produce

**பொடி**[4]**—த்தல்** *poḍi-,* செ.கு.வி. (v.t.) 1. அரும்புதல்; to spring up, shoot, rise. *'முலைபொடியா'* (திருக்கோ. 104) 2. தோன்றுதல்; to appear; *'ஊன்றலைப் பொடித்தாங்கனைய செஞ்சூட்டின்'* (சீவக. 2106.) 3. விளங்குதல்; to shine *'இரவி கோடி .... பொடித்து'* (சூடா. 5, 1.) 4. வியரரும்புதல்; to bedew; to ooze out, as perspiration. *'புள்ளிவியர் பொடிப்ப'* (பதினொ. திருவிடைம. 16). 5. புளகித்தல்; to horripillate. *'பொடித்தன வுரோமராசியே'* (கம்பரா. உண்டாட்டு. 36.) 6. பொடியாதல்; to be pulverised. *'பூழையோடே பொடித்து'* (கம்பரா. எதிர்கோ. 10.)

**பொடி³** *podi-,* பெ. (n) 1. தூள்; (powder) '*வாசநறும் பொடி*' (பெருங்.மகத. 17,160.) 2. புழுதி (பிங்.); dust. '*பொடியாடிக்கிடப்பதோ*' (சிலப் 19,481) 3. பூந்தாது; pollen of flowers. 4. மூக்குத்தூள்; snuff. '*பொடிக்கடி நாசித் துளையிலே புகுத்தி*' (அருட்பா, vi. அவாவறு12) 5. சொக்குப்பொடி (வின்.); magical powder. 6. மாழைகளைப் பற்ற வைக்கும் பொடி; solder metallic cement; 7. சாம்பல்; ash '*பொடியழல்*' (கலித்: 85.2) 8. திருநீறு. (திவா.); sacred ashes. (மெய்சேர். பொடியர்' (தேவா. 46,5.) 9. சிறிய துண்டு; anything small or minute; particle; fragment. 10. சிறியது; that which is small. 11. சிறுமணி (கொ.வ.); small gem. 12. சிறு பிள்ளை (யாழ்ப்.); little child.

**பொடிக்காசு** *podi-k-kāšu,* பெ.(n) கைக்கூலி; bribe "நானாவித இமிசை செய்து பொடிக்காசு வாங்குகிறாமிதங் காண்க"(தாசில்தால் நா. பக்90)

*[பொடி → காசு]*

**பொடிச்சல்லி** *podi-c-calli,* பெ. (n.) 1. கட்டட வேலைக்காக உடைத்த கருங்கல் அல்லது செங்கற் சிறு துண்டு; (C.E.M.); small bits of brick or stone, used for concrete.

*[பொடி + சல்லி]*

**பொடிச்சிரங்கு** *podi-c-ciraingu,* பெ.(n.) சொறிசிரங்கு வகை; (itch, scabies, running scall, eczema.

*[பொடி + சிரங்கு]*

**பொடிச்சிலை** *podi-c-cilai,* பெ. (n.) மஞ்சணிறமுள்ள கல்வகை. (மூ.அ.); (a yellow mineral.

*[பொடி + சிலை]*

**பொடிசு** *podišu,* பெ. (n.) 1. சிறியது; (particle, grain, as of sand; fragment; anything small. 2. *பொடிச்சி.* (இ.வ.) பார்க்க; see *Podicci.* 3. கணிகைச்சிறுமி ; young courtezan.

*[பொடி → பொடிசு]*

**பொடித்தடை** *podi-t-tadai,* பெ. (n.) *பொடிப் பட்டை.* (இ.வ.) பார்க்க; see *podi-p-pattai.*

*[பொடி + தடை]*

**பொடித்தரை** *podi-t-tarai,* பெ. (n.) பொடி மிகுதியான நிலம். (சிலப் 3, 96, உரை.); a variety of soil which is dusty.

*[பொடி + தரை]*

**பொடித்தூவல்** *podi-t-tūval,* பெ. (n) ஒரு வகை மரக்கறியுணவு (கொ.வ.) ; a kind of vegetable curry

*[பொடி + தூவல்]*

**பொடிதூவு—தல்** *podi-tūvu.,* செ.கு.வி. (v.i.) மரக்கறியில் மாப்பொடி கலத்தல் (கொ.வ.); to sprinkle rice-flour in preparing vegetable curry.

*[பொடி + தூவு—தல்]*

**பொடிநகை** *podi-nagai,* பெ. (n) மட்டப்பொடி அதிகமாகச் சேர்த்துச் செய்யப்பட்ட அணிகலன் (இ.வ.); jewel or ornament, with inferior alloy used largely in soldering or in setting precious stones.

*[பொடி + நகை]*

**பொடிப்பட்டை** *podi-p-pattai,* பெ. (n) மூக்குத்தூள் வைக்கும் வாழைப் பட்டைக் கூடு; dried rind, as of plantain folded for keeping snuff.

*[பொடி + பட்டை]*

**பொடிப்பருவம்** *podi-p-paruvam,* பெ. (n) நீர்பாய்ச்சாது புழுதியில் நெல் விதைப்பதற்குச் செய்யும் பக்குவம்; preparation of nanjai, in dry condition for sowing paddy.

*[பொடி + பருவம்]*

**பொடிப்பாடு** *podi-p-pādu,* பெ. (n) நகைகளில் மிகுதியாகப் பொன்பொடி சேர்க்கை(நாஞ்.); excessive use of solder in making ornaments

*[பொடி + பாடு]*

**பொடிப்பு** *podippu,* பெ. (n) 1. புளகம்; horripillation. *'முற்றுடல் பொடிப்புக் கொள்ள'* (கந்தபு.மேருப்.4.) 2. *பொடுகு,* 1. (இ.வ.). பார்க்க; see *podugu.*

*[பொடி → பொடிப்பு]*

**பொடிப்போடு—தல்** *podi-p-pōdu,* செ.கு.வி. (v.i) மூக்குள் புகையிலைத் தூளிடுதல்; to take snuff. 2. மாயப்பொடியிடுதல்; to cast magical powders on one.

*[பொடி + போடு—தல்]*

**பொடிபடு—தல்** *podi-padu,* செ.கு.வி. (v.i) உடைபடுதல்; to be broken, crushed. *'கரை பொடிபடப் புடைத்ததை யன்றே'* (அரிச்பு. மீட்சி 14.)

*[பொடி + படு—தல்]*

**பொடிப்பண்ணு—தல்** *podi-pannu,* செ.குன்றாவி. (v.t.) 1. தூளாக்குதல்; to pulverise 2. துண்டித்தல். (சங்.அ.க.); to cut in two.

*[பொடி + பண்ணுதல்]*

**பொடிபொட்டு** *podi-pottu,* பெ(n.). 1. சிறியது; anything small 2. பதரானது; that which is like chaff

*[பொடி + பொள் + து]*

*மரபு இணைமொழி*

**பொடிமட்டை** *podi-mattai,* பெ (n.). மூக்குத் தூள் வைக்கும் வாழைப்பட்டைக் கூடு; dried rind, as of plantain folded for keeping snuff. "சவடால் பொடிமட்டை தட்டிவிட்டால் வெறும் மட்டை" (உ.வ.)

*[பொடி + பட்டை → மட்டை]*

**பொடிமரம்** *podi-maram,* பெ (n.). பொடிப் பருவத்தில் உதவும் உழவுக்கருவி வகை(இ.வ.); an instrument used in ploughing a dry nañjai

*[பொடி+மரம் → பொடிமரம்]*

**பொடியம்மை** *podi-y-ammai,* பெ(n.). அம்மைவகை(வின்.); measles.

*[பொடி + அம்மை]*

**பொடியல்** *podiyal,* பெ(n.). இரும்பில் துளை போடுங் கம்மக்கருவி; punching pin.

மறுவ. 'பொடியிர்'

*[பொடி → பொடியல்]*

**பொடியன்** *podiyan,* பெ(n.). 1. சிறுவன்(யாழ்ப்.); boy. 2. புல்லன்; insignificant person. *'காமப்பொடி யரிற் பொடியேன்'* (அருட்பா,vi, ஆற்றாமை. 10.)

*[பொடி → பொடியன்]*

**பொடியா—தல்** *podi-y-ā-,* செ.கு.வி. (v.i.). அழிதல்; to perish *'பொய்யும் பொடியாகா தென்செய்கேன்'* (திருவாச. 47.1.)

*[பொடி + ஆதல்]*

**பொடியாடி** *poḍi-y-āḍi,* பெ(n.). சிவபிரான்; siva as smearing ashes. *'விடையாய் பொடியாடீ'* (திருவாச 25.5.)

*[பொடி + ஆடி]*

**பொடியாணி** *poḍi-y-āṇi,* பெ. (n.). சிற்றாணி(C.E.M.); tack nail

*[பொடி + ஆணி]*



**பொடியிழைப்புளி** *poḍi-y-iḻaippuḷi,* பெ (n.). 1. சிற்றிழைப்புளி (கட்டட. நாமா. 39.); a small plane.

*[பொடி + இழைப்பு + உளி]*

**பொடியுழவு** *poḍi-y-uḻavu,* பெ(n.). புழுதிக்காலுழவு; dry ploughing dist. fr. toḻi-y-uḻavu.

*[பொடி + உழவு]*

**பொடிவரகு** *poḍi-varagu,* பெ. (n.). 1. தினை வகை (வின்.); paddy-field grass.

*[பொடி + வரகு]*

**பொடிவிதை** *poḍi-vidai,* பெ(n.). *புழுதிக்கால் விதைப்பு,* (இ.வ.) பார்க்க; see *puḻudi-k-kāl-vidaippu.*

*[பொடி + விதை]*

**பொடிவிளக்கணம்** *poḍi-viḷakkaṇam,* பெ. (n.). *பொடிவிளக்கம்* (யாழ்.அக.) பார்க்க; see *poḍi-vilakkam*

**பொடிவிளக்கம்** *poḍi-viḷakkam,* பெ. (n.). பொன்நகையில் அதிகப் பொடி சேர்த்து இணைக்கை; soldering an ornament with a large quantity of alloy.

*[பொடி → பொடிவிளக்கம்]*

**பொடிவு** *poḍivu,* பெ(n.). 1. சிதைவு; anything broken. 2. வசவு; cursing.

*[பொடி → பொடிவு]*

**பொடிவெட்டி** *poḍi-veṭṭiu,* பெ. (n.). தட்டாருடைய பொன்கம்பி வெட்டும் கத்தரிக்கோல்(வின்.); goldsmith's shears or scissors.

*[பொடி + வெட்டி]*



**பொடிவை-த்தல்** *poḍi-vai-,* செ.கு.வி. (v.i.). 1. மாழைகளைப் பற்ற வைத்தல்; to solder with metallic powder. 2. சூழ்ச்சியாகப் பேசுதல் (கொ.வ.).; to speak cunningly or decritfully 3. கோட்சொல்லுதல் (இ.வ.); to calumniate, slander.

*[பொடி + வை-த்தல்]*

**பொடிவைத்தூது–தல்** *podi-vaittūdu-,* செ.கு.வி. (v.i.). *பொடிவை* **1.(வின்.)** பார்க்க; see *podi-vai-,*

*[பொடிவைத்து + ஊது]*

**பொடுக்கு** *podukku,* பெ. (n.). மனக்கறுவு; grudge.

**பொடுக்கெனல்** *podukkenal,* பெ. (n.). ஓர் ஒலிக்குறிப்பு; onam. expr. signifying (a) breaking suddenly, as of cords. (b) விரைவுக்குறிப்பு; suddenness, quickness. '*சீவன் பொடுக்கென்று போயிற்று.*'

*[பொடுக்கு + எனல்]*

**பொடுகு** *podugu,* பெ. (n.). **1.** தலைச்சுண்டு; scurf, dandruff, scall on the head **2.** சிறுமை; smallness. '*பொடுகுப்பனங்காய்*' **3.** பூடுவகை; a shunb **(யாழ்.அக.).**

*[பொடிகு + பொடுகு]*

**பொடுகுக்காய்** *podugu-k-kāy,* பெ. (n.). **1.** சிறுகாய் **(இ.வ.).**; small unripefelt or bery

*[பொடுகு + காய்]*

**பொடுதலை** *podutalai,* பெ. (n.). பூடுவகை **(பதார்த்த. 351.)**; wild long pepper,



**பொடுதலை** *podudalai,* பெ. (n.). *பொடுதலை.* **(நாம.தீப 323.)** பார்க்க; see *podutalai*

**பொடுபொடு–த்தல்** *podu-podu-,* செ.கு.வி. (v.i.). **1.** வெடித்தல்; to snap, as cords. **2.** துளித்தல்; to spatter, drizzle, **3.** குறைதல்**(வின்.)**; to be scanty, hardly sufficient **4.** விரைவாய் பேசுதல்**(வின்.)**; to speak **5.** வயிறிரைதல்; to wamble, as the bowels, **6.** கல் முதலியன ஒலியுடன் விழுதல்; to fall, as stones one after another

**பொடுபொடெனல்** *podu-podenal,* பெ. (n.). (a) ஓர் ஒலிக்குறிப்பு; onaom expr. signifying snapping of cords, drizzling of rain, falling of fruits or stones one after another.b) **2.** விரைந்து பேசற்குறிப்பு; rattling in speaking

*[பொடுபொடு + எனல்]*

**பொண்டுதல்** *pondu,* செ.கு.வி. கெட்டுப்போதல்(யாழ்ப்.); to grow bad deteriorate

**பொத்தகம்** *pottagam,* பெ. (n.). **1.** சித்திரப்படாம் **(தி.வா.)**; painted cloth. **2.** புத்தகம்; book '*நிறைநூற் பொத்தகம் நெடுமணையேற்றி*' (பெருங் உஞ்சைக். **34, 26.**) **3.** நிலக்கணக்கு; land register. 'பொத்தகப்படிகுழி' (S.I.I. iii, **80**)

*[பொருத்து → பொத்து → பொத்தகம்]*

**பொத்தகம்²** *pottagam,* பெ. (n.). மயிலிறகு (பாலவா. **1012.**); feather of the peacock.

*[பொத்து → பொத்தகம்]*



**பொத்தப்பி** *pottappi,* பெ. (n.). தொண்டை மண்டலத்து வேங்கடக் கோட்டத்தைச் சார்ந்ததும் காளத்தியைச் சூழ்ந்ததுமான நாடு; the country around kālahasti, part of vēṉgaḍa-k-koṭṭam, in Tondai-maṇḍalam. 'கண்ணப்பர் திருநாடென்பர்.... பொத்தப்பி நாடு' (பெரியபு. கண்ணப்ப. 1.) (செந்.29, 147.)

**பொத்தம் பொது** *poṯṯam-podu,* பெ. (n.). பொது (வின்.); generality

*[பொது + அம் + பொது]*

**பொத்தாம் பொது** *pottam-podu,* பெ. (n.). பொது ; generality

*[பொத்தம்பொது → பொத்தாம்பொது]*

**பொத்தர்** *pottar,* பெ. (n.) பொத்தல் பார்க்க; see pottal.

*[பொத்து → பொத்தர்]*

**பொத்தல்** *pottal,* பெ. (n.) **1.** துளை; hole. **2.** கடன்; debt **3.** குற்றம்; fault defect **4.** கிழிசல்; tear.

*க.பொத்தரெ. ம.பொத்து. து.பொட்ரெ*

*[பொத்து → பொத்தல்]*

**பொத்தலடை—த்தல்** *pottal-aḍai,* பெ. (n.) செ.கு.வி(v.i.) **1.** சுவர் கூரை முதலியவற்றி லுள்ள ஓட்டையை அடைத்தல்; to stop holes, as in a wall or roof **2.** கடன் தீர்த்தல் கொ,வ; to pay off debts **3.** குற்றத்தை மறைத்தல்; to cover a fault with excuses.

*[ பொத்தல் + அடை ]*

**பொத்தலூசி** *pottal-ūci,* பெ. (n.) *பொடியல்* (யாழ்.அக) பார்க்க; see *potiyal.*

*[ பொத்தல் + ஊசி ]*

**பொத்தற்சுரை** *pottar-curai,* பெ. (n.) ஒன்றுக்கும் உதவாதவன் (இ.வ); useless person

*[ பொத்தல் + சுரை ]*

**பொத்தாறு** *pottāṟu,* பெ. (n.) *பொத்தாறுகட்டை* (யாழ்.அக) பார்க்க; see *pottāṟu-k-kaṭṭai,*

*[ பொருத்து → பொத்து+ஆறு ]*

**பொத்தாறுகட்டை** *pottāṟu-k-kaṭṭai,* பெ. (n.) ஏர்க்கால்(வின்.); shaft of the plough

*[ பொத்தாறு + கட்டை ]*



**பொத்தான்** *pottāṉ,* பெ. (n.) சட்டையையுடலில் இட்டு மூடுவதருற்கு உதவும் பொருள்; button ‹fr.bouton ‹e

*[ பொருத்து → பொருத்தான் → பொத்தான் 'ஆன்' உடைமைப் பொருளீறு ]*

**பொத்தான்கட்டை** *pottāṉ-kaṭṭai,* பெ. (n.) சுவரில் ஆணி முதலியன அடிக்கப் பதிக்கும் மரக்கட்டை (கட்டடநாமா); wooden plug in a wall for fastening nails, etc.

*[ பொத்தான் + கட்டை ]*

**பொத்தானட்டிகை** *pottāṉ-aṭṭigai,* பெ. (n.) கழுத்தணி வகை (இ.வ); a kind of necklet

*[ பொத்தான் + அட்டிகை ]*

**பொத்தி** *potti,* பெ. (n.) **1.** *பொத்தித்தோத்தி* பார்க்க; **2.** சீலை(சங்.அக) cloth **3.** மடல்விரியா வாழைப்பூ(யாழ்ப்.); un blown flower of the plantain **4.** சோளக்கதிர்; ear of cōlam in sheath. **5.** தவசக்கதிர்(வின்.) ear of grain in sheath **6.** கன்மணி வகை; a kind of gem. *'மாணிக்கம் எழுபதும் பொத்திநாற்பத் தொன்பதும்'* (s.i.i.iii,**143**) **7.** தோலுரியாத பனங்கிழங்கு, tender palmyra root with unpeeled rind **8.** ஓர் உயிரின விதைப்பை; scrotum **9.** ஒரு பழைய சோழநகர்; ā an old cōld town. *'பொத்தியாண்ட பெருஞ் சோழனையும்'* (பதிற்றுப் **9.** பதி) **10.** வரால்; murrel. *'மத்தியுஞ் சிறுபொத்தியும்'* (குருகூர்ப்பள்ளு)

*[ பொத்து → பொத்தி ]*

**பொத்தி²** *potti,* பெ. (n.) பொது(வின்.); generality

*[ பொத்து → பொத்தி ]*

**பொத்திக்கரப்பான்** *potti-k-karappāṉ,* கரப்பான் வகை; an eruption that spreads on the body of a child

*[ பொத்தி + கரப்பான் ]*

**பொத்திக்காளான்** *potti-k-kāḷāṉ,* பெ. (n.) காளான் வகை(யாழ்.அக); a kind of mushroom

*[ பொத்தி + காளான் ]*



**பொத்திக்கோரை** *potti-k-kōrai,* பெ. (n.) கோரைவகை(வின்.); a kind of sedge

*[பொத்தி + கோரை]*

**பொத்தித்தானம்** *potti-t-tāṉam,* பெ. (n.) *பொத்தி¹,* **8** வின் பார்க்க; see *potti*

*[ பொத்தி + தானம் ]*

**பொத்தித்தோவத்தி** *potti-t-tōvatti,* பெ. (n.) நார்மடி,(வின்.) garment of fitres

*[ பொத்தி + தோள் அந்தி → தோள்வந்தி → தோவத்தி ]*

**பொத்தித்தள்ளு–தல்** *potti-t-taḷḷu-,* செ.கு.வி. (v.i.) வாழை முதலியன குலை போடுதல் (யாழ்.அக), to shoot binches of flowers, as plantant

*[ பொத்தி + தள்ளு –தல்]*

**பொத்திப்பிடி–த்தல்** *potti-p-pidi-,* செ.குன்றா.வி. (v.t.) உள்ளங்கைக்குட்பற்றுதல்; to hold in the closed fist; to clasp

*[ பொத்தி + பிடி ]*

**பொத்தியாட்டம்** *potti-āttam,* பெ. (n.) கண்ணாம்பொத்தியாட்டம்; game where blind folded person tries to catch others.

*[ பொத்தி + ஆட்டம் ]*

**பொத்திரம்** *pottiram,* பெ. (n.) எறிபடை; missile weapon. *'பொத்திரம் பாய்ந்து மாய்ந்தீர்'* (சேதுபு. சங்கரபாண்டி.41.)

*[ பொள் + திறம் → திரம் ]*

**பொத்திலம்** *pottilam,* பெ. (n.) மரப்பொந்து; hole in a tree. *'பொத்திலத் துறையு மாந்தை'* (சீவக.1395.)

*[ பொந்து + இல்லம் → பொத்திலம் ]*

**பொத்திவை–த்தல்** *potti -vai-,* செ.குன்றா.வி 1. மறைத்தல்; to conceal 2. பாதுகாப்புப் படுத்துதல் to keep safe

*[ பொத்தர் – பொத்திவைத்தல் ]*

**பொத்து–தல்** *pottu-,* செ.குன்றாவி. (v.t) 1. புதைத்தல் (பிங்) to bury *'மண்ணிடைக் கடிது பொத்துதல்'* (கம்பரா. விராதன்வதை. 43 ) 2. வாய், கண், காது முதலியவற்றை மூடுதல்; to cover, close as the mouth, eyes or ears with the fingers or otherwise. *'தன் செவித் தொளையிருகைகளாற் பொத்தி'* (கம்பரா. இரணிய. 22) 3. விரல் மடக்கி உள்ளங்கையை மூடுதல் (இ.வ.) to close the fingers together 4. தைத்து மூட்டுதல்; to mend, patch, botch as baskets an bags. 5. தைத்தல்; to stitch. *'இலையைப் பொத்திப்போடு'* 6. மறைத்தல்; to hide, conceal *'செம்பால் .. கிளர்படி பொத்தின'* (கம்பரா.கரன்வதை. 100) 7. அடித்தல்; to beat, *'அவனை நன்றாய்ப் பொத்திவிட்டார்கள்'*. 8. தீ மூட்டுதல்; to light, as a fire. *'கனையெரி பொத்தி'* (மணிமே. 2,42) 9. மாலை கட்டுதல்; to tie, string together, as a wreath. *'மறுகண்ணியும் பொத்தி'* (ஈடு. 1, 3, 1). 10. கற்பனை செய்தல்; to invent, imagine இல்லாத தெய்வம் பொத்தித்தம் *'மயிர் பறிக்குஞ்சமணர்'* (தேவா. 65. 8,7.)

**பொத்து[2]–தல்** *pottu-,* செ.கு.வி. (v.t) 1. கலத்தல்; to mix, *'நெஞ்சம் பொத்தி'* (பு.வெ. 11, ஆண்பால், 4.) 2. நிறைதல்; to be filled. *'வான்மேற் பொத்தினகுழு'*. (கம்பரா. கரன்வதை, 100.).

க.ம. பொத்து

**பொத்து[2]** pottu, பெ. (n.) 1. மூடுகை; covering, stopping closing up. 2. அடைப்பு; 3. பொத்தல்; *'அருச்சுனன் அம்பினால் பலபொத்துப் பொத்தினான்'* 4. பொந்து. hole, rat-hole, small cavity, hollow in a tree. (பிங்.) *'முதுமரப் பொத்தில்'* (புறநா.364,11.). 5. வயிறு; stornach. *'பொத்தடைப் பான் பொருட்டால் மையல் கொண்டீர்'* (தேவா.188,6.) 6. தவறு; fault, defect, blemish. *'பொத்தினண் பிற்பொத்தியொடு'* (புறநா.212.) 7. தீயொழுக்கம்; evil; crime; immorality (w.) 8. பொய்; falsehood, lie. *'புல்லறிவு கொண்டு பல பொத்து மொழி புத்தர்'* (திருவாத.பு. புத்தரை.77.) 9. பல்லி; lizard. (பிங்.);

*[ புல் → பொல் → பொத்து]*

**பொத்துக்கடி** *Pottu-k-kadi,* பெ. (n,) 1. படர்தாமரை; ringworm. 2. கரப்பான் வகை; eczema. 3. அண்டவிதை; scrotum.

*[ பொட்டு → பொத்து+கடி ]*

**பொத்துப்படு—தல்** *Pottu-p-paḍu,* செ.கு.வி. (v.i.) **1.** தவறுதல்; to fail, **2.** நோக்கம் கைகூடாது தீமை பயத்தல்; to miscarry and result in evil. *'பலர்நின்று போற்றினும் பொத்துப் படும்'* (குறள்.**468.**)

*[ புல் → பொல் → பொத்து+*

*படு → பொத்துப்படு]*

**பொத்துப்பாய்** *Pottu-p-pāy,* கரடுமுருடான பாய். rough or coarse mat. (யாழ்.அக.)

*[ பொத்து + பாய்]*

**பொத்துப் பொத்தெனல்** *Pottu-p-potteṉal,* பெ. (n.) **1.** ஒலிக்குறிப்பு வகை; onom. expr. signifying a falling with a thud, as of heavy fruits. **2.** தடித்திருத்தற் குறிப்பு; plumpress. *'குழந்தை பொத்துப்பொத்தென்று இருக்கிறது.'*

*[ பொத்து + பொத்து + எனல்]*

**பொத்துமான்** *Pottu-māṉ,* பெ. (n.) மான்வகை(யாழ்ப்.); a kind of deer. (j.)

*[ பொத்து + மான்]*

**பொத்தெனல்** *Potteṉal,* பெ. (n.) ஓர் ஒலிக் குறிப்பு; onom. expr. signifying falling with a thud.

*[ பொத்து + எனல்]*

**பொத்தை**[1] *Pottai,* பெ. (n.) பருமையானது(கொ.வ.); anything large, or bulky.

*தெ. பொத்து க.பொஜ்ஜ*

*[ பொத்து → பொத்தை ]*

**பொத்தை**[2] *Pottai,* பெ. (n.) **1.** பொத்தல் பார்க்க; *'பொத்தை யூன்சுவர்'* (திருவாச.**26,7.**). **2.** உடம்பு; body. *'உடம்பு அழுக்குப்பேணும் பொத்தையே போற்றி'* (தேவா.**996,1.**).

*[ பொது → பொத்து → பொத்தை ]*

வே.க *(பக்.79)*

**பொத்தை**[3] *Pottai,* பெ. (n.) *பேத்தை,***1.** பார்க்க; see *pettai*

*[ பொத்து → பொத்தை ]*

**பொத்தைக்கால்** *Pottai-k-kāl,* பெ. (n.) யானைக்கால்; elephantiasis.

*[ பொத்தை + கால் ]*



**பொத்தைச்சி** *Pottaicci,* பெ. (n.) தடித்தவள் (யாழ்.அக.); stout woman.

*[ பொத்தையன் → பொத்தைச்சி ]*

**பொத்தையன்** *Pottaiyaṉ,* பெ. (n.) தடித்தவன். stout man.

*[ பொத்தை + அன் ]*

**பொதரவண்ணான்** *Podara-vaṉṉāṉ,* பெ. (n.) *இராப்பாடி* பார்க்க; see *Irāpāḍi.*

*[ பொதி → பொதிரை → பொதிரை+ வண்ணான்]*

**பொதரையன்** *Podaraiyaṉ*, பெ. (n.) *பொதர வண்ணான்* பார்க்க; see *podara-vaṇṇāṉ*

*[ பொதி → பொதிரை → பொதிரையன்]*

**பொதி[1]-தல்** *Podi-*, செ.கு.வி. (v.i.) **1.** நிறைதல்; to be full, as in leaning '*மி க்ககனம் பொதிந்த நூல்*" (நாலடி,341.).

**பொதி[2]-தல்** *Podi-*, **1.** சேமித்தல்; to store up, treasure up, '*பொன்போற் பொதிந்து*' (குறள்,155.) **2.** உள்ளடக்குதல்; to contain, hold. '*செழுந்தேனும் பொதிந்து*' (திருக்கோ.**46.**) **3.** மறைத்தல்; to hide, conceal, cover up. '*தூண்டிலினுட் பொதிந்த தேரையும்*' (திரிகடு.**24.**) **4.** பிணித்தல்; to tie up, as a bundle (w.) **5.** கடைப்பிடித்தல்; to maintain follow, act up to. '*யானிகழ்த்து நீதியைப் பொதிவதுன்கடன்*' (விநாயகபு.4,1.).

*[ பொத்து → பொத்தி → பொதி ]*

**பொதி[3]** *Podi*, பெ. (n.) **1.** நிறைவு; fullness, perfection. '*பொதித்தே னுகர்ந்தகலும்*' (தஞ்சைவா. **290.**) **2.** மூட்டை; pack, bundle; load, as for a beast; parcel tied in a cloth. '*கண்ணெழுத்துப்படுத்த.....பொதி*' (சிலப்.5,112.) **3.** பலபண்டம் (திவா.); miscellanceous goods. **4.** செல்வம். (திவா.); treasuse. **5.** சொற்பயன், (திவா.); meaning of a word. **6.** ஒருவகை நிறையளவு; pack-load, a measure of weight varying with the locality. **7. 3** அல்லது **4** கன அடியுள்ள நீர்மப் பொருளளவு வகை; a liquid measure of **3**or**4**c.ft. **8. 2640** சதுரஅடிகொண்ட நிலவளவு வகை(M.M.); a superficial measure of land, **2,640.** sq.yards. **9.** பிணிப்பு; tie, fastening, '*மலர்ப்பொதிய விழ்த்து*' (காசிக.நாரத.5) **10.** கட்டுச்சோறு (பிங்.); boiled rice tied up for a journey; viaticum. **11.** தொகுதி; collection. '*பெய்கணைப் பொதிகளாலே வளர்ந்தது பிறந்தகோபம்*' (கம்பரா.நாகபா.**114.**) **12.** அரும்பு; flower bud. '*கமலப் பொதியினை நகுவன புணர்முலை*' (கம்பரா. நாட்.**44.**) **13.** கொத்து; cluster. '*அம்பொதித்தோரை*' (மலைபடு.**121.**) **14.** முளை; tender shoots, as of paddy. '*பசும்பொதித் தேறல்*' (மலைபடு.**463.**) **15.** உடல்; body '*பொதியே சுமந்துழல்வீர்*' (தேவா.**1154.9.**). **16.** தவிடு (பிங்.); bran. **17.** கரிகாடு (பிங்.); burnt jungle. **18.** மூங்கில் முதலியவற்றின் பட்டை; bark, as of bamboos. '*பையங்கழை பொதிகளைந் தன்ன*' (புறநா.**253.**) **19.** குடையோலை (திவா.); ola basket used as a cup in eating and drinking. **20.** ஆவு முதலியவற்றின் மடி(C.G.); vadder. **21.** பருமன்; stoutness. ஆள்பொதியாயிருக் கிறான் (உ.வ.) **22.** ஓலைக்குடை (சது.); umbrella made of palm leaves.

*[ பொது → பொதி ]*

*வே.க. பக்.78*

**பொதி[3]** *Podi*, பெ. (n.) **1.** *பொதியில்* பார்க்க; **1.** '*மன்றும் பொதியினு மாமயில்சேர் தஞ்சை வாணன்*' (தஞ்சைவா.**34.**). **2.** *பொதியம்* பார்க்க; see *podiyam*'*பொதிமா முனிவ*' (சிவதரு. பாவ.**23.**)

*[ பொது → பொதி ]*

**பொதி[4]** *Podi*, பெ. (n.) காய்ந்த நன்செய்; dry state of wet land. tinn.

*[ புழுதி → பொதி ]*

**பொதிகரம்** *Podi-karam,* பெ. (n.) காரமருந்து; caustic. "பொதிகாரமிட்ட புண்போல்" (சரவண. பணவிடு.109)

*[ பொதி + கரம் ]*

**பொதிக்காரன்** *Podi-k-kāraṉ,* பெ. (n.) *பொதிகாரன்* பார்க்க; *Podi-k-kāraṉ*

*[ பொதி + காரன் ]*

**பொதிகாரன்** *Podi-kāraṉ,* பெ. (n.) பொதி யெருதுக்காரன்; person who use pack-oxen.

*[ பொதி + காரன் ]*

**பொதிகெளிறு** *Podi-keḷiṟu,* பெ. (n.) கடல்மீன்வகை (J.N.); a seafish

*[ பொதி + கெளிறு ]*

**பொதியப்பத்துண்டு** *Poti-appatuntu,* பெ. (n.) பழக்கூட்டுப் பண்ணியத்துண்டு; tartlet.

*[ பொதி + அப்பம் + துண்டு ]*

**பொதியப்பம்** *Pōdi-appam,* பெ. (n.) பழங்கள் உட்பொதிந்த பண்ணியம்; tartlet.

*[ பொதி + அப்பம் ]*

**பொதிகை** *Podigai,* பெ. (n.) *பொதியம்* பார்க்க; see *podiyam.*

*[ பொதி → பொதிகை ] வே.க. (பக்.78)*

**பொதிகைநிகண்டு** *Podigai-nigaṇḍu,* கல்லிடைக் குறிச்சியிலிருந்த சுவாமி கவிராயரால்' இயற்றப்பெற்ற தமிழ்ச் சொற்பொருள் நூல்; a tamil lexicon

*[ பொதிகை* + Skt. nighantu.*த. நிகண்டு ]*

**பொதிச்சோறு** *podi-c-cōṟu,* பெ. (n.) *பொதிசோறு* பார்க்க; see *podi-šōṟu,*

*[பொதி + சோறு]*

**பொதிசோறு** podi-šōṟu, பெ. (n.) *பொதி², 10.* (திவா.) பார்க்க; *'சால மிகப்பசித்தீர் இப்பொதிசோறு தருகின்றேன்'.* (பெரியபு. ஏயர்கோன் 159.)

(பொதி + சோறு)

**பொதிந்துவை—த்தல்** *podinduvai-,* செ.குன்றா.வி. (v.t). இடைவிடாது மனத்துட் கொள்ளுதல் (யாழ்.அக.); to keep always in memory."பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து" (திருக் 155)

*[ பொதிந்து + வை ]*

**பொதிப்பருவம்** *podi-p-paruvam,* பெ. (n.) நெற்கதிரிற் பால் பிடிக்கும் பருவம்(இ.வ.); stage in the growth of paddy when the grain is in the milk.

*[ பொதி + பருவம் ]*

**பொதிப்போதா** *podi-p-pōda,* பெ. (n.) பெருநாரை. (அக. நி.); a large heron.

*[ பொதி + போதா ]*

**பொதிமாடு** *podi-māḍu,* பெ. (n.) மூட்டை சுமக்கும் எருது (வின்.); pack bull.

*[ பொதி + மாடு ]*

**பொதிமுருங்குநோய்** *podi-muruṅgu-nōy,* பெ. (n.) சோளப்பயிர் நோய்வகை; a disease affecting cōlam crop. 2. மாட்டுநோய் வகை; a cattle disease.

*[ பொதி + முருங்கு + நோய் ]*

**பொதியப்பொருப்பன்** *podiya-p-poruppaṉ,* பெ. (n.) பாண்டியன். (தி.வா.); pandya king, as lord of mt. potiyam.

*[ பொதியம் + பொருப்பன் ]*

**பொதியம்** *podiyam,* பெ. (n.) பாண்டிய நாட்டிலுள்ளதும் அகத்திய முனிவர் இருப்பிடமாகக் கருதப்படுவதுமான மலை; a mountain in pandya country, famed as the abode of Agattiyar. *'பொற்கோட்டிமயமும் பொதியமும் போன்றே'* (புறநா.2)

*[ பொதி → பொதியம் ]*

*'அம்' பெருமைப் பொருள் பின்னொட்டு*

**பொதியவிழ்[1]—தல்** *podi-y-aviḻ-,* செ.கு.வி. (v.i.) அரும்பு முறுக்கவிழ்தல்; to blossom out, unfold. *'பொதியவிழ் மாலை வீழ்ந்து'* (சீவக. 1447)

*[ பொதி + அவிழ் ]*

**பொதியவிழ்—த்தல்** *podi-y-aviḻ-,* செ.குன்றா.வி. (v.t.) தன் வரலாறு விரித்தல் (இ.வ.) to begin one's tale; lit, to open one's bag. (பையை அவிழ்த்தல்)

*[ பொதி + அவிழ் → அவிழ்த்தல்]*

**பொதியவெற்பன்** *podiya-veṟpaṉ,* பெ. (n.) *பொதியப் பொருப்பன்.* (சூடா.) பார்க்க; see *podiya-p-poruppaṉ*

*[ பொதியம் +வெற்பன் ]*

**பொதியறு—த்தல்** *podi-y-aṟu-,* செ.கு.வி. (v.i.) பணத்தைக் கவர்தல்; to extort money. *'கணிகையரே போன்றிருந்து பொதியறுக்கும் புத்தன்'* (நீலகேசி குண்டல. 74.).

*[ பொதி + அறு ]*

**பொதியறை** *podi-y-aṟai,* பெ. (n.) காற்றோட்டமில்லாத கீழறை; underground room without air-holes. *'பொதியறைப் பட்டோர் போன்றுளம் வருந்தி'* (மணிமே. 4, 105.)

*[ பொதி + அறை ]*

**பொதியன்** *podyaṉ,* பெ. (n.) அகத்தியமுனிவர் (யாழ்.அக.); sage agastya

*[ பொதியம் → பொதியன் ]*

**பொதியன்கெளிறு** *podiyaṉ-keḷiṟu,* பெ. (n.) மீன்வகை; a kind of fish *'பொதியன் கெளிறு வவ்வால்'* (பறாளை. பள்ளு.16)

*[பொதி → பொதியன் → கெளிறு ]*



**பொதியனாபி** *podiyaṉābi,* பெ. (n.) மயிர் (சங்.அக.); hair.

**பொதியில்** *poti-y-il,* பெ. (n.) **1.** அம்பலம்; public hall. *'தமனியப் பொதியிலும்' (மணிமே. 28, 66)* **2.** *பொதியம். பார்க்க; 'ஆஅய் மழை தவழ் பொதியில்' (குறுந். 84.)*

*[ பொது + இல் → பொதியில்]*

**பொதியுறை** *poti-urai,* பெ. (n.) மருந்துறை; capsule.

*[ பொதி + உறை]*

**பொதியெருது** *potiy-erutu,* பெ. (n.) *பொதிமாடு.* (தனிப்பா. ii, 283, 487.) பார்க்க; *podimadu*

*[ பொதி + எருது ]*

**பொதிர்[1]—தல்** *podir-,* செ.கு.வி. (v.i.) 1. வீங்குதல்; to swell. *'புனைதார் பொர நொந்து பொதிர்ந்த வென'* (சீவக. 1380.) 2. மிகுதல் (வின்.); to increase, abount (w) 3. நடுங்குதல்; to tremble. *'சிரம்பொதிர்ந் தமர ரஞ்ச'* (கம்பரா. பிரமாத். 13) 4. அஞ்சுதல் (தி.வா.) to be afraid.

*[ பொதி → பொதிர் →பொதிர்தல் ]*

*(வே.க.பக்.78)*

**பொதிர்[2]—த்தல்** *podir-,* செ.குன்றாவி. 1. குத்துதல்; to pierce (v.t.) *'கழை பொதிர்ப்பத் தேன் சொரிந்து'* ( சீவக. 2778) 2. முரித்தல்; to break, break off *'கவண்கலான் வார்பணை பொதிர்த்தும்' (தணிகைப்பு. நாட்டுப். 41.)*

**பொதிர்[3]—த்தல்** *podir-,*செ.கு.வி. (v.i) பருத்தல்; to well, increase in size, became large. 'பொதிர்த்த முலையிடை' (பரிபா. 21, 25.)

*[பொதி→பொதி→பொதிர்தல் ]*
*(வே.க.பக்.79)*

**பொதிர்** *podir-,* பெ. (n.) *பொதிர்வு1* பார்க்க; *'மெய்பொதி ரெறிந்துவிம்ம்'.* (சூளா. அரசி. 10)

*[ பொதிர் → பொதிர் ]*

**பொதிர்ப்பு** *podirppu,* பெ. (n.) *பொதிர்வு* (திவா.) பார்க்க; *see podirvu*

*[ பொதிர் → பொதிர் → பொதிர்ப்பு ]*

**பொதிர்வு** *podirvu,* பெ. (n.) நடுக்கம், trembling. *'எல்லாவுலகும் பொதிர்வுற'* (கம்பரா. வாலிவ. 30) 2. அச்சம். (சங்.அக.); fear, dread.

*[ பொதிர் → பொதிர்வு ]*

**பொதிரெறி—தல்** *podir-eri,* செ.கு.வி. (v.i.) நடுங்குதல்; to tremble. *'நண்ணோர் பொதிரெறிய வார்த்தான்'.* (கம்பரா. அதிகா. 100)

*[ பொதிர் + எறி → தல் ]*

**பொதிவு** *podivu,* பெ. (n.) பொதியாகக் கட்டுகை (யாழ். அக.) 2. ஒற்றுமை *'அந்த சகோதரர்க்குள் பொதிவுண்';* (இ.வ.) union.

*[ பொதி → பொதிவு ]*

**பொதிவை—த்தல்** *podi-vai-,* செ.கு.வி. (v.i) 1. புதையல் வைத்தல்; to keep a treasure underground. *'பூதலத்திலேதான் பொதிவைத் திரப்பவர்போல்'* ( கூளப்ப. காதல். 6). 2. நெற்பயிர் முதலியன காய்பிடிக்கும் பருவமாதல் (நெல்லை); to be big with grains, as standing crop.

*[ பொதி + வை ]*

**பொதின்பொதினெனல்** *podin-podinenal,* பெ. (n.) ஈரடுக்கொலிக்குறிப்பு(வின்.) (யாழ்.அக.) onom. expr. of a recurring sound.

*[ பொதின் + பொதின் + எனல் ]*

**பொதீர்பொதீரெனல்** *poiir-poiir-enal,* பெ. (n.) விழுதல், அடித்தல், முதலிவற்றின் ஈரடுக் கொலிக்குறிப்பு(வின்.) onom. expr. of a recurring sound of falling, as fruits, blows, etc.

*[ பொதீர் + பொதீர் + எனல் ]*

**பொது – தல்** *potu-,* செ.கு.வி. (v.i.) துளைபடுதல்; to be perforated. *'மரம் பொதச்சரந்துரந்து'* (திவ். திருச்சந். 73)

**பொது – த்தல்** *podu-,* செ.குன்றாவி.(v.t.) **1.** துளைத்தல்; to bore. *'புட்கள் பொதுத்த புலால் வெண்டலை'* (பதினொ. மூத்த. 3.) **2.** முள் முதலியன பாய்தல்; to pierce, prick. *'கப்பணம் கால்களைப் பொதுக்கும்படி'* (மதுரைக் 598, உரை.)

*[ பொது → பொது–த்தல் ]*

**பொது**[3] *potu,* பெ. (n.) **1.** பொதுமையானது. 'that which is common or shared by many; generality, opp. to cirappu. *'பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்'* (குறள், 528.) **2.** சிறப்பின்மை; lack of distinction. *'பொதுக் கொண்ட... வதுவை'.* (கலித். 66). **3.** இயல்பானது; that which is ordinary or general. ÊLaOO *'பொதுவின் மண்ணுயிர்க் குலங்களும்'* (கம்பரா. வருணனை. 30.) **4.** வழக்கமானது; that which is usual or natural. *'உரை பொதுவே'* (கம்பரா. முதற். 172.) **5.** நடுவுநிலை. neutrality. *'அவன் எந்தப் பக்கத்திலும் சேராது பொதுவாயிருக்கிறான்'* **6.** ஒப்பு; likeness, equality. *'ஒன்றொடு பொதுப்படா வுயர் புயத்தினான்'* (கம்பரா. நாகபாச. 75.) **7.** குறிப்பான பொருளின்மை; (கொ.வ.) vagueness. **8.** வெளிப்படையானது; that which is public **9.** மன்று; public place, assembly. *'பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை'* (புறநா. 89) **10.** தில்லையம்பலம்; the hall in the temple at chidambaram *'கோலமார் தருப் பொதுவினில் வருகென'* (திருவாச. 2, 128.)

*[ புது→ பொது ]*

*வே.க. (பக்.78)*

*ம. பொது. தெ.பொது (பொத்து)*

**பொதுஅறிவு** *pōdu-arivu,* பெ. (n.) *பகுத்தறிவு (நல்லறிவு);* common sense

*[ பொது + அறிவு]*

**பொதுஒப்புமை** *pōtu-oppumai,* பெ. (n.) *பொதுச்சாயல்* பார்க்க; see *pōtu-c-calai*

*[ பொது + ஒப்புமை ]*

**பொதுஊழியர்** *pōtu-uliyar,* பெ. (n.) அரசுப்பணியாளர்; government servent

*[ பொது + ஊழியர் ]*

**பொதுஒழுகலாறு** *pōtu-olunkalaru,* பெ. (n.) பொது நடத்தைமுறை; common behaviour

*[ பொது + ஒழுகலாறு ]*

**பொதுஒழுங்கை** *pōtu-olunkai,* பெ, (n.) *பொதுச்சாலை* பார்க்க; see *pōdu-c-calai*

*[ பொது + ஒழுங்கை ]*

**பொதுக்கணக்கு** *pōtu-k-kanakku,* பெ. (n.) பொது வரவு – செலவுக்கணக்கு; statement of debits and credits.

*[ பொது + கணக்கு ]*

**பொதுக்கணக்கர்** *pōtu-k-kanakkar,* பெ. (n.) பொது வரவுசெலவுக் கணக்காளர்; common Accountant.

[ *பொது + கணக்கர்* ]

**பொதுக்கட்டு—தல்** *podu-k-kaṭṭu-,* செ. குன்றா.வி. (v.t.) நடுநிலையாளரிடம் தருக்கப் பொருளை ஒப்படைத்தல் (கொ.வ.); to deposit by mutual consent, as with a mediator or panchāyat.

[ *பொது + கட்டு* ]

**பொதுக்கருத்து** *pōdu-k-karuttu,* பெ. (n.) பொதுநலக்கருத்து; common welfare idea.

[ *பொது + கருத்து* ]

**பொதுக்காரியம்** *podu-k-kāriyam,* பெ. (n.) குமுகாய நலத்துக்கேற்ற செயல்(கொ.வ.); matter concerning a community or the general public.

[ *பொது + காரியம்* ]

(skt. kārya - த. காரியம்)

**பொதுக்கு—தல்** *podukku-,* செ.குன்றா.வி. (v.t.) **1.** விலக்குதல்; to omit, leave out. **2.** மறைத்தல்; to conceal. 'விழிவேல் பாய்ந்து பொதுக்கிடம் விடாதென்னாகம் புகுந்து' (இரகு. கடிமண. **49.**) **3.** கவர்தல்; to embezzle.

[*பதுக்கு → பொதுக்கு* ]

**பொதுக்கு[2]—தல்** *potukku-,* செ.குன்றா.வி. (v.t.) புகையிற் பழுக்க வைத்தல்; to riper fruits by funigation. *'வாழைக்காய்களைக் கனியாகுமாறு இலை முதலியன இட்டுப் பொதுக்குகிறார்கள்'* (இ.வ.)

[ *பொதி → பொதுக்கு* ]

**பொதுக்கு[3]** *podukku* பெ. (n.) **1.** விலக்கு; omission. *'பொதுக்கற வுரைக்குமது'* (இரகு. மீட்சி. **18.**) **2.** ஒதுக்கு (சங்.அக.); secluded place. **3.** மறைப்பு (சங்.அக.); concealment.

[ *பொதி → பொதுக்கு* ]

**பொதுக்குணம்** *potu-k-kuṉam,* பெ. (n.) *பொதுத்தன்மை* பார்க்க; see potu-t-*taṉmai*

[ *பொது + குணம்* ]

**பொதுக்குழு** *pōdu-k-kuḻu,* பெ. (n.) **1.** பொதுத்திட்டமிடல் குழு; group of common estimate. **2.** ஓர் அமைப்பின் உறுப்பினர் கூட்டம்; General body of an organization.

[ *பொது + குழு* ]

**பொதுக்கூட்டம்** *pōdu-k-kuttam,* பெ. (n.) ஒரு குறிப்பிட்ட கருத்தை மக்களிடையே எடுத்துச் சொல்லப் பொது இடத்தில் நிகழ்த்தப் பெறும் மேடைப்பேச்சு, mass meeting. public meeting.

[ *பொது + கூட்டம்* ]

**பொதுக்கெனல்[1]** *podukkeṉal,* பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom expr. of (a) sudden noise. (b) நெகிழ்தற் குறிப்பு; yielding to pressure.

[ *பொதுக்கு + எனல்* ]

**பொதுக்கெனல்[2]** *podukkeṉal,* பெ. (n.) ஞெரேரெனல் (அக்நா. **39.** உரை); onom expr of suddeness

**பொதுக்கை** *podu-k-kai,* பெ. (n.) பல கூத்துக்கும் பொதுவான நளிநயக்கை வகை;

(சிலப். 3,18. உரை.); (nātya); a gesture of hand common to different kinds of dances.

*[ பொது + கை ]*

**பொதுக்கோ** *podukkō-,* இ.சொல். *int,* சடக்கென;hurriedly or suddenly. *'புள்ளிதுவென்று பொதுக்கோவாய் கீண்டிட்ட'* (திவ். பெரியாழ். 2, 5, 4.)

*[ பொதுக்கு → பொதுக்கோ ]*

**பொதுக்கோட்பாடு** *pōtu-k-kotpatu,* பெ. (n.) பொதுநெறிமுறை; general principle.

*[ பொது + கோட்பாடு ]*

**பொதுங்கு—தல்** *podungu-,* செ.கு.வி. (v.i.) வருந்துதல்; to suffer. *"பொதுங்கிய வைவரை"* (திருமந். 2914.)

*[ பொசுங்கு → பொதுங்கு ]*

**பொதுச்சட்டம்** *pōtu-c-cattam,* பெ. (n.) பொதுநெறிமுறை; general rule.

*[ பொது + சட்டம் ]*

**பொதுச்சதுக்கம்** *pōtu-c-catukkam,* பெ. (n.) நகரின் நடுவில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட தெருக்கள் சந்திப்பதால் ஏற்படும் பரந்த வெளியிடம்.open space in the middle of the town formed by the meeting of two or more streets.

*[ பொது + சதுக்கம் ]*

**பொதுச்சாயல்** *pōtu-c-cayal,* பெ. (n.) பொது ஒப்புமை; common resemplance.

*[ பொது + சாயல் ]*

**பொதுச்சாலை** *pōtu-c-calai,* பெ. (n,) பொது ஒழுங்கை; common road.

*[ பொது + சாலை ]*

**பொதுச்சீர்** *podu-c-cir,* பெ. (n,) நாலசை யாலாகிய வஞ்சிப்பாவில்' வரக்கூடியனவும், தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்பவற்றோடு தண்ணிழல், தண்பூ நறும்பூ,நறுநிழல் என்பவற்றைத் தனித்தனிச் சேர்ப்பதனால் தோன்றுவனவுமான 16 சீர்கள் (காரிகை. உறுப். 5); (pros) vañji; feet of four syllables peculiar to vaṇci, verse, of which there areāūs , the formulas being formed by adding to tēma, puḷimā, karuviḷam, kūviḷam, each of the terms taṇṇiḷal, taṇpū, naṟumpu,naṟuniḷal.

*[ பொது + சீர் ]*

**பொதுச்சூத்திரம்** *podu-c-cūttiram,* பெ. (n.) பொதுவான இலக்கணங் கூறும் (சூத்திரம்) நூற்பா; (gram) aphorism stating a general rule.

*[ பொது +* SKṭ. sūtra. *த.சூத்திரம் ]*

**பொதுச்செய்தி** *pōtu-c-cithi,* பெ. (n,) பொது நடப்புச் செய்தி; common topic.

*[ பொது + செய்தி ]*

**பொதுச்செலவு** podu-c-celavu, பெ. (n.) **1.** காவல்முதலியவற்றிற்குநில உரிமையாளர் களத்திற் செலவிடும் தவசம்(R.T); general charges in kind met by land-owners on the threshing-floor. **2.** பொதுப் பணத்திலிருந்து ஊரார் முதலியோர் செலவிடுந்தொகை; expenses met from a common fund, as of a villages.

*[ பொது + செலவு]*

**பொதுச்சொத்து** potu-c-cottu, பெ. (n.) 1. பொது நன்மை, வேளாண்மைக்குத் தகுதியின்மை முதலிய காரணங்களினால் தீர்வை குறிக்கப்படாமலும், பயிரிடாமலும் விடப்பட்ட நிலம்; land exempt from assessment, either because it is set aside for communal purposes or because it is uncultivable (M.N.A.D-ā,rōḏ) 2. பொட்டல்காடு, dry land. *"அந்திக்கடைப் பொட்டல்" "பூமி சில பொட்டலற்" (தாயு.எந்நாட்.1242) 3. பலருக்குப் பொதுவான இடம்,* common property. *புறம்போக்கு – வரண்ட வெற்று நிலம்.*

*[ பொது + சொத்து ]*

**பொதுச்சொம்** podu-c-com, பெ. (n.) பொதுப்படையான சொத்து; (யாழ்.அக) common property.

*[ பொது + சொம் ]*

**பொதுச்சொல்** podu-c-col, பெ. (n.) 1. எல்லாரும் அறிந்த சொல்; word in general use. 2. இருதிணைகட்கும் பொதுவாகிய சொல்; (Gram) word common to both the tiṇai. *'ஒன்றொழி பொதுச்சொல்'* (நன்.269) 3. உலகம் பலர்க்கும் பொது என்ற சொல்; world inplying common possession, as of the world. *'போகம் வேண்டிப் பொதுச் சொற் பொறாஅது'* (புறநா.8) 4. படலம் முதலிய நூற்பகுதிக்குத் தலைப்பாக இடும்சொல்; general heading *'பொதுச் சொற்றானே படர்வது படலம்'* (சூடா)

*[ பொது + சொல் ]*

**பொதுசனம்** podu-šaṉam, பெ. (n.) 1. பொது மக்கள்; the public. 2. நடுநிலையாளர்கள்; arbitrators.

*[ பொது +* skṭ.Jana. *த.சனம் ]*

**பொதுஞானம்** podu-ñāṉam, பெ. (n.) பொது அறிவு; differentiated knowledge. *'பொது ஞானம் வந்தணுகி'* (கோயிற்பு. இரணிய.38)

*[ பொது +* pkṭ.ñāna.skṭ.jñāna. *த. ஞானம் ]*

**பொதுத்தன்மை** podu-t-taṉmai, பெ. (n.) 1. நடுவுநிலைமை; neutrality. 2. பெரும்பாலும் காணப்படும்குணம்; commonness, generality. 3. உவமான உவமேயங்களில் அமைந்துள்ள பொதுவான இயல்பு (அணியி.1); attribute common to uvamāṉam and unamēyam, as redness to coral and to the lips.

*[ பொது + தன்மை ]*

**பொதுத்திட்டம்** potu-t-titam, பொ. (n.) பொது மதிப்பீடு; common plan.

*[பொது + தேர்தல்]*

**பொதுத்திணை** podu-t-tiṇai, பெ. (n.) இரு திணைகட்கும் பொதுச்சொல்(வின்); word, common to both the tiṇai.

*[பொது + திணை]*

**பொதுத்துறை** podu-t-tuṟai, பொ. (n.) *பொதுநிறுவனம்* பார்க்க; see *podu-niṟuvaṉam.*

*[பொது + துறை]*

**பொதுத்தேர்தல்** podu-t-tērdal, பொ. (n.) நாடாளுமன்றம்–சட்டமன்றம் ஆகியவற்றிற்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க 18–அகவை நிரம்பிய ஆண்–பெண் அனைவரிடமும் நேரி(vote) பெறுவதற்கான தேர்தல்; act of choosing by vote, general election.

*[பொது + தேர்தல்]*

**பொதுத்தேர்வு** pōdu-t-tērvu, பொ. (n.) மாணவர்களின் திறமையறிய நடத்தப்படும் தேர்வு; publicexamination.

*[ பொது + தேர்வு ]*

**பொதுத்தோற்றம்** potu-t-totram, பொ. (n.) நேர்த்தியான தோற்றம்; get-up, general appearance.

*[ பொது + தோற்றம் ]*

**பொதுநடுவர்** podu-naḍuvar, பெ. (n.) நடுநிலையாளர் (யாழ்.அக); arbitrators.

*[ பொது + நடுவர் ]*

**பொதுநலத்தார்** podu-nalattār, பெ. (n.) பொதுமகளிர்; prostitutes. '*பொதுநலத்தார் புன்னலந் தோயார்*' (குறள்.915)

*[ பொது + நலம் → நலத்தார் ]*

**பொதுநலப்பண்பு** pōtu-nalappanpu, பெ. (n.) பொதுநலம் பேணும் பண்பு; common weal.

*[ பொதுநலம் + பண்பு ]*

**பொதுநலம்** podu-nalam, பெ. (n.) 1. *பொது நன்மை* பார்க்க; see *podu nanmai* 2. பொருள் கொடுப்பார் பெறுஞ்சிற்றின்பம்(குறள்.915); sexual enjoyment avail able for hire.

*[ பொது + நலம் ]*

**பொதுநன்மை** podu-naṉmai, பெ. (n.) பொதுமக்களுக்கு உற்ற நன்மை; common weal, public good.

*[ பொது + நன்மை ]*

**பொதுநாயகம்** podu-nāyagam, பெ. (n.) எல்லாவற்றிற்குந் தலைமை; universal severeignty. "பொதுநாயகம் பாவித்து இறுமாந்து"(திவ்.பெரியாழ்.4,9.4)

**பொதுநிலம்** potu-nilam, பெ. (n.) 1. பலருக்குப் பொதுவானநிலம்; land held in joint ownership. 2. குமுகாய நன்மைக்காகச் சிற்றூர்களில் பயிரிடாது விடப்பட்ட நிலம்; land left uncultivated in a villege for communal purposes.

*[ பொது + நிலம் ]*

**பொதுநிறம்** podu-niṟam, பெ. (n.) 1. மாநிறம்(வின்); complexion between fair and black, as an indefinite middling colour.

*[ பொது + நிறம் ]*

**பொதுநிறுவனம்** poṟu-niduvaṉam, பெ. (n.) அரசின் பொது வெளியீடு மற்றும் ஊர்திகள் செயலொழுங்குத்துறை; public department.

*[ பொது + நிறுவனம் ]*

**பொதுநீக்கு—தல்** podu-nikku, செ.குன்ற.வி. (v.t.) 1. பொதுமையை விடுத்தல்; to avoid generality. '*பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க்கென்றும் பெருந்துணையை*' தேவா. 13,5) 2. தனக்கே உரிமையாக்குதல்; to make one's own.

*[ பொது + நீக்கு ]*

**பொதுநீங்குவமை** podu-nīṅguramai, பெ. (n.) 1. *இயைபின்மையணி*(தண்டி.30,23) பார்க்க; see *iyaibiṉmai-y-aṇi* a figure of speech.

*[ பொது + நீங்கு + உவமை ]*

**பொதுநூல்** pōdu-nūl, பெ. (n.) எல்லாப் பிரிவினருக்கும் பொதுவான நூல்; அறம், பொருள், இன்பம் எனும் முப்பாலில் உலக மாந்தரினம் அனைவரும் வியந்து ஏற்கும் அறநெறி, பொருளாக்கம், வாழ்வியல் ஒழுகலாறு ஆகிய மெய்ப்பொருள் உண்மைகளை உள்ளடக்கிய திருக்குறள் குறிப்பிடத்தக்கது. treatise on fundamental principles acceptable to all religionists.

*[ பொது + நூல் ]*

**பொதுநெறி** podu-neṟi, பெ. (n.) யாவரும் செல்லும் வழி; common way. '*உயிர்போகு பொதுநெறி*' (சிலப்.28,173)

*[ பொது + நெறி ]*

**பொதுநோக்கு** podu-nōkku, பெ. (n.) 1. எல்லாரையும் ஒப்ப நோக்குகை; impartial regard, as of a king. '*பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே*' (புறநா. 121) 2. மாறுபாடான பார்வை; indifferent look '*ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்*' (குறள்.1099) 3. பகுத்தறிவு;common sense. '*எம்மி டத்தேயமைந்துள்ளஅறிவின் அகலத்தளவாகப் பொதுநோக்காக நோக்கி*' (பிரபஞ்சவி. 20)

*[பொது+நோக்கு]*

**பொதுநோக்கம்** pōtu-nōkkam, பெ. (n.) பொதுநலப் பார்வை; public intrest.

*[ பொது + நோக்கம் ]*

**பொதுப்பங்கு** pōtu-p-panku, பெ. (n.) *பொதுச்சொத்து* பார்க்க; see *potuccottu*.

*[ பொது + பங்கு ]*

**பொதுப்படு—தல்** podu-p-paḍu, செ.கு.வி. (v.i.) 1. பொதுவாதல்; to be general '*பொதுப்படக் கூறி வாடியமுங்கல்*' (திருக்கோ. 354) 2. ஒப்பாதல்; to agree. '*பொன்னொடே பொருவினல்ல தொன்றொடு பொதுப்படாவுயர் புயத்தினான்.*' (கம்பரா. நாகபாச. 75)

*[ பொது + படு—, ]*

**பொதுப்படை** podu-p-paḍai, பெ. (n.) பொதுவானது; that which is common.

*[பொது + பொதுப்படு → படை]*

**பொதுப்பட்டியல்** potu-p-patiyal, பெ. (n.) பொதுவான பட்டியல்; common list.

*[ பொது + பட்டியல் ]*

**பொதுப்பண்** podu-p-paṉ, பெ. (n.) இரவும் பகலும் பாடற்கு உரியபண்(சங்.அக); musical mode fit to be sung during both day and night.

*[ பொது + பண் ]*

**பொதுப்பண்பு** potu-p-panpu, பெ. (n.) பொதுநலன்; common charactor.

*[ பொது + பண்பு ]*

**பொதுப்பணம்** podu-p-paṇam, பெ. (n.) பொதுவான தொகை; common fund.

*[ பொது + பணம் ]*

**பொதுப்பணி** potu-p-pani, பெ. (n.) அறப்பணி சார்ந்த பொது நலப்பணி; public welfare work.

*[ பொது + பணி ]*

**பொதுப்பணித்துறை** podu-p-paṇi-t-tuṟai, பெ. (n.) சாலைப்போக்குவரத்து; நீர்நிலைகள், அரசுக்குச்சொந்தமானகட்டடங்கள் முதலியவற்றைப் பேணுகை; Public Works Department.

*[ பொதுப் + பணித்துறை ]*

**பொதுப்பாதை** potu-p-patai, பெ. (n.) பொதுவழி; common road.

*[ பொது + பாதை ]*

**பொதுப்பால்** pōdu-p-pāl, பெ. (n.) ஆண்–பெண் இரண்டும் குறிக்கும் பொதுப் பால்; common gender.

*[ பொது + பால்]*

**பொதுப்பாயிரம்** podu-p-pāyiram, பெ. (n.) நூலியல்பு, நுவல்வோன்திறம், நுவலுந்திறன், கொள்வோன்கூற்று, கோடற்கூற்று ஆகியவற்றைப் பற்றிக் கூறும் முன்னுரை; general preface dealing with the nature of treatises, and authors, the method of teaching students and the method of study, opp. to ciṟappu-p-pāyiram. "எல்லா நூற்குமிலை பொதுப்பாயிரம்" (நன்.2)

*[ சிறப்பு + பாயிரம் ]*

**பொதுப்பெண்** podu-p-peṇ, பெ. (n.) *பொது மகள்*[1](சூடா) பார்க்க; see *podu-magaḷ.*

*[ பொது + பெண் ]*

**பொதுப்பெண்டு** potu-p-pentu, பெ. (n.) *பொதுமகள்*[1] பார்க்க; see *podu-magaḷ* '*பொதுப்பெண்டி ரல்குற்புனை மேகலை*' (கம்பரா.வரைக்கா.76)

*[பொது+பெண்டு]*

**பொதுப்பெயர்** podu-p-peyar, பெ. (n.) 1. பல பொருட்குப் பொதுவாகிய பெயர்(நன். 62. உரை); generic name, opp. to cirappu-p-peyar 2. இருதிணைக்கும் அல்லது அஃறிணை இருபாற்கும் பொதுவாகவரும் பெயர்(நன்.281–282); noun common to both tiṇai, or both numbers in aṉṟinai

*[பொது+பெயர்]*

**பொதுப்பேச்சு** podu-p-pēccu, பெ. (n.) 1. பொதுப்படையான சொல்; indefinite language or talk. 2. ஈர்ப்பாற்றல் வாய்ந்த பேச்சு(வின்); ambiguous talk.

*[பொது+பேச்சு]*

**பொதுப்பொல்லாங்கு** potu-p-pollanku, பெ. (n.) *பொல்லாங்கு* பார்க்க; see *pollanku.*

*[ பொது + பொல்லாங்கு ]*

**பொதுபொதெனல்** podu-podeṉal, பெ. (n.) 1. வர வர மிகுதியாதற்குறிப்பு(சங்.அக); gradual increase 2. ஆடை முதலியன அழுத்தமின்மைக்குறிப்பு; softness, as of texture. 3. ஈரத்தால் நனைந்திருந்தற் குறிப்பு(வின்); yielding to pressure on account of dampness, as a wall.

*[ பொது + பொது + எனல் ]*

**பொதும்பர்** podumbar, பெ. (n.) 1. மரம் செறிந்த இடம்; thick grove. '*பொழிலின் வியன் பொதும்பரின்*' (திருக்கோ. 39) 2. இளமரக்கா; park, pleasure garden. "வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்" (பெரும்பாண். 374) 3. *பொதும்பு*[1](சங்.அக); பார்க்க; see *podumbu*[1].

*[ பொதும்பு+ அர் ]*

**பொதும்பல்** podumbal, பெ. (n.) பொதுவருவாய்(J.N.); general income.

**பொதும்பு** podumbu, பெ. (n.) 1. சோலை; grove. '*காந்தளம் பொதும்பில்*' (அகநா. 18) 2. குறுங்காடு; shrubbly jungle. '*முல்லையம் பொதும்பின்*' (சீவக.3042) 3. மரப்பொந்து(பிங்); hole, hollow in a tree. 4. குழி; pit. '*பொதும்பினில் வீழ்ந்து வழுக்கி*' (திவ். பெரியாழ். 5,2,7) 5. குகை; cave. மேருவின் பொதும்பில்' (கம்பரா.மீட்சிப்.325)

*[ பொது → பொதும்பு]*



**பொதுமக்கள்** podu-makkal, பெ. (n.) 1. பொதுவகைமக்கள்; the general public. 2. சிறப்பில்லாத மக்கள்; ordinary men, men of ordinary intellect. '*புலமிக்க வரைப் புலமை தெரிதல்...பொதுமக்கட் காகாதே*' (பழமொ.5)

*[ பொது + மக்கள்]*

**பொதுமகள்** podu-magal, பெ. (n.) 1. பரத்தை(பிங்); whore, harlot. '*பொது மகளாப் புதல்வரி தாம்*' (கோயிற்பு.பதஞ்ச.26) 2. இடைக்குலப் பெண்; shepherdess. பொது மகளி ரெல்லாரும்....புக்கார் பொதுவரோடு (கலித்.101)

*[ பொது + மகள் ]*

**பொதுமடந்தை** podu-madandai, பெ. (n.) 1. *பொதுமகள்* பார்க்க; see *podumagal*. '*பொது மடந்தையர் தமக்கும்....புதுமையல்ல*' (பாரத. கிருட்டிண. 128)

*[ பொது + மடந்தை ]*

**பொதுமத்தியம்** podu-mattiyam, பெ. (n.) 1. பொதுவானது (யாழ்.அக); that which is common or general.

*[ பொது + skt.madhyama.த.மத்தியம்]*

**பொதுமதிப்பீடு** podu-madippīdu, பெ. (n.) பொதுக்கணிப்பு; common estimate.

*[ பொது + மதிப்பீடு ]*

**பொதுமருத்துவம்** potu-marutuvam, பெ. (n.) பொதுபண்டுவம்; common treatment.

*[ பொது + மருத்துவம் ]*

**பொதுமருத்துவமனை** podumarutuvamanai, பெ. (n.) பொதுவகைப் பண்டுவத்திற்கான மருத்துவ மனை; general hospital.

*[ பொது + மருத்துவமனை ]*

**பொதுமறை** podu-marai, பெ. (n.) பொது அற நூல்; (ஒழுக்கவியல்) மொழி, சமயம், இனம், நாடு முதலான சார்புகளின்றி மக்கட்குலம் முழுமைக்கும் பொதுவான அறநெறிகளை வகுத்துரைப்பதால், திருக்குறளை அறிஞர் உலகம் பொதுமறை எனப் போற்றுகிறது,

*[ பொது + மறை ]*

**பொதுமனப்பாங்கு** potu-manappanku, பெ. (n.) பரந்தமனப்பாங்கு; broad minded.

*[ பொது + மனப்பாங்கு ]*

**பொதுமனிதன்** podu- maṇidan, பெ. (n.) 1. நடு நிலையாளர்(வின்), mediator (W) 2. ஒரு பக்கமும் சாராதவன், dis-interested person.

*[ பொது* + skt.manu-ja. த.மனிதன் *]*

**பொதுமுதல்** podu-mudal, பெ. (n.) கூட்டுவணிகத்தின் முதலீடு, Joint Stock.

*[ பொது* + k.mudal. *த. முதல் ]*

**பொதுமை** podumai, பெ. (n.) 1. இயல்பானது; ordinariness; superficiality '*பொதுமை பார்க்கின்*' (கம்பரா, மாயாசீ. 71) 2. பொது வுடைமை, Common property. '*பூவின் மேலிருந்த தெய்வத்தை யாலும் பொதுமை யுற்றாள்*' (கம்பரா, மாயாசனக.62)3.நன்மை; goodness. '*புரிகின்ற காரியத்தின் பொதுமை நோக்கி*' (கம்பரா, மருத்து. 29)

*[பொது → பொதுமை]*

'மை' பண்புப் பெயரீறு

**பொதுமை உருவரை** pōtumai-uruvarai, பெ. (n.) முன்மாதிரி வரைபடம்; common desin.

*[ பொதுமை + உருவரை ]*

**பொதுமொழி** podu-moḻi, பெ. (n.) 1. சிறப்பில்லாச் சொல், word or speech not worthy of any regard, platitude. '*ஏதின்மாக்கள் பொதுமொழி கொள்ளாது*' (புறநா.58) 2. குறிப்பான பொருளில்லாத சொல், indefinite speech, vague genetal expression. 3. பொதுப் படையான சொல் (நன்); term of general application. 4. பிரியாது நின்ற விடத்து ஒரு பொருளும் பிரிந்தவிடத்து வேறு பொருளும் பயக்கும் சொல் (நன். 260); a word, dearing in a compound a meaning different from its ordinary sense. 5. பொதுச்சொல்,[3]பார்க்க '*பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளும்*' (கலித்: 68) (பிங்) 6. *பொதுச்சொல்*[4] பார்க்க; see *podu-c-col.* [3] '*பொதுமொழி படரின்*' (நன். 17)

*[ பொது + மொழி ]*

**பொதுவசனம்** podu-vaśaṉam, பெ. (n.) 1. ஊரில் வழங்கும் சொல், common saying; rumour. 2. பலபொருள் தரும் ஒரு சொல் அல்லதுதொடர்(வின்); ra word, phase or sentence of more than one meaning(w) 3. *பொதுமொழி,* 2,3(வின்) பார்க்க; see *podu-mōḻi.*

*[பொது + வசனம் ]*

(skt. Vasana த. வசனம்)

**பொதுவர்** poduvar, பெ. (n.) 1. இடையர்; herdsmen 'புன்பொதுவர் வழிபொன்ற'; (பட்டினப் 281). 2. நடுநிலையாளர்; mediators. 3. பொதுமகளிர்; Prostitutes. '*பொதுவர் பொலி மறுகும்*' (மணிமே. 28, 51).

*[ பொது + அர் → பொதுவர் ]*

**பொதுவறிவு** podu-v-aṟivu பெ. (n.) 1. உலக நடப்புகளைப்பற்றியவறிவு; General knowledge '*பொதுவறி விகழ்ந்து புலமுறு மாதவன்*' (மணிமே. 1984)

*[ பொது + அறிவு ]*

**பொதுவறு–தல்** podu-v-aṟu-, செ.கு.வி. (v.i.) ஒருவனுக்கே யுரியதாதல்; to become exclusively one's own. '*பொலங்கிளளர் மானந்தானே பொதுவறக் கொடுப்பென்*' (கம்பரா. மாயாச 51)

*[ பொது + அறு ]*

**பொதுவறு சிறப்பு** podu-v-aṟu-širappu, பெ. (n.) தனக்கேயுரிய சிறப்பு; exclusive quality, special characteristic '*பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினும்*' (சிலப். 1, 16)

*[ பொதுவறு + சிறப்பு ]*

**பொதுவனுமானம்** podu-v-aṉumāṉam, பெ. (n.) ஒன்று உள்ளது கொண்டுஅதனுடன் காணப்படும் வேறொன்று உளது என்று கொள்ளும் கருதலளவை வகை (சி.போ 1. பாண்டிப்.); (log) inference of the existence of a thing by the presense of a concomitant, conisdered not wholly conclusive but only probable and consistant, opp to ciṟappaṉu- māṉam,

*[ பொது +* skṭ.anumāna- *த.அனுமானம் ]*

**பொதுவாக** podu-v-āga, (வி.எ.) (adv) 1. ஒன்றைச் சிறப்பித்துக் கூறாமல், generally, commonly. 2. நடுவுநிலையாக; impartially.

*[ பொது + ஆக → பொதுவாக ]*

**பொதுவாய்பாடு** potu-vaipatu, பெ. (n.) பொதுக்கணிப்பேடு; common tables.

*[ பொது + வாய்பாடு ]*

**பொதுவாள்** podu-v-āḷ, பெ. (n.) 1. *பொது மாந்தன்* பார்க்க; see *podu-manidaṉ*. 2. கோயில் மேற்பார்வைப் பணி செய்யும் மலையாள சாதியினார்; a caste in malabār whose hereditary occupation is temple management. '*பொதுவாள்கையில் நீரோடட்டி*' (T.A.S. iv, 9)

*[ பொது + ஆள் ]*

**பொதுவிதி** podu-vidi, பெ. (n.) பொதுவான இலக்கணம் (பொருள் 166, உரை); (gram) general rule.

*[பொது +* skṭ.vidhi. *த. விதி]*

**பொதுவியர்** poduviyar, பெ. (n.) இடைச்சியர் (சூடா), (திருக்கோ 136, உரை) wormen of the shephered tribe.

*[ பொதுவர் → பொதுவியர் ]*

**பொதுவியல்** podu-v-iyal, பெ. (n.) 1. பலவற்றிற்குப் பொதுவாகவுள்ள குணம் (சி.போ 1,4); general attribute, common characteristics. 2. உவமானவுவமேயங் களுக்குள்ள இயல்பான தன்மை; (rhet) attribute common to vuamāṉam and vuamēyam 3. பொதுவிலக்கண முணர்த்தும் நூற்பகுதி (நன்); section of grammar dealing with general principles. 4. வேத்தியற்கு வேறான கூத்துவகை (சிலப் 14, 148), a dance, opp to vēttiyal.

*[ பொது + இயல் ]*

**பொதுவில்** podu-v-il, பெ. (n.) அம்பலம் (அக.நி); public hall '*பெருங்கண நாதர் போற்றிப் பொதுவினின்றாடும்*' (பெரியபு திருமலைக்கு 10)

**பொதுவிலக்கணம்** podu-v-ilakkaṇam, பெ. (n.) சிறப்பாகவின்றிப் பலவற்றுக்கும் பொதுவாகக் கூறும் நெறி (நன் 62 உரை) (gram) common or general rule.

*[ பொது + இலக்கணம் ]*

**பொதுவிலே விடு—தல்** poduvilē-viḍu-, பெ. (n.) 1. ஒரு பொருளை எல்லோர்க்கும் பயன்படும் படி அமர்த்தல்; to let things to be enjoyed in common. 2. பொருளைப் பாதுகாவாது விடுதல்; (இ.வ.); to leave things uncared for.

**பொதுவுடைமை** pōdu-udaimai, பெ. (n.) பொதுமை; Common Property.

*[ பொது + உடைமை ]*

பணநாட்டமின்றி, எல்லாரும் தத்தமக்கியன்ற பணியைச் செய்து, எல்லாப் பொருள்களையும் ஒத்த உரிமையோடு பயன்படுத்தி ஒற்றுமையாக வாழும்குடும்பஅல்லது கூட்டுக் குடும்ப வாழ்க்கையே பொதுவுடைமை (ம.வி.(அ).வ.கூ.)

**பொதுவெழுத்து** podu-v-eḻuttu, பெ.(n.), ஆரியந் தமிழ்களுக்குப் பொதுவாயுள்ள எழுத்து. (நன். 150); (gram) letter common to both tamil and sanskrit.

*[ பொது + எழுத்து ]*

**பொதுவை** poduvai, பெ.(n.), பொதுமகள், 1. பார்க்க, *'பொதுவைய ரகம் புகுந்து'* (திருப்பு. 129.)

*[ பொது → பொதுவை ]*

**பொதுளகரம்** podu-ḷagaram, பெ. (n.) தமிழுக்கும் வடமொழிக்கும் பொதுவான 'ள' என்ற எழுத்து; the tamil letter 'ḷ' as being common to tamil and sanskrit, dist fr. ciṟappu-ḷagaram

**பொதுளு—தல்** poduḷu-, செ.கு.வி. (v.i.), 1. நெருங்குதல் (சூடா); to be thick, close or crowded. *'சிகையனல் பொதுளியல்'* (கம்பரா. இந்திரசித்து 20) 2. நிறைதல்; to be possessed of, filled. *'ஞானங் குணங்கல்வி நூல் பொதுளி'* (அரிசமய. பரகால. 7.) 3. தழைத்தல்; to be luxuriant; to prosper thrive. *'இருள்படப் பொதுளிய'* (திருமுரு. 10.)

தெ. பொத. க. பொதெ.

*[ பொது → பொதுளு ]*

**பொதை** podai, பெ.(n.), செடி(C.G); bush.

தெ. பொத. க. பொதெ.

*[ பொது → பொதை ]*

**பொந்தந் தடி** pondantaḍi, பெ.(n.), பெருந்தடி (நெல்லை); a big club.

*[ மொந்தை → மொந்தம் → பொந்தம் + தடி ]*

**பொந்தர்**[1] pondar, பெ. (n.), பொந்து; hole, (இ.வ.) hollow.

*[ பொந்து → பொந்தர் ]*

**பொந்தர்**[2] pondar, பெ.(n.), ஒருவகை நீர்ப்புள்(வின்); a water bird.

*[ பொந்து → மொந்தர் ]*

**பொந்தி** pondi, பெ.(n.), 1. உடம்பு; body. *'சோற்றினால் வளர்த்த பொந்தி'* (திருப்பு. 731.) 2. பருமை (சங்.அக.); stoutness 3. மரத்தினாற் செய்த வாள்(வின்); wooden sword.

*[ பொந்து → பொந்தி ]*

**பொந்திக்கை** pondikkai, பெ. (n.), பொருந்துகை; union.

*[ பொருந்து → பொருந்திக்கை ]*

**பொந்திகை** pondigai, பெ.(n.), மனநிறைவு, (இ.வ.) self satisfaction.

*[ பொருந்து → பொந்திகை ]*

**பொந்திகைச் சுற்றுலா** pontikai-c-cutrula, பெ. (n.) இன்பச் சுற்றுலா; act of enjoying.

*[ பொந்திகை + சுற்றுலா ]*

**பொந்திகையுலா** pontikai-ulla, பெ. (n.) இன்பச்சிற்றுலா; picnic, trip for pleasure.

*[ பொந்திகை + உலா ]*

**பொந்து** pondu, பெ. (n.) **1.** மரப்பொந்து; hole, recess, hollow in a tree. '*ஆனந்தத் தேனிருந்த பொந்தை*' (திருவாச. 13, 2) **2.** எலி முதலியவற்றின் வளை; hole in the ground, as of rat or snake. **3.** பல்லி (பிங்.); lizard.

*தெ.பொந்த*

*[ பொத்து → பொந்து ]*

**பொந்துக்கோரை** pondu-k-kōrai, பெ.(n.), கோரை வகை(வின்); a sedge.

*[ பொந்து + கோரை ]*

**பொந்துத்தேன்** pondu-t-tēṉ, பெ. (n.), மரப்பொந்து முதலியவற்றில் வைக்கப்பட்ட தேன்(வின்); honey gathered in the hollow of a tree, crevice, etc.

*[ பொந்து + தேன் ]*

**பொந்தை** pondai, பெ. (n.), **1.** சீலையோட்டை; rent in a cloth. **2.** உடம்பு;body. **3.** மயிர்ச்சிக்கு; stickness of hair. '*மயிர் பொந்தையாகவிருக்கிறது*'.

க. பொந்தெ.

*[ பொந்து → பொந்தை ]*

**பொந்தைக்கோல்** pondai-k-kōl, பெ. (n.), *பொந்தையக்கோல்.* பார்க்க; see *ponta-yakkol.*

*[ பொந்தை + கோல் ]*

**பொந்தையக்கோல்** pondaiya-k-kōl, பெ. (n.) பூண்கட்டின தடி(வின்); staff with a ferule.

*[ பொந்தை + கோல் ]*



**பொம்மக்காதேவி** pommakkā-dēvi, பெ.(n.), தொட்டியருடைய குல தெய்வமும் மாயக் கலையினர் வணங்குவதுமாகிய ஒரு தேவதை; (E.T. IV, **189.**); patron deity of the tōttiya caste, worshipped also by jugglers.

*[ பொம்(மை) → (இ)யக்காதேவி ]*

**பொம்மல்[1]** pommal, பெ. (n.) பொலிவு; fine appearance.'*ஒளிர் பொன்னனைய பொம்மனிறம்*' (கம்பரா. உருக்கா. 68) **2.** மிகுதி (திவா.); abundance, copiousness. '*புகுந்த வவ்விருளின் பொம்மல்*' (இரகு. இலவண. 55.) **3.** பருமன்; size, thickness,

plumpness. *'பொம்மல் வனமுலை'* (சீவக. 2717.) 4. கூட்டம்; multitude, as of stars. "பொலிந்தன உடுவின் பொம்மல்" (கந்தபு. காசிபன்புல. 28.) 5. சோறு; boiled rice. *'இறடிப் பொம்மல் பெறுகுவீர்'* (மலைபடு. 169.) (பிங்.) 6. மகிழ்ச்சி; exultation. *'போய்வருங் கரும முற்றிற் றென்பதோர் பொம்மல் பொங்க'* (கம்பரா. திருவடி. 3.)

*[ பெரு → பெருமு → பொருமு → பொம்மல் ]*

**பொம்மல்**[2] pommal, பெ.(n.), பொம்மை; puppet, effigy. *'பொம்மலாட்டுவிக்கும் தோலுருப் போல்'* (விறலிவிடு.)

*[ போன்மை → பொம்மை → பொம்மல் ]*

**பொம்மலாட்டம்** pommal-āṭṭam, பெ.(n.), பொம்மையை வைத்து ஆட்டும் நாடகம்; puppet show. 2. மாயம்; disguise, deceptive appearance. *'பொம்மலாட்டமென்றேயிரு'* (பட்டினத். பொது.21)

*[ பொம்மல் + ஆட்டம் ]*

**பொம்மலி** pommali, பெ. (n.), பருத்தவள் (யாழ்.அக.) stout woman.

*[ பொம்மல் → பொம்மலி ]*

**பொம்மன்** pommaṉ, பெ.(n.), யாரோ ஒருவன்(வின்); some one, used in contempt. *"பேரெலாம் பொம்மன் திம்மன்"* (தனிப்,)

*தெ.பொம்மடி.*

*[ பொம்மல் → பொம்மன் ]*

**பொம்மியம்மன்** pommi-y-ammaṉ, பெ. (n.), சிறுதெய்வங்களிலொன்று(இ.வ.); a minor deity.

*[ பொம்மி + அம்மன் ]*

**பொம்மு-தல்** pommu-, செ.கு.வி. 1. பொலிதல்; to excel in appearance. 2. மிகுதல்; to swell. *'அதிர்குரல் பொம்மி'* (பாரத. பதினான். 112).

*[ பொருமு → பொம்மு-, ]*

**பொம்மெனல்** pom-m-eṉal, பெ.(n.), ஒரொலிக்குறிப்பு (பிங்.); tinkling sound. *'பொம்மென் பரிபுரம்'* (பாரத. அருச்சுனன்றீர். 9.) (b) விரைவுக்குறிப்பு; being sudden or rapid. *'மாதர் பொம்மெனப் புகுந்து'* (கம்பரா. உலாவியல்.1.) (c) அடர்ச்சிக் குறிப்பு; being thick or crowded. *'பொம்மெனிருள்வாய்'* (திருக்கோ. 395.)

*[ பொம் + எனல் ]*

**பொம்மை**[1] pommai, பெ. (n.) பாவை; puppet, effigy.

*க. பொம்பெ.*

*[ போன்மை → பொம்மை ]*

**பொம்மை**[2] pommai, பெ.(n.), 1. பிட்டம்; buttocks. *'அவன் நடக்கும்போது பொம்மை யாடுகிறது.'* (இ.வ.) 2. கைப்பிடிசுவர்(வின்); breastwork, parapet.

*[ பொர்ம்மு → பொம்மை ]*

**பொம்மைவாய்** *pommai-vāy,* பெ. (n.), தடித்த வாய் கிண்டற் பெயர்; a nickname, used in contempt.

*[பொம்மை[2] + வாய்]*

**பொய்¹ – தல்** *poy,* செ.கு.வி. (v.i), 1. பிடுங்கப்படுதல்; to be pulled out, torn off. *'பொய்த குத்தின.... புண்'* (கம்பரா. கிங்கர. 50) 2. துளைக்கப்படுதல்; to be hollowed. *'பொய்தகடொன்று பொருந்தி'* (கம்பரா.பஞ்ச. 49)

*[புய் → பொய்]*

**பொய்² – தல்** poy செ.குன்றா.வி. (v.t). வீழ்த்துதல்; to fell, throw down. *'அவை பார் சோரப் பொய்தான்'* (கம்பரா . அட்ச. 33)

*[புய் → பொய்]*

**பொய்³** *poy,* பெ. (n.) 1. பொய்க்கூற்று; falsehood, falsity. "பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ." (குறள். 938) 2. மருட்சித் தோற்றம்; illusion of the world, deceptive appearance. 3. போலியானது(வின்); sham, that which is counterfeit or false. 4. நிலையாமை; instability *'புற்புதமே யன்ன பொய்க்குடி வாழ்க்கையை'* (திருநூற். 3) 5. உட்டுளை; tubbularity, hole. *'பொய்பொரு முடங்குகை'* (சிலப் 15, 50) 6. மரப்பொந்து(பிங்.); hollow or recess in a tree. 7. செயற்கையானது; that which is artificial, as poy-k-kāl. 8. சிறு சிராய் (வின்); small slinter.

*தெ. பொல்லு க. புசி. ம.பொய்*

*[புய் → பொய்]*

**பொய்⁴ – த்தல்** *poy,* செ.கு.வி. (v.i.) 1. தவறுதல்; to fail, as a prediction or omen; to deceive hope, as clouds. *'விண்ணின்று பொய்ப்பின்'* (குறள். 13) 2. தம் செயலினின்று பின்வாங்குதல்; to prove false. "பொய்த்தோர் வில்லிகள் போவாராம்." (கம்பரா. சூளா. 41) 3. கெடுதல்; to go to ruin. *'பொருளென்னும் பொய்யா விளக்கம்'* (குறள். 753)

**பொய்⁵ – த்தல்** poy-, செ.குன்றாவி. (v.t.) 1. பொய்யாகப் பேசுதல்; to lie, utter falsehood to make false pretences. *'தன்னெஞ் சறிவது பொய்யற்க.'* (குறள். 293) 2. வஞ்சித்தல்; to deceive, cheat. *'நின்றோடிப் பொய்த்தல்'* (நாலடி. 111)

*[பொய் → பொய்–த்தல்]*

**பொய்க்க** *poykka,* கு.வி.எ. (adv.) 1. பொய்பட; falsely, not in earnest. *'அங்கையாகிய அழகிய தலத்தால் பொய்க்கத் தட்டின வளவிலே'* (சீவக. 1834, உரை). 2. மெதுவாய்; slowly. *'பொய்க்க அடியிட்டுக் கொண்டு போனபடி'* (ஈ.டு. 5, 10, 4)

*[பொய் → பொய்க்க]*

**பொய்க்கடி** *poy-k-kadi,* பெ. (n.) 1. கால் நடைகள் நுனிப்புல் மேய்கை; browsing. 2. தீங்கு விளைக்காத கடி; harmless, playful bite, as of a dog.

*[பொய் + கடி]*

**பொய்க்கண்** *poy-k-kaṉ,* பெ. (n.) 1. போலிக் கண்; artificial eye. 2. கண்ணருகு(வின்); part near the eye. 3. கண்மண்டை(யாழ்.அக); bones forming the eye-socket.

*[பொய் + கண்]*

**பொய்க்கண்டிப்பு** *pōy-k-kantippu,* பெ. (n.) பொய்யாகக் கண்டித்தல்; false rebake.

*[பொய் + கண்டிப்பு]*

**பொய்க்கண்ணி** *poy-k-kaṉṉi,* பெ. (n.) *பொய்ப்பூ* (யாழ்.அக.) பார்க்க; see *poy-p-pū.*

*[பொய் + கண்ணி]*

**பொய்க்கண்ணீர்** *pōy-k-kanneer,* பெ. (n.) போலியாக அழுதல்; முதலைக்கண்ணீர்; crocodile tears.

*[பொய் + கண்ணீர்]*

**பொய்க்கணிப்பு** *pōy-k-kanippu,* பெ. (n.) தவறான மதிப்பீடு; false calculation.

*[பொய் + கணிப்பு]*

**பொய்க்கதை** *poy-k-kadai,* பெ. (n.) 1. கட்டி விடப்பட்ட செய்தி; fib. 2. கட்டுக்கதை; fiction.

*[பொய் + கதை]*

**பொய்க்கரணியம்** *poy-k-karaniyam,* பெ. (n.) பொய்யானகரணியம்(காரணம்); false reasoning.

*[பொய் + கரணியம்]*

**பொய்க்கரி** *poy-k-kari,* பெ. (n.) *பொய்ச்சான்று* பார்க்க; see *poy-cāṭcci.* *'பொய்க்கரிபோகன்மின்'* (சிலப். 30.192)

*[பொய் + கரி]*

**பொய்க்கரிமாக்கள்** *poy-k-kari-mākkaḷ,* பெ. (n.) பொய்ச்சான்று கூறுபவர்; false witnesses. *'பொய்க்கரிமாக்கள் புறங்கூற்றாளர்.'* (சிலப். 5, 131, பி – ம்)

*[பொய்க்கரி + மாக்கள்]*

**பொய்க்கரியாளர்** *poy-k-kari-y-āḷar,* பெ. (n.) *பொய்க்கரிமாக்கள்* பார்க்க, see *Poy-k-kari-mākkaḷ.* *'பொய்க்கரியாளர் புறங்கூற்றாளர்.'* (சிலப். 5, 131)

*[பொய்க்கரி + ஆளர்]*

**பொய்க்காய்வு** *poy-k-kāyvu,* பெ. (n.) வெறுப்பது போன்ற நடிப்பு; " பொய்க்காய்வு காய்தியென் நெஞ்சு" (குறள்.1246); temporary estrangement.

*[பொய் + காய்→காய்வு]*

**பொய்க்காரணம்** *pōy-k-karanam,* பெ. (n.) *பொய்க்கரணியம்* பார்க்க; see *Pōy-k-karaniyam.*

*[பொய் + காரணம்]*

**பொய்க்கால்** *poy-k-kāl,* பெ. (n.) 1. விளையாட்டில் கால்களால் ஏறிச்செலுத்தும் கழி; stilt. *'அந்தரமாய் பொய்க்காலிலாடும் வித்தை.'* (நெல்விடு. 358) 2. காலுக்கு மாற்றாக மரத்தால் அமைத்துக் கட்டப்பட்ட போலிக்கால்; wooden leg.

*[பொய் + கால்]*

**பொய்க்காற்குதிரை** *poy-k-kāṟ-kudirai,* பெ. (n.) ஊர்ந்து செல்வது போல் உள்ளிருந்து மாந்தன் ஆட்டும் மரக்குதிரை; wooden rider and horse, played by a man hiding inside.

*[பொய்க்கால் + குதிரை]*



**பொய்க்கிணறு** *poy-k-kiṉaṟu,* பெ. (n.) யானை முதலியவற்றை அகப்படுத்தும் படுகுழி; false well or pit, as a trap for elephants.

*[பொய் + கிணறு]*

**பொய்க்கிளை** *poy-k-kiḷai,* பெ. (n.) பலாமரத்தி லுண்டாம் பிஞ்சு பிடியா முளை(யாழ்.அக.); false sprout, as in Jack-trees.

*[பொய் + கிளை]*

**பொய்க்குரல்** *poy-k-kural,* பெ. (n.) போலியோசை(வின்); feigned or counterfeit voise.

*[பொய் + குரல்]*

**பொய்க்குழி** *poy-k-kuḻi,* பெ. (n.) 1. பார்வைக்கு மூடியது போன்றிருந்து கால் வைத்தால் உள்ளே ஆழ்த்தும் குழி; covered pit giving a flase notion of safety 2. கோலி விளையாட்டில் தனியே விடப்பட்ட குழி(இ.வ.); a pit set apart without using, in playing marbles. 3. நாற்று நட்ட குழி(யாழ்.அக.); Prepared pit where seedlings are grown before runs plantation.

*[பொய் + குழி]*

**பொய்க்குற்றம்** *poy-k-kurttam,* பெ. (n.) போலிக்குற்றச்சாட்டு; slander.

*[பொய் + குற்றம்]*

**பொய்க்குற்றச்சாட்டு** *poy-k-kurtacattu,* பெ. (n.) *பொய்க்குற்றம்* பார்க்க; see *pōli-k-kurttam.*

*[பொய் + குற்றம் + சாட்டு]*

**பொய்க்கூடு** *poy-k-kūḍu,* பெ. (n.) 1. உடல்; (யாழ்.அக.) body

*[பொய் + கூடு]*

**பொய்க்கூற்று** *pōy-k-kurttu,* பெ. (n.) நேர்மையில்லா உரை; false statement.

*[பொய் + கூற்று]*

**பொய்க்கை** *poy-k-kai,* பெ. (n.) மீன் வகை(வின்); a kind of fish.

*[பொய் + கை]*

**பொய்க்கையொப்பம்** *pōy-k-kaiyoppam,* பெ. (n.) போலிக்கையெழுத்து; fraud signature.

*[பொய் + கையொப்பம்]*

**பொய்க்கொண்டை** *poy-k-koṇḍai,* பெ. (n.) நெட்டியால் செய்யப்பட்ட கொண்டை வகை; (சிலப். 5, 34 உரை) a kind of pithwork forming a frame for ha(ri) dressing.

*[பொய் + கொண்டை]*

**பொய்க்கோலம்** *poy-k-kōlam,* பெ. (n.) 1. இயற்கையுருவை மறைக்கும் மாறுகோலம்; false or assumed appearance, disguise. *'பொய்க்கோலஞ்செய்ய வொழியுமே'* (நாலடி.43) 2. படிற்றொழுக்கம்(வின்); hypocrisy.

*[பொய் + கோலம்]*

**பொய்மதிப்பீடு** *pōy-matipitu,* பெ. (n.) *பொய்க்கணிப்பு* பார்க்க; see *poykkanippu.*

*[பொய் + மதிப்பீடு]*

**பொய்கை[1]** *poygai,* பெ. (n.) 1. இயற்கை யிலுண்டான நீர்நிலை; natural spring or pond. *'வாவியும் பொய்கையுங் கண்டீர்.'* (சீவக.337) 2. நீர்நிலை; tank. *"பொய்கைவாயிற் புனல்பொரு புதவின்"* (பதிற்றுப். 27) 3. பொய்கையார்,1 பார்க்க; *'களவழிப்பா முன்செய்தபொய்கை'* (தொல்.பொ.91) 4. பொய்கையாழ்வார் பார்க்க; *'பொய்கை பூதம் பேய்'* (பிர.போத. 11, 9)

*[ பொய் → பொய்கை]*

**பொய்கை²** *poygai,* பெ. (n.) கோட்டான்; a kind of owl. (யாழ்.அக.)

**பொய்கையார்** *poygaiyār,* பெ. (n.) 1. களவழி நாற்பது இயற்றிய ஆசிரியர்; an ancient poet, author of kaḷavali-nāṟpadu. (புறநா. 48). 2. *பொய்கையாழ்வார்* பார்க்க; see *poygai-y-āḻvār. 'பொய்கையார் பூதத்தார் பேயார்'* (உபதேசரத். 4)

*[பொய்கை + ஆர்]*

**பொய்கையாழ்வார்** *poygai-y-āḻvār,* பெ. (n.) காஞ்சிபுரத்தில் ஒரு பொய்கையில் தோன்றிய வரும், ஆழ்வார் பதின்மருள் ஒருவருமான திருமாலடியார்; a vaiṣṇava saint, born at a tank in conjeevaram, one of the ten āḻvār.

*[பொய்கை + ஆழ்வார்]*

**பொய்க்கோலம்** *pōy-k-kolam,* பெ. (n.) புனைவு செய்யப்பட்ட தோற்றம்; false appearance.

*[பொய் + கோலம்]*

**பொய்ச்சத்தம்** *poy-c-cattam,* பெ. (n.) *பொய்க்குரல்*(வின்) பார்க்க; see *poy-k-kural.*

*[பொய் +* skṭ.sālada. *த.சத்தம்]*

**பொய்ச்சத்தியம்** *poy-c-cattiyam,* பெ. (n.) *பொய்யாணை*(வின்) பார்க்க; see *poy-y-āṇai.*

*[பொய் +* skṭ.satya. *த.சத்தியம்]*

**பொய்ச்சாக்கு** *pōy-c-cākku,* பெ. (n.) நொண்டிச்சாக்கு; lame execuse.

*[பொய் + சாக்கு]*

**பொய்ச்சா–த்தல்** *poyccā,* செ.குன்றா.வி. (v.t) மறத்தல் (வின்); to forget.

*[பொய்ச்சா → பொய்ச்சா–த்தல்]*

**பொய்ச்சாட்சி** *poy-c-cāṭci,* பெ. (n.) 1. உண்மைக்கு மாறான சான்று; false testimony. *'பொய்ச்சாட்சி சொல்லும் பதர்'* (குமரே. சத. 28) 2. பொய்ச்சாட்சிக்காரன்; false witness.

*[பொய் +* skṭ.sākṣin. *த.சாட்சி]*

**பொய்ச்சாட்சியம்** *poy-c-cātciyam,* பெ. (n.) *பொய்ச்சாட்சி,* பார்க்க; see *poy-c-cāṭci.*

*[பொய் +* skṭ.sākṣya. *த.சாட்சியம்]*

**பொய்ச்சான்று** *poy-c-cāṉṟu,* பெ. (n.) *பொய்ச்சாட்சி* பார்க்க; see *poy-c-cāṭci*

*[பொய் + சான்று]*

**பொய்ச்சான்றேறு–தல்** *poy-c-cāṉṟēṟu,* செ.குன்றா.வி.(v.t) பொய்ச்சான்று சொல்லுதல்; to give false evidence. *'வஞ்சித்துப் பொய்ச்சான்றேறுவாரும்'* (சிலப். 5, 128, உரை)

*[பொய்ச்சான்று + ஏறு]*

**பொய்ச்சிரிப்பு** *pōy-c-cirippu,* பெ. (n.) *பொய்ப்புன்னகை* பார்க்க; see *poy-punnakai.*

*[பொய் + சிரிப்பு]*

**பொய்ச்சீத்தை** *poy-c-cittai,* பெ. (n.) பொய்யே பேசும் கீழ்மகன்; (தொல்.சொல். 57, உரை) low-born liar.

*[பொய் + சீத்தை]*

**பொய்ச்சீப்பு** *poy-c-cīppu,* பெ. (n.) வாழைக்குலையிற் றோன்றியழியும் நுனிச்சீப்பு(வின்); the last row of blossoms that forms on the bunch of a plantain and perishes.

*[பொய் + சீப்பு]*



**பொய்ச்சு** *poyccu,* பெ. (n.) பழத்தின் குற்றம்(வின்); flaw, defect, as in a fruit.

*[பொய் → பொய்ச்சு]*

**பொய்ச்சுற்றம்** *poy-c-cuṟṟam,* பெ. (n.) அன்பற்ற சுற்றம்; kinship without natural love.

*[பொய் + சுற்றம்]*

**பொய்ச்சுற்றம் பேசு—தல்** *poy-c-cuṟṟam-pēšu-,* செ.கு.வி.(v.i) இணக்கமின்றி உறவு கொண்டாடுதல்; to claim kinship without real love. *'குருபாண்டவர்க் காயங்கொர் பொய்ச்சுற்றம் பேசி"* (திவ். பெரியாழ். 5, 3, 4)

*[பொய்ச்சுற்றம் + பேசு]*

**பொய்ச்சூள்** *poy-c-cūḷ* பெ. (n.), பொய்யாணை; false oath. *'பொய்ச்சூளா ளென்ப தறியேன் யான்'* (பரிபா, 12, 63)

*[பொய் + சூள்]*

**பொய்செய்—தல்** *poy-šeyt-,* செ.கு.வி. (v.i.), உண்மையற்று ஒழுகுதல்; to prove false. 'கார்யத்தில் வந்தால் மெய் செய்வரைப் போலே பொய் செய்து தலைக்கட்டும்' (ஈடு.10,4,5,)

**பொய்ச்செய்தி** *pōy-c-cithi,* பெ. (n.), நம்பகத்தன்மையற்ற பொய்யான செய்தி; romour.

*[பொய் + செய்தி]*

**பொய்சொல்லி** *poy-šolli,* பெ. (n.) பொய் சொல்லுபவன்—ள் (வின்); liar.

*[பொய் + சொல்லி]*

'இ' வி. மு. ஈறு.

**பொய்த்தலை** *poy-t-talai,* பெ. (n.), கன்னமிடுவோர் கன்னத்துளை வழியாய் உட்செலுத்தும் போலிக் கை(வின்); mask or false head on a pole, pushed by thieves through a hole made in the wall of a house to ascertain whether the inmates are vigilant or not.

*[பொய் + தலை]*

**பொய்த்தூக்கம்** *poy-t-tūkkam,* பெ. (n.), 1. குறையுறக்கம்(வின்); unsound sleep. (w.) 2. *பொய்யுறக்கம்,*1 பார்க்க; see *poy-y-urakkam.*

*[பொய் + தூக்கம்]*

**பொய்த்தேர்** *poy-t-tēr,* பெ. (n.), 1. பேய்த் தேர்; (நாமதீப. 414) mirage. 2. பிண மின்றித் தனியே வீதியில் வரும் வெறுந்தேர்; dummy bier carried in a funeral procession.

*[பொய் + தேர்]*

**பொய்த்தோற்றம்** *poy-t-tōṟṟam,* பெ. (n.) போலித்தோற்றம்; false show.

*[பொய் + தோற்றம்

**பொய்தல்** *poydal,* பெ. (n.), **1.** மகளிர் விளையாட்டு; woman's game. *'பொய்த லாய மொடு'* (சிலப்.6,151) **2.** சிற்றில்; house of sand made by children in play. *'பொய்தணி வண்டிமிர் மணற்கோடு'* (பரிபா.20,23) **3.** மகளிர் கூட்டம்;(சூடா) company of women.

*[பொய் → பொய்தல்]*

**பொய்ந்நாட்டு** *poy-n-nāṭṭu,* பெ. (n.), பொய்யாக நாட்டிக்கொள்ளப்பட்டது; that which is made falsely. "பொய்ந்நாட்டேனும்" (சீவக.1637)

*[பொய் + நீர்]*

**பொய்ந்நீர்** *poy-n-nīr,* பெ. (n.), *பொய்த்தேர்1* (யாழ்.அக.) பார்க்க; see *poy-t-tōr1*

*[பொய் + நீர்]*

**பொய்ந்நெறி** *poy-n-neṟi,* பெ. (n.), தீயவழி; false path, evil way. *'பொய்ந்நெறி நீக்கிய வதிசயம்'* (திருவாச. 26 10).

*[பொய் + நெறி]*

**பொய்ப்பத்திரம்** *poy-p-pattiram,* பெ. (n.), போலிஆவணம்(வின்); false document.

*[பொய் +* skṭ.patra. *த.பத்திரம்]*

**பொய்ப்பாடு** *Poy-p-pāḍu,* பெ. (n.) **1.** தவறுகை; failure, futility. **2.** பொய்படுகை; proving falses.

*[பொய் + 'மாடு' சொல்லாக்காறு→பாடு]*

**பொய்ப்பார்** *Poy-p-pār,* பெ. (n.) இளகலான நிலப்பகுதி (வின்.); unstable stratum, as found in digging well.

*[பொய் + பார்]*

**பொய்ப்பிஞ்சு** *Poy-p-piñju,* பெ. (n.) காயாகாமல் வெம்பியுதிரும் இளங்காய் (யாழ்ப்.); tander fruit that appears early in a plant and drops down without ripening

*[பொய் + பிஞ்சு]*

**பொய்ப்பு** *Poyppu,* பெ. (n.) உண்மையற்றது; falsification, deception. *'பொய்ப்பற யாரும் போற்ற'* (திருவாலவா. **56, 4**)

*[பொய் → பொய்ப்பு]*

**பொய்ப்புன்னகை** *Pōy-p-punnakai,* பெ. (n.) போலிச் சிரிப்பு; false laugh.

*[பொய் + புன்னகை]*

**பொய்ப்பூ** *Poy-p-pū,* பெ. (n.) காய்பிடிக்காது உதிரும் முதற்பூ (சங்.அக); the first flower of a plant which drorps down without developing.

*[பொய் +பூ]*

**பொய்ப்பேச்சு** *Pōy-p-paccu,* பெ. (n.) பாசாங்குப் பேச்சு; meaningless talk.

*[பொய் + பேச்சு]*

**பொய்ப்பொருள்** *Poy-p-poruḷ,* பெ. (n.) எக்காலத்து மில்லாத பொருள்; thing which is non-existent.

*[பொய் + பொருள்]*

**பொய்ப்படு—தல்** *Poy-paḍu-,* செ.கு.வி. (v.i.) **1.** பொய்யாதல்; to prove false. **2.** பயன் விளையாது அழிந்திடுதல்; to fail of purpose. *'பொய்படு மொன்றோ'* (குறள், **836**)

*[பொய் + படுதல்]*

**பொய்ம்மணல்** *Poy-m-maṇal,* பெ. (n.) புதை மணல் (கொ.வ.); quicksand.

*[பொய் + மணல்]*

**பொய்முகம்** *Pōy-m-mugām,* பெ. (n.) வஞ்ச முகம்; false-face.

*[பொய் + முகம்]*

**பொய்ம்மூக்கு** *Poy-m-mūkku,* பெ. (n.) **1.** மூக்கின் கீழுள்ள உறுப்பு(வின்.); bottom of the nose (W) **2.** மேல் மூக்கு; top of the nostril. **3.** போலிமூக்கு; artificial nose.

*[பொய் + மூக்கு]*

**பொய்ம்மை** *Poymmai,* பெ. (n.) **1.** பொய்; false hood, lie. *'பொய்ம்மையும் வாய்மை யிடத்த'* (குறள், **292**) **2.** மாயம்; unreality, illusion. **3.** போலி; that which is counterfeit or antificial

*[பொய் → பொய்ம்மை]*

'மை' ப. பெ. ஈறு.

**பொய்ம்மையாளர்** *Poymmai-y-āḷar,* பெ. (n.) பொய்யர்; liars, persons given to false hood or duplicity *'பொய்ம்மையாளரைப் பாடாதே'* (தேவா. **647, 1**)

*[பொய்ம்மை + ஆளர்]*

**பொய்ம்மையுத்தரம்** *Poymmai-y-uttaram,* பெ. (n.) வழக்காளியின் பேச்சை எதிர் வழக்காளி மறுத்துரைக்கை (சுக்கிர நீதி, **270**); statement by the defendant contesting the plaintiff's statement.

*[பொய்மை + உத்தரம்]*

**பொய்யடி** *Poy-y-aḍi,* பெ. (n.) **1.** போலியடி; playful stroke proving light or harmless. **2.** பொய்யால் பிறரை வஞ்சிக்கை; deceiving by false words. **3.** அச்சுறுத்துகை terrifying

*[பொய்+அடி ]*

**பொய்யடிமை** *Poy-y-aḍimai,* பெ. (n.) போலிப் பத்தி; insincere devotion to God. *'பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்'* (தேவா. **737, 7**)

*[பொய் + அடிமை]*

**பொய்யடிமையில்லாதபுலவர்** *Poy-y-aḍimai-y-illāda-pulavar,* பெ. (n.) சிவபெருமானை வழிபடும் கழகப் புலவர்களான தொகையடியார் (பதினோ. திருத்தொண்டர் திருவந். **49**); poets of the last sangam who congecrated their lives to the worship of šiva, one of togai-y-aḍiyār, q.v.

*[பொய்யடிமை + இல்லாத புலவர்]*

**பொய்யம்பு** *Poy-y-ambu,* பெ. (n.) விளை யாட்டம்பு; sham arrow, discharged in play or mock flight. *'வேடுவனாய்ப் பொய்யம் பெய்து'* (தேவா.**149**)

*[பொய் + அம்பு]*

**பொய்யவியல் செய்—தல்** *Poy-y-aviyalšey,* செ.குன்றாவி. (v.t.) புழுக்குதல்; to pārboil

*[பொய் + அவியல் + செய் –]*

**பொய்யறுகல்** *Poy-y-aṟu-kal,* பெ. (n.) பாதி வெந்த செங்கல் (C.G.); brick partiality barrt.

*[பொய் + அறுகல்]*

**பொய்யறை** *Poy-y-axai,* பெ. (n.) 1. பெட்டகத்தின் மறைவறை; பொய்க்குழி ; secret compartment in a box or safe. 2. *'பொய்யறைப் படுத்து'* (சிலப். 10, 70) பார்க்க;

*[பொய் + அறை]*

**பொய்யன்** *Poyyan,* பெ. (n.) பொய்பேசுபவன்; liar. *'பொய்யர் கண்டீர் வாழ்க்கையாளர்'* (தேவா, 88, 6)

*க. புசிக.*

*[பொய் + அன்]*

**பொய்யாடல்** *Poy-y-ādal,* பெ. (n.) வினய மில்லாத சிறுபிள்ளைகள் விளையாட்டு; innocent sport, as of children. *'பொய்யாடலாடும் புணர்ப்பின்'* (பரிபா. 11, 89)

*[பொய் + ஆடல்]*

**பொய்யாணை** *Poy-y-āṉai,* பெ. (n.) பொய்யாகச் செய்யும் உறுதிமொழி (யாழ்.அக); false oath, perjury.

*[பொய் + ஆணை]*

**பொய்யாப்புள்** *Poyyā-p-pul,* பெ. (n.) பறவை வகை (சூடா.); rail, water-fowl.

*[பொய் + ஆ + புள்]*

'ஆ' எ. ம. இ. நி.

**பொய்யாமை** *Poyyāmai,* பெ. (n.) பொய் சொல்லாமை; being truthful. *'பொய்யாமை யன்ன புகழில்லை'* (குறள், 296) 2. நடுநிலைமை; impartiality *'பொய்யாமை நுவலுநின் செங்கோல்'* (கலித். 99)

*[பொய் + ஆ + மை → பொய்யாமை]*

'ஆ' எ. ம. இ. நி. 'மை'. ப. பெ. ஈறு.

**பொய்யாமொழி** *Poy-y-ā-moḻi,* பெ. (n.) 1. மெய்யுரை; never-failing word, true word. 2. மறைநூல்; sacred scriptures of the hindus, as the vēdas and the gamās. *'பொய்யா மொழியா லந்தணர் போற்றும் புத்தூரில்'* (தேவா. 612, 10) 3. திருக்குறள்; the kuṟaḷ. *'திருவள்ளுவர் மொழிந்த பொய்யா மொழிக்கும்'* (வள்ளுவமா. 23) 4. தஞ்சைவாணன் கோவை யியற்றிய புலவர் (தமிழ்நா.); a poet, author of lañjaiṉ-vāṇaṉ - kōvai.

*[பொய் + ஆ + மொழி]*

'ஆ' எ. ம. இ. நி.

**பொய்யாறு** *Poy-y-āṟu,* பெ. (n.) *பொய்ந்நெறி* பார்க்க; see *Poy-n-neṟi, 'பொய்யாற் றொழுக்கங் கொண்டு'* (மணிமே. 23,22)

*[பொய் + ஆறு]*

**பொய்யிகந்தோர்** *Poy-y-igandōr,* பெ. (n.) முனிவர் (உரி.நி); sages.

*[பொய் + இகந்தோர்]*

**பொய்யிடை** *Poy-y-iḍai,* பெ. (n.) நுண்ணிய இடை; slender waist. *'வார்முலை பொறாத பொய்யிடை நைய'* (கம்பரா. ஊர்தே. 104)

*[பொய் + இடை]*

**பொய்யில்புலவன்** *Poy-y-il-pulavaṉ,* பெ. (n.) 1. மெய்யறிவன்; man of true wisdom. *'பொய்யில் புலவர் புரிந்துறையு மேலுலகம்'* (பு.வெ. 10,4) 2. திருவள்ளுவர்; Tiruvaḷḷuvar. *'பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப் பொய்யில் புலவன்'* (மணிமே. 22, 61.)

*[பொய் + இல் + புலவன்]*

**பொய்யுகம்** *Poy-y-ugam,* பெ. (n.) கடையூழி (கலியுகம்); kaliyuga. *'நாலாம் பொய்யுகம்'* (திருவிளை. இரசவாத. 30)

*[பொய் + Skt. yuga.த.யுகம்]*

**பொய்யுரம்** *Poy-y-uram,* பெ. (n.) மயக்க அறிவு; illusory knowledge. *'பொய்யுரமுறு நிருவிகற்ப வுரு'* (வேதா. சூ. 67)

*[பொய் + உரம் ]*

**பொய்யுறக்கம்** *Poy-y-uṟakkam,* பெ. (n.) 1. கள்ளத் தூக்கம்; pretanded sleep. *'மடவாள் போந்தனையும் பொய்யுறக்கம்.... உறங்கி'* (திவ். இயற். சிறிய. ம.31) 2. பொய்த்தூக்கம், (வின்.) பார்க்க; 1. Poy-t-ukkam

*[பொய் + உறக்கம்]*

**பொய்யுறக்கு** *Poy-y-uṟakku,* பெ. (n.) *பொய்யுறக்கம்* பார்க்க; see *Poy-y-urakkam* *'அமளி மேலாப் பொய்யுறக் குறங்கு வானை'* (கம்பரா. ஊர்ய தே. 213)

*[பொய் + உறக்கு]*

**பொய்யுறங்கு—தல்** *Poy-y-uṟaṅgu-,* செ.கு.வி. (v.i.) உறங்குவது போல் நடித்தல்; to pretend to sleep. *'புனையிழை யொருமயில் பொய்யுறங்குவாள்'* (கம்பரா. உண்டா. 64)

*[பொய் + உறங்கு –,]*

**பொய்யொழுக்கம்** *Pōy-yolukkam,* பெ. (n.) தீய நடத்தை; immoral ethics (conduct)

*[பொய் + ஒழுக்கம்]*

**பொய்யொழுகலாறு** *Pōy-yolukalaru,* பெ. (n.) *பொய்யொழுக்கம்* பார்க்க; see *poyyolukkam.*

*[பொய் + ஒழுகலாறு]*

*ஒழுகலாறு = நடத்தை*

**பொய்வளைவு** *Poy-vaḷaivu,* பெ. (n.) மேலே வளைவுகட்டுதற்காக இடும் முட்டுவளைவு (C.E.M.); scaffold for an arch.

*[பொய் + வளைவு]*

**பொய்வாழ்வு** *Poy-vāḻvu,* பெ. (n.) 1. நிலையற்ற வாழ்க்கை; transitori ness of human life. 2. போலியொழுக்கமுள்ள வாழ்க்கை; a life of duplicity.

*[பொய் + வாழ்வு]*

**பொய்வெட்டு** *Poy-veṭṭu,* பெ. (n.) (காசின் குற்றவகை (சரவண. பணவிடு. 67); a defect in coins

*[பொய் + வட்டு →வெட்டு]*

**பொரி—தல்** *Pori-,* செ.கு.வி. (v.i.) 1. பொரி யாதல்; to be parched, baked. *'செந்தீ யினிடைப் பொரிந்து தெறித்த பொரிபோல'* (பிரபுலிங். பிரபுதே. 54) 2. வறுபடுதல்(வின்); to be roasted, fried, as grain. 3. தீய்தல்; to be blackened by fire, singed, scorched or burnt by the sun. *'பொரிந்தன கலவைகள்'* (கம்பரா. மிதிலைக் காட்.50) 4. விரைவாகப் பேசுதல்(கொ.வ.); to speak fluently. 5. அலப்புதல்(வின்); to blab. 6. உப்பு முதலியன தரையிற்பூத்தல்(வின்); to form, as a thin stratum or layer of salt. 7. படிதல்; togather, as a coat of dust on the body.

8. மெல்லென ஒலித்தல்(வின்); to crack, pop, make slight reports, as musketry 9. வாணப்பொரி மிகுந்து சொரிதல்; to throw out sparks, as Roman candle or a whirling firebrand. *'பொரிந்தோடின ..... கருங் கோளரிக் கிளையான் விடு சரமே'.* (கம்பரா. நிகும்பலைய. 112.) 10. பொருக்குவெடித்தல் (யாழ்.அக.) to be dried up and shrivelled as the skin.

*[பல் → பர் → பரி → பொரி]*

*க. புரி*

**பொரி²–த்தல்** *Pori-,* செ.குன்றா.வி. (v.t.) 1. பொரியச் செய்தல்; to fry *'நெய்யுறப் பொரித்த'* (புறநா. 397.) 2. வறுத்தல்; to parch, toast, as grain. 3. கிழங்கு சுடுதல்(வின்); to bake after roasting on live coals, as yams. 4. அடைகாத்துக் குஞ்சையுண்டாக்குதல்; to hatch, as birds. 5. போக்குதல்; to disperse, remove. *'அல்லைப் பொரிக்கு மதிக்குடை நிழற்ற'* (துணிகைப்பு. வள்ளி. 122) 6. தீய்த்தல்; to burn, scorch, as the sun. *'வெயில் பொரிக்கிறது'* 7. புளியில்லாமற் சமைத்தல்; to cook without tamarind. *'பொரித்தகுழம்பு'* 8. குறைந்தவிலைக்கு விற்றல் (யாழ்.அக.); to sell at a low price.

*[பொரி → பொரி–த்தல்]*

**பொரி³** *Pori,* பெ. (n.) 1. பொரிக்கப் பட்டது; a fry, anything fried. 2. பொரிகறி; fried curry. *'நேர்நிறை பொரியுங் குய்யும் வறைகளும்'* (சீவக. 2971.) 3. பொரிந்த நெல் முதலியன; parched grain or pulse. *'பொரிப்பூம்புன்கின்'*எ(நற்.9.) 4. கரிந்தகாடு (வின்); jungle burnt 5. எருமைக் கன்று (நன். 387, மயிலை.); calf of buffalo. 6. நன்றாகச் சமைக்காத சோறு(இ.வ.); badly cooked food.

*[பல் → பர் → பரி → பொரி]*

*க. புரி. ம. பொரி*

**பொரிக்கஞ்சி** *Pori-k-kañci,* பெ. (n.) பொரிமாவாற் செய்த கஞ்சி(பதார்த்த. 1581.) ; gruel made of the flour of parched grain.

*[பொரி + கஞ்சி]*

**பொரிக்குழைப்பிண்டி** *Pori-k-kulai-p-piṇḍi,* பெ. (n.) பண்ணியாரவகை (இராசவைத். 139); a kind of cake.

*[பொரி + குழை + பிண்டி]*

**பொரிகடலை** *Pori-kaḍalai,* பெ. (n.) உப்பும் மஞ்சளுந்தூவி வறுத்த கடலைத் தின்பண்டம்; (கொ.வ.) parched bengal gram seasoned with turmeric and salt.

*[பொரி + கடலை]*

**பொரிகரப்பான்** *Pori-karappāṉ,* பெ. (n.) ஒருவகைச் சிரங்கு; running scall, eczema.

*[பொரி + கரப்பான்]*

**பொரிகறி** *Pori-kaṟi,* பெ. (n.) புளியிடாமற் சமைத்த கறிவகை; (s.i.i. ii, 127, 19.) seasoned curry prepared without tamarind.

*[பொரி + கறி]*

**பொரிகாரம்** *Pori-kāram,* பெ. (n.) 1. வெங்காரம்(வின்); borax. 2. படிக்காரம் (சங்.அக.); alum

*[பொரி + காரம்]*

**பொரிகொள்ளு** *Pori-kollu,* பெ. (n.) காணத்தை வறுத்துச் செய்த சிற்றுண்டி வகை(இ.வ.); a kind of broth prepared without tamarind.

*[பொரி + கொள்ளு]*

**பொரிச்சாற்றமுது** *Pori-c-cārramudu,* பெ. (n.) புளியில்லாமல் ஆக்கிய மிளகுநீர்; a kind of mulligatawny prepared without tamarind.

*[பொரி + சாற்றஅமுது]*

**பொரிசிந்து–தல்** *Pori-šindu-,* செ.கு.வி. (v.i.) *பொரிதூவு* (வின்) பார்க்க; see *pori-tūru.*

*[பொரி + சிந்துதல்]*

**பொரிதூவு–தல்** *Pori-tūvu-,* செ.கு.வி. (v.i.) பிணச்சடங்கு முதலியவற்றில் நெற்பொரியை வாரியிறைத்தல்(வின்); to ceatter parched rice, as at a funeral.

*[பொரி + தூவு]*

**பொரிப்பூண்டு** *Pori-p-pūṇḍu,* பெ. (n.) 1. *கரப்பான்பூடு* (பதார்த்த 279.) பார்க்க; see *karappāṇ-pūḍu.* a thorny shrub. 2. *நீர்முள்ளி* (மலை.) பார்க்க,

*[பொரி + பூண்டு]*

**பொரிபுறந்தடவு–தல்** *Pori-puran-taḍavu-,* செ.கு.வி. (v.i.) உட்குறையை மறைத்து வெளியே மினுங்கச் செய்தல்; to cover up defects. *'நீங்கள் பொரிபுறந் தடவி வருந்திச் சேமஞ்சாத்தி வைத்து'* (ஈடு, 4, 10, 2).

*[பொரி + புறந்தடவு–,]*

**பொரிபொரி–த்தல்** *Pori-pori-,* செ.கு.வி. (v.i.) ஓயாது விரைந்து பேசுதல்; to chatter; to speak rapidly and incessantly. (இ.வ.)

*[பொரி + பொரி]*

**பொரிபொரிச்சான்** *Pori-poriccāṉ,* பெ. (n.) அழுத்தினால் சுடக்கோசையிட்டு வெடிக்கும் காய்களையுடைய ஒருவகைச் செடி(வின்); a plant whose unripe seeds burst with a cracking noise when pressed.

*[பொரிபொரி + ஆன்]*

**பொரிபொரியெனல்** *Pori-pori-y-eṉal,* பெ. (n.) 1. வசைபொழிதற் குறிப்பு; onom. expr. of ascolding. 2. விரைந்து பேசற்குறிப்பு(கொ.வ.); rapid speaking.

*[பொரிபொரி + எனல்]*

**பொரிபோடுதல்** *Pori-pōḍudal-,* பெ. (n.) திருமணக் காலத்தில் ஓமத்தீயில் நெற்பொரியை யிடுகை; throwing parched grain into the sacrificial fire, as in a marriage.

*[பொரி + போடுதல்]*

**பொரிமலர்** *Pori-malar,* பெ. (n.) புன்கு, 1. (மலை.); பார்க்க, indian beech.

*[பொரி + மலர்]*

**பொரிமா** *Pori-mā,* பெ. (n.) வறுத்த அரிசியின் மா; flour of parched rice. *'பொரிமாவை மெச்சின பொக்கைவாயன்'*

*[பொரி → பொரிமா]*

**பொரிமாச்சிந்தி** *Pori-mā-c-cindi,* பெ. (n.) *பொரிமாத் தட்டி* (யாழ்.அக.) பார்க்க; see *pori-ma-t-laṭṭi.*

*[பொரிமா + சிந்தி]*

**பொரிமாத்தட்டி** *Pori-ma-t-taṭṭi,* பெ. (n.) வீணெண்ணமுள்ளவன் (யாழ்.அக.); one who builds castles in the air.

*[பொரிமா + தட்டி]*

**பொரிமாத்திரளை** *Porima-t-tiraḷai,* பெ. (n.) *பொரிவிளாங்காய்* (யாழ்.அக.) பார்க்க; see *pori-viḷaṅkay.*

*[பொரிமா + திரளை]*

**பொரிமாதூவு—தல்** *Pori-mā-tūvu,* செ.கு.வி. (v.i.) பொரிமாவைக் கறியில் தூவிப் பக்குவஞ் செய்தல்(வின்); to season by sprinkling flour of parched rice on certain curries.

*[பொரிமா + தூவு]*

**பொரியரிசி** *Pori-y-ariši,* பெ. (n.) வறுத்த அரிசி(வின்); parched rice.

*[பொரி + அரிசி]*

**பொரியரிசியேப்பம்** *Pori-y-arici-y-ēppam,* பெ. (n.) புளிச்சேப்பம்.(இ.வ.) belching on account of indigestion.

*[பொரியரிசி + ஏப்பம்]*

**பொரியரை** *Pori-y-arai,* பெ. (n.) மரத்தின் பொரிந்த அடிப்பகுதி; rough, cracked surface of the trunk of trees. *'பொரியரை ஞாழல்'* (சீவக. 515)

*[பொரி + அரை]*

**பொரியல்** *Poriyal,* பெ. (n.) **1.** பொரிகை; frying. **2.** பொரித்த உணவு; fried food fry. *'கோழிப்பெடையினாற்சமைத்த பொரியலோடு'* (பெரும்பாண். 256. உரை.)

*[பொரி → பொரியல்]*

**பொரியல்கரியல்** *Poriyal-kariyal,* பெ. (n.) பல்வகையான பொரித்த வுணவு(வின்); different kinds of fried food.

*[பொரியல் + கறியல்]*

**பொரியுண்டை**[1] *Pori-y-uṇḍai,* பெ. (n.) *பொரியுருண்டை* பார்க்க; see *pori-y-uṇḍai.*

*[பொரி + உண்டை]*

**பொரியுருண்டை**[2] *Pori-y-uruṇḍai,* பெ. (n.) நெற்பொரியைப்பாகிட்டுத்திரட்டிய உருண்டை. (பதார்த்த. 1423.); a ball of sweetmeat made of fried rice and molasses.

*[பொரி + உருண்டை]*

**பொரிவாணம்** *Pori-vāṇam,* பெ. (n.) ஒருவகை வேடிக்கைவாணம்(இ.வ.); rocket which explodes and throws out star-like sparks.

*[பொரி + வாணம்]*

**பொரிவாயன்** *Pori-vāyaṉ,* பெ. (n.) கடல்மீன் வகை(J.N.); a sea fish, white attaining seven inches in length.

**பொரிவிளங்காய்** *Pori-viḷaṅkāy,* பெ. (n.) *பொரிவிளாங்காய்*(வின்) பார்க்க; see *pori-vilaṅkay.*

*[பொரி + விளங்காய்]*

**பொரிவிளாங்காய்** *Pori-viḷāṅkāy,* பெ. (n.) சிறுபயற்றுமாவோடு சருக்கரை சேர்த்துச் செய்த விளங்காய் போல் உருண்டையான பணியாரம்(வின்); a ball of sweet meat made of green-gram flour and sugar.

*[பொரி + விளாங்காய்]*

**பொரிவு** *Porivu,* பெ. (n.) 1. மாணிக்கக் குற்றவகை; a flaw in rubies. *'இறுகுதல் கருகுதல் பொரிவே',* (திருவாலவா. 25, 14.) 2. பச்சைமணிக் குற்றம் எட்டனுள் ஒன்று. (சிலப். 14, 184. உரை.); a flaw in emeralds, one of eight maragada-k-kurram.

*[பொரி → பொரிவு]*

**பொரு¹—தல்** *poru-,* செ.கு.வி. (v.i.) 1. போர் செய்தல்; to fight, contend in warfare, engage in battle. *'ஈரைம் பதின்மரும் பொருது களத்தொழிய'* (புறநா. 2.) 2. சூதாடுதல்; to play games of chance. *'போது போகுமாறிருந்து பொருதும்'* (பாரத. சூது. 169.) 3. மாறுபடுதல்; to compete, viewith, strive against. *'கண்பொர விளங்கு.... குடை'* (புறநா. 35.) 4. வீசுதல்; to blow, as the wind. *'குரூஉப்புகை பிசிரக் கால்பொர'* (பதிற்றுப். 15, 6.)

**பொரு²—தல்** *poru-,* செ.குன்றா.வி. (v.t.) 1. தடவுதல்; to play, as a lute. *'வீணைபொரு தொழிலும்'* (சீவக. 1795) 2. கடைதல்; to churn. *'ஒற்றைக்கிரி மத்தைப் பொருது'* (திருப்பு. 1.) 3. ஒப்பாதல்; to resemble. *'மலையெத்தனை அத்தனை.... பொருகிற்பன'* (கம்பரா. அதிகா. 150.) 4. தாக்குதல்; to come in collision with, dash against, as waves. *'பொருபுனறரூஉம்'* (சிறுபாண். 118.) 5. முட்டுதல்; to reach, extend. *'விண்பொரு புகழ்'* (புறநா. 11.) 6. பொருந்துதல்; to join, unite, combine. *'பொய்பொரு முடங்குகை'* (சிலப். 15, 50.) 7. பெருக்குதல்; (math.) to multiply. *'அவற்றைப் பொருளாதியாறினானும் பொர'* (நன். 269, மயிலை.) க. போர்

**பொரு³** *poru,* பெ. (n.) 1. உவமை simile (பிங்.) 2. ஒப்பு; equality. *'பொருவாகப் புக்கிருப்பார்'* (தேவா. 780, 11.) 3. எதிர்த்தடை; obstacle. *'ஆறுசமயங்கட் கொல்லாம் பொருவாகி நின்றானவன்'* (திவ். திருவாய். 9, 4, 8.)

**பொருக்க** *porukka,* விஎ adv. விரைவாக; speedily.

*[பொருக்கெனல் → பொருக்க]*

**பொருக்கற்றுப்போ—தல்** *porukkarru-p-pō-,* செ.கு.வி. (v.i.) நன்றாகவிந்து போதல்(வின்.); to be quite extinguished

*[பொருக்கு + அறு + போ]*

**பொருக்காங்கட்டி** *porukkān-katti,* பெ. (n.) 1. மண்ணாங்கட்டி; dried clod of earth. 2. அரத்தம் முதலியன உறைவதாலுண்டாம் கட்டி; clot.

*[பொருக்கு + கட்டி → பொருக்காங்கட்டி]*

**பொருக்கு¹** *porukku,* பெ. (n.) 1. பருக்கை; grain of boiled rice. *'காக்கைக்குச் சோற்றிலோர் பொருக்குங் கொடுக்க நேர்ந்திடா'* (அருட்பா. vi, ஆற்றாமை, 3, 1.) 2. சேறுமுதலியன உலரும் போது மேலே காய்ந்தெழும்பும் ஏடு; flake, skin, thin layer that peels off, scale. *'பூசுகந்தம் தனத்திற் பொரிந்தது.... பொருக்கெழும்பி'* (தனிப்பா.i, 381, 27.) 3. மரப்பட்டை; bark. *'வெள்ளி லோத்திரத்தின் பூம்பொருக் கரைத்த சாந்து'* (சீவக. 622.) 4. பொருக்கு மண் (யாழ்.அக.) பார்க்க; see *Porukku-man*

*[பல் → பரு → பருக்கு → பொருக்கு]*

**பொருக்கு²** *pōrukku,* பெ. (n.) பல்ஊத்தை; tartar. 2. சொறிசிரங்கு; crust

*[பல் → பரு → பருக்கு → பொருக்கு]*

**பொருக்குமண்** *porukku-man,* பெ. (n.) செதிளாய்ப் பேர்ந்த மண் (வின்.); flake which rises on parched ground.

*[ பொருக்கு + மண்]*

**பொருக்கெனல்** *porukkenal,* பெ. (n.) விரைவுக் குறிப்பு; onom. expr, signifying swiftness or quickness. *'பொருக்கென வீடணா புகறியாலென்றான்'* (கம்பரா. கும்பகர்ண. 112.)

*[பொருக்கு + எனல்]*

**பொருகளம்** *poru-kalam,* பெ. (n.) போர்க்களம் (சூடா); field of battle. *'பொருகளம் புகுந்தார்'* (கம்பரா. படைத். 67.)

*[ பொரு+களம்]*

**பொருகு** *porugu,* பெ. (n.) சோறு (திவா.); boiled rice

*[பொருக்கு → பொருகு]*

**பொருட்காட்சி** *poruṭ-kātchi,* பெ. (n.) பொருள்களின் கண்காட்சி; Exibaition.

*[பொருள் + காட்சி]*

**பொருட்குற்றம்** *poruṭ-k-kuṟṟam,* பெ. (n.) செய்யுளின் பொருளில் உண்டாம் பிழை (rhet.) impropriety or blemish in the meaning of a verse. *'சொற்குற்றமின்று வேறு பொருட் குற்ற மென்றான்'* (திருவிளை. தருமி. 103.)

*[பொருள் + குற்றம்]*

**பொருட்குன்று** *poruṭ-kuṉṟu,* பெ. (n.) பொன்(மேரு)மலை; mt. mēru, as of gold. *'அரும்பலியனைத்து மீயினதுபொருட் குன்று கண்டீர்'* (சீவக. 2926.)

*[பொருள் + குன்று]*

**பொருட்கை** *poruṭ-kai,* பெ. (n.) பாடற்பொருள் பொருந்தக் காட்டும் நளிநயக்கை (சிலப். 3, 18, உரை) (nāṭaya.); gesture revealing the meaning of a verse.

*[பொருள் + கை]*



**பொருட்சார்பு** *poruṭ-cārbu,* பெ. (n.) பொருளிடத்துற்ற ஆசை; attachment to wordlly things. *'உயிர்ச் சார்பு பொருட்சார்பிற் பற்றடங்கலும் விடுமாகில்'* (திருக்களிற்றுப். 39, உரை.)

*[பொருள் + சார்பு]*

**பொருட்சிதைவு** *poruṭ-cidaivu,* பெ. (n.)
1. சொத்து இழப்பு; injury, loss of property.
2. சொல் கால வேறுபாட்டாற் கருத்தில் மாறுகை(வின்.); change in the meaning of a word in course of time. (w.)
3. *பொருட்குற்றம்* பார்க்க; see *Porut-kuṟṟam*

*[பொருள் + சிதைவு]*

**பொருட்சிறப்பணி** *poruṭ-ciṟappaṇi,* பெ. (n.) *பொருளணி* பார்க்க; (யாழ்.அக.) (rhet.) a class of figure of speech relating to sense.

*[பொருள் + சிறப்பு + அணி]*

**பொருட்சுருக்கம்** *porul-curukkam,* பெ. (n.) கருத்துச்சுருக்கம்; synopsis.

*[பொருள் + சுருக்கம்]*

**பொருட்சுவை** *poruṭ-cuvai,* பெ. (n.) செய்யுட் பொருளின் சுவை (ரசம்) (யாழ்.அக.) beauty of ideas, as in a verse.

*[பொருள் + சுவை]*

**பொருட்செல்வம்** *poruṭ-celvam,* பெ. (n.) (திரவிய சம்பத்து) பொருளாகிய செல்வம்; meterial wealth. *'பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள'* (குறள், 241.)

*[பொருள் + செல்வம்]*

**பொருட்செல்வி** *poruṭ-celvi,* பெ. (n.) *பொருளின் செல்வி* (வின்.) பார்க்க; *poruḻiṉ-šelvi*

*[பொருள் + செல்வி]*

**பொருட்சேதம்** *poruṭ-cētam,* பெ. (n.) *பொருட்சிதைவு,* 1. (யாழ்.அக.) பார்க்க; see *Porut-šidavu*

*[பொருள் + சேதம்]*

**பொருட்டன்மை** *poruṭṭaṉmai,* பெ. (n.) பொருளின்கணுள்ள உருவ இயல்புகளை உள்ளவாறு புனைந்து கூறும் அணிவகை. (தண்டி. 28.); (rhet.) description of the form of any person or thing.

*[பொருள் + தன்மை]*

**பொருட்டால்** *poruṭṭāl,* வி.எ. adv. *பொருட்டு* பார்க்க; see *Poruṭṭu 'வென்றிப் பொருட்டால்... கன்றிக் கறுத் தெழுந்து'* (நாலடி, 315.)

*[பொருட்டு → பொருட்டால்]*

**பொருட்டிரிபு** *poruṭṭiribu,* பெ. (n.) ஒரு சொல்லில் அல்லது சொற்றொடரிலுள்ள பொருள் மாறுபாடு(வின்.); change in the meaning of words and expressions according to the manner in which they are read.

*[பொருள் + திரிபு]*

**பொருட்டு**[1] *poruṭṭu,* பெ. (n.) 1. காரணம் (பிங்.); cause. 2. மதிப்புக்குரியது; matter of importance, thing of weight. *'அது ஒரு பொருட்டில்லை'* –

**பொருட்டு**[2] *poruṭṭu,*(adv.) நிமித்தமாக; to, for the sake of, in order to, to the end that on account of, with, by, through. *'வேளாண்மை செய்தற் பொருட்டு'* (குறள், 81.)

**பொருட்டொடர் நிலைச் செய்யுள்** *poruṭṭoḍar-nilai-c-ceyyuḷ,* பெ. (n.) இலக்கியம் (சிலப். உரைப்பாயிரம்.) (rhet.) narrative or epic poem.

*[பொருள் + தொடர்நிலை + செய்யுள்]*

**பொருட்படு–தல்** *poruṭ-paḍu-,* செ.கு.வி. (v.i.) பயன்படுதல் (யாழ்.அக.); to be useful.

*[பொருள் + படு–தல்]*

**பொருட்படுத்து–தல்** *poruṭ-paḍuttu-,* செ.குன்றா.வி. (v.t.) மதித்தல்; to esteem, make important. *'நாய்மேற் றவிசிட்டு நன்றாய்ப் பொருட்படுத்த'* (திருவாச. 10, 20.)

*[பொருள் + படுத்து]*

**பொருட்பால்** *poruṭ-pāl,* பெ. (n.) முப்பால்களுள் பொருளைப்பற்றிக் கூறும் நூற்பகுதி (குறள்.); wealth, as a topic treated in works, like kuṟal, Nālaḍi, etc.,

*[பொருள் + பால்]*

**பொருட்டொடர்பு** *poruṭ-toḍarbu,* பெ. (n.) பொருளினியைபு(வின்.); fitness in regard to meaning or subject-matter

*[பொருள் + தொடர்பு]*

**பொருட்பிறிதின் கிழமை** *poruṭ-piṟidin-kiḻamai,* பெ. (n.) ஒரு பொருளுக்குத் தன்னினும் வேறானதனோடு உள்ள உரிமை (சங்.அக.); (gram.) separable relation of two different objects.

*[பொருள் + பிறிதின்கிழமை]*

**பொருட்பின்வருநிலை** *poruṭ-piṉ-varunilai,* பெ. (n.) முன்வந்த பொருளே பின்னும் பலவிடங்களில் வரும் அணி (தண்டி, 41, உரை.) (rhet.) repeating the same idea in different forms of expression.

*[பொருள் + பின்வருநிலை]*

**பொருட்பெண்டிர்** *poruṭ-peṇḍir,* பெ. (n.) விலைமாதர்; harlots. *'பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்'* (குறள், 913.)

*[பொருள் + பெண்டிர்]*

**பொருட்பெயர்** *poruṭ-peyer,* பெ. (n.) 1. பொருளடியாகப் பிறந்த பெயர்ச் சொல்; (நன். 132.); noun derived from the name of a concreate object. 2. ஒரு பொருளுக்கு உரியபெயர்; name of a thing.

*[பொருள் + பெயர்]*

**பொருட்பெற்றி** *poruṭ-peṟṟi,* பெ. (n.) மெய்ம்மை (குறள்.34.அதி.அவதா.); essential or underlying truth, reality.

*[பொருள் + பெற்றி]*

**பொருண் மயக்கம்** *poruṇ-mayakkam,* பெ. (n.) தன் பொருளிற் றீராது பிறி தொன்றன் பொருளின் கண்ணும் உருபு வருகை use of a particular case ending appropriate to the sense intended, though different from the proper grammatical case ending. (பி.வி. 15, உரை) (gram.)

*[பொருள் + மயக்கம்]*

**பொருண்மன்னன்** *poruṇ-maṉṉan,* பெ. (n.) செல்வக்கிழவன் (குபேரன்); kubēra, as king of wealth. *'பொருண் மன்னனைப் பற்றிப் புட்பகங் கொண்ட மருண் மன்னனை யெற்றி'* (தேவா. 748, 11.)

*[பொருள் + மன்னன்]*

**பொருண்முடிவு** *poruṇ-mudivu,* பெ. (n.) 1. செய்தி முடிவு; termination of a topic. 2. முடிந்த கருத்து; substance of a discourse. 3. பயனிலை(வின்.); predicatcm, as completing the sense. 4. பொருள் முற்றிய சொற்றொடர்(வின்.); complete sentence.

*[ பொருள் + முடிவு ]*

**பொருண்முரணணி** *poruṇ-muraṇ-aṇi,* பெ. (n.) பொருள் முரண்படத் தொடுக்கும் அணிவகை (யாழ்.அக.); antithesis.

*[ பொருள் + முரணணி ]*

**பொருண்மை** *poruṇmai,* பெ. (n.) **1.** கருத்துப் பொருள்; meaning, purport or subject-matter of a work. *'போதயோகின் பொருண்மையைக் காட்டுழி'* (கந்தபு. மேருப். 66.) 2. *பொருணிலை,*1 (தொல். சொல். 236, சேனா) பார்க்க; *porunilai,*

*[ பொருள் + மை ]*

**பொருண்மொழி** *poruṇ-moḻi,* பெ. (n.) **1.** மெய்யுரை சொல்; truthful utterance. *'பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன் மின்'* (சிலப், 30, 192) **2.** உச்சரிப்பு மந்திரம்; (சிலப். 10, 100, அரும்.) mantra, incantation.

*[ பொருள் + மொழி ]*

**பொருண் மொழிக்காஞ்சி** *poruṇ-moḻi-k-kāñji,* பெ. (n.) **1.** உயிர்க்கு இம்மை மறுமைகளில் உறுதி தரும் பொருளை ஒருவனுக்குக் கூறுதல் பற்றிய புறத்துறை (புறநா. 24, துறைவிளக்கம்.); theme describing the principle of conduct that ensure happiness in this life and the life to come. **2.** முனிவர் தாம் தெளிந்த மெய்ப்பொருளை விரும்பிக் கூறுதல் பற்றிய புறத்துறை (பு.வெ.10,காஞ்சிப்.)3; theme of sages describing the basic truths of their experience.

*[ பொருண்மொழி + காஞ்சி ]*

**பொருணயம்** *poruṇayam,* பெ. (n.) நூலின் கருத்து நயம்; excellence of ideas in a work. opp. to coṉṉayam

*[ பொருள் + நயம் ]*

**பொருணான்கு** *poruṇāṉgu,* பெ. (n.) அறம், பொருள், இன்பம், வீடு என நால்வகைப்பட்ட உறுதிப்பொருள்; Objective worthy of human pursuit foru in number viz aṟam, poruḷ, inbam viḍu

**பொருணி** *poruṇi,* பெ. (n.) கள்(வின்.); toddy, fermented liquor

*[ புளிநீர் → புளிநி → பொளிநி → பொருணி ]*

**பொருணிலை** *porunilai,* பெ. (n.) **1.** பொருளின் றன்மை; quality, nature. *'எதிர் மறுத்து மொழியினும் பொருணிலை திரியா'* (தொல். சொல். 107.) **2.** *பொருண் முடிவு,* **3.** (யாழ்.அக.) பார்க்க; see *poruṇ-mudivu*

*[ பொருள் + நிலை ]*

**பொருணூல்** *poruṇūl,* பெ. (n.) **1.** அகப் பொருளைப் பற்றிய நூல்; treatise on the characteristies of love poetry. *'ஓங்கிய பொருணூ லன்பி னைந்திணையென் றெடுத்த'* (திருவாலவா. 15, 12) **2.** பொருளியல்; (பெருங். உஞ்சைக். 34, 91) economics. *'பொருணூலாயும் புலவோர்'*

*[ பொருள் + நூல் ]*

**பொருத்தக்கடுதாசி** *porutta-k-kaḍutāśi,* பெ. (n.) திருமணம் முதலிய செய்திகள் குறித்த ஒப்பந்த முறி(வின்.); written contract, as in a marrigage.

*[ பொருத்தம் + கடுதாசி ]*

*[ கடிதம் → கடிதத்தாள் → கடிதாசி ]*

**பொருத்தச்சக்கரம்** *porutta-c-cakkaram,* பெ. (n.) மணமக்களின் விண்மீன் பொருத்தம் பார்க்கும் சக்கரம்(வின்.); diagram to ascertain the agreement between the naksatras of the bride and bridegroom.

*[ பொருத்தம் + சக்கரம் ]*




**பொருத்தச்சீட்டு** *porutta-c-ciṭṭu,* பெ. (n.) *பொருத்தக் கடுதாசி*(வின்.) பார்க்க; see porutta kadutaši.

*[ பொருத்தம் + சீட்டு ]*

**பொருத்தச்சுவடி** *porutta-c-cuvaḍi,* பெ. (n.) தச்சநூல் (நாஞ்.); treatise on carpentry

*[ பொருத்தம் + சுவடி ]*

**பொருத்தம்** *poruttam,* பெ. (n.) **1.** பொருந்துகை; fitting, adaptation. **2.** தகுதி; propriety. *'பொய் முகங் காட்டிக் கரத்தல் பொருத்தமன்று'* (திருக்கோ.**356**) **3.** இணக்கம்; harmony, concord. அவனுக்குமிவனுக்கும் எப்போதும் பொருத்தமிலைலை. **4.** உடன்படிக்கை(வின்.); agrement, contract **5.** மணமக்களின் பொருத்தவிணக்கம்(வின்.); favourableness or agreement of heroscopes of the two parties to the married. **6.** மனநிறைவு (வின்.); satisfaction **7.** சரிபார்க்கை; verifying. **8.** நோயைத் தடுக்க நஞ்சினைத் தோலுட் செலுத்துகை; innoculation.

*[ பொருந்து → பொருத்தம் ]*

**பொருத்தம் பார்–த்தல்** *poruttam-pār,* செ.குன்றா.வி. (v.t.) மணமகன் மணமகளின் திருமணப் பொருத்தம் பார்த்தல்; to examine the agreement of horoscopes of a bride and bridegroom.

*[ பொருத்தம் + பார் –,]*

**பொருத்தனை[2]** *poruttaṉai,* பெ. (n.) *பொருத்தம்* **1.**(யாழ்.அக) பார்க்க; see *poruttam[1]*

*[ பொருத்தம் → பொருத்தனை ]*

**பொருத்தினை** *poruttiṉai,* பெ. (n.) *பொருத்தனை[1]* (யாழ்.அக) பார்க்க; see *poruttaṉai*

*[ பொருத்தனை → பொருத்தனை ]*

**பொருத்து[1]–தல்** *poruttu,* செ.குன்றா.வி. (v.t.) **1.** பொருந்தச்செய்தல்; to fit, adapt. *'சந்துகள் புல்லறப் பொருத்துவ தொன்று'* (கம்பரா. மருத்துமலை. **90**) **2.** உடன்படுத்துல்; to induce consent. *'பொருடரும்படி யின்று பொருத்தி'* (அரிச். பு. வஞ்ச. **8**) **3.** கூட்டுதல்; to cause to agree, to reconcile. *'பிரிந்தார் பொருத்தலும் வல்ல தமைச்சு'* (குறள், **633.**) **4.** வேலைக்கமர்த்துதல்(வின்.); to engage for labour. **5.** அமையச் செய்தல்(வின்.); to brig over, as to a party or an opinion. **6.** இரு பொருள்களை இசைத்தல்;(பிங்.) to join together, knit, unite. **7.** விளக்கேற்றுதல்; to kindle. **8.** போர் மூட்டுதல்; to stir up, as to a fight. *'வாரணம் பொருத்து வாரும்'* (கம்பரா. நாட்டுப். **16.**)

*[ பொருந்து → பொருத்து ]*

**பொருத்து[2]** *poruttu,* பெ. (n.) 1. இணைப்பு(வின்.); joining junction. 2. உடல் மூட்டு; joint, suture of bones in the body. *'பொருத்தெலாங் கட்டு விட்டு'* (பணவிடு. 298.) 3. மரத்தின் இணைப்பு; joining, in carpentry. 4. மரக்கணு; knot of a plant. 5. ஒன்று சேர்க்கை; uniting. *'பொருத்துறு பொரு ளுண்டாமோ'* (கம்பரா. கும்பகர்ண. 157) 6. ஒப்பந்தம்(வின்.); agreement 7. கன்னப்பொட்டு; temple of the head.

*[ பொருந்து → பொருத்து ]*

**பொருத்துவிடு–தல்** *poruttu-vidu,* செ.கு.வி. (v.i.) 1. உடன் மூட்டுப் பிசகுதல்; to be dislocated, disjoined. 2. இணக்கமறுதல்; to become separate.

*[ பொருத்து + விடு–தல் ]*

**பொருத்துவேலை** *poruttu-vēlai,* பெ. (n.) மரத்தின் இணைப்பு வேலை(வின்.); joinery

*[ பொருத்து + வேலை ]*

**பொருத்தோலை** *poruttōlai,* பெ. (n.) 1. *பொருத்தக் கடுதாசி* (யாழ்.அக.) பார்க்க; 2. கூரைமோடு பொருத்திக் கட்டும் ஓலை(நாஞ்.); plaited palm leaves over the ridge of a roof.

*[ பொருத்து + ஓலை ]*



**பொருதல்** *porudal,* பெ. (n.) 1. போர்; war, (சூடா) fight. 2. தும்பை; (மலை.) white dead nettle

*[பொரு → பொருதல்]*

**பொருதவை–த்தல்** *poruda-vai,* செ.குன்றா. வி. (v.t.) பற்றவைத்தல்(வின்.); to engraft, to solder, to join (w.)

*[பொருத + வை–]*

**பொருது[1]–தல்** *porudu,* செ.கு.வி. (v.i.) 1. ஒன்றுதல்; (யாழ்.அக.) to be joined, combined. united with. 2. போர் செய்தல்; to fight, contend.

*[புல் → பொல் → பொர் → பொரு.]*

**பொருது[2]–தல்** *porudu,* செ.குன்றா.வி (v.t.) இணைத்தல் (சங்.அக.); to join together, unite.

*[பொரு → பொருது]*

**பொருந்(நு)–தல்** *porun-,*செ.கு.வி. (v.i.) 1. பொருந்துதல் (நன்.137); to be suitable. 2. உடன்படுதல் (வின்.); to agree consent.

*[பொருந்து → பொருந்]*

**பொருந்தநதி** *porunda-nadi,* பெ. (n.) அமராவதியாறு; (யாழ்.அக.) the river Amrāvadi

*[பொருந்தம் + நதி]*

*( skt.madi → த. நதி)*

**பொருந்தம்** *porundam,* பெ. (n.) *பொருநை* (பிங்.) பார்க்க; see *porunai*

*[பொருந்து → பொருந்தம்]*

**பொருந்தர்** *poruntar,* பெ. (n.) **1.** நெய்வோர் (வின்.); weavers, as joining threads (w.). **2.** கூடை முதலியன முடைவோர் (சூடா.); makers of mats and baskets.

*[ பொருத்தர் → பொருந்தர் ]*

**பொருந்தலன்** *porundalan,* பெ. (n.) பகைவன்; foe, enemy. *'பொருந்தலனாகம் புள்ளுவந் தேற'* (திவ். பெரியதி. **10, 9, 8)**

*[ பொருந்து + அல் + அன் ]*

*'அல்' எ.ம.இ.*

**பொருந்தவிடு–தல்** *porunda-vidu-,* செ.குன்றா.வி (v.t.) இணக்குவித்தல்; to reconcile. *'இரண்டு தலைக்கும் உறவாய்ப் பொருந்தவிடச் சென்று'* (ஈடு. **4, 6, 1.)**

*[ பொருந்து + விடு ]*

**பொருந்தாக்காமம்** *porundā-k-kāmam,* பெ. (n.) *பொருந்திணை* பார்க்க; see *peruntiṇai.* (நம்பியகப். **5.)**

*[ பொருந்து + ஆ + காமம் ]*

*'ஆ' எ.ம.இ.*

**பொருந்தாமை** *porundāmai,* பெ. (n.) **1.** இணக்கமின்மை; disagreement, incongruity. **2.** வெறுப்பு (யாழ்.அக.); hartred, disgust

*[ பொருந்து + ஆ + மை ]*

*'ஆ' எ.ம.இ.*

**பொருந்தார்** *porundār,* பெ. (n.) பகைவர்; enemies. *'பொருந்தார் கைவேல் நுதிபோல் பரல்பாய'* (திவ்.பெருமாள். **9, 5.)**

*[ பொருந்து + ஆ + ர் ]*

**'ஆ' எ.ம.இ. புணர்ந்து கெட்டது.**

**'ர்' ப.பா. ஈறு.**

**பொருந்திக்கொடு–தல்** *porundi-k-koḍu.,* செ.குன்றா. வி. (v.t.) ஒப்பந்தத்தின் மேல் வேலை யிடுதல்(வின்.); to give a work on contract.

*[ பொருந்தி + கொடு ]*

**பொருந்திவாங்கு–தல்** *porundi-vāṅgu-,* செ.குன்றா.வி. (v.t.) மனமிசைந்து விலைக்கு வாங்குதல்(வின்.); to purchase after having agreed about the price.

*[ பொருந்து → வாங்கு–, ]*

**பொருந்திவிடு–தல்** *porundi-viḍu,* செ.கு.வி. (v.i.) **1.** ஒடிந்த எலும்பு முதலியன கூடுதல்; to join, as broken bones. **2.** ஒப்பந்தமாதல்; to be stipulated.

*[ பொருந்தி + விடு ]*

**பொருந்து[1]–தல்** *porundu-,* செ.கு.வி. (v.i.) **1.** மனம் இசைவாதல்; to agree, consent. *'கொணர் குவா யெனப் பொருந்தினன்'* (கம்பரா. மருத்து. **85.) 2.** தகுதியாதல்; to be suitable, proper. **3.** அமைதல்; to abide. *'அறநெறி பொருந்த'* (கம்பரா. விபீடண. **43) 4.** உடன்படுதல்; to make a contract, an agreement. **5.** நெருங்குதல்; to come into close. *'பொருந்தவந் துற்ற போரில்'* (கம்பரா. கும்பகருண. **13) 6.** நிகழ்வித்தல்; to occur happen. *'புண்ணியம் பொருந்திற்று'* (கம்பரா. கும்பகருண. **131) 7.** நிறைவேறுதல்; to be constituted, made. *'பூதமைந்தினும் பொருந்திய வுருவினாற் புரளான்'* (கம்பரா. இரணிய. **18.)**

*க.பொருது*

**பொருந்து[2]–தல்** *porundu,* செ.குன்றா.வி. (v.t.) **1.** கலத்தல்; to combine with. *'பண்பொருந்த விசைபாடும்'* (தேவா. 268, 5) **2.** அடைதல்; to reach. *'வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்'* (புறநா. 10) **3.** அளவளாவுதல்; to associate cordially. *'மணிமேகலை... பொருந்தின ளென்னும் பான்மைக் கட்டுரை'* (மணிமே. 23,46.)

*[பொரு → பொருந்து–தல்]*

**பொருந்துமாறு** *porundum-āṟu,* பெ. (n.) பகுத்தறிவு உத்தி (அல்லது) கோட்பாடு; ratiocination. *'பொருந்து மாற்றானும் புலாலுண்டல் இழிந்ததென்பது'* (குறள், 257, உரை)

*[பொருந்து + ஆறு]*

**பொருநராற்றுப்படை** *porunar-āṟṟu-p-paḍai,* பெ. (n.) சோழன் கரிகாற் பெருவளத்தானை முடத்தாமக் கண்ணியார் பாடியதும் பத்துப் பாட்டினுள் ஒன்றுமான ஆற்றுப்படைநூல்; a poem an cōlaṉ karikāṟ-peruvaḷattāṉ in pattu-p-pāṭṭu by muḍa-t-tāma-k-kaṇṇiyār.

*[பொருநர் + ஆற்றுப்படை]*

**பொருநல்** *porunal,* பெ. (n.) பொருநையாறு; the river porunai, *'பொருநல் வடகரை வள்டொலை வில்லி மங்கலம்'* (திவ். திருவாய். 6, 5, 8)

*[பொருநை → பொருநல்]*

**பொருநன்[1]** *porunaṉ,* பெ. (n.) **1.** வீரன்; warrior, hero. *'பாலறிமரபிற் பொருநர் கண்ணும்'* (தொல். பொருள். 74) **2.** திண்ணியன்; strong, robust, valiant man. **3.** அரசன்; king. *'அறந்துஞ் சுறந்தைப் பொருநனை'* (புறநா. 58.) **4.** குறிஞ்சி நிலத்தலைவன்(பிங்.); chief of a hilly tract **5.** படைத்தலைவன்; commander of an army, general. (பிங்) **6.** உவமிக்கப்படுவோன்; one who is the standard of comparison. *'போர்மிகு பொருந'* (திருமுரு.276.) **7.** தலைவன் (பிங்.); leader **8.** பகைவன்; foe, enemy. *'பொருநரைப் பொறா.... பஞ்சவ ரோறே'* (புறநா. 58.)

*[பொரு → பொருநன்]*

**பொருநன்[2]** *porunan,* பெ. (n.) **1.** ஏர்க்களத் தேனும் போர்க்களத்தேனும் சென்றுபாடும் கூத்தன்; (தொல். பொ. 91. உரை) one who dances and sings on the battle field and on the threshing-floor. **2.** கூத்தன்; actor, dancer. *'பண்ணிமை யடைத்த பலகட் பொருநர் பாடல்'* (கம்பரா. ஊர். 162.)

*[பொரு → பொருநன்]*

**பொருநாறு** *porunāṟu,* பெ. (n.) *பொருநராற்றுப் படை* பார்க்க; see *porunar-āṟṟu-p-padai* *'முருகு பொருநாறு பாணிரண்டு'* (பத்துப் பாட்டு, தனிப்பா.)

*[பொருநர் + ஆறு → பொருநன்]*

*[பொருநராறு → பொருநாறு]*

**பொருநை** *porunai,* பெ. (n.) **1.** தாமிரபரணி; the river tāmiraparani. "குமரி பொன்னி வகை பொருநை நல்லாறு" (குமர. பிர. மீனா. பிள். 11) **2.** *ஆன் பொருநை* (திவா) பார்க்க; see *āṉporunai.* a river in the cera country. (திவா.)

*[பொரு → பொருநை]*

**பொருநைத்துறைவன்** *porunai-t-turaivaṉ,* பெ. (n.) **1.** சேரன் (பிங்.); cēra king, as lord of the Aṉ porunai river. **2.** பாண்டியன்; pandya king, as lord of the Tāmiraparaṇi river. *'பொருநைத் துறைவன் பொற்பாவாய் புது நீராடி யருளுகவே'* (குமர. பிர. மீனா. பிள். **88.**)

*[பொருநை + துறைவன்]*

**பொருப்பரையன்** *porupparìyaṉ,* பெ. (n.) பனி (இமய) மலை; the himālayas, as king of hills. *'பொருப்பரையன் மடப்பாவை'* (நந்திக். பாயி.)

*[பொருப்பு + அரையன்]*

**பொருப்பன்** *poruppaṉ,* பெ. (n.) **1.** குறிஞ்சி நிலத்தலைவன்; chief of a hilly tract. **2.** குறிஞ்சி நிலவேடன்; hunder of the hills. *'வேலுடைப் பொருப்பாங்குணர்வுற'* (கந்தபு. கடவுள்வா.**12**) **3.** பாண்டியன்(கலித்.**36**); (பொதியமலைக் குரியவன்) pandya king, as lord of podiyam **4.** மலைக்குரியவன்; lord of a hill. *'பொருப்பனைப் புனலாளொடு புன்சடை அருப்பனை'* (தேவா. **781, 9**) **5.** பனிமலை (இமயமலை); the Himalayas. பொருப்பன் மங்கைபங்கனை (தேவா. **1188, 6**)

*[பொருப்பு → பொருப்பன்]*

**பொருப்பு** *poruppu,* பெ. (n.) **1.** மலை; mountain. *'வரைத்தா ளருவிப் பொருப்பின்'* (மதுரைக். **42.**) **2.** பக்கமலை; spur of a range of hills. *'சாரற் பொருப்பிடத்தே'* (திருக்கோ. **293.**)

*[பல் → பரு → பொரு → பொருப்பு]*

**பொருப்பெறிந்தான்** *porupperindāṉ,* பெ. (n.) முருகக் கடவுள் (உரி.நி.); skanda, as one who pierced the kraun̄ca hill with his spear.

*[பொருப்பு + எறிந்தான்]*

**பொருபுவி** *poru-puvi,* பெ. (n.) **1.** போர்க்களம்; battle-field **2.** பாலை நிலம்; desert tract.

*[பொரு +* skt. lhuvi. *த. புவி.]*

**பொரு பொரு—த்தல்** *poru-poru-,* செ.கு.வி. (v.i.) **1.** அறத்தீய்தல்; to be liable to crumbling from too much frying. **2.** முணுமுணுத்தல்: to mutter in dissatisfaction.

*[பொருபொரெனல் → பொருபொரு]*

**பொருபொருப்பான்** *poruporuppāṉ,* பெ. (n.) மரவகை (யாழ்.அக.); a kind of tree.

**பொருபொரெனல்** *poru-poreṉal,* பெ. (n.) **1.** தீய்த்தற்குறிப்பு; crumbling. **2.** முணுமுணுத் தற்குறிப்பு; muttering.

*[பொருபொரு + எனல்]*

**பொரும்பி** *porumbi,* பெ. (n.) ஆவிரை வகை (மலை); a kind of senna.

**பொரும்பிலா வேர்** *porumbilāvēr,* பெ. (n.) **1.** மலை வேர்; a hill-plant. **2.** வட்டத் திருப்பி; rattle wort.

**பொருமல்** *porumal,* பெ. (n.) **1.** அச்சம்; fear. *'பொச்சையர் கடனனி பொருமல் கொள்வதே'* (கந்தபு. தருமகோ. **19.**) **2.** துன்பம்; trouble. *'போயதெம் பொரும லென்னா'* (கம்பரா. திருவவ. **25**) **3.** அழாது விம்முகை; sobbing. ''உயிர் போக்கிப் போக்கி யுழக்கும் பொருமலான்'' (கம்பரா. மீட்சி. **208**)

4. வயிற்றுப் பொருமல் (பதார்த்த. 1358); flatulence, wind in the stomach. 5. பூரிப்பு; plumpness *'புந்தி யோங்கு மூவகைப் பொருமலோ'* (கம்பரா. மீட்சி. 22.) 6. பொறாமை; jealousy. அவன் பேரில் அவனுக்குப் பொருமல் அதிகம்.

*[பொருமு → பொருமல்]*

**பொருமல்²** *porumal,* பெ. (n.) பொருமை யின்மை; impatience."பொருமலை நானெங்கே யுடக்குவேன்"(தெய்வச். விறலிவிடு.239)

*[பொருமு → பொருமல்]*

*'இ' பெ.பா. ஈறு.*

**பொருமலி** *porumali,* பெ. (n.) தடித்தவள்; fat woman

*[பொருமல் → பொருமலி]*

**பொருமிநாதம்** *porumi-nādam,* பெ. (n.) பூரம் (சங்.அக.); calomel.

**பொருமு-தல்** *porumu,* செ.கு.வி. (v.i.) 1. துன்புறுதல்; to be distressed. *'பூசலுண்டாமெனப் பொருமா'* (கம்பரா. காட்சி. 18) 2. விம்மியழுதல்; to choke with crying, sob. *'போர்வலான் றடுப்பவும் பொருமி விம்மி னான்'* (கம்பரா. தைலமாட்டு. 41) 3. உப்புதல்; to be bloated, as the body from wind or disease. 4. பூரித்தல்; to be puffed up, as from elation. *'பேருவகை மீக்கொண்டு பொருமினான்'* (உபதேசகா. விபூதி. 100.) 5. ஈரித்துப் பருத்தல்; to swell, to become soaked, as tile, new pot or sponge 6. பொறாமைப்படுதல்; to be jealous, envious.

*[பொரு → பொருமு]*

**பொருமுகவெழினி** *poru-mugu-v-elini,* பெ. (n.) அரங்கின் இரண்டு வலத்தூணிடத்தும் பொருந்திய உருவுதிரை (சிலப். 3, 109); curtain between the pillars to the right of the stage.

*[பொரு + முகம் + எழினி]*

**பொருவ** *poruva,* பெ. (n.) இடை. part. ஓர் உவமைச் சொல் (தொல். பொ. 289); a term of comparison.

*[பொருவு → பொருவ]*

**பொருவாய்** *poruvāy,* பெ. (n.) கடல் மீன் வகை(வின்.); anchovy, blackish.

**பொருவாய்க் கற்றலை** *poruvāy-k-karralai,* பெ. (n.) *ஆனைவாயன் கற்றலை* பார்க்க; see *anaivāyan-karralai* a sea-fish.

*[பொருவாய் + கற்றலை]*



**பொருவிலி** *poruvili,* பெ. (n.) 1. ஒப்பிலி; one without equal. 2. சிவபிரான் (சங்.அக.); siva.

*[பொருவு + இல்+இ]*

*'இ' ஒ. ஈறு*

**பொருவு[1]–தல்** *poruvu,* செ.குன்றா.வி. (v.t.) 1. ஒத்தல்; to equal, compare. *'உன்னைப் பொருவு முனிவோர்'* (கந்தபு. திருக்கல். 55) 2. உராய்தல்; to rub. *'விற்கொணான் பொருவுதோள்'* (கம்பரா. நிந்தனை. 52)

**பொருவு[1]–தல்** *poruvu,* செ.கு.வி. (v.i.) 1. நேர்தல்; to happen. *'போன்றன வினய தன்மை பொருவியது'* (கம்பரா. இரணிய. 152)

*[பொரு → பொருவு]*

**பொருவு[3]** *poruvu,* பெ. (n.) ஒப்பு; resemblance, comparison. *'பொருவற்றா ளென்மகள்'* (திவ். திருநெடுந். 19.)

*[பொரு → பொருவு]*

**பொருவுசாரம்** *poruvu-šāram,* பெ. (n.) பொறாமை (இ.வ.); envy, jealousy.

*[பொருமு + விசாரம்]*

*[பொருவிசாரம் → பொருவுசாரம்]*

*Skt. Vicāra → த. விசாரம்*

**பொருள்** *poruḷ,* பெ. (n.) 1. பருப்பொருள்; material substance, entity. "விளங்கிய பொருள்க டம்மைப் பொய்வகை யின்றித் தேறல்" (சீவக. 1436) 2. சொற்பொருள்(சூடா.); meaning, as of a word. 3. செய்தி; matter. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் (குறள், 423) 4. உண்மைக்கருத்து; true object. வேதங் கண்ணிய பொருளெலாம் (கம்பரா. இரணிய. 1) 5. செயல்; object, affair. "ஒருபொருள் சொல்லுவ துடையேன்" (கலித். 8) 6. மெய்ம்மைநெறி; essential principle, நவையறு நன்பொரு ளுரைமினோ (மணிமே. பதி, 87) 7. மெய்ம்மை; reality. *'பொருள்சேர் புகழ்புரிந்தார்'* (குறள், 5) 8. நன்கு மதிக்கப்படுவது; that which is important or moment. *'பொருளே மன்ற பொருளே'* (குறுந். 174) 9. கல்வி; learning. 10. அறிவு knowledge; ' (பெரியபு. நமிநந். 10.) policy, belief. *பொய்யு மெய்யுமா மென்னும் பொருண் மேற் கொள்ளும் புரை நெறியார்'* 11. அறம்; virtue. *'துறத்தல் பொருளாமோ'* (சீவக. 2960) 12. பயன்; reselt. *'மெய்ப் பொருள் காண்ப தறிவு'* (குறள், 423) 13. வீடுபேறு; final bliss. *'புகலூர் புகழப் பொருளாகுமே'* (தேவா.640,8) 14. இறைவன்; god. *'பொருளு மான்மாவுங் காட்டி'* (குமர. பிர.கந்தர்கலி. 27) 15. செல்வம்; wealth. *'பெரும் பொருள் வைத்தீர் வழங்குமின்'* (நாலடி. 6.) 16. பலபண்டம்(சூடா); provision, stores. 17. பொன்; (சூடா) gold. 18. மகன்; (பிங்) son. *'தாரகனைப் பொருது பொன்று வித்தபொருளினை முன்படைத்து கந்த புனிதன்'* (தேவா. 622, 9) 19. சுணங்கு; beauty-spot, as on woman's breast. *'போகமும் பொருளுமீன்றபுணர்முலைத் தடங்கள்'* (சீவக. 460) 20. உவமேயம்; the thing compared in a simile. *'பொருளே யுவமஞ் செய்தனர் மொழியினும்'* (தொல். பொ. 284.) 21. *உறுதி*,4 பார்க்க; see *uṟudi* *'அறம் பொருளின்பம் வீடென்னும் நான்கு பொருளினும்'* (திருக்கோ. 1, 2000) 22. மறுதலைப் பொருளுணர்வு; deduction or conclusion from premises given, inference from circumstances. *'அபாவம் பொருளொப்பு'* (சி.சி. அளைவ, 1, மறைஞா) 23. அகமும் புறமுமாகிய திணைப்பொருள்; affairs of life, as topics of poetry, in two classes, viz., agam, puṟam. 24. பொருளாட்சி; science of political economy. *'ஞாலத் தறம் பொருள் கண்டார்க ணில்'* (குறள். 141) 25. தலைமை (யாழ்.அக.); headship, leadership. 26. கொள்கை; doctrine. பொய்யு மெய்யுமா

மென்னும் பொருண்மேற்கொள்ளும் புரை நெறியார். (பெரியபு. நமிநந். 10) 27. தந்திரம்; stratagem, device. 'விரிக்க முயல்வார் புணர்ந்த பொருளாமிது' (கம்பரா. சடாயு.155)

*க. பொருளு. ம.பொருள். து.பொருலு.*

*[புல் → பொல் → (பொர்) → பொருள்]*

**பொருள்கோள்** *porul-kōl*, பெ. (n.) 1. ஆற்று நீர் மொழி மாற்று நிரனிறை, விற்பூட்டு தாப்பிசை அளைமறிபாப்பு, கொண்டுகூட்டு அடிமறிமாற்று என எண் வகையாகச் செய்யுட்குப் பொருள் கொள்ளும் முறை; modes of construing verses, of which there are eight, viz., yāṟṟu-nīr, moḻi-māṟṟu, niraniṟai, viṟ-pūṭṭu, tāppišai, aḷai-maṟi-pāppu, kondu-kuṭṭu, aḍimaṟi-māṟṟu. 2. ஒருவகைத் திருமண முறை; a kind of marriage.

*[பொருள் + கோள்]*

**பொருள்செய்[1]–தல்** *poruḷ-šey*, செ.குன்றா.வி. (v.t.) 1. மதித்தல்; to treat with regard, esteem highly. நான் உன்னைப் பொருள் செய்வேன்

**பொருள்செய்[2]–தல்** *poruḷ-šey*, செ.குன்றா.வி. (v.i.)செல்வந் தேடுதல்; to acquire wealth. *'பொருள் செய்வார்க்கு மஃதிடம்'* (சீவக. 77)

*[பொருள் + செய்]*

**பொருள்செய்வோர்** *porul-ceyvōr*, பெ. (n.) வணிகர் (உரி.நி.); vaisyas, as merchants.

*[பொருள் + செய்வோர்]*

**பொருள்புரிநூல்** *poruḷ-puri-nūl*, பெ. (n.) பொருள் நூல்; Treatise on Polity (பெருங். உஞ்சைக்.32,1.)

*[பொருள் + புரி+ நூல்]*

**பொருள்வகை** *poruḷ-vagai*, பெ. (n.) *பொருள்கோள்* (நம்பியகப். 211.) பார்க்க; see *poruḷ-kōḷ*

*[பொருள் + வகை]*

**பொருள்வயிற்பிரிவு** *poruḷ-vayir-pirivu*, பெ. (n.) பொருள்தேடற் காரணம் பற்றித் தலைவியைத் தலைவன் பிரிகை (திருக்கோ. 332, அவ); separation of a lover from his beloved, in pursuit of wealth.

*[பொருள் + வயின் + பிரிவு]*

**பொருள்வழு** *porul-vaḻu*, பெ. (n.) செய்யுட் குற்றங்ககளு ளொன்று (யாப். வி. 525); a defect in versification.

*[பொருள் + வழு]*

**பொருள்விலையாட்டி** *porul-vilaiyātti*, பெ. (n.) விலைமாது; prostitute. *'வருணக்காப்பிலள் பொருள் விலையாட்டி யென்று'* (மணிமே. 5, 87.)

*[பொருள் + விலையாட்டி]*

**பொருள்விளங்கவைத்தல்** *poruḷ-viḷaṅga-vaittal*, பெ. (n.) பொருள் எளிதில் விளங்கு மாறு செய்யுள் முதலியவற்றை அமைக்கை(வின்.); perspicuity, charity of expression

*[பொருள் + விளங்கவைத்தல்]*

**பொருள்வீடு** *poru!-vidu,* பெ. (n.) பொருளிற் பற்றறுகை (யாழ்.அக.); non-attachment to worldly goods.

*[பொருள் + வீடு]*

**பொருளகராதி** *poru!-agarādi,* பெ. (n.) சதுரகராதியில் ஒருபொருட் பல்பெயர் கூறும் பகுதி (வின்.); dictionary of synonyous words, one of the four sections of cadur-agarādi

*[பொருள் + அகராதி]*

**பொருளட்டவணை** *poru!-aṭṭavaṇai,* பெ. (n.) நூல் முதலியவற்றின் உள்ளடக்கச் செய்திக் குறிப்பு; table of contents.

*[பொருள் + அட்டவணை]*

**பொருளடக்கம்** *porul-atakkam,* பெ. (n.) *பொருளட்டவணை* பார்க்க; see *poru!-aṭṭavaṇai*

*[பொருள் + அடக்கம்]*

**பொருளணி** *poru!-aṇi,* பெ. (n.) பொருளமைவு பேச்சுத்திறன்; a class of figure of speech relating to sense, opp. to col-l-ani. *'பொருளணியியல்'* (தண்டி)

*[ பொருள் + அணி ]*

**பொருளதிகாரம்** *poru!-adigāram,* பெ. (n.) **1.** அகப்பொருளிலக்கண நூல்; treatise on agapporu!. அரசன் பொருளதிகார மின்மையிற் கவல்கின்றான், (இறை. **1,** உரை) **2.** அகம் புறம் முதலியவற்றைக் கூறும் தொல்காப்பியத்தின் மூன்றாம் பகுதி; the third division of Tolkāppiyam, treating of agam, puṟam, etc. **3.** அறிவார்ந்த செய்திகளை யெல்லாம் விரித்துப் பொருணான்கினையும் கூறும் நூற்பகுதி(வின்.); that part of ethics which treats of porunāṉgu, embracing all kinds of knowledge and practice

*[ பொருள் + அதிகாரம் ]*

**பொருளந்தாதி** *poru!-andādi,* பெ. (n.) *பொருளிசையந்தாதி* பார்க்க. see *poru!-išai-andādi.*

*[ பொருள் +SKt. anta + ādi. த. அந்தாதி ]*

**பொருளற்றபேச்சு** *porul-artapeccu,* பெ. (n.) கொச்சைப்பேச்சு; meaningless talk.

*[ பொருள் + அற்ற + பேச்சு ]*

**பொருளறை** *poru!-aṟai,* பெ. (n.) கருவூல அறை; treasury. ***"பெரும் பொருளறையுட்பட்ட ஆணிப்பொன்"*** (திருவாலவா.**35,24)**

*[ பொருள் + அறை ]*

**பொருளன்** *poru!aṉ,* பெ. (n.) பரம்பொருள்; ultimate reality. ***'பொருளன் புனிதன்'*** (சிலப். **10, 174.)**

*[ பொருள் → பொருளன் ]*

**பொருளாக்கம்** *pōrul-akkam,* பெ. (n.) பொருள்தேடுதல்; earn money.

*[ பொருள் + ஆக்கம் ]*

**பொருளாகுபெயர்** *poru!-āgupeyar,* பெ. (n.) முதற்பொருளின் பெயர் அதன் சினைக்காகும் ஆகுபெயர் (நன். **290);** metonymy, where the whole is put for its part.

*[ பொருள் + ஆகுபெயர் ]*

**பொருளாசை** *poruḷ-āši,* பெ. (n.) பணம் முதலானவற்றின் மீதான நசை; covetousness, avarice.

*[ பொருள் + ஆசை ]*

**பொருளாள்** *poruḷ-āḷ,* பெ. (n.) இல்லாள் (மனைவி); wife, as one's property. *'பிறன் பொருளாட் பெட்டொழுகும் பேதைமை'* (குறள், 141.)

*[ பொருள் + ஆள் ]*

'ஆள்' பெண்பாலீறு.

கணவனின் பெருமைக்குக் கரணியமாய் இருத்தலின் மனைவி பொருளாள் எனப்பட்டாள். 'பொருளல்லவற்றைப் பொருளாகச் செய்யும் பொருளல்ல தில்லை பொருள்' எனுங்குறட்பா ஈண்டு நோக்கற்பாற்று.

**பொருளாளர்** *porul-ālar,* பெ. (n.) காசாளர்; cashier.

*[ பொருள் + ஆள்+அர் ]*

**பொருளானந்தம்** *poruḷ-āṉandam,* பெ. (n.) இறைச்சியினும் புகழ்ச்சியினும், உவமையினும் பிறவற்றினும் ஊறுபயப்பப் பாடும் 'ஆனந்தக் குற்றம்' (யாப். வி. பக், 519) a defect in composition of iṟaicci, eulogy, simile, etc.,

*[ பொருள் +SKṭ. anta-ādi. த. ஆனந்தம் ]*

**பொருளிசையந்தாதி** *poruḷ-išai-y-andādi,* பெ. (n.) ஓசையாலன்றிப் பொருளால் வரும் ஈறு தொடங்கித் தொடை(ஈடு. 1, 6, 2, ஜீ); variety of andadi-t-toḍai in which the repetition of the ending is confined to mere sense and has no reference to word or sound, opp. to iyal-icai-y-andādi.

*[ பொருளிசை + அந்தாதி ]*

*[ SKṭ. anta+ādi. த. அந்தாதி ]*

**பொருளியல்** *poruḷiyal,* பெ. (n.) அகப்பொருள் பாடலடங்கிய ஒரு நூல் (களவியற்.); ananthology of poems on agapporuḷ.

*[ பொருள் + இயல் ]*

**பொருளியல்புரைத்தல்** *poruḷ-iyalburaittal,* பெ. (n.) எடுத்துக்கொண்ட பொருளின் இயல்பை உரைத்தல்; indication of the subject matter of a treatise.

*[ பொருள் + இயல்பு+ உரைத்தல் ]*

**பொருளிலக்கணம்** *poruḷ-ilakkaṇam,* பெ. (n.) அகம் புறம் முதலியவற்றைக் கூறும் இலக்கண நூல்(வின்.); grammar dealing with agam, puṟam, etc.

*[ பொருள் + இலக்கணம் ]*

**பொருளின்செல்வி** *poruliṉ-šelvi,* பெ. (n.) திருமகள் (பிங்.); lakshmi, as goddess of wealth.

*[ பொருள் → பொருளின்+ செல்வி ]*

**பொருளின்பம்** *poruḷ-iṉbam,* பெ. (n.) பொருட்சுவை பார்க்க; see *poruṭ-cuvai.* (இலக். வி. 635, உரை.)

*[ பொருள் + இன்பம் ]*

**பொல்லாங்கன்** *pollāṅgaṉ,* பெ. (n.) குறும்புக்காரன் (யாழ்.அக.); misehievous person.

*[பொல்லாங்கு → பொல்லாங்கன் ]*

**பொல்லாங்குக்காரன்** *pollānku-k-karan,* பெ. (n.) தீங்கிழைப்பவன்; bad egg, ill-wisher.

*[பொல்லாங்கு+காரன் ]*

'காரன்' உடைமை பற்றிய ஆண்பாலீறு.

**பொல்லாங்கெண்ணம்** *pōllanku-ennam,* பெ. (n.) தீயஎண்ணம்; ill - will.

*[பொல்லாங்கு+எண்ணம் ]*

**பொல்லாங்குச் செயல்** *pōllanku-c-cayal,* பெ. (n.) கெடுசெயல்; mal practice

*[பொல்லாங்கு + செயல் ]*

**பொல்லாங்குத்திட்டு** *pōllanku-t-tittu,* பெ. (n.) வசைமொழி; evil-speaking

*[பொல்லாங்கு + திட்டு ]*

**பொல்லாங்குத்தீக்குறி** *pōllanku-t-tikkuri,* பெ. (n.) பொல்லாங்குஅறிகுறி; fore boding

*[பொல்லாங்கு + அறிகுறி ]*

**பொல்லாச்செயல்** *pōlla-c-cayal,* பெ. (n.) *பொல்லாங்குசெயல்* பார்க்க; see *pollanku-c-cayal*

*[பொல்லாங்கு + செயல் ]*

**பொல்லாதவன்** *pōllatavan,* பெ. (n.) தீங்காளன்; (போக்கிரி) rascal

*[பொல்லாங்கு + செயல் ]*

**பொருளுபதை** poru!-ubadai, பெ. (n.) அமைச்சர்முதலியோரை அரசன் தெரிந்தெடுத் தற்குரியதேர்திறம் நான்கனுள் வேற்றரசனிடம் அதிகப்பொருள் பெறலாமென்று கூறுவித்துத் தேர்வு செய்யும் முறை (குறள்,501,உரை); testing a minister;s or officer's loyalty by throwing him into circumstances in which he is tempted by tales of prospective prosperity under another sovereign, one of four ubadai, q.v.

*[பொருள் +*Skt. upa.dhā- *த.உபதை]*

**பொருளுரை** poru!-urai, பெ. (n.) 1. மெய்யுரை; truthful or unfailing word '*பொய்யுரையே யன்று பொருளுரையே*' (சிலப்,9,18.). 2. பயனுடைய சொல்; useful word or speech. "ஓர் பொருளுரை கேளிதென்றான்" (சிவக.1123)3. புகழுரை; reputation *பொருளுரையிழந்து.....நாணுத் துறந்தேன்*' (மணிமே.2,40.) 4. மந்திரம்; mantra '*பொருளுரை பெற்று வந்தான்*' (சீவக.1723.)

*[பொருள் + உரை]*

**பொருளுரையாளர்** porul-urai-y-ā!ar, பெ. (n.) சான்றோர்; wise men, sages. '*பொருளுரையாளர் நச்சுக் கொன்றேற்கு*' (சிலப்.16,65)

*[பொருளுரை+ ஆளர்]*

**பொருளுவமை** poru!-uvamai, பெ. (n.) பொருளின் தன்மையை உவமித்துக் கூறும் அணிவகை (யாழ்.அக.); (rhet) a kind of simile in which the qualities of two things are compared.

**பொருனை** porunai, பெ. (n.) *பொருநை* பார்க்க; see *porunai.* '*அலைதீர்ப் பொருனை நதிமுகத்தும்*' (திருவாலவா. திருநாட்டுச்.9).

*[பொருநை → பொருனை]*

**பொரேரெனல்** porēr-eṉal, பெ. (n.) சடுதிக்குறிப்பு; onom. expr. signifying suddenness. *'வண்டு பொரேரென வெழ'* (பரிபா.பக்.166,30.)

*[பொரேர் + எனல்]*

**பொல்** pol, பெ. (n.) *பொல்லு²* பார்க்க; see *pollu²*

*க.பொல்*

*[புல் → பொல்]*

**பொல்லது** polladu, பெ. (n.) *பொல்லாது*(வின்) பார்க்க; see *pollādu*. *'நல்லது பொல்லது'*.

*[பொல்லாது → பொல்லது]*

**பொல்லம்** pollam, பெ. (n.) **1.** தைக்கை (திவா.); stitching **2.** இணைக்கை (பிங்.); joining as in tailoring or in carpentry. **3.** சேர்த்துத் தைக்க உதவும் சிறுதுண்டு (யாழ்ப்.); piece, division, strip, used in patch work.

*[புல் → பொல் → பொல்லம்]*

**பொல்லம்பொத்து—தல்** pollam,pottu-, செ.குன்றாவி. (v.t.) கிழிந்த துணியின் இரண்டு தலையையுங்கூட்டித் தைத்தல்; to sew together, as two pieces of cloth. *'பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை'* (பொருந.8.)

*[பொல்லம் + பொத்து—,]*

**பொல்லர்** pollar, பெ. (n.) **1.** தையற்காரர் (பிங்.); tailors, as sewers. **2.** தோல்வினைஞர்; leather workers, shoe makers.

*[புல் → பொல் → பொல்லர்]*



**பொல்லா** pollā, பெ.எ (adj.) **1.** தீமையான; bad, vicious, evil, wicked. *'பொல்லாக் கனாக்கண்டார்'* (சீவக.2173.) **2.** கடுமையான; severe, intense. *'பொல்லாத மருந்து'*

*க. பொல்ல. ம. பொல்லா*

*[புல் → பொல் → பொல் + ஆ]*

'ஆ' — எ.ம.இ.

**பொல்லாக்காட்சி** pollā-k-kāṭci, பெ. (n.) மயக்கவறிவு; confused knowledge, bewilderment. *'வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்று'* (மணிமே.30,71.)

*[பொல் + ஆ + காட்சி ]*

*'ஆ'— எ.ம.இ.*

**பொல்லாக்காலம்** pollā-k-kālam, பெ. (n.) கெட்டகாலம்; evil or inpropities time.

*[பொல் + ஆ + காலம் ]*

*'ஆ'— எ. ம.இ.*

**பொல்லாக் குறும்பு** pollā-k-kuṟumbu, பெ. (n.) தீமையுடைய சிற்றரண்; dangerous small port. *'பொல்லாக் குறும்பும் போகுதற் கருமையின்'* (பெருங். 1:54:50)

*[பொல் + ஆ + குறும்பு]*

*'ஆ' — எ.ம.இ.*

**பொல்லாங்கு** pollāṅgu,பெ. (n) 1. தீது; evil, vice, vileness. '*பொல்லாங்கென்பவை யெல்லாந் தவிர்*' (கொன்றைவே.) 2. குற்றம் (பிங்.) defect, fault. '*மாணவகன் பொல்லாங் குரைக்க*' (பெரியபு. சண்டேசுர.40.), 3. ஈனம் (யாழ்.அக.); deficiency, degradation. 4. கேடு(வின்); ruin, injury, destruction. 5. மறதி (சூடா.); forgetfulness.

*[பொல்லா → பொல்லாங்கு]*

**பொல்லாங்குச்சொல்** pōlanku-c-col, பெ. (n.) தீமொழி; evil word.

*[பொல்லாங்கு + சொல்]*

**பொல்லாச்சாம்பற்றரை** pollā-c-cāmparrarai, பெ. (n.) கட்டடத்திற்குத் தகுதியில்லாத தரைவகை; building purposes. '*உவர்த்தரை ஈளைத்தரை பொல்லாச்சாம்பற்றரை*' (சிலப்.3,94, உரை, பக்.114.).

*[பொல்+ ஆ + சாம்பல் + தரை]*

*'ஆ' - எ.ம.இ.*

**பொல்லாத்தனம்** pollā-t-taṉam, பெ. (n.) தீமை விளைவிக்கும் குணம்; wickedness. '*என்னிடமே உன் பொல்லாத்தனத்தைக் காட்டுகிறாயே!*"

*[பொல் + ஆ + தனம்]*

*'ஆ' – எ.ம.இ.*

**பொல்லாத** pollāda பெ.எ. (adj.) *பொல்லா* பார்க்க; see *pollā*. '*பொல்லாத சமணரொடு*' (தேவா.412,10.).

*[பொல் → பொல்லாத]*

பொல்+ஆ+த்+அ.
'ஆ' எ.ம.இ.
'த்'– இ.கா. இடைநிலை
'அ'– பெ.எ. ஈறு.

**பொல்லாதகிரமம்** pollāda-kiramam, பெ. (n.) தீயதொழில்; evil dealing.

*[பொல் → பொல்லாத +skt.grāma. த.கிரமம்]*

**பொல்லாதவன்** pollādavaṉ, பெ. (n.) 1. தீயவன்; bad, wicked man. 2. கடுமையான வன் rude, rough man.

*[பொல் → பொல்லாதவன்]*

**பொல்லாது**[1] pollādu, பெ. (n.) தீயது; vice, evil. '*பெடையொடு புணர்வு விரும்பல் பொல்லாதெனவும்*' (பெருங்.மகத.2,168.)

*[பொல் → பொல்லாது]*

**பொல்லது**[2] pollādu, பெ. (n.) உடல் முதலியன கேடுற்றநிலை; emaciation; thinness,as of body; spoilt condition. "நீஇப்படிப் பொல்லாதயிருப்பானேனென்ன, நாம் நோயாய்க் கிடந்தோம் கண்டீரேயென்று" (சங்கற்பநி. 205,உரை,)

**பொல்லாநிலம்**[1] pollā-nilam, பெ. (n.) சேற்றுநிலம் (பிங்.); land full of mire.

*[பொல் → பொல்லா + நிலம்]*

**பொல்லாநிலம்**[2] pollā-nilam, பெ. (n.) இடுகாடு; cremation ground. "உங்களைப் பொல்லா நிலத்திலேயிடுவதற்கு முன்னம்" (திவ். திருப்பல். பு, வ்யா. பக். 50)

**பொல்லாப்பு**[1] pollāppu, பெ. (n.) 1. *பொல்லாங்கு*(வின்) பார்க்க; see *pollāṅgu*, 1,2. 2. மனக்குறை; grievance '*பொல்லாப்பென் மேலுண்டோ மன்மதா*' (குற்றா. குற.33.) 3. துன்பம்; trouble. '*ஒருவன் தனக்குப் பொல்லாப்பு வேண்டின்*' (நான்மணி, 17,உரை.)

*[பொல் → பொல்லாப்பு]*

**பொல்லாப்பு**[2] pollāppu, பெ. (n.) *மறுப்பு;* bobjection. *“இச்சாணிக்குப் பொல்லாப்புச் சொல்லில்” (புதுக். கல். 327)*

**பொல்லாமணி** pollā-maṇi, பெ. (n.) **1.** துளையிடப் பெறாத மணி; gem which has not been bored. **2.** குற்றமற்ற மணி(வின்); flawless gem **3.** மாசற்ற பரம்பொருள்; god, as immaculate. *‘என் பொல்லா மணியைப் புணர்ந்தே’* (திருவாச.**271.)**

*[பொல் → பொல்லா + மணி]*

**பொல்லாமை** pollāmai, பெ. (n.) **1.** தீது; evil, ill, vileness. 2. குற்றம்; fault, defect. *‘வீணை பொல்லாமை.....இது’* (சீவக.**717.).**

*[பொல் → பொல்லா → பொல்லாமை]*

**பொல்லாவாறு** pollā-v-āṟu, பெ. (n.) தீச்செயல்; evil course of conduct. *‘பொல்லாவாறு செயப்புரியாது’* (தேவா.**602,7.)**

*[பொல் → பொல்லா+ஆறு → பொல்லாவாறு]*

**பொல்லான்**[1] pollāṉ, பெ. (n.) **1.** தீயவன்; wicked man. *‘வேடரென்னும் பொல்லார்க்கு’* (வெங்கைக்கோ.**101.) 2.** அறிவிலி; ignorant person. *‘பேதைநீ பெரிதும் பொல்லாய்’* (சீவக.**269.)**

*[பொல் → பொல்லா → பொல்லான்]*

**பொல்லான்**[2] pollāṉ, பெ. (n.) குதிரைவகை; a species of horse. *‘மயிர்வரி நீலான் பொல்லான்’* (திருவாலவா.**28,69.)**

*[பொல் → பொல்லா → பொல்லான்]*

**பொல்லு-தல்** pollu-, செ.குன்றா.வி (v.t.) *பொள்ளு* பார்க்க; *‘பொல்லாப் பிள்ளையார்’* see *pollu.*

*[புல் → பொல் → பொல்லு]*

**பொல்லு**[2] pollu, பெ. (n.) பதர்(வின்); empty glume or husk of grain.

*[புல் → பொல் → பொல்லு]*

**பொல்லு**[3] pollu, பெ. (n.) **1.** தடி(யாழ்.அக.); walking stick; cane **2.** ஊன்றுகோல், prop.

*[புல் → பொல் → பொல்லு]*



**பொலங்கலம்** polaṅ-kalam, பெ. (n.) பொன்னணிகலன்; gold jewel. *‘பொலங்கலநந்த’* (ஐங்குறு.**316.)**

*[புல் → பொல் → பொலம் + கலம்]*

**பொலங்கா** polaṅ-kā, பெ. (n.) இந்திரனுடைய சோலை; grove of indra. *‘அரும்பொலங் கா வைந்தால்’* (தக்கயாகப்.**71.)**

*[ பொலம் + கா]*

**பொலந்தும்பை** polan-tumpai, பெ. (n.) பொன்னானியன்ற தும்பை; Tumpai-which made by gold. *‘பொலந்தும்பைக் கழற்பாண்டிற்* (புறநா.**97)**

*[ பொலம் + தும்பை]*

**பொல்பொலவெனல்** pola-pola-v-eṉal, பெ. (n.) (அ)பொறுபொலெனல்(அகசந்.உ.); Expr. singnifying crumbling, as of earth. (ஆ) நெகிழ்ந்திருத்தற் குறிப்பு(குஞ்சை); looseness.

**பொலம்**[1] polam, பெ. (n.) 1. பொன்; gold. *'பொலம்பூண் வேந்தர்'* (பதிற்றுப்.64) 2. அழகு(திவா.); beauty, fairness. *'பொலந்தேர்ப் பொறைய'* (பதிற்றுப்.84,6.) 3. அணிகலம் jewel. 4. பொன்னிறம்(வின்); gold colour.

*[புல் → பொல் → பொலம் ]*

**பொலம்**[2] polam, பெ. (n.) பொல்லாங்கு(வின்); badness, evil.

*[பொல் → பொல்லாம்(→ பொல்லாங்கு பொல்லாம் → பொல்லாப்பு. பொல்லாம் →) பொலம்]*

**பொலம்புள்** polam-puḷ, பெ. (n.), *பொன்வாய்ப்புள்* பார்க்க; see *peṉvāy-p-puḷ* *'கயல்கொள் பொலம்புள்'* (பெருங்.வத்தவ.2,69.) kingfisher.

*[பொலம்[1] + புள் ]*

**பொலன்** polaṉ, பெ. (n.) *பொலம்*[1] பார்க்க; see *polam*[1] *'பொலன் கழற்காற்பொடி'* (கம்பரா.குலமுறை.29.)

*[பொலம்[1] → பொலன் ]*

**பொழக்கடை** pōlakkaṭay, பெ. (n.) கொல்லைப்புறம்; backyard.

*[புழைக்கடை → பொழக்கடை ]*

**பொலன்காலா** *polaṉ-kālā,* பெ. (n.) ஆறடி நீளம் வளரக் கூடியதும், மின்னும் பசிய நிறமுள்ளதுமான கடல் மீன்வகை; mango - fish, silvery green, attaining 6 ft. in length, polynemus tetradactylus.

*[பொலன் + காலா ]*



**பொலா** *pola,* பெ. (n.) ஊன்; flesh.

*[ புலால்→ பொலா ]*

**பொலி[1]–தல்** *poli-,* செ.கு.வி. (v.i.) 1. செழித்தல்; to flourish, prosper, thrive. *'பொலியு மால்வரை'* (தேவா. 236, 8) 2. பெருகுதல்(வின்); to be enlarged; to appear grand, as from dress; to swell in size, as rice in boiling; to grow full 3. மிகுதல்; to abound, increase. *'கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கை'* (மதுரைக். 171.) 4. விளங்குதல்; to bloom, as the countenance; to shine. *'மார்பில்....... பொலிந்த சாந்தமொடு'* (பதிற்றுப். 88, 30.) 5. சிறத்தல்; to be high, great or celebrated. *'பொலிந்த வருந்தவத்தோற்கே'* (புறநா.1.) 6. மங்கலமாதல்; to be auspicious or fortunate. *'பொலிக பொலிக பொலிக'* (திவ். திருவாய். 5, 2, 1) (யாழ்ப்.) 7. நீடுவாழ்தல்; to live long and prosperously, used as a benediction. *'வழிவழி சிறந்து பொலிமின்'* (தொல். பொ. 422.) 8. நிகழ்தல்; to occur. *'பொலிந்த தாமினிது போரென லொடும்'* (கம்பரா. தானை காண். 2).

*[ புல்→ பொல் → பொலி ]*

**பொலி²—தல்** *poli-,* செ. குன்றாவி. (v.t) புணர்தல்; to cover, as bull or ram; to capulate. *'பொலிகாளை'*

*[புல் → பொல் → பொலி]*

**பொலி²** *poli,* பெ. (n.) **1.** தூற்றாநெற்குவியல். (யாழ்ப்.); heap of unwinnowed grain. **2.** தூற்றியநெல் winnowed paddy. **3.** விளைவின் அளவு; out-turn. *'அந்த வயல் என்ன பொலி காணும்?'* **4.** தவசமாகக் (தானியம்) கொடுக்கும் வட்டி,(இ.வ.) interest paid in kind. **5.** களத்தில் நெல்லளக்கும் போது முதல் மரக்காலுக்கு மங்கலமாக வழங்கும் பெயர்;(இ.வ.) a term for the first marakkāl, of grain measured at the threshing floor. **6.** முடிதிருத்துவோன் கொங்கு வேளாளரில் இறந்தவரெலும்பை மூன்றா நாள் நீரிலிட்டுப் பசுமரத்திற்கு பால்வார்க்கும் போது வழங்கும் நற்சொல்(G.TP.D.I.105); exclamation by a barber on the third day of a funeral, as he pours milk at the foot of a green tree after throwing the bones of the deceased in water, a custom among the koṅgu vēḷāḷās. **7.** புணர்ச்சி; covering, as of animals (கொ.வ.)

*[புல் → பொல் → பொலி*

**பொலிஎருது** *pōli-earutu,* பெ. (n.) *பொலியெருது* பார்க்க; see *poliearutu.*

*[பொலி + எருது]*

**பொலிக்கட்டை** *poli-k-kaṭṭai,* பெ. (n.) பொலியெருதுகளைக் கட்டும் மரக்கட்டை (யாழ்.அக.); stock to which the leading ox in threshing is tied.

*[ பொலி + கட்டை ]*



**பொலிக்கந்து** *poli-k-kandu,* பெ. (n.) தூற்றியபின் களத்திற் கிடக்கும் நெற் கலந்த பதர்(வின்); chaff containing some grain, left on the threshing-floor after winnowing.

*[பொலி + கந்து = பதர்]*

**பொலிக்குறிப்பு** *poli-k-kuṟippu,* பெ. (n.) கதிரடித்துக் குவித்த நெற்பட்டடைக் கணக்கு(R.T.); memorandum of the heaps of corn on a threshing-floor.

*[பொலி + குறிப்பு]*

**பொலிக்கெடி** *poli-k-keḍi,* பெ. (n.) வைக்கோல் (யாழ்.அக.); straw.

*[பொலி + கெடி ]*

**பொலிகடா** *poli-kaḍā,* பெ. (n.) **1.** *பொலியெருது* (வின்) பார்க்க; see *poli-y-erudu.* **2.** பொலியாடு; ram or he-goat kept for covering (w.) **3.** தன்மனம் போனபடி திரியும் தடியன்(இ.வ.); rake, reckless person who leads a loose life.

*[பொலி + கடா]*

**பொலிகாளை** *poli-kāḷai,* பெ.(n.) *பொலியெருது* பார்க்க; **1.** see *polikāḷai.*

*[பொலி + காளை]*

**பொலிகூறு—தல்** *poli-kūṟu-,* செ.கு.வி. (v.i.) அறுவடை முடிவிற் களத்தே மகிழ்ச்சிக் குறியாகவும் பண்ணையார்க்கு வாழ்த்தாகவும் பாடிப் பொலியோ பொலி என்று கூவுதல்(வின்.); to shout poli-y-ō-poli in joy and as a blessing to a landlord when the year's harvest is over.

*[பொலி + கூறு—தல்]*

**பொலிகை** *poligai,* பெ. (n.) *பொலிசை*(s.i.i. iii, **55, 8.)** பார்க்க; see *polišai.*

*[பொலிசை → பொலிகை]*

**பொலிச்சல்** *policcal,* பெ. (n.) புணர்ச்சி;(இ.வ.) covering, especially among animals.

**பொலிச்சற்காளை** *policcaṟ-kāḷai,* பெ. (n.) *பொலியெருது,***1** பார்க்க; see *poli-y-erudu,*

*[பொலிச்சல் + காளை ]*

**பொலிசை** *polisai,* பெ. (n.) **1.** ஊதியம்; gain, profit. *'பொன் பெற்ற பொலிசை பெற்றார் பிணையனார்'* (சீவக. **2546.) 2.** வட்டி; interest, especially in kind. *'பொலிசைக்குக் கொண்ட ஊரும்'* (s.i.i. ii, **82.)**

*[பொலி → பொலிசை]*

**பொலிசையூட்டு—தல்** *polišai-y-ūṭṭu-,* செ.கு.வி. (v.i.) வட்டி செலுத்துதல்; to pay interest.

*[பொலிசை + ஊட்டு—]*

**பொலிசையூட்டு** *polišai-y-ūṭṭu,* பெ. (n.) வட்டி பெறுகை; earning interest. *'பொலிசை யூட்டுக்கு ....... வைத்த காசு'* (s.i.i. **11, 121.)**

*[பொலிசை + ஊட்டு]*

**பொலிதள்ளி** *poli-taḷḷi,* பெ. (n.) களத்திலே நெல்லை அளக்கும்போது அதனைக் குவித்துத் தரும் சிற்றூர் ஆள்(இ.வ.); village servant who assists in measuring paddy, especially by shoving it within easy reach of the marakkāl.

*[பொலி + தள் → தள்ளி]*

*'இ' வி. மு. ஈறு.*

**பொலிதூற்று—தல்** *poli-tūṟṟu-,* செ. குன்றாவி. (v.t.) களத்தில் நெல்லைப் பதர்போகக் காற்றில் தூற்றுதல்; to separate grains from chaff by winnowing.

*[பொலி + தூற்று—]*

**பொலிநடையன்** *poli-nadaiyaṉ,* பெ. (n.) *பொலியெருது,* **2.** (யாழ்.அக.) பார்க்க; see *poli-y-erudu.*

**பொலிப்பாட்டு** *poli-p-pāṭṭu,* பெ. (n.) **1.** அறுவடைமுடிவிற் களத்தே தலைவனை வாழ்த்தி உழவர் பாடும் பாட்டு (இ.வ.); song sung by farmers in the threshing floor in praise of the landlord at the end of a harvest. **2.** கடுமையான வசை; strong invective. *'பொலிப்பாட்டுப் பாடப் புகுந்தாள்'.* (விறலி விடு. **785.)**

*[பொலி + பாட்டு]*

**பொலிப்பாடு** *polippādu,* பெ. (n.) *பொலிகடா,* **2.** பார்க்க; see *poli-kaḍā. 'பொலிப்பாட்டைப் போலே புறப்பட்டாள்'* (விறலிவிடு. **785.**)

*[பொலிப்பு + ஆடு → பொலிப்பாடு]*

**பொலிப்பாய்** *polippāy,* வி.எ. *(adv.)* மெதுவாய் (இ.வ.); gently.

*[ பொலிப்பு+ஆ –,]*

**பொலிப்பு** *polippu,* பெ. (n.) புணர்ச்சி; act of covering, especially by a bull.

*[பொல் → பொலி → பொலிப்பு]*

**பொலிப்புக்கடா** *polippu-k-kaḍā,* பெ. (n.) *பொலிகடா,* **1.** பார்க்க; see *poli-kaḍā,1 'பொலிப்புக் கடாவின் கொழுப்பு'* (விறலிவிடு. **632.**)

*[பொலி → பொலிப்பு + கடா]*

**பொலிபாடுதல்** *poli-pāḍudal,* பெ. (n.) **1.** களத்திற் சூடடிக்கும் போது உழவர் பாட்டுப்பாடுகை (**சிலப். 10, 137, உரை.**); singing by farmers in the threshing- floor when cattle are being led to tread the sheaves **2.** பொலிப்பாட்டுப் பாடுகை (இ.வ.); singing of poli-p-pāṭṭu.

*[பொலி + பாடுதல்]*

**பொலிபொலியெனல்** *poli-poli-y-eṉal,* பெ. (n.) சூட்டடியிற் பிணையல் மாடுகளை ஓட்டும் போது உழவரிடும் ஒலிக்குறிப்பு (**வின்.**); redupl.of பொலி + expression shouted to urge bullocks in treading out grain.

*[பொலி பொலி + எனல்]*

**பொலிமதம்** *polimatam,* பெ. (n.) **1.** நண்டு; crab. **2.** ஆண்குறி; penis.

**பொலிமுறைநாகு** *poli-muṟai-nāgu,* பெ. (n.) பொலியக்கூடிய பக்குவமுள்ள கிடாரி (S.I.I.iv.**102**); heifer fit for covering.

*[பொலி+ முறை + நாகு]*

**பொலியளவு** *poli-y-aḷavu,* பெ. (n.) களத்திற் சூடடித்தவுடன் தாராளமாக அளக்கும் நெல்லளவு; over measure, liberal measuring of grain.on a threshing floor.

*[பொலி + அளவு]*

**பொலியாடு** *pōli-atu,* பெ. (n.) *பொலிகடர்* பார்க்க; see *polikata*

*[பொலி + ஆடு]*

**பொலியூட்டு** *poli-y-ūṭṭu,* பெ. (n.) *பொலிசையூட்டு* (s.i.i.iii, **84, 88.**) பார்க்க; see *policaiyōṭṭu*

*[பொலி + ஊட்டு]*

**பொலியெருது** *poli-y-erudu,* பெ. (n.) **1.** ஆக்களைச் சினையாக்குதற் பொருட்டு வளர்க்கப்படும் காளை (பிங்.); bull kept for covering. *'கொடிய பொலியெருதை யிருமூக்கிலும் கயிறொன்று கோத்து'* (அறப். **சத. 42) 2.** களத்துப் பிணையல் மாடுகளில் முதற்செல்லுங்கடா (**வின்**); the leading ox in treading out grain on a threshing - floor. (w.) **3.** உழவுக்காளை; breeding bull

*[பொலி + எருது]*



**பொலிவீசு—தல்** *poli-vīsu-,* செ.குன்றாவி. (v.t.) களத்தில் நெல்லைப் பதர்போக வீசுதல் (இ.வ.); to winnow the heap of grain on a threshing floor.

*[பொலி + வீசு—]*

**பொலிவீடு** *polivīḍu,* பெ. (n.) கோயிற் செலவு கட்கு விடப்படும் சிற்றூர்; village given as an endowment for temple expenses. 'பொலி வீடாகப் ..... புத்தூர் என்கிற கிராமத்தை ஸமர்ப்பித்தான்' (கோயிலொ. 125.)

*[பொலி + வீடு → விடு]*

**பொலிவு** *polivu-,* பெ. (n.) 1. முகமலர்ச்சி; brightness or bloom of countennance. 2. தோற்றப் பொலிவு; grandness of appearance, as from dress. *'கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்'* (திருவாச. 2, 30) 3. அழகு (அக.நி.); beauty, splendour, lustre. *'பொன்னரைச் சீரையின் பொலிவும் நோக்கினான்'* (கம்பரா. நகர்நீங்கு. 162.) 4. செழிப்பு; prosperity. 5. பருமை (வின்.); largeness 6. மிகுதி (அக.நி.); fullness, abundance, copiousness. *'புண்ணியந்தோன்றி மேன்மேல் வளர்வதன் பொலிவு போல்வார்'* (பெரியபு. கண்ணப்ப. 42) 7. எழுச்சி (பிங்.); height, loftiness. 8. பொன் (அக.நி.); gold. 9. வெறுந்தோற்றம்(யாழ்ப்.); speciousness, plausibility, (j.) 10. புணர்ச்சி (கொ.வ.); covering, among. animals.

*[பொல் + பொலி + பொலிவு]*

**பொலிவு மங்கலம்** *polivu - mangalam,* பெ. (n.) மன்னவன் மகிழப் பிறந்த ஆண் குழந்தையைப் பலரும் கொண்டாடுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ.9, 23.) (puṟap.) theme describing the public celebrations on the birth of a prince.

*[பொலிவு + மங்கலம்]*

**பொலிவேடு** *polivēḍu,* பெ. (n.) *பொலிவீடு* பார்க்க; see *polivīḍu 'கொடியாலத்தைப் பொலிவேட்டுக் கிராமமாகச் சமர்ப்பித்தான்'* (கோயிலொ. 125.)

*[பொலிவீடு → பொலிவேடு]*

**பொலிவொழுங்கு** *pōli-oluku,* பெ. (n.) செவ்வொழுங்கு; good order.

*[பொலிவு + ஒழுங்கு]*

**பொலுகு—தல்** *polugu-,* செ.கு.வி. (v.i.) 1. அதிகப்படுதல்; to increast, enlarge, as a sore; to spread, as an eruption. 2. நீரொழுகுதல் (சங்.அக.) to flow, drip, as water.

*தெ. பொலசு*

*[பொலி + பொலிகு + பொலுகு]*

**பொலுபொனல்** *polu-polenal,* பெ. (n.) (அ) உதிர்தற்குறிப்பு; onom ecpr signifying falling loosely or quickly. (ஆ) நொறுங்கற்குறிப்பு; crumbling, as of earth.

*[பொலுபொலு + எனல்]*

**பொழி¹–தல்** *poḻi,* செ.குன்றாவி. (v.t.) **1.** பெய்தல்; to pour forth, shower, as rain. '*கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்*' (புறநா.203) **2.** மிகச் செலுத்துதல்; to discharge in abundance. '*இளங்கோளரி பொழிந்தான்*' (கம்பரா.நிகும்பலை.118) **3.** தாராளமாய்க் கொடுத்தல் (சுடா.); to give liberally. **4.** தட்டுத் தடங்கலின்றிப் பேசுதல்; to pour forth a torrent of eloquence. '*அவன் அவையில் நின்று பொழிகிறான்*'

*[பொய் → பொயி→ பொழி]*

**பொழி²–தல்** *poḻi,* செ.கு.வி. (v.i.) **1.** நிறைந்தொழுகுதல்; to flow, overflow. '*புரப்போன் பாத்திரம் பொழிந்தூண் சுரந்து*' (மணிமே.14,49) **2.** நிறைதல்; to abound, as wealth. '*பொழிமணித் தண்டூண்*' (பெருங். உஞ்சைக். 47,110) **3.** தங்குதல்; to settle, rest, as a cloud on a mounatain. '*தளிமழை பொழியுந் தன்பரங் குன்றில்*' (மதுரைக் 263)

*[பொய் → பொயி→ பொழி]*

**பொழி³** *poḻi,* பெ.(n.) **1.** வயல்வரம்பு (இ.வ.); ridge. **2.** எல்லை (இ.வ.); boundary, limit. **3.** கடலுக்கும் கழிநீர்நிலைக்கும் இடையிலுள்ள சிறுகரை (நாஞ்.); a small strip of land between sea and lagoon. (nāñ.) **4.** கணு; joint. '*பொற்குடம் பொருந்திய பொழியமை மணித்தூண்*' (பெருங்.உஞ்சைக்.48,47.) **5.** உரிக்கப்பட்டது; that which is peeled off, as fifre or rind. '*பெரும்பொழி வெண்ணார்*' (அகநா.83.) தெ.ம. பொலி

*[பொலி + பொழி + பொழில் + பொழி]*

**பொழிகணை** *poḻi-kaṇai,* பெ. (n.) தொடர்ந்து எய்கின்ற அம்பு; pour down or shaft. '*கலிப்பிணிக் கறைத்தோல் பொழிகணை உதைப்பு*' (அகநா.24)

*[பொழி + கணை]*

**பொழிப்பு** *poḻippu,* பெ.(n.) **1.** *பொழிப்புரை* பார்க்க; see *poḻippurai.* '*பொழிப்பகல நுட்ப நூலெச்சம்*' (நாலடி,319). **2.** நூற்பதிகம்; argument of a poem or treatise. '*சுந்தரர் விளையாடற்குச் சொல்லிய தமிழ்ப்பொழிப் பாம்*' (திருவாலவா.பதிகம்.11.) **3.** குறிப்பு; clue, hint, short direction. '*பொழிப்புக் காட்டினான்*' (w.). **4.** ஊகித்தல்; inference from appearances or circumstances **5.** *பொழிப்புத் தொடை* பார்க்க; see *poḻippu-t-toḍḍai.* '*பொழிப்பு மொரூஉவுஞ் செந்தொடை மரபும்*' (தொல்.பொ.402.)

*[புல் → பொல் → பொலி (திரள்) → பொழி → பொழிப்பு]*

**பொழிப்புத்திரட்டு–தல்** *poḻippu-t-tiraṭṭu-,* செ.கு.வி. (v.i.) பிண்டப் பொருள் கூறுதல்; to give the substance, as of a passage. '*கருத்துரைத்துக் கண்ணழித்துப் பொழிப்புத் திரட்டியகலங்கூறல்*' (இறை.கள.1,13.)

*[பொழிப்பு + திரட்டு–தல்]*

**பொழிப்புத்தொடை** *poḻippu-t-toḍai,* பெ.(n.) அளவடியுள் முதற்சீர்க்கண்ணும் மூன்றாஞ் சீர்க் கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது; (இலக்.வி.723.) (pros.) versification in which there is mōṉai, etc. in the first and third feet of a four-foot line.

*[பொழிப்பு + தொடை]*

**பொழிப்புப்பொழிப்பாய்ப் பேசு—தல்** *poḻippu-p-poḻippāy-p-pēšu-,* செ.குன்றாவி (v.t.) **1.** வசைப்பொருள் உள்ளடங்கப் பேசுதல்; to speak sarcastically. **2.** சுருங்கக் கூறுதல் (வின்.); to give a brief outline

*[பொழிப்பு →பொழிப்பாய் + பேசு]*

**பொழிப்புரை** *poḻippurai,* பெ. (n.) பொருளைத் திரட்டிக் கூறும் உரை. (பிங்.); a commentry which paraphrases a text or summarises, its substance.

*[பொழிப்பு + உரை]*

**பொழில்** *poḻil,* பெ.(n.) **1.** பெருமை; (பிங்.) greatness, largencess. **2.** சோலை. (பிங்.); park, grove, forest. *'காவதுப் பொழிற் கப்புறம்'* (கம்பரா. வனம்புகு. 32) **3.** பூந்தோட்டம் (திவா.); flower garden; pleasure-gārden. *'அணிமலர்ப் பூம்பொழிலகவயின்'* (மணிமே.பதி.38.) **4.** மண்ணுலகம்; earth. *'பொழில் காவலன்'* (பு.வெ.6,6.) **5.** உலகம்; world *'நல்கித்தான் காத்தளிக்கம் பொழிலேழும்'* (திவ்.திருவாய், 1,4,5.) **6.** நாடு (சூடா.); country, district. **7.** நாட்டின் கூறு; division of a country. *'நாவலந்தண்பொழில்'* (பெரும்பாண்.465.)

*[புல்→ பொல் → பொலி → பொழி + பொழில்]*

**பொழிலகம்** *poḻilakam,* பெ. (n.) *பொழில்,* **3.**பார்க்க; see *poḻilakam.* *'அணிமலர் பூம்பொழிலகவையின்'* (மணி.பதி.38.)

*[பொழில் + அகம்]*

**பொழிவு** *poḻivu,* பெ. (n.) **1.** பொழிகை; flowing; raining. *'பொழிவொழியாப் பூஞ்சோலை'* (பெரியபு. திருநாளைப்.3) **2.** நிறை (வின்.); afflubence. **3.** பெருகுதல் (வின்.); increase, as of revenue. **4.** ஊதியம்; profit, advantage.

*[பொழி + பொழிவு]*

**பொழிற்பாயல்** *poḻiṟpāyal,* பெ. (n.) சோலையிடத்துப் படுக்கை; bed in park. *'ஆராக் காம மலர்பொழிற் பாயல்'* (பரிபா.8.40.)

*[பொழில் + பாயல்]*

**பொழுசாய்—தல்** *poḻu-šāy-,* பெ. (n.) பொழுது சாய்தல்; Sunset.

*[பொழுது → பொழு+ சாய்—,தல்]*

**பொழுதறுதி**[1] *poḻudaṟudi,* பெ. (n.) கதிரவன் மறையும் வேளை; time of sunset

**பொழுதறுதி**[2] *poḻudaṟudi,* (adv.) முழுநாளும், (கொ.வ.) whole day. *'பொழுதறுதி வேலை செய்ததேன்'*

*[பொழுது + அறுதி]*

**பொழுதிருக்க** *poḻudirukka,* வி.எ. (adv.) கதிரவன் மறைவதற்கு முன்; just before sunset, while it is still day. *'பொழுதிருக்க வந்தேன்'*

*[பொழுது +இரு → இருக்க]*

**பொழுதிற்கூடல்** *poḻudir-kūḍal,* பெ. (n.) *பொழுதொடுபுணர்தல்* (சூடா.) பார்க்க; see *polutodupūnaṟtal.*

*[பொழுது → பொழுதில் + கூடல்]*

**பொழுதிறங்கு—தல்** *poludirangudal-,* பெ. (n.) கதிரவன் மறையும்நேரம்; sunset.

*[பொழுது + இறங்குதல்]*

**பொழுது** *poludu,* பெ. (n.) **1.** காலம்; time. *'இகல்வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது'* (குறள்,481.) **2.** தக்கசமயம்; oppurtunity. **3.** வாழ்நாள்; lifetime *'பொழுதளந்தறியும் பொய்யா....காண்கையர்'* (முல்லைப்.55.) **4.** கணம்; moment of time. *'ஒருபொழுதும் வாழ்வ தறியார்'* (குறள்,337.) **5.** சிறுபொழுது பெரும்பொழுதுகள்; (சிலப்.பதிக.உரை.)division of time, of two kinds; viz., ciru-poludu, peru-m-polutu. **6.** கதிரவன் (பிங்.); sun *'பொழுது போய்ப் பட்டபின்றை'* (சீவக.1747.)

*[போது + போழ்து + பொழுது]*

**பொழுதுகட்டுதல்** *poludu-kattudal,* பெ. (n.) மழைக்குறியாக முகிலால் கதிரவன் மறைப்புண்ணுகை; cloudy sky, as a sign of rain.

*[பொழுது + கட்டுதல்]*

**பொழுதுகண்டிரங்கல்** *poludu-kandirangal,* பெ. (n.) பிரிவாற்றாத தலைவி மாலைப் பொழுதுகண்டு வருந்துகை (குறள்,அதி,123.) (akap.) theme describing the pining of a maiden at eventide for her absent lover.

*[பொழுது + கண்டு + இரங்கல்]*

**பொழுது காணுதல்** *poludu-kāṇudal,* பெ. (n.) **1.** *பொழுது புறப்படுதல்* (வின்.); பார்க்க; (w.) see *poludu-purappadudal.* **2.** சாலம் போதியதாகை; sufficiency of time.

*[பொழுது + காணுதல்]*

**பொழுதுசாய்தல்** *poludu-šāydal,* பெ. (n.) ***பொழுதிறங்குதல்.*** பார்க்க, see *poludu-irangudal*

*[பொழுது + சாய்தல்]*

**பொழுதுசோறுசாப்பிடு—தல்** *poludu-šōru-šāppidu-,* செ.கு.வி. (v.i.) கதிரவன் மறையுமுன் உண்ணுதல்; to take food before sunset. *'ஞாயிற்றுக்கிழமையாதலால் பொழுது சோறு சாப்பிட்டேன்'* (நாஞ்.)

[பொழுது + சோறு + சாப்பிடு—]

**பொழுதுதயம்** *polududayam,* பெ. (n.) கதிரவன் தோற்றம்; rising of the sun.

*[பொழுது + உதயம்]*

Skt. udaya→த. உதய

**பொழுதுதாழ்த்து—தல்** *poludu-tālttu,* செ.கு.வி. (v.i.) **1.** காலம் நீட்டித்தல்; to be late, behind time. **2.** காலம் போக்குதல் (யாழ்ப்.); to while away time.

*[பொழுது + தாழ்த்து—]*

**பொழுதுதிரும்பல்** *poludu-tirumbal,* பெ. (n.) கதிரவன் உச்சியினின்று சாய்கை; the sun's passing beyond the meridian

*[பொழுது + திரும்பல்]*

**பொழுதுதிரும்பி** *poludu-tirumbi,* பெ. (n.) பொழுதுவணங்கி; sun flower plant.

*[பொழுது + திரும்பி]*

**பொழுதுபடுதல்** *poludu-padutal,* பெ. (n.) *பொழுதிறங்குதல்* பார்க்க; see *poludirangudal.*

*[பொழுது + படுதல்]*

**பொழுதுபுகுதல்** *poḻudu-pugudal,* பெ. (n.) *பொழுதிறங்குதல்* பார்க்க; see *poḻudiṟaṅgudal.*

*[பொழுது + புகுதல்]*

**பொழுதுபுறப்படுதெல்** *poḻutu-purappadutal,* பெ. (n.) கதிரவன் தோற்றுதல்; sunrise.

*[பொழுது + புறப்படு]*

**பொழுதுபூதல்** *poḻudu-pūdal,* பெ. (n.) பொழுதுபுகுதல்; Sunset.

*[பொழுது + புகுதல் → பூதல்]*

**பொழுதுபோக்கு—தல்** *poḻudu-pōkku,* செ.கு.வி. (v.i.) **1.** காலங்கழித்தல்; to pass away time. spend time in recreation. **2.** சோம்பிக் கழித்தல் (யாழ்ப்.); to idle, while away.

*[பொழுது + போக்கு—,தல்]*

**பொழுதுபோக்கு**[2] *poḻutu-pōkku,* பெ. (n.) **1.** காலங் கழிக்கை; spending of time. '*நிற்பரவுபூசையினும் பொழுதுபோக்கெனக் கருள் புரிவாய்*' (சிவப்.பிரபந். சோண.29.). **2.** இளைப்பாறும் பொருட்டு விளையாடுகை; recreation.

*[பொழுது + போக்கு]*

**பொழுதுபோக்குப்பேச்சு** *pōlutu-pōkku-p-patchu,* பெ. (n.) சிற்றுரையாடல்; trival talk.

*[பொழுது + போக்கு + பேச்சு]*

**பொழுதுபோதல்** *poḻudu-pōdal,* பெ. (n.) **1.** *பொழுதிறங்குதல்* பார்க்க; see poḻudiṟaṅgudal. **2.** காலங்கழிக்கை; whiling away time.

*[பொழுது + போதல்]*

**பொழுதுமறை** poḻudu-maṟai, பெ. (n.) மாலை; evening. '*புட்டகந்தன்னைப் பொழுதுமறை புக்கும்*' (பெருங்.2:9:26.)

*[பொழுது + மறை]*

**பொழுதுவணங்கி** poḻudu-vaṇaṅgi, பெ. (n.) *சூரியகாந்தி* பார்க்க; see suriyakānti sunflower.

*[பொழுது + வணங்கி]*

**பொழுதுவிடிதல்** poḻudu-viḍidal, பெ. (n.) *பொழுது விடியல்* பார்க்க; see poḻudu-viddyal

*[பொழுது + விடிதல்]*

**பொழுதுவிடியல்** poḻudu-viḍiyal, பெ. (n.) விடியற்; break of day,

*[பொழுது + விடியல்]*



**பொழுதுவிடு—தல்** poḻutu-vidu-, செ.கு.வி. (v.i.) *பொழுது போக்கு—,* (யாழ்.அக.) பார்க்க; see *poḻutu-pōkku.*

*[பொழுது + விடுதல்]*

**பொழுதூர்தல்** poḻudūrdal, பெ. (n.) சாயுங்காலமாகை (இ.வ.); becoming dusk.

*[பொழுது + ஊர்தல்]*

**பொழுதேறுதல்** *poḻudēṟudal,* பெ. (n.) காலங்கழிகை; elapsing of time.

*[பொழுது + ஏறுதல்]*

**பொழுதொடுபுணர்தல்** *poḻutoḍu-puṇardal,* பெ. (n.) வணிகர் குணங்கள் எட்டனுள் செயல்களைக் காலத்திற் கேற்பக்கொண்டு நடத்துகை. (பிங்.); adapting oneself to the times, one of eight virtues of the merchant-caste.

*[பொழுது → பொழுதொடு → புணர்தல்]*

**பொழுதோடு** *poḻudōḍu,* (adv.) 1. மறையுமுன்; just before sunset. 2. தகுதியான காலத்தில்; in time.

*[பொழுது → பொழுதோடு]*

**பொள்**[1] *poḷ,* பெ. (n.) உட்டொளை (பிங்.); hole.

*[புல் → பொல் → பொள்]*

**பொள்**[2] *poḷ,* பெ. (n.) *பொள்ளெனல்* (திவா.) பார்க்க; see *poḷḷeṉal.*

*[பொள் → பொள்ளெனல்]*

**பொள்ளல்** *poḷḷal,* பெ. (n.) 1. துளைக்கை; boring a hole. 2. பொளிகை; chiselling, as a stone. 3. துளை; hole, rent, fissure, puncture. '*பொள்ளலாக்கை யகத்தில்*' (தேவா.262,5.) 4. மரப்பொந்து. hollow in a tree. (பிங்.); 5.அம்மைவடு; pocks, in small - pox. 6. அப்பவகை. pastry. (பிங்.); 7. கொப்புளம்; blister, swelling 8. குற்றம்; failure, fault, defect, as a puncture '*காரியம் பொள்ளலாய்ப் போயிற்று*'

*[புல் → பொல் → பொள் → பொள்ளல்]*

**பொள்ளாமணி** *poḷḷāmaṇi,* பெ. (n.) *பொல்லா மணி.* பார்க்க; see *pollāmaṇi*

*[பொள் + ஆ + மணி]*

*'ஆ'–எ.ம.இ.*

**பொள்ளு**[1]**–தல்** *poḷḷu,* செ.குன்றாவி. (v.t.) 1. துளைத்தல்; to bore make a hole. 2. பொளிதல்(வின்.); to hew, chisel

**பொள்ளு**[2]**–தல்** *poḷḷu,*செ.கு.வி. (v.i) 1. கொப்புளம் உண்டாதல்; to blister, to sell. '*எண்ணெய்ச்சுடர்,விழுந்து கை பொள்ளி விட்டது*' 2. கிழிதல் (வின்.); to be rent or torn,

*[பொள் → பொள்ளு → பொள்ளுதல்]*

**பொள்ளெனல்** *poḷ-ḷ-eṉal,* பெ. (n.) விரைவுக்குறிப்பு; onom expr.signifying suddenness. '*தன்னகல மெல்லாம் பொள்ளென வியர்த்து*' (சீவக.256.)

*[பொள் + எனல்]*

**பொள்ளை** *poḷḷai,* பெ. (n.) தொளை; hole. '*பொள்ளைக்கரத்த போதகத்தின்*' (திவ்.பெரியதி.5,1,2.)

*[பொள் → பொள்ளை]*

**பொளி[1]–தல்** *poḷi-,* செ.குன்றாவி. (v.t.) 1. உளியாற் கொத்துதல்; to chisel, pick. *'கல்பொளிந்தன்ன'* (மதுரைக்.482.) 2. பிளத்தல்; to split, as a stone. *'பொளிந்து திண்சிலை'* (விநாயகபு.22,43.) 3. இடித்தல்; to beat so as to break; to dig. *'கற்றரையைப் பொளிந்து பண்ணின கிடங்கினையுடைய'* (மதுரைக்.730, உரை) 4. துளைசெய்தல் (வின்.); to make holes, to open, puncture, as a blister.

**பொளி[2]–தல்** *poḷi-,*–செ.கு.வி. (v.i.) 1. ஓட்டையாதல்; to be perforated punctured. *'கண்டவிடமெங்கும் பொளிந்து'* (ஈடு, 4,1,1.) 2. பள்ளாமதல் (இ.வ.); to become dented

*[பொள் → பொளி → பொளிதல்]*

**பொளி[3]–த்தல்** *poḷi-,* செ.குன்றா.வி. (v.t.) 1. துளைசெய்தல்; to bore, perforate, puncture. *'மாடத்தாங்கட் சாளரம் பொளித்த கால்போகுபெருவழி'* (மணிமே.4,52.) 2. கிழித்தல்; to tear into strips, as fibre. *'களிறு..... ஆச்சாவைப் பிளந்து அந்நாரைப் பொளித்து'* (தொல்.பொ.231,உரை).

*[பொள் → பொளி → பொளி-]*

**பொளி[4]** *poḷi,* பெ. (n.) 1. உளியாலிட்ட துளை; hole made with a chisel; mortise. 2. மண்வெட்டியின் வெட்டு (யாழ்.அக.); depression left in the earth by a hoe or shovel. 3. பாய்முடைவதற்கு வகிர்ந்து வைக்கும் ஓலை; strip of ola, prepared for braiding into mats. *'சிறுபொளிப்பாய்'* (nāñ). 4. *பொளிமண்* பார்க்க; see *poḷimaṉ*

*[பொள் → பொளி]*

**பொளி[5]** *poḷi,* பெ. (n.) *பொழி* பார்க்க; see *poḻi* *'பொளியை வெட்டி இரண்டு தளையும் ஒன்றாக்கினான்'*

*[பொலி → பொழில் → பொழி → பொளி]*

**பொளிமண்** *poḷi-maṉ,* பெ. (n.) மண்வெட்டியாற் புல்லோடு சேர்த்தெடுத்த வரப்புமண் (வின்.); hoe-full or shorel-full of earth, piece of turf.

*[பொளி + மண்]*

**பொளிரேகை** *poḷi-rēgai,* பெ. (n.) பார்க்க, *பொளிவாய்* பார்க்க; see *poḷivāy.*

*[பொளி → SKṭ. rekhā. த.பொளிவு]*

**பொளிவாய்** *poḷi-vāy,* பெ. (n.) உளிமுதலிய கருவியால் வெட்டப்பட்டகாடி(இ.வ.); groove; hollow cut by a tool; mortise.

*[ பொளி + வாய்]*

**பொளிவு** *poḷivu,* பெ. (n.) பொளிகை (வின்.); picking, as a millstone; chiselling, hewing.

*[பொளி → பொளிவு]*

**பொற்கசை** *poṟ-kasai,* பெ. (n.) பொன்கம்பி. (யாழ்.அக.); gold wire.

*[பொள் + கசை]*

**பொற்கட்டி** *poṟ-katti,* பெ. (n.) தங்கக்கட்டி; nugget, ingot of gold. *'காய்ச்சச் சுடர் விடும் பொற்கட்டிபோல்'* (தாயு.பராபர.354.)

*[பொன் + கட்டி]*

**பொற்கடுக்காய்** *por-kaḍukkāy,* **பெ.** (n.) பொன்னிறமான மஞ்சள் கடுக்காய்; yellow gall nut.

*[பொன் + கடுக்காய்]*

**பொற்கண்** *por-kaṉ,* **பெ.** (n.) பொன்னால் செய்யப்பட்ட கண்; golden eye.

நேர்த்திக் கடனுக்காகத் தெய்வத் திருமேணிக்கு அணிவிக்கச் செய்யப்படும் கண்ணடக்கம்.

*[பொன் + கண்]*

**பொற்கண்டை** *por-kaṇṇdai,* **பெ.** (n.) *பொற்கெண்டை* (யாழ்.அக.) பார்க்க; see *por-kaṇḍai*

*[பொன் + கெண்டை → கண்டை]*

**பொற்கண்ணி** *por-kaṇṇi,* **பெ.** (n.) பொன்னாங்கண்ணி; sessile plant-Illecebrm sessile.

**பொற்கணக்கு** *por-kaṇakku,* **பெ.** (n.) பொன்னிறையளவு(வின்.); table of weights for precious metals; troy weight

*[பொன் + கணக்கு]*

**பொற்கம்பி** *por-kambi,* **பெ.** (n.) தங்கக் கம்பி; gold wire. "*பொற் கம்பியினை யொத்த.... நரம்பினது*" (சிறுபாண். 34, உரை.)

*[பொன் + கம்பி]*

**பொற்கரை** *por-karai,* **பெ.** (n.) பொன்னிழை; gold lace."போர்த்திய பொற்கரைவெண் பட்டு" (து.வ.)

*[பொன் + கரை ]*

**பொற்கலசம்** *por-kalašam,* **பெ.** (n.) **1.** கோபுரம் முதலியவற்றின் மேல் வைக்கும் பொன்னாலாகிய கும்பம்; pot-shaped finial of gold, as an ornament on a tower. **2.** பொன்ஏனம் (கிறித்.); golden vial, golden vessel.

*[பொன் + கலசம்]*

**பொற்கலம்** *por-kalam,* **பெ.** (n.) **1.** பொன் ஏனம்; golden vessel "*பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான்புழுக்கல்*" (நாலடி, 206) **2.** பொன்னாலியன்ற அணிகலன்; Golden ornament.

*[பொன் + கலம்]*

**பொற்கலன்** *porkalaṉ,* **பெ.** (n.) *பொற்கலம்,* பார்க்க see *por-kalam.* "*பொன்னிற் பிறிதாகிய பொற்கலனே*" (கம்பரா. இரணிய. 112)

*[பொன் + கலன்]*

**பொற்கலனிருக்கை** *por-kalaṉ-irukkai,* **பெ.** (n.) *பொற்பண்டாரம்* (பிங்.) பார்க்க; see *porpaṇḍāram.*

*[பொன் + கலன் + இருக்கை]*

**பொற்கலியாணம்** *por-kaliyāṉam,* **பெ.** (n.) மணநாள் தொடங்கி ஐம்பதாண்டு முடிந்தவன்று கணவனும் மனைவியும் கொண்டாடும் சடங்கு (கிறித்.); Golden jubilee of a wedding.

*[பொன் + கலியாணம்]*

**பொற்காசுகம்** *por-kāšugam,* **பெ.** (n.) கொள்ளுக்கொடி; horse-gram creeper.

*[பொன் + காசுகம்]*

**பொற்காசு** *por-kāšu,* பெ. (n.) **1.** பொன்னால் செய்யப்பட்ட பணம் (திவா.); gold Coin. **2.** *கொள்* (மலை.) பார்க்க; see *kol* Horse-gram.

*[பொன் + காசு]*

**பொற்காப்பு** *por-kāppu,* பெ. (n.) பொன்னால் செய்யப்பட்ட வளை; gold bangle, braselet. '*பொற்காப்புக்கு ஆசைப்பட்டுப் புலியின் கையில் அகப்பட்டது போல*' (பழ.)

*[பொன் + காப்பு]*

**பொற்காரை** *por-kārai,* பெ. (n.) பொன்னாலியன்ற கழுத்தணிவகை (சங்.அக.); a gold necklet.

*[பொன் + காரை]*

**பொற்கிடுகு** *por-kidugu,* பெ. (n.) பொன்னாலாகிய மேற்றட்டி; a roof which made by gold. 'பொற்கிடுகு செறிந்த போர்வை முற்றி' (பெருங்.1:34:135)

*[பொன் + கிடுகு]*

**பொற்கிழி** *por-kili,* பெ. (n.) சீலையின் முடிந்த தங்கக் காசுப்பொதி; gold or gold coins tied up in a piece of cloth. "*கையுறை வேலானீந்த பொற்கிழி*" (திருவிளை தருமிக். 81.)

*[பொன் + கிழி]*

**பொற்குறு சுண்ணம்** *porkuru-sunnam,* பெ. (n.) பொற்பொடி; powder of gold '*முத்து மணியும் பொற்குறு சுண்ணமும்*' (பெருங்.1:42:92)

**பொற்கூடம்** *por-kūdam,* பெ. (n.) ஏமகூடம்; a mountain to the north of the Himālayas. '*பொற்கூடஞ் சென்றுறுதி*' (கம்பரா. மருத்து.24.)

*[பொன் + கூடம்]*

**பொற்கெண்டை** *por-kendai,* பெ. (n.) *பொற்சரிகை.* (யாழ்.அக.) பார்க்க; see *por-carigai*

*[பொன் + கெண்டை]*

**பொற்கெனல்**[1] *por-kenal,* பெ. (n.) பொன்னிறமுடையதாதற் குறிப்பு; expr. of being or becoming golden in colour. '*பன்மலர் பொற்கெனும் பரிசு*' (தணிகைப்பு. நகர. 37.)

*[பொன் → பொற்கு + எனல்]*

**பொற்கெனல்**[2] *por-kenal,* பெ. (n.) விரைவுக்குறிப்பு; onom expr of suddenness. '*பொற்கென் றெழுந்து முத்தந்தந்து*' (கனம் கிருஷ்ணையர்.கீர்த்.17)

*[பொருக்கெனல்→ பொற்கெனல்]*

**பொற்கைப் பாண்டியன்** *por-kai-p-pandiyan,* பெ. (n.) இரவில் பார்ப்பனி யொருத்தியின் வீட்டுக் கதவைத் தட்டிப் போந்த குற்றத்திற்காகத் தன் கை குறைத்து, அக்கைக்குப் பகரமாகப் பொற்கை பூண்ட பாண்டிய வேந்தன் (தொல். பொ. 89, இளம்பூ.) a pandiyan, who is said to have punished himself for knocking at the door of a Brahmin woman's house during his nightly rounds by cutting off his hand and obtained a golden hand instead.

*[பொன் + கை + பாண்டியன்]*

**பொற்கொல்லன்** *por-kollan*, பெ. (n.) பொன் செய் கொல்லன் பார்க்க; see *pon-šey-kollan*. '*பொற்கொல்லராயிர வரைக் கொன்று*' (சிலப்.பதி. உரைபெறு கட்டுரை, 1)

*[பொன் + கொல்லன்]*

**பொற்கோபிதம்** *por-kopbidam*, பெ. (n.) மஞ்சள் வெற்றிலை; yellow betel leaf tree bearing yellow fragrant flowers.

**பொற்கோயில்** *por-kōil*, பெ. (n.) பொன்னால் வேயப்பட்டகோயில். (அமிரிதசரசு கோயில்); temple which has golden roof.

*[பொன் + கோயில்]*

**பொற்கோள்** *por-kōl*, பெ. (n.) வியாழக்கோள்; the planet jupiter '*எரிபசும் பொற்கோள் வந்து*' (திருவிளை. உக்கிரதிருவவ.11.)

*[பொன் + கோள்]*

**பொற்சபை** *por-cabai*, பெ. (n.) தில்லையிலுள்ள பொன்னம்பலம். (சங்.அக.) The Golden Hall at chidambaram.

*[பொன் + →சுவை→ சபை]*

**பொற்சரக்கு** *por-carakku*, பெ. (n.) உயர்ந்த பண்டம்; goods of the highest quality, valuable as gold.

*[பொன் + சரக்கு]*

**பொற்சரடு** *por-caradu*, பெ. (n.) பொற்கம்பியாற் பின்னிய கழுத்தணி வகை (இ.வ.); necklace made by plaiting gold threads.

*[பொன் + சரடு]*

**பொற்சரிகை** *por-carigai*, பெ. (n.) ஆடைக்கரை முதலியவற்றிற் சேர்க்கப்படும் பொன்னாலமைந்த இழை; Gold thread, gold fringe "*செம்பொற்சரிகை வேலையிட்டு*" (தனிப்பா.1,260)

*[பொன் + U.zari. த. சரிகை]*

**பொற்சாமம்** *por-cāmam*, பெ. (n.) கொன்றை; a cassia.

**பொற்சாயல்** *porcāyal*, பெ. (n.) உடம்பின் பொன்மேனி; glittering body.

*[பொன் + சாயல்]*

**பொற்சிலை** *por-cilai*, பெ. (n.) 1. பொன்னாலான படிமை; golden image. 2. பொன்மயமான மலை; mt. Mēru, as golden. (மகாமேரு)

*[பொன் + சிலை]*

**பொற்சின்னம்** *por-cinnam*, பெ. (n.) போர்க்குச் செல்லும் வீரர் வாயிலிட்டுக் கொள்ளும் பொற்றுண்டு. (சீவக.2303, உரை.) small piece of gold put by warriors in their mouths when going to war.

*[பொன் + சின்னம்]*

**பொற்சீந்தில்** *por-cintil*, பெ. (n.) 1. நற்சீந்தில்(M.M.); a superior kind of gulancha. 2. சீந்தில்வகை (L.); woolly heart-leaved moon-seed, m.d.

*[பொன் + சீந்தில்]*

**பொற்சுண்ணம்** *poṟ-cuṇṇam*, பெ. (n.) 1. விழாக்களில் மக்கள் உடலின்மீது தூவப்படும் நறுமணப்பொடி (திருவாச.9.1.); perfumed powder strewn upon persons on great occasions. 2. உடம்பில் அப்பிக் கொள்ளுதற்கு உரிய பொற்றூள்; gold dust used in smearing the body for adornment. '*பைம் பொற்சுண்ண மிலங்கமெய்ம் முழுதுமப்பி*' (சீவக. 2189.)

*[பொன் + சுண்ணம்]*

**பொற்சூட்டு** *poṟ-cūṭṭu*, பெ. (n.) நெற்றிப்பட்டம்; a golden plate worn on the forehead. '*செம்பொற் சூட்டொடு கண்ணி..... அருளி*' (சீவக. 2569.)

*[பொன் + சூட்டு]*

**பொற்ப**[1] *poṟpa*, வி.எ. (adv.) பொலிவுபெற, beautifully, elegantly. '*திருமணி.... சென்னி பொற்ப*' (திருமுரு.85)

**பொற்ப**[2] *poṟpa*, இடை. (part.) ஓர் உவமச் சொல்; a term of comparison. '*மதியம் பொற்ப மலர்த்த வாண்முகம்*' (தொல். பொ.286, உரை.)

**பொற்படி** *poṟ-paḍi*, பெ. (n.) பொன்னுலகம்; svarga, as the golden world. '*நற்றிரம் புரிந்தோர் பொற்படி யெய்தலும்*' (சிலப்.30,136.).

*[பொன் + படி ]*

**பொற்படை** *poṟ-paḍai*, பெ. (n.) குதிரை, யானை முதலியவற்றின் மேலீடு; golden trappings, as of a horse or elephant. '*வேழமிரு நூறும்.... புனைசெம் பொற்படையே யணிந்து*' (சீவக.2174.)

*[பொன் + படை]*

**பொற்பண்டாரம்** *poṟ-paṇḍāram*, பெ. (n.) பொன்னும் பொற்கலங்களும் வைக்கும் கருவூலம், (பிங்.); treasury of jewels and gold.

*[பொன் + பண்டாரம்]*

**பொற்பணிதி** *poṟ-paṇidi*, பெ. (n.) பொன்னணி(வின்.); jewel of gold.

*[பொன் + பணி → பணிதி]*

'தி' சொல்லாக்க ஈறு

**பொற்பலகை** *poṟ-palagai*, பெ. (n.) வழிபாட்டுக்குரிய தெய்வ உருவங்களை எடுத்துச் செல்லுதற்குரிய ஒப்பமைப்பலகை; ornamental plank for carrying idols. '*பொற்பலகை யேறிவந்து பூங்கோயி லெய்தினான்*' (சிவக். பிரபந். தஞ்சைப் பெருவுடையாருலா.312.)

*[பொன் + பலகை]*

**பொற்பாதம்** *poṟ-pādam*, பெ. (n.) திருவடி; gold like foot of a great person, a term used in reverence '*தரணி நிவந்தளிப்ப நீட்டிய பொற்பாதம்*' (திவ்.இயற்.2,78)

*[பொன் +பாதம்]*

**பொற்பாவை** *poṟ-pāvai*, பெ. (n.) 1. பொன்னாலான படிமை; golden puppet. 2. அழகிய பெண்; beautiful woman. '*நன்மலர் மேற் பொற்பாவாய்*' (நாலடி,266.)

*[பொன் + பாவை]*

**பொற்பாளம்** *poṟ-pāḷam*, பெ. (n.) பெரிய பொற்கட்டி(வின்.); bar of gold, bullion.

*[பொன் + பாளம்]*

**பொற்பாளை** *por̤-pāḷai,* பெ. (n.) நெல்வகை (குருகூர்ப்.58); a kind of paddy.

**பொற்பி–த்தல்** *por̤pi-,* செ.குன்றாவி. (v.t.) ஒப்பனை செய்தல் (அலங்கரித்தல்); to beautify, adorn. '*சுருளோதி சிகழிகையாகப் பொற்பித்தார்*' (பிரமோத். 9,19.)

*[பொன் + பு = பொற்பு → பொற்பி]*

'பு' சொல்லாக்க ஈறு

**பொற்பிதிர்** por̤-pidir, பெ. (n.) பசலை; beauty spots on a woman's person. '*பொற்பிதி ரணிந்து வீங்கும் புணர்முலை*' (கூர்மபு அநுக்.6.)

*[பொன் + பிதிர்]*

**பொற்பிரகாசம்** *por̤-pirakasam,* பெ. (n.) *பொன்மயம்,* (யாழ்.அக.) பார்க்க; see *ponmayam*

*[பொன் +* Skt. pra-Kāsa. *த.பிரகாசம்]*

**பொற்பின்னல்** *por̤-pin̲n̲al,* பெ. (n.) பொற்கம்பியாற் பின்னிய அரைஞாண்; waist-band woven of gold threads. '*திருவரையில் சாத்தின பொற்பின்னலும்*' (திவ். பெரியாழ். 1,7,3,வ்யா. பக்.142)

*[பொன் + பின்னல்]*

**பொற்பு** *por̤pu,* பெ. (n.) 1. அழகு; (பிங்.) beauty, gracefulness elegance. '*பொற்புடை யரக்கி* (கம்பரா.சூர்ப்ப.68.) 2. ஒப்பனை (பிங்.); decoration; embellishment 3. பொலிவு; magnificence, excellence '*மகடூஉ மடன்மேற் பொற்புடை நெறிமை யின்மையான*' (தொல்.பொ.35.) 4. மிகுதி. (திவா.); abundance, plenty. '*புண்ணின் பொற்பை*' (ஞானா.43,8.) 5. தன்மை; nature, quality, '*அகமலரின் வைத்துப் போற்றும் பொற்பினார்*' (பெரியபு.பெருமிழ.3.)

*[பொன் + பு = பொற்பு]*

'பு' சொல்லாக்க ஈறு

**பொற்புவி** *por̤-puvi,* பெ. (n.) *பொற்படி* பார்க்க; see *porpaḍi.* '*சரபங்கனினிதேறப் பொற்புவி கொடுத்த புகழ் போற்றிடுதும்*' (சேதுபு. இராமனருச்.63.)

*[பொன் +* Skt. bhuvi. *த.புவி]*

**பொற்புறுத்து–தல்** *por̤-puruttu-,* செ.குன்றா.வி. (v.t.) ஒப்பனைசெய்தல் (பிங்.) to adorn.

*[பொற்பு + உறுத்து–]*

**பொற்பூ**[1] *por̤-pū,* பெ. (n.) 1. *தங்கப்பூ* பார்க்க; see *taṅga-p-pū* golden flower. 2. பாணர்க்கு அரசர் சூடவளிக்கும் தாமரையுருவான பொன்னணி வகை. (பொருந.159,கீழ்க்குறிப்பு.); grnamental lotus flower, made of gold and presented to a bard by a king.

*[பொன் + பூ]*

**பொற்பூ**[1] *por̤-pū,* பெ. (n.) பழைய வரிவகை (M.E.R. 217 of 1927–8) an ancient tax

**பொற்பூச்சு** *por̤-pūccu,* பெ. (n.) பொற்குழம்பு பூசுகை(வின்.); gilding. 2. பொன்னின் அரக்கு; gold foil.

*[பொன் + பூச்சு]*

**பொற்பூண்** *por-pūṇ,* பெ. (n.) பொன்னால் செய்யப்பட்ட அணி; golden ornament, jewel.

*[பொன் + பூண்]*

**பொற்பூணூல்** *por-pūṇūl,* பெ. (n.) பொன்னாலான பூணூல் (இ.வ.) ; sacred thread of gold, used as an ornament.

*[பொன் + பூணூல்]*

**பொற்பொது** *por-podu,* பெ. (n.) *பொற்சபை,* பார்க்க; see *porcabai* '*பொருவிடைப்பாகர் மன்னும்பொற்பொதுவதனுட் புக்கார்*' (பெரியபு.இயற்பகை. 34.).

*[பொன் + பொது]*

**பொற்ற** *porra,* பெ. (n.) 1. பொன்னாலாகிய; golden. '*பொற்ற மாளிகை*' (விநாயகபு.75,126.) 2. சிறந்த; good, excelent, fine. '*பொற்ற சுண்ணமெனப் புகழ்ந்தார்*' (சீவக.885.)

*[பொல் → பொற்ற]*

**பொற்றகடு** *porragadu,* பெ. (n.) 1. *பொற்சின்னம்* பார்க்க; see *porcinnam* '*பொற்றகடு தம்வாயுளிட்டு*' (சீவக.778,உரை.) 2. பொன்னின் மெருகுத்தாள் (இ.வ.); gold foil.

*[பொன் + தகடு]*

**பொற்றட்டம்** *porrattam,* பெ. (n.) பொன்னாலாகிய தட்டுப் போன்ற பூ; golden broad petalled, '*வண்பொற் றட்டமலர்ந்த வாதலின்*'

*[பொன் + தட்டு → தட்டம்]*

**பொற்றட்டான்** *porrattān,* பெ. (n.) பொன்செய்கொல்லன்(வின்.); goldsmith.

மறுவ. பொற்கொல்லன்

*[பொன் + தட்டான்]*

**பொற்றலை** *porralai,* பெ. (n.) *பொற்றலைக் கையாந்தகரை* (பதார்த்த.) பார்க்க; see *porrlai-k-kaiyāndagarai.*

*[பொன் + தலை]*

**பொற்றலைக்கரிப்பான்** பெ. (n.) *porralai-k-karippāṇ, பொற்றலைக்கையாந்தகரை.* (சங்.அக.) பார்க்க; see *porrlai-k-kaiyāndagarai.*

*[பொற் + தலை + கரிப்பான்]*

**பொற்றலைக்கையாந்தகரை** *porralaikkayāntakarai,* பெ. (n.) மருந்துப்பூடு வகை; ceylon verbesina, m.cl. (பதார்த்த.361.)

*[பொற்றலை + கையாந்தகரை]*

**பொற்றாது** *porrādu,* பெ. (n.) பொற்றலைக் *கையாந்தகரை* (மலை.) பார்க்க; see *porralai-k-kayantakarai*

*[பொன் + தாது]*

**பொற்றாப்பு** *porrāppu,* பெ. (n.) மயிலாப்பூர்த் திருக்கோயிலில் நடைபெறும் ஊஞ்சல் திருவிழா. a festival in the šiva shrine at Mylapore '*கபாலீச்சரமமர்ந்தான் பொற்றாப்புக் காணாதே போதியோ*' (தேவா.1119,8.).

*[பொன் + தாம்பு]*

**பொற்றாமரை** *porrāmarai,* பெ. (n.) 1. பொன்வண்ணமுளரி; golden lotus, as of svarge. '*பொற்றாமரை யடியே போற்றும் பொருள் கேளாய்*' (திவ். திருப்பா. 29) 2. மதுரைக் கோயில் முதலிய திருவிடங்களில் உள்ள பொய்கை; sacred tank, as in the temple at Maduri. '*தலைச் சதி பொற்றாமரை*'

(தேவா. 435, 10) **3.** பொற்பூ பார்க்க; see por̠-pū *'பைம் பொற்றாமரை பாணர்ச்சூட்டி'* (பதிற்றுப். 48)

*[ பொன் + தாமரை ]*

**பொற்றாரை** *porr̠ārai,* பெ. (n.) *பெற்றோரை* (சீவக. 2132, பி–ம்) பார்க்க; see *porr̠ōrai.*

*[ பொன் + தாரை ]*

**பொற்றாலம்** *porr̠ālam,* பெ. (n.) *பொற்படி* பார்க்க; see *por̠-paḍi. 'பொற்றாலத்தமரர்'* (சேதுபு. திருநாட். 14)

*[ பொன் + தாலம் ]*

**பொற்றாலி** *porr̠āli,* பெ. (n.) மங்கல அணி; marriage badge of gold.

*[ பொன் + தாலி ]*



**பொற்றாவல்லி** *porr̠āvalli,* பெ. (n.) *சீந்தில்* (சங்.அக.) பார்க்க; see *cīndil*

**பொற்றி** *porr̠i,* பெ. (n.) *எருமைப்பாற் சொற்றி* (மூ.அ) பார்க்க; see *erumaippār̠-corr̠i,* a species of the plant rucllia.

**பொற்றேகராசன்** *porr̠ēga-rāšan̠,* பெ. (n.) பொற்றலைக் கையாந்தகரை (தைலவ. தைல.) பார்க்க; see porr̠alai-k-kaiyāntakarai

*[ பொன் + Skt. dōha. த.இராசன் ]*

**பெற்றேரை** *porr̠ērai,* பெ. (n.) பொற்றோரை (சீவக. 2132, பி. ம்) பார்க்க; see porr̠orai

*[ பொன் + தோரை → தேரை ]*

**பொற்றை** *porr̠ai,* பெ. (n.) **1.** சிறுமலை; hillock, mound. *'பொற்றைமால் வரைகளோ வென் புயநெடும் பொருப்பு மம்மா'* (கம்பரா. இலங்கைகாண். 22) **2.** கற்பாறை; (திவ். திருச்சந். 52, வ்யா) rock. **3.** மலை; mountain. *'பொற்றையுற் றெடுத்தான்'* (தேவா. 1218, 10) **4.** சிறுதூறு (அக.நி); bush, low jungle. (அரு.நி) **5.** காடு;(திவ். திருச்சந்த 52, வியா) forest. **6.** கரிகாடு; burnt jungle.

*[ பொறை → பொற்றை ]*

**பொற்றொட்டி** *porr̠oṭṭi,* பெ. (n.) கொடிய நஞ்சு வகை (வின்.); arsenic

**பொற்றொடி** *porr̠oḍi,* பெ. (n.) **1.** பொன்னாலாகிய தோள்வளை; golden bracelet. *'பொற்றொடித் தோட் பையரவல்குன் மடந்தை நல்லீர்'* (திருவாச. 9, 12) **2.** பெண் (பொன் தோள் வளை அணிந்தவள்); woman, as wearing golden bracelets. *'பிரியல மென்றுரைத்த பொற்றொடியும்'* (நாலடி. 376)

*[ பொன் + தொடி ]*

**பொற்றோரை** *porrōrai,* பெ. (n.) இடையிலே அணியும் பொன்வடம்; thread-like waist ornament, made of gold. *'அல்குற் பொற்றோரை மின்ன'* (சீவக. 2132)

*[ பொன் + தோரை ]*



**பொறாமை** *porāmai,* பெ. (n.) 1. அழுக்காறு; envy, grudge, jealously. *'இப் பொறாமையும் பொறைக்கு மறுதலையாகலின்'* (குறள், 17, ஆம்அதி. முன்னுரை) 2. பொறுமையின்மை; impatience. *'பொறாமையுஞ் சிறிது தோன்ற'* (கம்பரா. கிங்கரர்.2) 3. பொருமல்; sobbing.

ம. பொரய்ம.

*[ பொறு + ஆ(எ.ம.இ.)–மை பண். பெ.ஈறு]*

**பொறி¹–தல்** *pori,* செ.கு.வி. (v.i.) 1. பறிதல் (யாழ்ப்.); to snap, spring, as a trap, etc. 2. தீச்சுடர் சிதறுதல்;to throw out sparks. *'பொறிந்தெழு கண்ணினன்'* (கம்பரா. கும்ப. 254) 3. சறுக்குதல் (யாழ்.அக); to slip, slide, as the foot. 4. சரிதல் (வின்.); to be sloping or aslant 5. விழப்புகுதல் (வின்.); to be ready to fall on one, as an occusation. 6. கலைதல் (வின்.); to fail

**பொறி²–த்தல்** *pori,* செ.குன்றா.வி. (v.t.) 1. முத்திரையிடுதல்; to impress, stamp. *'கெண்டையொடு பொறித்த குடுமியவாக'* (புறநா. 58) 2. எழுதுதல் (பிங்); to write. *'தொய்யில் பொறித்த வனமுலை'* (கலித். 93) 3. சித்திரித்தல்; to sketch, paint. *'பொறித்த வாழையின் கனியினை'* (பிரபுலிங். வசவண். 19) 4. தெறித்தல்; to bespatter. "முலைத்தடஞ் சேதகம் பொறிப்ப." (சீவக. 46) 5. கலைத்தல் (வின்.); frustrate.

*[ பொளி → பொறி ]*

**பொறித்தல்** *pori,*செ.கு.வி. (v.i.) 1. *பொறி¹* – பார்க்க. see *pori¹* 2. *பொறி!2* பார்க்க. *'நெருப்பிடை யிடை பொறித்தெழ'* (கம்பரா. வருண. 32) 3. அழுந்துதல்; to be impressed or imprinted. "புலவியுட் பொறித்த புண்" (கலித். 71, 11)

*[ பொளி → பொறி]*

**பொறி³** *pori,* பெ. (n.) 1. வரி; stripe, as of a tiger. *'பொறி யுழுவை'* 2. கைவரி; (பிங்.) line on the palm 3. புள்ளி; spot, as on an elephants forehead; dot, point. *'பொறிய மடமான்'* (கலித். 13, 3) 4. தழும்பு; mark, impression. *'நல்லா ரிளமுலைப் பொறியும்'* (சீவக. 2190) 5. அடையாளம் (அடையாளம்); sign, token. (w) 6. எழுத்து; letter, writing. 7. இலச்சினை; seal, signet. "கோண்மாக் குயின்ற சேண் விளங்கு தொடுபொறி" (புறநா. 58) 8. விருது; badge, insignia. "வெல்பொறியு நாடுங் கொடுத் தளித்தான்" (பு. வெ. 7, 2) 9. உடலுறுப்பு அடையாளம்; auspicious mark on one's body. *'பூமியை யாடற்கொத்த பொறியினன்'* (சீவக. 1339) 10. வண்டு; bee. *'பொறிகலந்த பொழில்'* (தேவா. 638) 11. பீலி; peacock's tail, as spotted. "பல்பொறி மஞ்ஞை" (திருமுரு. 122) 12. தேமல்; beauty-spot on the body of a person. 13. படிமை; form,

image. எந்திரப் பொறியினிற்ப (கமபரா. கும்ப. 5) **14.** ஊழ்; fate. *'அவை பொறியின் வகைவண்ணம்'* (சீவக. 848) **15.** கன்னப் பொருத்து; temple of the head. **16.** மூட்டுவாய்; joint. *'பொறி புனை வினைப் பொலங்கோதை'* (பரிபா. 11, 64) **17.** மெய்; வாய், கண், மூக்கு, செவி என்ற ஐவகைப் புலன்கள்; organs of sense, of which there are five, viz., mey, vāy, kaṇ, mūkku, cevi *'பொறிவாயி லைந்தவித்தான்'* (குறள், 6) **18.** ஆண்குறி; male organ. **19.** மனம்; mind. *'துள்ளும் பொறியின் னிலை சோதனை தான்'* (கம்பரா. இரணிய. 105) **20.** அறிவு; wisdom, knowledge. *'பூரண மோதிலும் பொறியிலீர்'* (தேவா. 1203, 6) **21.** அனற்றுகள்; spark, scintilation. *'கூடும் வெம்பொறிச்'* கொடுங்கனல்' (கம்பரா. வருணனை. 22) **22.** ஒளி; brightness. *'பொறிவரிப் புகர்முகம்'* (பெரும்பாண். 448) **23.** சூழ்ச்சியம்; machine, trap. *'வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய'* (புறநா. 19) **24.** மதிலுறுப்பு (பிங்.); figure or engine on wall. **25.** மரக்கலம்; dhoney. (பிங்) **26.** தந்திரம்; stratagem. "பொறியிற் பலமாயந் தரும்" (கம்பரா. சூர்ப்ப. 139) **27.** நெற்றிப் பட்டம்; diadem. "வேந்தன் பெயராற் பொறியும் பெற்றான்" (சீவக. 1792) **28.** திருமகள்; (திவா.) lakshmi. **29.** செல்வம்; riches, wealth. *'பொறிகொடு நாணற்ற போழ்தே'* (நான்மணி. 45) **30.** பொலிவு; (பிங்)splendour. **31.** ஊழ்வினைப் பயன்; good karma. *'பொறியறு நெஞ்சத் திறைமுறை பிழைத்தோன்'* (சிலப். 20, 25) **32.** திரட்சி; roundness, rotundity. *'முசுண்டைப் பொறிப்புற வான்பூ'* (நெடுநல். 13)

*[ புல்→ பொல் → பொறி ]*

**பொறிஎக்கி** *poṟiekki,* பெ. (n.) இயந்திர ஆற்றலுள்ள நீர்வாங்கு குழாய்; power driven pump.

*[ பொறி + எக்கி ]*

**பொறிக்கல்** *poṟi-k-kal,* பெ. (n.) சிலை நாகக்கல்; a kind of stone. **2.** சுக்கான்கல்; kunkur.

*[ பொறி + கல் ]*

**பொறிக்காளான்** *poṟi-k-kāḷāṉ,* பெ. (n.) பேய்க்காளான்; a variety of mushroon.

**பொறிக்கேதனம்** *poṟi-k-kēdaṉam,* பெ. (n.) மூகைப்புல்; a variety of grass.

**பொறிகடலை** *poṟi-kaṭalai,* பெ. (n.) **1.** சிறு கடலை; bengal gram. **2.** பொரித்த கடலை; fried bengal gram.

*[ பொரி→பொறி + கடலை ]*

**பொறி கலங்கு—தல்** *poṟi-kalaṅgu,* செ.கு.வி. (v.i.) அறிவு மயங்குதல்; to be confused and bewildered in one's senses. *'புலனைந்தும் பொறி கலங்கி நெறிமயங்கி'* (தேவா. 278, 1)

*[ பொறி + கலங்கு ]*

**பொறி சிதறு—தல்** *poṟi-šdaṟu,* செ.கு.வி. (v.i.) **1.** தீப்பொறி பறத்தல்; to fly out, as sparks, **2.** *பொறி கலங்கு–,* பார்க்க; see *poṟi-kalaṅgu*

*[ பொறி + சிதறு–, ]*

**பொறித்தாழ்** *poṟittāḻ,* பெ. (n.) இயந்திரத் தாழ்க்கோல்; machine bar. 'பொன்செய் பேழையோரு பொறிதாழ் நீங்கி' (பெருந்.1:32:77)

**பொறிதட்டு—தல்** *po̱ri-taṯṯu-,* செ.கு.வி. (v.i.) **1.** அறிவு கலங்குதல்; to flash, as eyes from a blow. **2.** வழுக்குதல்; to slide, as the feet.

*[ பொறி + தட்டு–, ]*

**பொறிதொலை—த்தல்** *po̱ri-tolai-,* செ.கு.வி. (v.i.) ஒரு செயலை மனமின்றித் தீராக் கடமையாக முடித்தல்; to do any work, as a matter of duty.

*[ பொறி + தொலை –,]*

**பொறிநீர்** *po̱rinir,* பெ. (n.) விழியம் ; semen.

மறுவ. வித்தமிழ்து

*[ பொறி + நீர் ]*

**பொறிப்பாவை** *porippāvai,* பெ. (n.) இயந்திரப் பாவை; machine dall. "பெரும்பொறிப் பாவை மருங்கி னிறீஇ" (பெருங். 1:58:61)

*[ பொறி + பாவை ]*

**பொறிப்பு** *porippu,* பெ. (n.) **1.** பறிகை (வின்.); snapping. **2.** எழுதுகை (இ.வ.); writing, drawing.

*[ பொறி → பொறிப்பு ]*

**பொறிப்பேழை** *po̱rippē̱lai,* பெ. (n.) சூழ்ச்சியத்தையுடைய பெட்டி; machine box. 'பெரும்பொறிப் பேழை இவையெனக் கூறிக்' (பெருங்.1:40:239)

*[ பொறி + பேழை ]*

**பொறிபறத்தல்** *po̱ri-pa̱rattal,* பெ. (n.) **1.** தீப்பொறி சிதறுகை; flying of sparks. "நீரிடை நிமிர்பொறி பறக்க" (கம்பரா. சேது. 11) **2.** தீப்பறக்கப் பார்க்கை (வின்.); flaming of the eyes, as in anger.

*[ பொறி + பறத்தல் ]*

**பொறிமயிர்** *po̱rimayir,* பெ. (n.) புள்ளி களையுடைய மயிர்; spot on the hair. 'பொறிமயிர் எருத்தில் குறுநடைப் பெடை' (குறுந்.154)

*[ பொறி + மயிர்]*

**பொறிமுதல்** *po̱ri-mudal,* பெ. (n.) உயிர்; soul, as superior to the senses. (பொறியங்களின் தலைவன்) (சீவக).

*[ பொறி + முதல் ]*

**பொறியமலம்** *po̱ri-y-amalam,* பெ. (n.) புங்க மரம்; (சங்.அக) indian beech.

*[ பொறி + அமலம் ]*

**பொறியமைப்பு** *po̱riyamaippu,* பெ. (n.) கருவி அமைந்திருக்கும் நிலை; Device.

*[ பொறி + அமைப்பு ]*

**பொறியரை** *po̱ri-y-arai,* பெ. (n.) *சிறுபுள்ளடி* பார்க்க; see *ši̱rupu̱ḻḻaḏi* a species of tick-trefoil (சங்.அக.)

*[ பொறி + அரை ]*



**பொறியற்றார்** *poṟi-y-aṟṟār,* பெ. (n.) *பொறியிலார்* (திவா.) பார்க்க; see *poṟ-y-ilār*

*[ பொறி + அற்றரா் ]*

**பொறியறை** *poṟi-y-aṟai,* பெ. (n.) 1. *பொறியிலி* 1 (தொல். சொல். 57, உரை) பார்க்க; see *poṟi-y-ili* 2. திருவிலி; one devoid of luck. *'பொய்வழங்கி வாழும் பொறியறையும்'* (திரிகடு. 15)

*[ பொறி + அறு → அறை ]*

**பொறியார்—த்தல்** *poṟi-y-ār-,* செ.கு.வி. (v.i.) *பொறிதட்டு 1* (யாழ்.அக) பார்க்க; see *poṟitaṭṭu*

*[ பொறி + ஆர் –,]*

**பொறியிலார்** *poṟi-y-ilār,* பெ. (n.) கீழோர் (சூடா); the base, the vulgar.

*[ பொறி + இலார் ]*

**பொறியிலி** *poṟi-y-ili,* பெ. (n.) 1. அறிவற்றவ–ன்–ள்; ignorant, senseless person. *'பறிதலைப் பொறியிலிச் சமணர்'* (திருப்பு. 259) 2. உறுப்புக் குறையுடையவ–ன்–ள்; deformed person. *'கைகான் முடங்கு பொறியிலி'* (பிரபுலிங். துதிகதி, 1) 3. நற்பேறில்லாதவ–ன்–ள்(வின்.); unfortunate person.

*[ பொறி + இலி ]*

**பொறியேற்று—தல்** *poṟi-y-ēṟṟu,* செ.கு.வி. (v.i.) *பொறிவை* (யாழ்.அக) பார்க்க; see *poṟivai.*

*[ பொறி + ஏற்று ]*

**பொறியொற்றோலை** *poṟi-y-oṟṟōlai,* பெ. (n.) முத்திரையிட்ட ஓலைக்கடிதம்; letter in cadjan leaf, impressed with a seal. *'அமைதியாளரைப் பொறியொற் றோலையோ டறியப் போக்கி'* (பெருங். நரவாண. 7, 71)

*[ பொறி + ஒற்று + ஓலை ]*

**பொறிவரித்தவிசு** *porivarittavišu,* பெ. (n.) புலித்தோல் இறக்கை; seat which made by skin of tiger. *'பொறிவரித் தவிசிற் பொன்னிறப் பலகை'* (பெருங்.2:17:83)

*[ பொறி + வரி+தவிசு ]*

**பொறிவாயில்** *poṟi-vāyil,* பெ. (n.) புலன் (திவா);organ of sense. *'பொறிவாயி லைந்தவித்தான்'* (குறள், 6)

*[ பொறி + வாயில் ]*

**பொறிவாயிற் காட்சி** *poṟi-vāyiṟ-kāṭci,* பெ. (n.) புலன்களால் அறியுமறிவு; perception of the senses with the aid of mental faculties.

*[ பொறிவாயில் + காட்சி ]*

**பொறிவிரியன்** *poṟviriyan,* பெ. (n.) ஒருவகை விரியன் பாம்பு, variety of snake.

*[ பொறி + விரியன் ]*

**பொறிவு** *poṟivu,* பெ. (n.) 1. சறுக்கல்; sloping, sliding. 2. பறிகை; snapping.

*[ பொறி → பொறிவு ]*

**பொறிவை—த்தல்** *poṟi-vai,* செ.கு.வி. (v.i.) எலி முதலிய உயிரிகளைப் பிடிக்க வைக்கும் கிட்டி, வலை முதலியன (வின்.); to set a

trap. "எலித் தொல்லை தங்கமுடியவில்லை இன்று பொறி வைக்க வேண்டும்."

*[பொறி + வை –,]*

**பொறு¹–த்தல்** *poṟu,* செ.குன்றா.வி. (v.t.) **1.** சுமத்தல்; to bear, sustain. *'இசையிலா யாக்கை பொறுத்த நிலம்'* (குறள், **239**) **2.** தாங்குதல்; to bear with. *'ஆலத்து .... நெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்கு'* (புறநா. **58**) **3.** அணிதல்; to put on, wear. *'அம்மணி பொறித்திரென் றறைந்தான்'* (உபதேசகா. உருத்திராக். **44**) **4.** இளக்காரம் கொடுத்தல் (வின்.); to indulge, allow. **5.** மன்னித்தல்; to excuse, forgive. *'தம்மை யிகழ்ந்தமைதாம் பொறுப்ப தன்றி'* (நாலடி, **58**) **6.** ஏற்றமை; to endure, suffer. *'பொறுக்கிலேனுடல் போக்கிடங் காணேன்'* (திருவாச. **23, 6**) **7.** பொறுப்பேற்றல்; to take responsibility. **8.** தள்ளிப் போடுதல்; postpone. **9.** உவமையாகப் பெறுதல்; to be similar. "உலம் பொறுக்கலாத தோளாய்" (சீவக. **402**)

*[புல் → பொல் → பொறு]*

**பொறு¹–த்தல்** *poṟu,* செ.கு.வி. (v.i.) **1.** அடக்கமாய் இருத்தல்; to be patient. **2.** பேச்சு முதலியவற்றின் இடையே நின்று கொள்ளுதல்; to stop, wait, as in speaking or in eating; to desist. **3.** விலை கொள்ளுதல்; to coast, as an article; to be spent or expended on. **4.** தோணிதட்டிப் போதல்; to run aground, as a vessel; to strand. **5.** மாட்டிக் கொள்ளுதல்; to become fixed, jammed, wedged in. **6.** பொறுப்பாதல் (வின்.); responsibility.

*[புல் → பொல் → பொறு]*

**பொறுக்கவை–த்தல்** *poṟukka-vai-,* செ.குன்றாவி. (v.t.) **1.** சாரவைத்தல்; to place, lean against. **2.** தோணி தட்டச் செய்தல்; to run aground, as a vessel, **3.** பொறுப்பாதல்; to impose a duty or expense upon. **4.** மிகுபார மேற்றுதல்; to overload. **5.** ஏற்றமையும் படி செய்தல்; to cause to bear.

*[பொறு → பொறுக்கவை]*

**பொறுக்குவிதை** *poṟkkuvidai,* பெ. (n.) செம்மைப்படுத்தப்பட்ட விதை; improved seed.

*[பொறுக்கு + விதை]*

**பொறுக்கி** *poṟukki,* பெ. (n.) *பொறுக்கித் தின்னி* (கொவ.) பார்க்க; see *poṟukki-t-tiṉṉi.*

*[பொறுக்கு → பொறுக்கி]*

*'இ' வி.மு ஈறு.*

**பொறுக்கித் தின்னி** *poṟukki-t-tiṉṉi,* பெ. (n.) **1.** இங்கும் அங்குமாகப் பொறுக்கித் தின்னும் வறிய–ன்–ள்; one who picks up, gathers, gets his food here and there; one despicably poor. **2.** கஞ்சன்; niggardly person.

*[பொறுக்கி → தின்னி]*

**பொறுக்குசீட்டு** *poṟukku-c-cittu,* பெ. (n.) திருவுளச்சீட்டு (ஆகழ்). lottery.

*[பொறுக்கு+சீட்டு]*

**பொறுக்கு–தல்** *poṟukku-,* செ.குன்றாவி. அங்கும் இங்கும் சிதறிய பொருளைத் தெரிந்தெடுத்தல்; to pick up here and there, glean; to pick out from mass, select.

*[பொறுக்கு → பொறுக்குதல்]*

**பொறுத்துப்போ¹—தல்** *poṟuttu-p-pō-,* செ.குன்றாவி. (v.t.) **1.** தோணிகட்டுதல்; to ran aground. **2.** மாட்டிக்கொள்ளுதல்; to be stuck or jammed in.

*[பொறுத்து → பொறுத்து+போ]*

**பொறுத்துப்போ²—தல்** *poṟuttu-p-pō-,* செ.குன்றாவி. (v.i.) தொடர்ந்து பொறுத்தல்; to continue toterate.

*[பொறுத்து+போ]*

**பொறுதி** *poṟudi,* பெ. (n.) **1.** பொறுமை; patience, forbearance. '*மிகவும் பொறுதியுள்ள வன்*'**2.** குற்றம் பாராட்டாமை(வின்.) ; pardon, forgiveness. **3.** இளக்காரம் (யாழ்ப்.); indulgence, levity **4.** ஓய்வு (யாழ்ப்.); suspension of business. **5.** சுணக்கம் (யாழ்ப்.); slowness, delibration, delay

*[பொறு → பொறுதி]*

**பொறுப்பற்றவன்** *poṟuppaṟṟavaṉ,* பெ. (n.) **1.** பொறுப்பு ஏற்காதவன் (கொ.வ.); irresponsible person. **2.** பொறுமையற்றவன்; impatient man **3.** உதவியற்றவன்; one destitute of help.

*[பொறுப்பு + அற்றவன்]*

**பொறுப்பாளி** *poṟuppāḷi,* பெ. (n.) பொறுப்பானவன்; responsible person.

*[பொறுப்பு + ஆளி]*

'ஆளி' வினைமுதலீறு.

**பொறுப்பி—த்தல்** *poṟuppi-,* செ.குன்றா.வி. (v.t.) **1.** சுமத்துதல்; to cause to rest on. **2.** *பொறுப்புக்கட்டு—,* **1.** பார்க்க; see *poṟuppu-k-kaṭṭu* **3.** முட்டுக் கொடுத்தல்; to prop; to sustain **4.** பொறுக்குமாறு செய்தல்; to cause to bear. '*திருவடியைப் பொறுப்பிக்கு மவர் தன் சொல்வழி வருமவரைப் பொறுப்பிக்கச் சொல்ல வேண்டாவிறே*' (அட்டாதச. முமுட்சுப்.) **5.** பாதுகாத்தல் (இ.வ.); to maintain.

*[பொறு → பொறுப்பி—த்தல்]*

**பொறுப்பு** *poṟuppu,* பெ. (n.) **1.** பாரம்; stress, pressure, burden. **2.** முட்டு (வின்.); prop, support, stay. **3.** உறுதி; duty, responsibility. **4.** இன்றியமையாமை; importance. **5.** தகுதி; weight of character. **6.** பொறுமை; patience, forbearance. **7.** வரி (இ.வ.); tax.

*[பொறு → பொறுப்பு]*

**பொறுப்புக்கட்டு—தல்** *poṟuppu-k-kaṭṭu-,* செ. குன்றாவி.(v.t.) **1.** உறுதியளிக்கச் செய்தல்; to put responsibility on. **2.** ஈடுகாட்டுதல்; to tender as security. **3.** முற்றுவித்தல் (வின்.); to accomplish

**பொறுப்புக்காரன்** *poṟuppu-k-kāraṉ,* பெ. (n.) *பொறுப்பாளி*(யாழ்.அக.) பார்க்க; see *poṟuppāḷi*

*[பொறுப்பு + காரன்]*

'காரன்' உடையவனைக் குறிக்கும் ஈறு.

**பொறுப்புடைமை** *pōṟuppu-utamai,* பெ. (n.) கடமைப்பொறுப்பு; oblication

*[பொறுப்பு + உடமை]*

**பொறுமி** *poṟumi,* பெ. (n.) அவுரி போன்ற இலையும் சிவந்த சிறுபூவுமுடைய பூடுவகை;

a red-flowered plant with indigo like leaf and bean-like fruit.

**பொறுமை** *porumai,* பெ. (n.) **1.** அடக்கம்; meekness, self-control **2.** பொறை; patience, endurance, tolerance, forbearance.

*[பொறு → பொறுமை]*

'மை' ப. பெ. ஈறு

**பொறுமைக்காரன்** *porumai-k-kāran,* பெ. (n.) சாந்தமுள்ளவன் (வின்.); patient man.

*[பொறுமை + காரன்]*
'காரன்' உடையவனைக் குறிக்கும் ஈறு.

**பொறுமைசாலி** *porumai-cāli,* பெ. (n.) *பொறுமைக்காரன்* பார்க்க; see *porumāi-k-kāran.*

*[பொறுமை + சாலி]*

'சாலி' உடைமைப் பொருளீறு.

ஒ.நோ. திறமைசாலி, பாக்கியசாலி

**பொறுவாஞ்சேறு** *poruvāñcēru,* பெ. (n.) கடல் சேற்றின் வகை; a kind of sea mud.

**பொறை** *porai,* பெ. (n.) **1.** சிறுகுன்று; small hill, hillock, 'அறையும் *பொறையு மணந்த தலைய'* (புறநா. **118.**) **2.** மலை; mountain '*நெடும் பொறை மிசைய குறுங்காற் கொன்றை'* (ஐங்குறு. **430.**) **3.** சுமை. (திவா.); burden, load, '*குழையு மிழையும் பொறையா'* (கலித். **90.**) **4.** கனம்; weight, heaviness. '*பொறை தந்தன காசொளிர் பூண்'* (கம்பரா. அதிகா. **40.**) **5.** நிலவுலகு (பிங்.); earth. '*பொறைதரத் திரண்டதாரு'* (இரகு. தசரதன்சாப. **50.**) **6.** பொறுமை; patience, forbearance '*வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை'* (குறள், **153.**) **7.** அடக்கம் calmness, meekness. '*அருந்ததி முதலிய மகளிராடுதல் புரிந்தனர்* பொறையு நாணு நீங்கினார்.' (கம்பரா. மீட்சி. **88**); **8.** கருப்பம். (சூடா.) pregnancy. **9.** வலிமை; strength. '*போதகாதிபன் முதலை வாயிடைப் பொறை தளர்ந்து'* (பாரத. வேந்திரகீய.)

*[பொறு → பொறை]*

**பொறைநிலை** *porainilai,* பெ. (n.) மனத்தை ஒருவழிப்படுத்துதல் (தாரணை.வ.); (concentrated atention in yogic meditation.

*[பொறை + நிலை]*

**பொறைநோய்** *porainōy,* பெ. (n.) கருப்பத் துன்பமாகிய நோய்; pain of pregnancy.

*[பொறை + நோய்]*

**பொறைமண்** *poraiman,* பெ. (n.) **1.** செத்தை முதலியவற்றின் கலவையான வளம் நிறைந்த மண்; loamy soil. **2.** செங்கல் செய்வதற்கான களிமண்; clay used for making bricks.

*[பொறை + மண்]*

**பொறைமலி** *poraimali,* பெ. (n.) சுமைமிக்க; heavy lord. 'பொறைமலி கழுதை நெடுமிரை தழீஇய' (அகநா.**89.**)

**பொறைமை** *poraimai,* பெ. (n.) *பொறை,* **6.** பார்க்க; '*நின்னெஞ்சங்கொண்ட பொறைமை காணிய'* (பெருங்.உஞ்சைக்.**36,84.**)

*[பொறு → பொறை → பொறைமை]*

**பொறையன்** *poraiyan,* பெ. (n.) **1.** சுமப்பவன்; sustainer, bearer '*புன்னிலைப் பவத்துக்*

*கெல்லாந் தானொரு பொறையனாகி* (உபதேசகா. சிவபுண்.344.) 2. சேரன்; cēra king, as lord of the mountainous region in the Tamil country. '*யானைக் கடுமான் பொறைய*' (புறநா.53.) 3. பொறுமைக்கும் பொறைக்கும் சிறந்த தருமன். Dharmapatra, the eldest of the pāndavās as embodiment of patience. (சூடா.);

*[பொறு → பொறை → பொறையன்]*

**பொறையாட்டி** *po̱rai-y-āṭṭi,* பெ. (n.) 1. பொறுமை யுள்ளவன்; patient woman. '*சுருங்கும் மருங்குற் பெரும்பொறை யாட்டியை*' (திருக்கோ.353.) 2. காவுகொடுக்கும் பூசாரிப் பெண்; priestess who offers kāvu. '*காணப்பலி நேர்கடவுட் பொறையாட்டி வந்தாள்*' (பெரியபு. கண்ணப்.65.)

*[பொறை + ஆட்டி]*

**பொறையாளன்** *po̱rai-y-āḷan̠,* பெ. (n.) *பொறையன்* (பிங்.) பார்க்க; see *po̱raiyan̠*3.

*[பொறை + ஆளன்]*

**பொறையாற்று—தல்** *po̱rai-y-āṟṟu-,* பெ. (n.) பொறுத்தல்; (கம்பரா.உருக்.11.); to bear with patience.

*[பொறை + ஆற்று → பொறையாற்று—தல்]*

**பொறையிருந்தாற்று—தல்** *po̱rai-y-irundāṟṟu,* செ.குன்றாவி. (v.t.) துன்பம் பொறுத்தலைக் கடைப்பிடித்தல்; to bear with patience. "*பொறையிருந்தாற்றியென் னுயிரும் போற்றினேன்*" (கம்பரா. சுந்தர. உருக்காட்டு.11)

*[பொறை + இரு → இருந்து + ஆற்றுதல்]*

**பொறையிலான்** *po̱rai-y-ilān̠,* பெ. (n.) பொறுமையில்லாதவன்; impatient person. 2. வேடன் (சூடா.); savage; forester, hunter.

*[பொறை + இல்+ஆ]*

*'இல்' எ. ம. இடைநிலை*

**பொறையுடைமை** *po̱rai-y-ḍaimai,* பெ. (n.) நெஞ்சுரம் (மனத்திண்மை); vitality. 'நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறை யுடைமை போற்றி ஒழுகப் படும்' (குறள்.154)

*[பொறை + உடைமை]*

**பொறையுயிர்—த்தல்** *po̱rai-y-uyir-,* செ.குன்றா.வி. (v.t.) 1. இளைப்பாறும்படி சுமையிறக்குதல்; to disburden and rest. '*துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி*' (பொருந,239.) 2. மகப்பேறு; to be delivered of a child. '*பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டில்*' (நன்.269,உரை,)

*[பொறை + உயிர்த்தல்]*

**பொன்** *pon̠,* பெ. (n.) 1. செம்பொன் (சாதரூபம்), கிளிச்சிறை, ஆடகம், நாவலம் என நான்குவகைப்பட்ட தங்கம்; gold of which there are four kinds, viz., cātarūpam, kiḷiccirai, āḍagam, campunatam. '*பொன்னுந்துகிரும் முத்தும்*' (புறநா.218.) 2. மாழை (பிங்.); metal செம்பொன், வெண்பொன், கரும்பொன் 3. இரும்பு; iron. '*தூண்டிற் பொன் மீன் விழுங்கியற்று*' (குறள், 931.) 4. செல்வம்; wealth. '*பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனும்*'(நள.கலி தொடர்.68.) 5. அணிகலன்; ornament. '*கடலுடுத்த காரிகை பொன்னணிந்திருந் தென*' (சீவக.1250.) 6. திருநாண்; marriage badge. '*பொன்னைக் கொணர்ந்து.... நீபொன் புனைந்ததுவே*' (தஞ்சைவா.359.) 7. தங்ககாசு;a

gold coin, 8. *பொன்மலை,* 1, பார்க்க; see *ponmālai,*1 ஆணிப்பொன்வில்லி (குமர.பிர.மீனாட்.பிள்.63.) 9. பொலிவு; grandeur, magnificence. *'பொன்னார் வயற்பூம் புகலி'* (தேவா.72,2.) 10. பசலை; sallowness of complexion from love sickness. *'வயங்கு—பொன்னீன்றமுலையினானே'* (சீவக.1530.) 11. பேரொளி(வின்.); lustre, splendour, brilliance 12. அழகு (பிங்.); beauty, eleganece, comeliness. *'பொன் புனைந்த கழலடியோன்'* (பு.வெ.7,2, கொளு) 13. ஏற்றம்; preciousness, excellence, rarity. *'பொன்னிறை சுருங்கார்'* (சீவக.2380). 14. திருமகள்; lasksmi, the Goddess of fortune. *'பொன்றுஞ்சு மார்பன்'* (சீவக.14.) 15. வியாழன்; jupiter *'பொன்னெடு வெள்ளியும்..... இருக்கை யீயவே'* (கம்பரா.மாரீச.16.) 16. கதிரவன்; sun. *'உடலுயிரும் பொன்விழியு மெனும் புணர்ப்பு'* (மணிமே.6,145.) 17. பெண் குறி (பிங்.); pudendem muliebre.

**பொன்கண்** *poṉ-kaṇ,* பெ. (n.) 1. சிவந்த உடம்பு; reddish body. *'பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்'* (பரிபா.3:82.) 2. *பொற்கண்* பார்க்க; see *poṟkaṇ.*

*[பொன் + கண்]*

**பொன்காண்(ணு)—தல்** *poṉ-kāṉ-,* செ.கு.வி (v.t.) மாற்றுக்காணுதல்; to lest the quality of gold. *"பொன் காண்பார்களாகவும்"* (S.I.I.vi.149.)

*[பொன் + காண்—,]*

**பொன்குற்றம்** *poṉ-kuṟṟam,* பெ. (n.) திரை; களிம்பு; the defects of gold; verdigiris.

*[பொன் + குற்றம்]*

**பொன்கோலம்** *poṉ-kōlam,* பெ. (n.) 'புத்திரசீவி' எனப்படும் மரம்; child's amulet tree. (l.)

**பொன்ஞாண்** *poṉ-ñāṉ,* பெ. (n.) பொற்கொடி; gold chain. *'பின்னுறு பொன்ஞான் பெருந்தொடர் கோத்த'* (பெருங்,1:46:177.)

*[பொன் + ஞாண்]*

**பொன்செய்—தல்** *poṉ-cey-,* பெ. (n.) நல்ல செயல் செய்தல்; to do a good deed. *'கேட்டீமின் பொன்செய் தேன்'* (கலித்.143.)

*[பொன் + செய்—]*

**பொன்செய்கொல்லன்** *poṉ-cey-kollaṉ,* பெ. (n.) தட்டான்; goldsmith. *'பொன்செய் கொல்லனி னினிய தெளிர்ப்ப'* (நற்.394.)

*[பொன் + செய் + கொல்லன்]*

**பொன்செய்புலவன்** *pon-cey-pulavaṉ,* பெ. (n.) 1. பொன்செய் கொல்லன் பார்க்க; see pon-cey-kollaṉ. 2. பொன்னரிப்போன்; gatherer of gold, as from mines. (சிலப்.5,31.அரும்.)

*[பொன் + செய் + புலவன்]*

**பொன்ஞெகிழி** *poṉ-ñekiḷi,* பெ. (n.) அரிபெய்சிலம்பு. gold anklet with beads inside for tinkling (திவா.);

*[பொன் +ஞெகிழி]*

**பொன்துகள்** *poṉ-tukaḷ,* பெ. (n.) தங்கத்தூள் (பொடி); gold-dust.

*[பொன் +துகள்]*

**பொன்நூற்புழு** *ponnōṟpuḻu,* பெ. (n.) நீண்டுருண்ட வடிவுடைய பொன்னிறமான புழுவகை; golden nematode

*[பொன் + நூல் + புடு]*

**பொன்படு—தல்** *pon-padu-,* பெ. (v.i.) தோற்றப்பொலிவுறுதல்; to appear bright. *'தொய்யிலெழுதியிறுத்த பெரும்பொன் படுகம்' (கலித்.64.)'*

*[பொன் + படு—.]*

**பொன்பத்தன்** *pon-pattaṉ,* பெ. (n.) *பொன்செய் கொல்லன்.* பார்க்க; see *pon-cey-kollaṉ.* (கொ.வ.)

*[பொன் + பத்தன்]*

**பொன்பற்றியூர்ப்புத்தமித்திரனார்** *poṉ-pṟṟiyūrp-puttamittiranār,* பெ. (n.) வீரசோழியம் என்னும் இலக்கண நூல் செய்த புலவர்; a authour of the veracoliyam.

**பொன்பாதிரி** *poṉ-pātiri,* பெ. (n.) மரவகை; fragrant trumpet-flower.

*[பொன் + பாதிரி]*

**பொன்பாவை** *pon-pāvai,* பெ. (n.) திருமகள்; Laxsmi. *'பொன்பாவை கேள்வர்'* (திவ்.இயற்.4,59.)

*[பொன் + பாவை]*

**பொன்புனை—தல்** *poṉ-puṇai-,* செ.குன்றா. வி. (v.t.) திருமங்கலியம் பூட்டி மணத்தல்; to marry, as tying the tāli. *'நுங்கேண்முன்னர் நீ பொன் புனைந்ததுவே'* (தஞ்சைவா.359.)

*[பொன் + புனை]*

**பொன்பூண்(ணு)தல்** *poṉ-pūṇ-,* செ.கு.வி. (v.i.) அணிகலன் அணிதல்; to wear gold ornaments.

*[பொன் + பூண் → பூணுதல்]*

**பொன்பெயரோன்** *poṉ-peyarōṉ,* பெ. (n.) பொன்னன் இரணிய கசிபு; hiraṇyakašipu, as gold coloured. *'பொன்பெயரோன் மார்பிடந்த வீங்கோத வண்ணர்'* (திவ்.இயற்.1,23.)

*[பொன் + பெயர் → பெயரோன்]*

**பொன்மணல்** *poṉ-maṉal,* பெ. (n.) பொற்றுகள் கொண்ட மணல்; sand containing gold; gold ore. (w.)

*[பொன் + மணல்]*

**பொன்மணி** *poṉ-maṇi,* பெ. (n.) 1. பொன்னாலாகிய உருண்டைமணி; gold bead. 2. பொன்மணியாலான அணிவகை; necklace of gold beads. *'பொன்மணி யொலிப்ப'* (திவ்.பெரியதி.1,7,1.)

*[பொன் + மணி]*

**பொன்மணியார்** *poṉ-maṇiyār,* பெ. (n.) கழகக்காலப்புலவர். a sankam poet. (குறுந்.391);

*[பொன் + மணி → மணியார்]*

**பொன்மணை** *poṉ-maṇai,* பெ. (n.) பொற் பலகை; low golden seat. *'நன்கை நடுவட் பொன்மணை யேற்றிப்'* (பெருங் 1:42:107.)

*[பொன் + மணை]*

**பொன்மயம்** *pon-mayam,* பெ. (n.) பொன்னிற மான பளபளப்பு ; golden lustre. (w.)

*[பொன் + மயம்]*

**பொன்மயிற்கொன்றை** *pon-mayir-k-konrai,* பெ. (n.) கொன்றை வகை,; a kind of indian labarman. (சங்.அக.)

*[பொன் + மயில் + கொன்றை]*

**பொன்மரம்** *pon-maram,* பெ. (n.) துறக்கத் திலுள்ள (சொர்க்கத்திலுள்ள) பொன் மயமான மரம். golden tree, in suarga. (சீவக.3122.)

*[பொன் + மரம்]*

**பொன்மலை** *pon-malai,* பெ. (n.) 1. தங்க மயமானமலை (மேரு) mt. mēru as golden.(பிங்.); *'பொன்மலைக் கடவுள்'* (திருவிளை. மேருவை.39.) 2. பனி (இமய)மலை. (பிங்.); the Himalayās *'பொன்மலைப் புலிநின் றோங்க'* (பெரியபு.எறிபத்த.2.) 3. மேற்றிசை மலை; western-hill where the sunsets. *'பொன்மலை சுடர்சேர'* (கலித்.126.) 4. முப்புரங்களுள் ஒன்று; one of three arieal castles destroyed by šiva (பிங்.). 5. திருச்சிராப்பள்ளிலுள்ள தாயுமானவர் மலை (வின்.); the rock in Triciräppalli.

*[பொன் + மலை]*

**பொன்மலைவல்லி** *pon-malai-valli,* பெ. (n.) மலைமகள் (பார்வதி); goddess pārvati *'புரிவு செய்தனள் பொன்மலைவல்லி'* (பெரியபு. திருக்குறிப்பு.56.)

*[பொன்மலை + வல்லி]*

**பொன்மழை** *pon-malai,* பெ. (n.) *பொன்மாரி,* 1.; பார்க்க; see *ponmāri,* 1 (w)

*[பொன் + மழை]*

**பொன்மாசை** *pon-mācai,* பெ. (n.) பொன்னா லாகிய ஒருவகைக்காசு; gold coin. *'கன பொன்மாசை காண வேந்தி'* (பருங். 1:36:76)

*[பொன் + மாழை → மாசை]*

**பொன்மாரி** *pon-māri,* பெ. (n.) *1.* தங்கமழை; shower of gold *"நன்நீரது தவிர்துப் பென்மாரியாகப் பொழி (தமிழ்நா. 52) 2. குதிரைச் சாதிவகை;* A kind of horse. *"நாயன வஞ்சனம் பொன்மாரி" (திருவாலவா.28,69)*

**பொன்மாலை** *pon-mālai,* பெ. (n.) *பொன்னரிமாலை* பார்க்க; see *pon-narimālai. 'பொன் மாலை யலங்கலோ மரம் புலம்ப'* (சீவக. 349.)

*[பொன் + மாலை]*

**பொன்மாளிகை** *pon-mālgai,* பெ. (n.) அரண்மனையில்அரசன்தங்கும் ஆடகமாடம்; golden palace. *'பொன்மாளிகைத் துஞ்சின தேவராக'* (s.i.i.ii, 70)

*[பொன் + மாளிகை]*

**பொன்மீன்** *pon-min,* பெ. (n.) *பூமீன் கெண்டை* பார்க்க; (இ.வ.); see *pūmin-kendai.*

*[பொன் + மீன்]*

**பொன்முசுட்டை** *poṉ-mucuṭṭai,* பெ. (n.) **1.** வட்டத்திருப்பி பார்க்க; kidney leaved moon seed. **2.** செடிவகை; buckler-leaved moon-seed. **3.** ஆடுதின்னாப் பாளை;பார்க்க, worm-killer. (l.) **4.** *அரிவாண் முனைப் பூண்டு* பார்க்க; see *arivāṇmaṇaip-pūṇḍu.*

*[பொன் + முசுட்டை]*

**பொன்முடி** *pōṉ-muti,* பெ. (n.) பொன்மணிகளால் அணி செய்யப்பட்ட மகுடம்; srown net.

*[பொன் + முடி]*

**பொன்முடியார்** *poṉmufiyār,* பெ. (n.) கடைக்கழகப்புலவருள்ஒருவர் a poet of last sangam.;

**பொன்முல்லை** *poṉ-mullai,* பெ. (n.) பூச்செடி வகை; golden jasmine.

*[பொன் + முல்லை]*

**பொன்முலாம்** *poṉ-mulām,* பெ. (n.) பொன்பூச்சு; gilding. (w.)

*[பொன் + முலாம்]*

**பொன்முளை** *poṉ-muḷai,* பெ. (n.) பொற்காசின் முத்திரை; stamp on a gold coin.

*[பொன் + முளை]*

**பொன்மூங்கில்** *poṉ-mūṅkil,* பெ. (n.) திருவாங்கூரில் விளைவதும் முள்ளில்லாத் துமாகிய ஒருவகை மூங்கில் பொன்பூச்சு; thorn less bamboo of travancore-axytenanthera bourdillon.

*[பொன் + மூங்கில்]*

**பொன்மெழுகு** *poṉ-meḷuku,* பெ. (n.) பொன்னுரை எடுக்கும் மெழுகு; a kind of darkish wax used by goldsmiths in testing the fineness of gold.

*[பொன் + மெழுகு]*

**பொன்மேனிச்சி** *poṉ-mani-c-ci,* பெ. (n.) பேய்க்கடலை; a bitter wild gram.

*[பொன் + மேனி → மேனிச்சி]*

'இ' உடைமைப்பொருள் பெயரீறு.

**பொன்மை** *poṉmai,* பெ. (n.) பொன்னிறம் (திவா.) colour of gold. *'குயம்பொன்மை மாமலராகக் குலவின'* (தேவா. 251, 8.)

*[பொன் → பொன்மை]*

'மை' ப. பெ. ஈறு.

**பொன்வண்டு** *poṉ-vaṇdu,* பெ. (n.) பொன்னிறமுள்ள வண்டுவகை; gold coloured beetle. *'போந்ததென் னெஞ்சென்னும் பொன்வண்டு'* (திவ். இராமானுச. 100)

*[பொன் + வண்டு]*



**பொன்வண்ணக் காரிளை** *poṉ-vaṇṇa-k-kāriḷai,* பெ. (n.) கந்தகம் sulphur.(சங்.அக.)

*[பொன் + வண்ணம் + காரிளை]*

**பொன்வண்ணக் குறிஞ்சி** *pon̲-vaṇṇa-k-kur̲iñchi,* பெ. (n.) பொன்னிற பூவுள்ள மருதோன்றி; hanna

*[பொன் + வண்ணம் + குறிஞ்சி]*

**பொன்வண்ணத்தந்தாதி** *pon̲-vaṇṇa-ttantāti,* பெ. (n.) பதினோராந் திருமுறையுள் இடம் பெற்றுள்ளதும் சேரமான் பெருமாள்நாயனார் இயற்றியதுமான சிற்றிலக்கியம்; a poem in patinorān-tirumurai, by cēramān̲-perumaḷ nāyan̲ār.

*[பொன் + வண்ணம் → வண்ணத்து +அந்தாதி]*

skṭ. anta + ādi → *த.அந்தாதி]*

**பொன்வரி** *pon̲-vari,* பெ. (n.) பழைய வரிவகை; an ancient tax (i.m.p.cg. **861.)**

*[பொன் + வரி]*

**பொன்வரிமாடை** *pon̲-vari-mādai,* பெ. (n.) *பொன்வரி* பார்க்க,; see *pon̲vari* (i.m.p.cg. **861.)**

*[பொன்வரி + மாடை]*

**பொன்வரை** *pon̲-varai,* பெ. (n.)
1. *பொன்மலை*, **1. 3.** பார்க்க; see *pon̲malai*
2. *பொன் மலை*, **2.** பார்க்க; see *pon̲malai,* **2** *'புண்டரிகம் பொன்வரைமே லேற்றி'* (பெரியபு. ஏனாதி. **1.)**

*[பொன் + வரை]*

**பொன்வறுகல்** *pon̲-var̲ukal,* பெ. (n.) பொன்னிறமாக வறுத்தல்; to fry till it attains gold colour or red colour.

*[பொன் + வறுகல்]*

**பொன்வாணிகர்** *pon̲-vāṇikar,* பெ. (n.) தங்க வணிகர்கள்; dealers in gold. *'பொற்பேதத்தைப் பகுத்தறியும் பொன்வாணிகர்'* **(சிலப். 14, 204, உரை)**

*[பொன் + வாணிகர்]*

**பொன்வாய்ப்புள்** *pon̲-vāy-ppuḷ,* பெ. (n.) சிச்சிலிக்குருவி (பிங்.); king-fisher.

*[ பொன் + வாய் + புள் ]*

**பொன்வானம்** *pon̲-vānam,* பெ. (n.) குடசம் (பித்தளை) மலை. hill of brass.(யாழ்.அக.);

*[பொன் + வானம்]*

**பொன்வித்து** *pon̲-vittu,* பெ. (n.) ஈயமணல் sand containing lead (சங்.அக.);

*[ பொன் + வித்து ]*

**பொன்வில்லி** *pon̲-villi,* பெ. (n.) சிவபிரான்; siva as having mēru, as bow. [பொன் மலையை (மேருவை) வில்லாக உடையவன்] *'ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்கவல்லி'* **(குமர. பிர. மீனாட். பிர். 63)**

*[ பொன் + வில் → வில்லி ]*

**'இ' உடைமைப் பொருள் பெயரீறு.**

**பொன்விலை** *pon̲-vilai,* பெ. (n.) ஏற்றமான விலை; very high price, as of gold.

*[ பொன் + விலை ]*

**பொன்விலைப் பாவையர்** *pon̲-vilai-p-pāvayar,* பெ. (n.) *பொன் விலை மகளிர்* பார்க்க; *see pon̲-vilai-magalir, 'பொன் விலைப் பாவையர் மனமும் போன்றதே'* **(கம்பரா. தாடகை. 15)**

*[ பொன் + விலை + பாவையர் ]*

**பொன்விலை மகளிர்** *poṉ-vilai-magaḷir,* பெ. (n.) பரத்தை; prostitutes.

**பொன்விழா** *poṉ-vilā,* பெ. (n.) ஐம்பதாம் ஆண்டுக் கொண்டாட்டம்; golden Jubilee. (இக்.வ.)

*[பொன் + விழா]*

**பொன்விளைவிடம்** *poṉ-viḷaividam,* பெ. (n.) பொன் உண்டாகுமிடம்; gold mine

*[ பொன் + விளைவு + இடம் ]*

**பொன்வினை செய்வோர்** *poṉ-vinai-ceyvōr,* பெ. (n.) *பொன் வினைமாக்கள்* பார்க்க; see *poṉvinaimākkaḷ*

*[ பொன் + வினை+செய்வோர் ]*

**பொன்வினை மாக்கள்** *poṉ-viṉal-mākkal,* பெ. (n.) தட்டார் goldsmiths. (சூடா.);

*[ பொன் வினை + மாக்கள் ]*

**பொன்வீ** *poṉvi,* பெ. (n.) பொன்னிறமான மலர்; golden colour flower. 'பொன்வீ ஞாழலோடும் புன்னைவரிக்கும்' (அகநா.70.). 'பொன்வீ மணியரும் பினவே' (ஐங்குறு.201.)

*[ பொன் + வீ ]*

**பொன்வெட்டு** *poṉ-veṭṭu,* பெ. (n.) *பொன்வெட்டுவாய்* பார்க்க; (இ.வ.); *see poṉ-veṭṭuvāy*

*[ பொன் + வெட்டு ]*

**பொன்வெட்டுவாய்** *poṉ-veṭṭu-vāy,* பெ. (n.) பேச்சு முதலியவற்றில் நேர்மை; exactness, as in correctness of speech etc., as cut-gold. (இ.வ.)

*[ பொன் + வெட்டு + வாய் ]*

**பொன்றக் கெடுதல்** *poṉra-k-keḍu,* செ.கு.வி. (v.i.) முற்றவும் அழிதல்; to be absolutely, ruined, *'பொன்றக் கெடாப் பொருள்'* (மணி, 30, 223.)

*[ பொன்ற+கெடுதல்]*

**பொன்றல்** *poṉrl,* பெ. (n.) சாதல்; dying

*[ பொன்று → பொன்றல்]*

**பொன்றாவல்லி** *poṉrā-valli,* பெ. (n.) சீந்தில் பார்க்க, gulancha. (தைலவ. தைல.);

**பொன்று–தல்** *poṉru-,* செ.கு.வி. (v.i.) 1. அழிதல்; to perish, to be ruined. *'புகழல்லாற் பொன்றாது நிற்பதொன்றில்'* (குறள், 233.) 2. இறத்தல்; to die, *'மடமாக்கள் பொன்றிலென் பொன்றாக்காலென்'* (நாலடி, 323.) 3. தவறுதல்; to fail. *'பொன்றலில் பகழிக்கு'* (கம்பரா. வருண. 77) 4. பார்வை முதலியன குறைதல்; to be reduced; to become wearied or dim, as the eyes by great exertion.

*[ புல் (துளை) → பொல் + து → பொத்து → பொற்று → பொன்று ]*

**பொன்றொடு–தல்** *poṉroḍu-,* செ.குன்றா.வி. (v.t.) பொன்னைத் தொட்டுச் சூளுறுதல்; to adjure, take oath, touching a piece of gold. *'பொன் றொட்டேம் யாதுமும்மைப் போகொட்டோம்'* (சீவக. 2945.)

*[ பொன் + தொடுதல் ]*

**பொன்னகர்** *poṉṉakar,* பெ. (n.) 1. வானுலகம்; amarāvati, as the golden city. *'பொன்னகர்*

*வறிதாப் போதுவர்'* (மணி. 1, 41.) 2. சிவனுலகு; siva's heaven. *'புகுவதாவதும் போதரவில்லதும் பொன்னகர்'* (திருவாச. 5, 36.)

*[ பொன் + நகர் ]*

**பொன்னகர்க்கிறைவன்** *ponnakar-k-kiraivan,* பெ. (n.) வேந்தன் (இந்திரன்) indra, as lord of ponnakar. (பிங்.)

*[ பொன்னகர்க்கு + இறைவன் ]*

**பொன்னகர்ச் செல்வன்** *ponnakar-c-celvan,* பெ. (n.) *பொன்னகர்க்கிறைவன்* பார்க்க; *see ponnakar-c-celvan.*

*[ பொன்னகர் + செல்வன் ]*

**பொன்னகரம்** *ponnakaram,* பெ. (n.) பொன்னகர், 1 பார்க்க, *'பொன்னகரம் புக்கு'* (திவ். இயற். பெரியம. 20); *see ponnakar.*

*[ நகர் → நகரம் ]*

**பொன்னங்கொட்டை** *ponna-ṅ-kottai,* பெ. (n.) பூவந்திக் கொட்டை; *soap nut-sapindus trifoliatus.*

*[ பொன் → பொன்னம் → கொட்டை ]*

**பொன்னச்சேரான்** *ponnaccērān,* பெ. (n.) சேங்கொட்டைவகை பார்க்க; glabrous marking-nut. (l.)

**பொன்னசலம்** *pon-n-acalam,* பெ. (n.) *பொன்மலை,* 1, 2, 3 பார்க்க; *see ponmalai.* 1,2,3.

*[ பொன் + அசலம் ]*

*[Skt.a-cala* → த. அசலம்*]*

**பொன்னஞ்சிலம்பு** *pon-n-añ-cilampu,* பெ. (n.) *பொன்மலை,* 1, 2, 3.பார்க்க; *see ponmalai,* 1,2,3. *'அத்த மென்னுஞ் பொன்னஞ் சிலம்பு கதிரோன் மறைதலும்'* (இறை. 18, பக். 142, மேற்கோள்.)

*[ பொன் + பொன்னம் + சிலம்பு ]*

**பொன்னடர்** *pon-n-adar,* பெ. (n.) தகட்டுப் பொன்; fine gold leaf. *'பசும் பொன்னட ராறு கோடி'* (சீவக. 1973)

*[ பொன் → அடர் ]*

**பொன்னணி-தல்** *pon-n-ani-,* செ.குன்றா.வி. (v.t.) *பொன்புனை* பார்க்க; *see, ponpunai* *'கன்னியன்னா டன்னைப் பொன்னணிவான்'* (இறை. 23, பக். 164. மேற்கோள்)

*[ பொன் → அணிதல் ]*

**பொன்னத்துப் பெட்டி** *ponnattu-p-petti,* பெ. (n.) திருமணத்தில் தாலி கூறைகள் எடுத்துச் செல்லும் பெட்டி; basket in which the tāli and wedding saree are carried in a marriage (j.)

*[ பொன் + பொன்னத்து + பெட்டி ]*

**பொன்னப்பிரகம்** *pon-nappirakam,* பெ. (n.) சாக்காய்பொன்வகை; (சங்.அக.) a kind of mica.

*[ பொன் → அப்பிரசம் ]*

*[Skt.abhraka* → த. அப்பிரகம்*]*

**பொன்னம்பர்** *pon-n-ampar,* பெ. (n.) ஒருவகை மணப் பண்டம்; a kind of amber. *'புழுகு பொன்னம்பர் பூவம்பர் பொங்கவே'* (திருக்காளத், 4. பஞ்சாக். 55) (செ.அக.)

*[ பொன் → அம்பர் ]*

**பொன்னம்பல அடிகள்** *ponnampala-adikal,* பெ. (n.) 1. 'கைவல்ய நவநீதம்' என்ற நூலுயும் பகவத் கீதைக்குச் சொற்பொருளு எழுதியுள்ளார்; the outhor of kaivalya-navanitam. 2. *'இரு சமய விளக்க சோதி''* என்ற நூலை எழுதியவர். காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவர். an author of eru-samaya-vilakka-soti, in kanchipuram.

**பொன்னம்பல சிவம்** *ponnampala-sivam,* பெ. (n.) மறைவனத்திறை மாலை, தேசியகீதக் கொத்து, குமார விநாயகர் பதிகம் போன்ற நூல்களை இயற்றியவர். the author of poetry viz maṟaivanat-tiṟaimālai, tāciyakitak-kottu, etc.

**பொன்னம்பலத்தார்** *pon-ṉ-ampala-ttār,* பெ. (n.) கைக்கோளர் சாதியைச் சார்ந்த இரந்துண்ணும் பிரிவினர். beggars attached to the kaikkōla caste.(e. t. iii. 35.);

*[ பொன்னம்பலம் →பொன்னம்பலத்தார் ]*

*[ பொன் + அம்பலத்தார் ]*

**பொன்னம்பலதாசர்** *pon-ṉ-ampala-tācar,* பெ. (n.) *'தில்லை சிவகாம சௌந்திரி திருவிரட்டைமணிமாலை'* நூலை இயற்றியவர், the author of tillai-sivakama-sountari-tiruviratti-mani-malai

**பொன்னம்பலம்** *pon-ṉ-ambalam,* 1. பொன்னாலமைந்த கூடம் golden hall (சிலப். பதிகம், 41, உரை), 2. தில்லையிலுள்ள பொற்சவை; the golden hall of chidambaram. *'பொன்னம் பலத்து மேவியாடல் புரியா நின்றவர்'* (பெரியபு. திருநாவுக். 175.)

*[ பொன் + அம்பலம் ]*

**பொன்னம்பாளை** pon-nam-bāḷai, பெ. (n.) நெல்வகை; a kind of paddy (a.)

*[பொன் → பொன்னாம் + பாளை]*

**பொன்னம்மாள்** ponṉammāḷ, பெ. (n.) *'சிவானந்த சாரம்'* எனும் நூல் இயற்றியவர் the author ofsivānanta-sāram.

**பொன்னரி**[1] poṉ-ṉ-ari, பெ. (n.) கிண்கிணி முதலியவற்றுளிடும் பொற்பரல்; bead of gold inside a thinking ornament. *'பொன்னரிய கிண்கிணியும்'* (சீவக.2921.)

*[பொன் + அரி]*

**பொன்னரி**[2]**—த்தல்** poṉ-ṉ-ari-, செ.கு.வி. (v.i.) வேறு பொருள்களினின்றும் தங்கத்தைப் பிரித்தெடுத்தல்; to sift gold from other things (w.)

*[பொன் + அரித்தல்]*

**பொன்னரிதாரம்** poṉ-ṉ-aritāram, பெ. (n.) அரிதாரவகை orpiment, a sulphide of arsenic. (பதார்த்த.1158.)

*[பொன் + அரிதாரம்]*

**பொன்னரிமாலை** poṉ-ṉ-arimālai, பெ. (n.) கழுத்தணிவகை; a kind of gold necklace. *'தோளிற்றோன்றும் பொன்னரிமாலை'* (கம்பரா.மாயாசன.5.)

*[பொன் + அரி + மாலை]*

**பொன்னரியமாலை** poṉ-ṉ-ariya-mālai, பெ. (n.) *பொன்னரி மாலை* பார்க்க; see *poṉ-ṉ-ariyimalai* (யாழ்.அக.).

*[பொன் + அரி → அரியம் + மாலை]*

**பொன்னலரி** poṉ-ṉ-alari, பெ. (n.) 1. ஈழத்தலரி பார்க்க, (மூ.அ.); pagoda tree. 2. அலரிவகை; exile oleander (l.)

*[பொன் + அலரி]*

**பொன்னவன்** poṉṉavaṉ, செ. (n.) 1. பொன்போல் அருமையானவன்; one precious like gold. *'முன்னவனுலகுக்கு முழுமணிப் பொன்னவன்'* (தேவா.1069,8) 2. வியாழன்; jupiter, as the golden planet. 3. இரணியகசிபு, hiranya kasibu. (w.) 4. கனாநூலியற்றிய புலவர்; the author of kaṉānūl, a treatise on dreams.

*[பொன் → பொன்னவன்]*

**பொன்னறுவிலி** poṉṉaṟuvili, பெ. (n.) மரவகை; golden sebestan.

*[பொன் + நறுவிலி]*

**பொன்னறை** poṉ-ṉ-aṟai, பெ. (n.) 1. பொற்பேழை; golden chest *'பல்கலமேதகப் பெய்ததோர் பொன்னறைதான் கொடுத்தான்'* (சீவக.237.) 2. அரசன் தங்கும் எழில்மண்டபம்; king's apartments. *'பொன்னறையு ளின்னமளிப் பூவணையின் மேலோன்'* (சீவக.2035.) 3. கருவூலம்; place where treafure and jewels are kept. *'விளங்கு பொன்னறையுள் விழுநிதிப் பேழையுள்'* (பெருங்.உஞ்சைக்.38, 210.)

*[பொன் + அறை]*

**பொன்னன்** poṉṉaṉ, பெ. (n.) 1. பொன்னுடைய யோன்; one who has gold. (நன்.276,உரை.) 2. *பொன்னவன்,* 1 பார்க்க; see *poṉṉavan,* 1 *'என்ன .... அடியேன்றனமாகியபொன்னன்'* (தேவா.784,2.) 3. சிறியவன்; urchin, small boy. (w.) 4. அருகக் கடவுள்; arhat (w.) 5. *பொன்னவன்* 3 பார்க்க; see *poṉṉavan,* 3 *'பொன்னன் பைம்பூ ணெஞ்சிடந்து'* (திவ்.பெரியதி.3,4,4.)

**பொன்னாகத்தான்** poṉ-ṉ-ākattāṉ, பெ. (n.) *பொன்னவன்* 3 பார்க்க; see *poṉṉavan.* *'பொன்னாகத்தானை நக்கரியுருவமாகி நகங்கிளர்ந்திடந்து'* (திவ்.பெரியதி.5,9,5.)

*[பொன் + ஆகத்தான்]*

**பொன்னாகனார்** poṉṉākaṉār, பெ. (n.) கழகக்காலப் புலவர் குறுந்தொகையில் இவர் பாடல்கள் இடம்பெற்றுள்ளன; a sankam poet.

**பொன்னாங்கண்ணி** poṉ-ṉ-āṉ-kaṇṇi, பெ. (n.) 1. *பொன்னாங்காணி* பார்க்க; see *poṉ-ṉ-āṅkāṇi* (இ.வ.) 2. உணவுக்குப் பயன்படும் கீரை; a kind of green's *'கண்ணுக்கினிய பொன்னாங்கண்ணி'* (பழ.) பொன்னாங் கண்ணியைப் புளியிட்டு ஆக்கினால் உண்ணாப் பெண்ணும் உழக்கு உண்பாள் (பழ.)

*[பொன்னாங்காணி → பொன்னாங்கண்ணி]*



**பொன்னாங்காணி** poṉ-ṉ-āṅ-kāṇi, பெ. (n.) பூடுவகை a plant growing in damp places. (பதார்த்த.349.);

*[பொன் + பொன்னாம் + காணி]*

**பொன்னாங்காணிச் சக்களத்தி** poṉṉāṅ-kāṇi-c-cakkalatti, பெ. (n.) பொன்னாங்காணி போன்ற பூடுவகை; a plant resembling poṉṉaṅkāṇi.

**பொன்னாங்காய்** poṉ-ṉ-āṅ-kāy, பெ. (n.) *பொன்னாங்கொட்டை* பார்க்க; see *poṉ-nāṅkoṭṭai.*

*[பொன் → பொன்னாம் + காய்]*



**பொன்னாங்கொட்டை** poṉ-ṉ-āṅ-koṭṭai, பெ. (n.) பூவந்தி[1],1 பார்க்க; (m.m.**843.**)

*[பொன் → பொன்னாம் + கொட்டை]*

**பொன்னாசி**[1] poṉṉāci, பெ. (n.) அரத்தம் வடியும் மூக்கு; bleeding nose.

*[பொன் +* skt. nāsikā. *த. நாசி]*

**பொன்னாசி**[2] *poṉ-ṉ-āci,* பெ. (n.) ஆண்குறி; penis. *'குழந்தை பொன்னாசியில் எறும்பு கடித்தது'*. (இ.வ.)

*[பொன் +* skt. nāsikā. *நாசி]*

**பொன்னாசியுடைகை** *poṉṉāci-y-udaikai,* பெ. (n.)மூக்கிலிருந்துகுருதிவடிகை; nose-bleed, epistaxis.

*[பொன் +*skt. nāsikā. *நாசி + உடைகை]*

**பொன்னாசை** *poṉ-ṉ-ācai,* பெ.(n.) பொருளில் வைக்கும் பற்று. desire of wealth, avarice.(கைவல்.தத்.1.)

*[பொன் + ஆசை]*

**பொன்னாட்சி** *poṉ-ṉ-āṭci,* பெ. (n.) வியாழக்கிழமை; thurs day, as the day presided over by jupiter. *'உரோகிணி யூர்ந்த வொளிமதி யொண் பொன்னாட்சி'* (சீவக.620.)

*[பொன் + ஆட்சி]*

**பொன்னாடை** *poṉ-ṉ-ādai,* பெ. (n.) பொன்னிழை கொண்டு நெய்த துணி; gold coth; gold bordered silk cloth. *'பொன்னாடை புனைந்தானும்'* (கம்பரா.மாரீச.4.)

*[பொன் + ஆடை]*

**பொன்னாந்தகரை** *poṉ-ṉ-ān-takarai,* பெ. (n.) *பொன்னாவிரை* பார்க்க; see *poṉṉavirai* (பைஷஜ.)

*[பொன் → பொன்னாம் + தகரை]*

**பொன்னாந்தட்டான்** *poṉ-ṉ-ān-taṭṭāṉ,* பெ. (n.) நெஞ்சிடத்தே மஞ்சணிறம் வாய்ந்த ஒருவகைக்குருவி yellow-breasted thrush, as gold coloured. (பதார்த்த.900); 2. தட்டாரப் பூச்சி பார்க்க; dragon-fly. (இ.வ.)

*[பொன் → பொன்னாம் + தட்டான்]*



**பொன்னாந்தலை** *pon-n-ān-talai,* பெ. (n.) வெண்ணிறமுள்ள கடல்மீன்; sea-bream, small sea-fish, whitish.

**பொன்னாம்பழம்** *pon-nām-palam,* பெ. (n.) நெய்க்கொட்டான்பார்க்க; soap-nut.(மலை.)

**பொன்னாம்பூ** *pon-n-ām-pū,* பெ. (n.) *பொன்னாவிரை* பார்க்க; see *ponnāvirai.* (மலை.)

**பொன்னாயகன்** *ponnāyakan,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy. '*கறுப்பன் சின்னட்டி பொன்னாயகன்*' (பறாளை.பள்ளு.23.)

*[பொன் + நாயகன்]*

**பொன்னாவாரை** *pon-nāvārai,* பெ. (n.) *பொன்னாவிரை* பார்க்க; see *ponnavirai.*

*[பொன் + ஆவிரை → ஆவாரை]*

**பொன்னாவிரை** *pon-n-āvirai,* பெ. (n.) 1. செடிவகை; fetid cassia, (a.) 2. பேயாவிரை negro coffee (l) 3. மஞ்சட் கொன்றை; siamese tree senna. (k.r.).

*[பொன் + ஆவிரை]*

**பொன்னி** *ponni,* பெ. (n.) 1. காவிரி. (திவா.) the kāvēri. '*பொன்னிவளம் பெருகும்*' (திவ்.பெரியதி.7,8,3.). 2. எட்டாம்பாட்டன்; ancestor of the 8th generation (j.) 3. *பொன்னாசி*[1] பார்க்க; see *porrāci.*

*[பொன் → பொன்னி]*

'இ' உடைமைப்பொருள் பெயரீறு

**பொன்னிக்குடமுடைதல்** *ponni-k-kudamudaital,* பெ.(n.) *பொன்னாசியுடைகை* பார்க்க; (m.l.); see *porrāciyutaikai.*

**பொன்னிடம்** *pon-n-idam,* பெ. (n.) உச்சித்துளை; fontanells '*பொன்னிடந்தேறி*' (திருப்பு.586.)

*[பொன் + இடம்]*

**பொன்னித்துறைவன்** *ponni-t-turaivan,* பெ. (n.) சோழன்; chōla king a lord of the vāvēri region. '*பொன்னித்துறைவனை வாழ்த்தினவே*' (கலிங்.581,புதுப்.)

*[பொன்னி + துறைவன்]*

**பொன்னிநாடன்** *ponni-nādan,* பெ. (n.) சோழன்;chola king.'*வண்டல்பாய் பொன்னிநாடனை*' (கலிங்.135.)

*[பொன்னி + நாடன்]*

**பொன்னிநாடு** *ponni-nādu,* பெ. (n.) சோழநாடு; chōla country. '*தியாகமா விநோதன் தெய்வப் பொன்னி நாட்டு*' (கம்பரா.மருந்து.58.)

*[பொன்னி + நாடு]*

**பொன்னிமிளை** *ponnimilai,* பெ. (n.) தாதுப்பொருள் வகை; gold-coloured antimony.

*[பொன் + நிமிளை]*

**பொன்னியாயி** *ponni-y-āyi,* பெ. (n.) ஒரு சிற்றூர்த் தெய்வம்; (g.tp.d.1,89.). a village goddess.

*[பொன்னி + ஆய் → ஆயி]*

**பொன்னியுடைதல்** *ponni-y-udaital,* பெ. (n.) *பொன்னாசியுடைகை* பார்க்க (இ.வ.); see *porrāciyudaikai*

*[பொன்னி + உடைதல்]*

**பொன்னிரேக்கு** *pon-n-irēkku,* பெ. (n.) பொன்னிலைத் தகடு; gold-foil, gold-leaf. (இ.வ.)

*[பொன் + ரேக்கு → இரேக்கு]*

*[* U. rēk → *த. இரேக்கு]*

**பொன்னிலக்கம்** *pon-n-ilakkam,* பெ. (n.)
1. எண்வாய்பாடு; numberation table.
2. பொன்னிறை வாய்பாடு; table of gold weight. (m.m.)

*[பொன் + இலக்கம்]*

**பொன்னிலம்** *ponnilam,* பெ. (n.) பொன்னுலகம்; svarga, as the golden land. 'பொன்னஇலத் தெழுந்தோர்.......பூங்கொடி' (சீவக.1457)

*[பொன் + நிலம்]*

**பொன்னிழை** *pōn-nilai,* பெ. (n.) *பொற்சரிகை* பார்க்க; see *porcarikai.*

*[பொன் +இழை]*

**பொன்னிற்பொதி—தல்** *ponnir-poti-,* செ.குன்றா.வி.(v.t.)பொன்போலப் பேணிக்கொள்ளுதல்; to take great care of; to treasure. '*பொன்னிற் பொதிந்தேன்*' (சிலப்.16,13.)

*[பொன் → பொன்னில் + பொதி—]*

**பொன்னிறமாட்சி** *ponnira-māṭci,* பெ. (n.) *பொன்னிமிளை* பார்க்க; (சங்.அக.) see *ponnrimilai.*

**பொன்னிறத்தி** *ponnratti,* பெ. (n.) கண்டங்கத்திரி; a thorny shrubsolanum jacquini.

**பொன்னுக்காதி** *ponnkkāti,* பெ. (n.) களிம்பற்ற செம்பு; copper purified which does not rust.

**பொன்னுக்கு வீங்கி** *ponnukku-vingi,* பெ. (n.) கூகைக்கட்டு; mumps, parotities, believed to be cured by wearing a gold ornament.

*[பொன் → பொன்னுக்கு + வீங்கி]*

**பொன்னுச்சாமிக்கவிராயர்** *ponnu-c-cami-k-kavirāyar,* பெ. (n.) காதற்பிரபந்தம் என்ற நூலின் ஆசிரியர்; an author of katarpirabantam.

**பொன்னுச்சாமித்தேவர்** *ponnu-c-camit-tāvar,* பெ. (n.) 'இராச மன்னார்கோயில்(குடி) தலபுராணம் இராசமன்னனார் அலங்காரக் கோவை' ஆகிய நூல்களை இயற்றியவர். the author of erāsamannār-koil-talapurānam and erāsamannār-alakāram-kōvai

**பொன்னுச்சாமிப்பிள்ளை** *ponnusamip-pillai,* பெ. (n.) 'கோடாங்கி மாலை' எனும் நூல் இயற்றியவர். the author of koṭānki-mālai.

**பொன்னுடம்பு** *poṉ-ṉ-udambu,* பெ. (n.) **1.** தேவ உடம்பு; body of a divine being, as golden. *'தவத்துடம்பு நீங்கினார்.... பொன்னுடம்படைந்த தொப்பவே'* **(சீவக.325.)** **2.** பெண்குறி; pudendum muliebre. **(குஞ்.).**

*[பொன் + உடம்பு]*

**பொன்னுருக்கு-தல்** *poṉ-ṉ-urukku-,* பெ. (n.) நற்காலத்தில் தாலிசெய்யப் பொன்னை உருக்கிவிடுதல்; to perform the ceremony of melting gold for the tāli at an auspicious time.

*[பொன் + உருக்கு-]*

**பொன்னுருட்டு** *poṉ-ṉ-uruṭṭu,* பெ. (n.) உருட்டாயமைத்த பொன்மோதிரம்; plain gold ring, hoop of gold. (w.)

*[பொன் + உருட்டு]*

**பொன்னுரை** *poṉ-ṉ-urai,* பெ. (n.) **1.** உரைகல்லில் உரைத்த பொன்னின் தேய்மானம் streak of gold on a touchstone. *'பொன்னுரைகடுக்குந்திதலையர்'* **(திருமுரு.145.). 2.** ஒருவகை நெல்; a kind of paddy. (a.)

*[பொன் + உரை]*

**பொன்னுலகம்** *poṉ-ṉ-ulakam,* பெ. (n.) **1.** வானுலகம்; suarga. *'பொன்னுலகத்துள்ள துப்புரவு'* **(சீவக.527.)** **2.** (jaina) *பொன்னெயில் வட்டம்* பார்க்க; see *poṟreyil-vaṭṭam.* *'பொன்னுலகத்துய்க்கு மூழ்வினை'* **(சீவக.380.)**

*[பொன் + உலகம்]*

**பொன்னுலகாளி** *poṉ-ṉ-ulakāḷi,* பெ. (n.) வேந்தன் (இந்திரன்) (பிங்.); indra.

*[பொன் + உலகு + ஆளி]*

ஆளி-'இ' உடைமைப்பெயரீறு

**பொன்னுலகு** *poṉ-ṉ-ulaku,* பெ. (n.) பொன்னுலகம் பார்க்க, *'பொன்னுலகாள'* **(தேவா.293,16.)**

*[பொன் + உலகு]*

**பொன்னுறுமாலை** *poṉ-ṉ-urumālai,* பெ. (n.) பொன்னிழை கலந்து நெய்த கைத்துண்டு வகை; a hand kerchief interwoven with gold. (w.)

*[பொன் + உறு+மாலை]*

**பொன்னூசல்** *poṉ-ṉ-ūcal,* பெ. (n.) பொன்னாலாகிய ஊஞ்சல்; golden swing. *'பொன்னூசலாடாமோ'* **(திருவாச.16,1.)**

*[பொன் + ஊசல்]*

**பொன்னூமத்தை** *poṉ-ṉ-ūmattai,* பெ. (n.) **1.** செடிவகை. **(பிங்.);** purple stramony **2.** செடி வகை; a species of zanthium orientale.

*[பொன் + ஊமத்தை]*



**பொன்னூல்** *ponnūl,* பெ. (n.) **1.** பொற்கம்பி. (s.i.i.ii,**156,42.**); gold wire. **2.** கழுத்தணிவகை; gold necklace of several strands. **3.** பொற்பூணூல்; golden sacred thread. *'புடையார் பொன்னூலினன்'* (திவ்.திருவாய். **3,7,4.**)

*[பொன் + நூல்]*

**பொன்னெயில்** *pon-n-eyil,* பெ. (n.) *பொன்னெயில் வட்டம்* பார்க்க; see *ponneyil-vaṭṭam.* 'குபேரன் செய்த விருப்புறு *பொன்னெயிற்குள்'* ..... ஆதிமூர்த்தி (சூடா.**4,1.**)

*[பொன் + எயில்]*

**பொன்னெயில் வட்டம்** *pon-n-eyil-vaṭṭam,* பெ. (n.) பார்க்க, சமவசரணம். (jain) heavenlypavilion. '*பொன்னெயில் வட்டத்திற்கு செலுத்தும் ஊழ்வினை'* (சீவக.**380**,உரை,)

*[பொன்னெயில் + வட்டம்]*

**பொன்னெயிற்கோன்** *pon-n-eyir-kōn,* பெ. (n.) *பொன்னெயிநாதன்* பார்க்க; (சூடா.) see *pon-n-eyir-kōn.*

**பொன்னெயினாதன்** *pon-n-eyinātan,* பெ. (n.) அருகக் கடவுள். (திவா.) (jaina.) arhat, as lord of the camavacaranam.

*[பொன்னெயில்* +skt.nātha. *த.நாதன்]*

**பொன்னெழுத்து** *pon-n-eluttu,* பெ. (n.) ஒருவகைத் துகில். a kind of cloth (சிலப்.**14,108**,உரை.).

*[பொன் + எழுத்து]*

**பொன்னேர்** *pon-n-ēr,* பெ.(n.) **1.** பருவ காலத்தில் நல்லநாளில் முதன் முறையாக உழுங்கலப்பை; the plough used on an auspicious day for the first time in a season. '*பொன்னேர் பூட்டி நின்றோர்'* (சிலப்.**10,135**,உரை.) **2.** *பொன்னேர்க்கட்டு* பார்க்க; (இ.வ.) see *pon-n-ērkaṭṭu.*

*[பொன் + ஏர்]*

**பொன்னேர்க்கட்டு** *pon-n-ērkaṭṭu,* பெ. (n.) பருவகாலத்தில் நல்ல நாளிற் செய்யும் முதலுழவு; first ploughing of a season on an auspicious day with appropriate ceremonies (w.)

*[பொன்னேர் + கட்டு]*

**பொன்னேர்ப்பூட்டு** *pon-n-ē-p-pūṭṭ,* பெ. (n.) *பொன்னேர்க்கட்டு* பார்க்க; see *pon-n-ērkaṭṭu* (w.)

*[பொன்னேர் + பூட்டு]*

**பொன்னையசாமிகள்** *pon-naiya-sāmikal,* பெ. (n.) 'சதானந்த சதகம்' என்றநூலை இயற்றியவர்; the author of satānanta-satakam.

**பொன்னையாபிள்ளை.க** *ponnaiyāpillai. ka,* பெ. (n.) இசையில், தஞ்சைப்பெருவுடையான் பேரிசை ஆகிய நூல்களை இயற்றியவர்; the author of esaiyial, and tancai-p-peruvuṭaiyan-pērisai

**பொன்னோர்** *ponnōr,* பெ. (n.) தேவர்கள்; dēvās. (பெருங். இலாவாண.7,168, பாடபேதம்)

*[பொன் → பொன்னோர்]*

**பொன்னோடை** *ponnōdai,* பெ. (n.) பொன்னாற் செய்த நெற்றிப்பட்டம்; thin plat of gold worn on the forehead, as an ornament or badge of distinction. *'பொன்னோடை நன்றென்றாள் நல்லாளே'* (முத்தொ.58)

*[பொன் + ஓடை]*

**பொன்னோதுவார்,சு** *ponnōtuvār,su,* பெ. (n.) 'திருஞான சம்பந்த மூர்த்திநாயனார் புராண வசனம்' எனும் நூலை இயற்றியவர்; the author of tiruñana-sammanta-murtti-nayanār-purāna-vasanam.

**பொன்னோலை** *pon-n-ōlai,* பெ. (n.) மகளிர் காதணி வகை; gold ear-ring for a woman. 'பொன்னோலை வட்டம் பொழிந்து மின்னுகுப் (சீவக.677.)

*[பொன் + ஓலை]*

**பொனத்தி** *ponatti,* பெ. (n.) **1.** நீல நிறமுள்ளதும் ஆறுஅடி வளர்ச்சியுடையதுமான ஆற்றுமீன் வகை; a river-fish, bluish, attaining **2.** நீல நிறமுள்ள ஆற்றுமீன் வகை. a river-fish with long maxillary barbels, bluish.

**போ¹** *pō,* தமிழ் நெடுங்கணக்கில் 'ப்' என்ற மெய்யெழுத்தும், 'ஓ'என்றநெட்டுயிரெழுத்தும் சேர்ந்து உண்டான உயிர்மெய்யெழுத்து; the compound of ப் and ஓ.

*[ப்+ஓ =போ]*

**போ²—தல்** *pō-,* செ.கு.வி. (v.i.) **1.** செல்லுதல்; to go, proceed; to go away, depart. *'மாமலர் கொய்ய... யானும் போவல்'* (மணிமே. 3, 83.) **2.** அடைதல்(வின்); to reach a destination (w.) **3.** உரியதாதல்(வின்); to belong **4.** பிறத்தல்; to be born. *'வணிகர் மரபிற் போந்தோன்'* (உபதேசகா. சிவபுண். 153) **5.** நீண்டு செல்லுதல்; to lie, pass through, as a path. *'தென்கரைக்கு நடுவாகப் போயின இடை கழி'* (T.A.S. i. 189) **6.** தகுதியாதல்; to be proper, admissible passable. *'அப்படிச் செய்யப் போகாது'(வின்)* **7.** நெடுமையாதல் (தொல். சொல். 317.); to become long; to be stretched out **8.** நேர்மையாதல்; to become straight. *'வார்தல் போகல்.... நேர்பு நெடுமையும் செய்யும் பொருள'* (தொல். சொல். 317); **9.** பரத்தல் to extend, spread *'விசும்பினு ஞாலத்தகத்தும் வளியே யெதிர்போம் பல்கதிர் ஞாயிற்றொளி'* (கலித். 144, 40.) **10** நிரம்புதல்; to be full. *'நலந்துறை போய நங்கை'* (சீவக. 2132) **11.** மேற்படுதல்; to exceed transcend. *'ஆயிர மல்லு போன'* (கம்பரா. மாயாசனக. 14.) **12.** ஓங்குதல்; to shoot up; to be tall. *'கள்ளிபோகிய களரியம் பறந்தலை'* (புறநா. 237.) **13.** நன்கு பயிலுதல்; to become expert in. *'முத்தமிழ்த் துறையின் முறை போகிய வுத்தமக் கவி'* (கம்பரா. சிறப்புப். 9.) **14.** கூடியதாதல்; to undergo, experience, to go through the process of. *'மூச்சுவிடப் போகவில்லை'* **15.** பிரிதல்; to separate . *'புலம்பப் போகாது'* (பரிபா. 11, 118)

**16.** ஒழிதல்; to cease. *'மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப'* (புறநா. 10) **17.** நீங்குதல்; to leave, abandon. *'நூல்போன சங்கிலி'* (பதினொ. திருத். திருவந். 69.) **18.** கழிதல்; to go by, pass over; to lapse. *'போய காலங்கள்'* (திவ். திருவாய். 2, 6, 10) **19.** மறைதல், to vanish, disappear. 'ஒளியவன்.....தேரும் போயிற்று' (திவ்.பெரியதி. 8,6,6) **20.** காணாமற் போதல்; to be missing; to be lost. *'போன பொருள் திரும்பாது'* **21.** மாறுதல்(வின்); to change, as from one state to another (w.) **22.** கழிக்கப் படுதல்; to be subtracted. *'ஆறிலே இரண்டு போக'* **23.** வகுக்கப் படுதல்; to be diveded. *'நூறில் பன்னிரண்டு எட்டுத்தரம் போகும்'* **24.** சாதல்; to perish, due *'தந்தையார்; போயினார் தாயரும் போயினார் தாமும் போவார்'* (தேவா. 692, 2) **25.** முடிவாதல்; to be conclusive. *'இன்பமாவதே போந்த நெறி என்றிருந்தேன்'* (தாயு. சின்மயானந்த. 5.) **26.** ஒலியடங்குதல்; to be hushed. *'முரசெலாம் போன'* (கம்பரா. முதற்போ. 232) **27.** புணர்தல்; to cohabit. *'அவளோடு போனான்'*–

*[ஊ → ஒ → போ → போ]*

**போ³-தல்** pō-, aux. an aux. (a) தொடங்குவதைக் குறிக்கும் துணைவினை; expressing what is about to happen. *'அதைச் செய்யப் போகிறான்'* (b) emphasising the meaning of the main verb பகுதிப் பொருளையே வற்புறுத்தும் துணைவினை. *'தூங்கிப் போனான்'*

க. ஒரி. போகு ம. போ

*[போ→போ – தல்]*

**போ⁴** *Pō,* இடை. part. ஓர் அசைநிலை (தொல்.சொல். 281.); an expletive.

**போக்கடா** *Pōkkaḍā,* பெ. (n.) வம்பன்; (இ.வ.) rowdy.

*[போக்கு + கடா]*

**போக்கடி-த்தல்** *Pōkkaḍi-,* செ.குன்றாவி. (v.t.) **1.** இழத்தல்; to lose. *'கான் மாரீசன் என்றவரையும் போக்கடித்தேன்'* (இராமநா. உயுத். 44.) **2.** வீணாக்குதல்(வின்); to waste (w.) **3.** விலக்குதல்(வின்); to dispel, disperse, banish, chase away **4.** போகச் செய்தல்(வின்); to cause to go.

*[போ→போக்கு + அடி → போக்கடி]*

**போக்கடி²** *Pōkkaḍi,* பெ. (n.) **1.** இழக்கை(வின்); losing, loss. **2.** பொருளாதரவு(வின்); pecuniary means. **3.** தற்போக்கு; liberty of action. (w.) **4.** கழுவாய்; remedy. *'போக்கடி யற்ற தசை'* (ஈடு, 9, 1, 2.) **5.** காலக்கெடு; opportunity, scope. *'மேல் வார்த்தை சொல்கைக்கு ஒரு போக்கடியுமில்லை'* (ஈடு. 6, 2, 5.)

*[போ→போக்கு + அடி → போக்கடி]*

**போக்கடிப்பான்** *Pōkkaḍippāṉ,* பெ. (n.) ஒரு வசைச் சொல்; a curse, meaning 'loser'

*[போக்கடி →போக்கடிப்பான்]*

**போக்கடியறு-தல்** *Pōkkaḍi-y-aṟu,* செ.கு.வி. (v.i.) **1.** புகலிடமில்லையாதல்; to lose one's means of livelihood. **2.** செயலறுதல் (குருபரம், 342); to be helpless, to be laid prostrate.

*[போக்கடி + அறு–, ]*

**போக்கணங்கெட்டவன்** *Pōkkaṉaṅ-keṭṭavaṉ,* பெ. (n.) *போக்றுவான்* (கொ.வ.) பார்க்க; see *pōkkaṟuvāṉ.*

*[ போக்கு → போக்கணம் + கெட்டவன் ]*

**போக்கணம்**[1] *Pōkkaṇam,* பெ. (n.) புகல்; refuge, way of escape.

*[ போக்கு → போக்கணம்]*

*அணம்—பெயரீறு*

**போக்கணம்**[2] *Pōkkaṇam,* பெ. (n.) நாணம்(வின்) shame, sense of shame

*[ போக்கு + அணம்]*

**போக்கணம்**[3] *Pōkkaṇam,* பெ. (n.) கட்டுச்சோறு; viaticem, food for journey.

*[ பொக்கணம் → போக்கணம் ]*

**போக்கம்** *Pōkkam,* பெ. (n.) பொலிவு(சூடா); beauty, splendour.

*[ பொக்கம் → போக்கம் ]*

**போக்கறு**[1]**—தல்** *Pōkkaṟu,* செ.கு.வி. (v.i.) 1. குற்றம் நீங்குதல்; to be faultless. "போக்கறுபனுவல்" (தொல். பாயி). 2. கதியறுதல்; to lose one's means of livelihood. *'போக்கற்றுச் செயல்மாண்டு நின்ற நிலை'* (ஈடு, 6, 10, 10)

*[ போக்கு + அறு—, ]*

**போக்கறு**[2]**—தல்** *Pōkkaṟu,* செ.குன்றாவி(v.t.) முட்டின்றிச் செய்தல்; to make no depault. கோயில் தேவைசாரம் சந்திராதித்தவரை போக்கறுப்பலனாகச்சிலாலேசை பன்னிக்கொடுத்தோம் (S.I.I.iv.102)கடமை தட்டுப்போக்கறுக்கபோணுமென்று மகாசபையோம் சம்மதித்து(S.I.I.viii,165)

*[ போக்கு + அறு—த்தல் ]*

**போக்கறுதி** *Pōkkaṟudi,* பெ.(n.) புகலின்மை; want of an alternative. 'முன்பு பலபடியுஞ் சொன்னதனையேபோக்கறுதிலாற் பின்புஞ் சொல்லுகின்றேன்' (நிலகேசி. 392, உரை)

*[ போக்கு + அறு → அறுதி ]*

**போக்கறுவான்** *Pōkkaṟuvvāṉ,* பெ. (n.) 1. போக்கிடமில்லாதவன்; one who has nothing to fall back upon; one who has no means of living; a destitute person. *'போக்கறுவான் வீட்டிற் புகுந்தான்'* (விறலிவிடு. 845)

*[ போக்கறு → போக்கறுவான் ]*

**போக்கன்** *Pōkkaṉ,* பெ. (n.) 1. வழிப்போக்கன்; wayfarer, traveller. 2. வெளிநாட்டுக்காரன்; foreigner. 3. பயனற்றவன்; worthless person. 4. கயவன்(வின்); mean fellow

*க. போக ம. போக்கந*

*[ போக்கு → போக்கன் ]*

**போக்காட்டு—தல்** *Pōkkāṭṭu-,* செ.குன்றாவி. (v.t.) 1. அனுப்பிவிடுதல்; to send away. 2. வேற்றிடம் போகுமாறு சாக்குச் சொல்லி விடுத்தல்; to send to another place or to a third person, excusing oneself.

*[ போக்கு → காட்டு—, ]*

**போக்காடு**[1] *Pōkkāḍu,* பெ. (n.) தீவினைகளைப் போக்கும் பொருட்டு காட்டெல்லையில் போகவிடப்படும் ஆட்டுக்கடா; scape goat.

*[ போக்கு → ஆடு ]*

**போக்காடு**[2] *Pōkkāḍu,* பெ. (n.) இறப்பு; death. (யாழ்.அக.)

*[ போ → போக்காடு ]*

**போக்காளன்** *Pōkkāḷaṉ,* பெ. (n.) 1. இளமையில் இறந்தோன்; man who died a premature death. 2. பயனற்றவன்; worthless man.

*[ போக்கு + ஆள் + அன் → போக்காளன் ]*

**போக்காளி** *Pōkkāḷi,* பெ. (n.) 1. இளமையில் இறந்தவ–ன்–ள்; man or women who died a premature death. 2. ஒன்றுக்கும் உதவாதவ–ன்–ள்; workless person.

*[ போக்கு + ஆள் + இ → போக்காளி ]*

'இ' உடைமைப் பொருள் பெயரீறு

**போக்கி** *Pōkki,* வி.எ. (adv.) 1. *போக்கன்*,2 (யாழ்.அக.) பார்க்க; see *pōkkan.* 2. பின்பு; afterwards. *'இவை போக்கிச் சொல்லுதும்'* (தொல். பொ. 444, உரை) 3. தவிர; besides. *'கல்யாணகுண விசயமான இத்தனைப் போக்கிப் புறம் போயிற்றில்லை'* (ஈடு, 3, 1, 6)

*[ போக்கு → போக்கி ]*

**போக்கிச் சொல்(லு)–தல்** *Pōkki-crcol,* செ.கு.வி. (v.i.) பின்னர்க் கூறுதல்; to deal with, in a latter place. 'அவை இரண்டு திணைக்கும் விரவுவினை ஆதலாற் போக்கிச் சொல்லுதும்' (நேமி நா. 41, உரை.)

*[ போக்கு+ சொல்–, ]*

**போக்கிடம்** *Pōkkiḍam,* பெ. (n.) 1. ஒதுக்கிடம்; way of escape. 2. புகலிடம்; place of refuge. *'போக்கிடங் காணேன்'* (திருவாச. 23, 6)

*[ போக்கு → இடம் ]*

**போக்கியல்** *Pōkkiyal,* பெ. (n.) சுரிதகம் (வீரசோ. யாப். 11, உரை) ; last member of some kinds of kali-p-pā verse.

*[ போக்கு + இயல் ]*

**போக்கிரி** *Pōkkiri,* பெ. (n.) *போக்கிலி* பார்க்க; see *pōkkili.*

*[ போக்கு → போக்கிலி → போக்கிரி ]*

**போக்கிரிசாக்கிரி** *Pōkkiricākkiri,* பெ. (n.) *போக்கிலி*[2] (வின்) பார்க்க; see *pōkkili.*

*[ போக்கிரி + சாக்கிரி ]*

எதுகை நோக்கி வந்த மரபு இணைச்சொல்

**போக்கிரித்தனம்** *Pōkkiri-t-taṉam,* பெ. (n.) பொல்லாச்செயல்; rascality.

*[ போக்கிரி + தனம் ]*

**போக்கிலி** *Pōkkili,* பெ. (n.) 1. கதியற்றவன்; one who has no refuge. (யாழ்.அக.) 2. கயவன்; (சங்.அக.) villain.

*[ போக்கு + இலி ]*

இல் + இ – இலி 'இ' உடைமைப் பொருள் பெயரீறு.

**போக்கு[1]–தல்** *Pōkku,* செ.குன்றாவி. (v.t.) **1.** போகச் செய்தல்; to sent, to cause to go. "பிள்ளையைப் போக்கினேன்" (திவ்.பெரியாழ். 3, 2, 1) **2.** செய்தல்; to discharge, pay, render. "வனத்துழாய்க் கணவர்க்கும் வணக்கம் போக்கினாள்" (கம்பரா. மீட்சிப். 84) **3.** செய்து முடித்தல்; to complete, finish. புரிய வேண்டுவ யாவையும் விதிமுறை போக்கி (உபதேசகா. சிவவிரத. 319) **4.** கொடுத்தல்; to give. *'கலன்களும் தூசும் போக்கினான்'* (கம்பரா. எழுச். 6) **5.** உணர்த்துதல்; inform, make known. *'கரிபோக்கினாள்'* (சீவக. 889) **6.** உட்புகுத்துதல்(வின்); to insert. **7.** கட்டுதல்; to bind. "ஏக்கழுத்து நாணாற் கரும்பினணை மென்றோள் போக்கிச் சிறைபிடித்தாள்". (பரிபா. 7, 56) **8.** மெலிவுறச் செய்தல்; to make lean. ஆக்கையைப் போக்கப் பெற்று (திருவாச. 6, 10) **9.** இல்லாமற் செய்தல்; to clear remove *'அழுக்கைப் போக்கினான்'* **10.** கழித்தல்; to pass or spend, as time. *'அவத்தமே வாழ்நாளைப் போக்குவார்'* (நாலடி. 327) **11.** அழித்தல்; to ruin, destroy, kill. ஆக்குதலளித்தல் போக்குதல். (சிவப். பிர. இஷ்ட நெடுங்கழி. 7)

*[ போ → போக்கு ]*

**போக்கு[2]–தல்** *Pōkku,* செ.குன்றாவி. (v.t.) கற்பித்தல்; to teach. 'ஆசார்யன் போக்கின வையேயாகிலும் சத்யந்நிதியிலே சொல்லக் கடவதல்ல' (திவ்.திருநெடுந்.13 வ்யா.)

*[ போ → போக்கு ]*

**போக்கு[3]** *Pōkku,* பெ. (n.) **1.** போகச்செய்கை; causing to go, letting out. **2.** வழி way, passage, exit, **3.** சுரங்கவழி(வின்); subterranean passage **4.** நடை(பிங்); walk, step, gait. **5.** மீட்சி; recovery. *'நாகம் போக்கறக் கொண்ட தேனும்'* (சீவக. 1285) **6.** புகல்; refuge. *'இலங்கை போக்கறவும்'* (கம்பரா. மாயாசனக. 83) **7.** இடம்; place. இது இந்தப்போக்கிலே கிடைக்குமா? **8.** நிலத்தியல்பு; character of land, as hilly sandy. மலைப்போக்கு, ஆற்றுப்போக்கு, **9.** மனச் சாய்வு; tendency, turn of mind, *'அவனைப் போக்குப் போல் விட்டுப் பிடிக்க வேண்டும்'* **10.** சாக்கு; excuse. **11.** பழக்கம் (யாழ்.அக.); habit **12.** நடைமுறை; manner, **13.** விருப்பம்; desire, **14.** பொலிவு; style. **15.** நீர்முதலியவற்றின் ஓட்டம்; flowilng, as of water or wind. "புணரியைப் போக்கற வடைத்தவாறும்" (கம்பரா. ஒற்றுக். 46) **16.** மலமுதலியன வெளிப்படுகை; euacuation. **17.** பறவை நூலில் ஆந்தையின் தொழிலால் குறிக்கப்படும் விளைவு(சூடா); prediction by the action of owl among pancapaksi **18.** கேடு; loss, ruin. போக்கு மதுவிளிந் தற்று (குறள். 332) **19.** செலவு; expense. **20.** இறப்பு; death. "போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே" (திருவாச. 1, 77) **21.** குற்றம்; fault, defect. போக்கறு பனுவல் (தொல். பாயி) **22.** கழிப்புக் கழிக்கை; ceremony of averting evil. **23.** மரக்கன்று;(பிங்) sapling

*க. போக*

*[ போ → போக்கு ]*

**போக்கு[4]** *Pōkku,* பெ. (n.) செல்லுகை; going, passing. *'குறும்பி னூழையும் வாயிலும் போக்கறவளைஇ'* (பு. வெ. 1, 7, கொளு)

*[ போ → போக்கு ]*

**போக்கு[5]** *Pōkku,* பெ. (n.) நடத்தை; conduct. *'அழகிதாயிருந்தது எம்முடைய போக்கு'* (ஈடு,1,4,7)

*[ போ → போக்கு ]*

**போக்குக்கழி–த்தல்** *Pōkku-k-kaḻi-,* செ.கு.வி. (v.i.) கண்ணேறு கழித்தல்; to dispel the effects of the evil eye.

*[ போக்கு + கழி–, ]*

**போக்குக்காட்டு–தல்** *Pōkku-k-kāṭṭu-,* செ.கு.வி. (v.i.) **1.** வழிகாட்டுதல்; to point out a way. **2.** சாக்குச் சொல்லுதல்; to give excuse. **3.** குறிப்புக் காட்டுதல்(வின்); to give an outline or clue, to suggest.

*[ போக்கு → காட்டு–, ]*

**போக்குச்சாக்கு** *Pōkku-c-cākku,* பெ. (n.) நொண்டிச்சாக்கு(வின்); lame excuse, pretence.

*[ போக்கு + சாக்கு ]*

**போக்குச்சுற்றிப் போடு–தல்** *Pōkku-c-cuṟṟi-p-pōḍu,* செ.கு.வி. (v.i.) *போக்குப் போடு*(வின்) பார்க்க; see *pōkku-p-pōḍu.*

*[ போக்கு + போக்கு + போடு ]*

**போக்குச்செய்தல்** *Pōkku-c-cey-* செ.குன்றாவி. (v.t.) விற்றல்; to sell. "போக்குச் செய்து பொன்வரக்காட்டுக"(கல்.)

*[ போக்கு + செய்–, ]*

**போக்குச்சொல்(லு)–தல்** *Pōkku-c-col,* செ.கு.வி. (v.i.) சாக்குக் காட்டுதல்; to make excuse.

*[ போக்கு + சொல் ]*

**போக்குத்தெளிவு** *Pōkku-t-teḷivu,* பெ. (n.) இறக்குந் தறுவாயில் உண்டாகும் நோய்த் தெளிவு; apparent abatement of disease just before death.

*[ போக்கு + தெளிவு ]*

**போக்குநீக்கு[1]** *Pōkku-nīkku,* பெ. (n.) **1.** போக்குவரத்து; going and coming. **2.** பாட்டை(வின்); thorough fare **3.** புகலிடம்; refuge. **4.** இடைவெளி(வின்); escape, opening. **5.** வழிமுறை(வின்); methed, way. **6.** பழக்கம்; (யாழ்.அக.) habit, practice.

*[ போக்கு + நீக்கு ]*

**போக்குநீக்கு[2]** *Pōkku-nīkku,* பெ. (n.) **1.** அன்பு கெழு நிலைமை(இ.வ.); amiability. **2.** ஈவிரக்கம்(கொ.வ.); kind heartedness.

*[ போக்கு + நீக்கு ]*

**போக்குப்போடு–தல்** *Pōkku-p-pōḍu,* செ.கு.வி. (v.i.) கண்ணேறு கழிக்க அல்லது பேய் விரட்ட உயிர்க்காவு கொடுத்தல்; to offer pali in an open or exposed place for dispelling demons or averting evil.

*[ போக்கு + போடு–, ]*

**போக்குவண்டி** *Pōkku-vaṇḍi,* பெ. (n.) **1.** வெறுமையாகத் திரும்பிச் செல்வதால் குறைந்த வாடகைக்குக் கிடைக்கும் வண்டி; return bandy, cart retuning empty after discharging its load and therefore available for a cheap fare. **2.** விரும்பிய இடத்திற்குச் சென்று கொண்டிருப்பதால் குறைந்த வாடகைக்குக் கிடைக்கும் வண்டி; carriage or cart going in the desired direction of its own accord and therefore available for a cheap fare.

*[ போக்கு + வண்டி ]*

**போக்குவரத்து** *Pōkku-varattu,* பெ. (n.) 1. போதலும் வருதலும்; going and returning. *'புகுந்தே னென்கிற இது ஒரு போக்குவரத்து உண்டாயான்று'* (ஈடு, 6, 10, 10). 2. ஊடாடுகை(வின்); familiar intercourse, frequent visiting, intercommunication 3. விருந்தினர்(வின்); guests. 4. வரவு செலவு; income and expenditure.

*[ போக்கு + வரத்து ]*

**போக்குவரத்துக்கழகம்** *Pōkku-varattu-kaḻagam,* பெ. (n.) செல்கையர் போக்குவரத்து நிறுவனம்; Public transport Department.

*[ போக்குவரத்து + கழகம் ]*

**போக்குவரத்துத் துறை** *Pōkku-varattu-turai,* பெ. (n.) ஆட்களையும் சரக்குகளையும் இடம் விட்டு இடம் கொண்டு செல்லும் ஊர்தி நிறுவனம்; Transport Department.

*[ போக்குவரத்து + துறை ]*

**போக்குவரத்துநெரிசல்** *Pōkku-varattu-nerical,* பெ. (n.) போக்குவரத்துத்தடை; hold up of traffic.

*[ போக்குவரத்து + நெரிசல் ]*

**போக்குவரத்து மணியம்** *Pōkku-varattu-maṇiyam,* பெ. (n.) விருந்தினரை வரவேற்று நலம் பாராட்டும் ஊழியர்; clerk deputed to attend on guests.

*[ போக்குவரத்து + மணியம் ]*

**போக்குவரவு** *Pōkku-varavu,* பெ. (n.) 1. போக்குவரத்து பார்க்க 2. பிறப்பிறப்பு; death and birth. *'போக்குவரவு புகிய'* (சி. போ. 2.) 3. நிலவுரிமையை உறுதிப்படுத்தும் துறை அல்லது அலுவலகம்; settlement, a revenue term. *'போக்குவரவு கச்சேரி'* 4. உரிமைப்பதிவு ஆவணம் மாறுகை; transfer of patta. நான் விலைக்கு வாங்கின நிலம் என்பேர்க்கு இன்னும் போக்கு வரவு ஆகவில்லை (நாஞ்.)

*[ போக்கு + வரவு ]*

**போக்குவாக்கு** *Pōkkuvākku,* பெ. (n.) 1. பொலிவான தோற்றம்; good personal appearance. 2. உடற்கட்டு; good build of body, said of a person.

*[ போக்கு + வாக்கு ]*

**போக்குவிடு[1]–தல்** *Pōkku-viḍu,* செ.கு.வி. (v.i.) 1. நீர் போகவிடுதல்; to make a drain, on outlet, 2. போக்குவை 1– பார்க்க (w) 3. வழிவிடுதல்; to provide a way or means of outlet.

**போக்குவிடு[1]–தல்** *Pōkku-viḍu,* செ.குன்றா.வி. (v.t.) 1. செலவழித்தல்; to spend.

*[ போக்கு + விடு ]*

**போக்குவீடு** *Pōkku-vīḍu,* பெ. (n.) 1. செல்லவிடுகை; sending away. 2. சொற் செயல்களால் உணர்ச்சிக்கு வழிவிடுகை; outlet, as for one's feelings; giving vent. "பிராட்டியைக் கண்ட பிரீதிக்குப் போக்கு வீடாக" (திவ். திருமாலை. 1, வ்யா. பக். 11)

*[ போக்குவிடு → போக்குவீடு ]*

**போக்குவை–த்தல்** *Pōkku-vai-,* செ.கு.வி. (v.i.) 1. கீழ்ச்சுரங்கம் அமைத்தல்; to make underground cellar for hiding treasure. 2. செலவுக்கு வழிதேடுதல்; to find out ways of exlpenditure.

*[ போக்கு + வை ]*

**போக** *Pōga,* கு.வி.எ. (adv) **1.** தவிர; besides, excepting. *'போரிலிற்றவர்கள் போக மற்றவர் புறத்தி லோடியதும்'* (பிரபோத. 30, 59) **2.** பகுதிப் பொருளில் வரும் ஒரு துணைச் சொல்; an expletive of emphasis. நான் வரப்போக வேலை நடக்கவில்லை. (கொ.வ)

*[ போ → போக ]*

**போக காரிகை** *pōga-kārigai,* பெ. (n.) ஒரு (சிவனியக் கொண்முடிவு) நூல்; a treatise on siva siddhānda philosophy.

*[ போ + காரிகை ]*

**போகடி[1]–த்தல்** *pōgaḍi,* செ.குன்றா.வி. (v.t.) *போக்கடி*(வின்) பார்க்க; see *pōkkaḍi*

*[ போக்கடி → போகடி ]*

**போகடி[2]** *pōgaḍi,* பெ. (n.) கொண்டிமாடு(வின்); மந்தையை விட்டுப்பிரிந்த மாடு stray cattle.

*[ போ → போகடி ]*

**போகடிப் போக்கு** *pōgaḍi-p-pōkku,* பெ. (n.) தற்செயல்; accident, casualness.

*[ போகடி + போக்கு ]*

**போகடு[1] –தல்** *pōgaḍu,* செ.குன்றா.வி. (v.t.) **1.** கழித்துவிடுதல்; to set aside, cast away. *'போகட்ட உடம்மையும்'* (சீவக. 951, உரை) **2.** போகவிடுதல்; to let go. *'போகெனப் போகடாய்'* (சீவக. 1365)

*[ போகவிடு- → போகடு- ]*

**போகடு[2] –தல்** *pōgaḍu,* செ.கு.வி. (v.i) **1.** விலகுதல்; to leave, escape. *'பொல்லாதது போகடும்'* (தேவா. 376. 4)

*[ போகவிடு- → போகடு- ]*

**போகண்டன்** *pōgaṇḍan,* பெ. (n.) ஐந்து அகவைக்கு மேல் பதினைந்து அகவைக்குட் பட்ட ஆண் மகவு(யாழ்.அக.); a male child between five and fifteen years.

**போகநாதர்** *pōga-nādar,* பெ. (n.) மருத்துவ நூல்கள் பலவற்றின் ஆசிரியரும் பதினெண் சித்தரி லொருவருமான முனிவர்; a mystic, author of several works on medicine, one of padineṇ-šiddar.

**போகப்போக** *pōga-p-pōga,* கு.வி.எ. (adv) காலம் செல்லச் செல்ல; as time goes on.

*[ போக + போக ]*

**போகல்** *pōgal,* பெ. (n.) **1.** உயர்வு(பிங்); rising **2.** நீளம்(சூடா); length.

*[ போகு → போகல் ]*

**போகவிடு–தல்** *pōga-viḍu,* செ.குன்றா.வி. (v.t.) நழுவ விடுதல்; to let go, allow to pass or slilp away, to abandon. *'போதித்த உண்மை யெங்கே போகவிட்டாய்'* (தாயு. உடல்பொய். 5)

*[ போ → போக + விடு–, ]*

**போகாப்புல்** *pōgā-p-pul,* பெ. (n.) செங்கழுநீர் போன்ற களைய முடியாத கொடிவகை; creeper that can not be rooted out,as cengaḻunīr. *'போகாப் புல்லாகிய கழுநீர் முதலைப் பறித்து'* (சிலப். 10, 127, உரை)

*[ போ → போகு + ஆ + புல் ]*

**போகாறு** *pōgāṟu,* பெ. (n.) பொருளைச் செலவிடும் வழி; expenditure of money. *'கேடில்லை போகா றகலாக் கடை'* (குறள், 478)

*[ போ → போகு + ஆறு ன*

**போகி**[1] *pōgi,* பெ. (n.) *போகிப்பண்டிகை* பார்க்க; see *pōgi-p-panttigai.*

*[ போகு → போகி ]*

**போகி**[2] *pōki,* பெ. (n.) சிவிகை சுமப்போன்; palanquin-bearer.

க. போயி

**போகி**[3] *pōki,* பெ. (n.) *கார் போகி* (தைலவ. தைல.) பார்க்க; see *kār-pōgi.*

**போகி கொளுத்தல்** *pōgi-koḷuttal,* பெ. (n.) போகிப்பண்டிகை நாளில் முந்திய இரவில் பழைய பண்டங்களையும், பழந்துணிகளையும் நெருப்பி லிடுகை; burning of old clothes and leumber on the night of poki-pantikai

*[ போகி + கொளுத்தல் ]*

**போகிப் பண்டிகை** *pōki-p-pantikai,* பெ. (n.) பொங்கற் பண்டிகைக்கு முந்திய நாளிற் பழையன கழித்தும் இல்லம் புதுக்கியும் செய்யும் விழாத் தொடக்கம்; festival on the day before pōnkal.

*[ போகு → போகி+ பண்டிகை]*

**போகில்** *pōgil,* பெ. (n.) **1.** பூவரும்பு(பிங்). flower bud. **2.** கொப்பூழ்(பிங்).; navel.**3.** பறவை; bird. *'ஆலம் போகிறனைத்தடுக்கும் வேனில்'* (ஐங்குறு. 303)

*[ புகு → (போகு) → போகில் → போகில் ]*



**போகிவல்லபம்** *pōgi-vallabam,* பெ. (n.) சந்தனம்(மலை); sandal wood.

*[போகில் + வல்லபம் ]*

நறுமணம் பற்றிப் போகில் என்பது சந்தனத்தைக் குறித்ததாகலாம்

**போகிவாசம்** *pōgi-vāšam,* பெ. (n.) *போகிவல்லபம்* (சங்.அக.) பார்க்க; see *pōgi vallabam.*

*[ போகில் + வாசம் ]*

**போகின்ற காலம்** *pōginṟa-kālam,* பெ. (n.) நிகழ் காலம்; present time. *'போகின்ற காலங்கள்'* (திவ். திருவாய். 2, 6, 10)

*[ போ → போகின்ற+ காலம்]*

**போகு–தல்** *pōgu-,* செ.கு.வி. (v.i.) *போ* பார்க்க; see *pō.*

*[ போ → போகு]*

**போகுகாலம்** *pōgu-kālam,* பெ. (n.) எதிர்காலம்; future tense. *'போய காலங்கள் போகு காலங்கள்'* (திவ். திருவாய், 2, 6, 10)

*[ போகு + காலம் ]*

**போகுடி** *pō-kuḍi,* பெ. (n.) **1.** ஊரைவிட்டுப் போய் விட்ட குடும்பம்; family that has left its native village. **2.** பிறங்கடை இல்லாமல் மறைந்து போனவனுடைய சொத்து; property left by a person who has disappeared without leaving any heirs or claimants.

*[ போகு + குடி ]*

**போகுயர்—தல்** *pōguyar,* செ.கு.வி. (v.i.) **1.** வளர்தல்; to grow, increase. *'போகுயர் நீள்கழை'* (சீவக. 1422) **2.** உயர்தல்; to be high, to rise upward. *'போகுயர் மதிய மேறி'* (சீவக. 705)

*[ போகு + உயர் ]*

**போகூழ்** *pōgūḻ,* பெ. (n.) தீவினைப்பயன் (தீயூழ்); fate that ordains loss. *'கைப்பொருள் போகூழாற் றோன்று மடி'* (குறள், 371)

*[ போகு + ஊழ் ]*

**போகை** *Pōgai,* பெ. (n.) செலவு; departure, going. *'போகைசேர் விடைகொண்டு'* (கந்தபு. சூரன்றண், 31)

தெ. போக. க. போகு

*[ போ → போகை ]*

**போகொட்டு—தல்** *Pōgoṭṭu,* செ.குன்றா.வி. (v.t.) போகவிடுதல்; to permit to go, allow to depart. *'யாமு நும்மைப் போகொட்டோம்'* (சீவக. 2045)

*[ போ → போக + ஒட்டு–, ]*

**போங்கம்** *Pōṅgam,* பெ. (n.) மஞ்சாடி மரவகை; (குறிஞ்சிப் .74) a veriety of redwood.

*[ போ → போக்கு → போங்கு → போங்கம்]*

**போங்காலம்** *Pō-ṅ-kālam,* பெ. (n.) **1.** தீவினைப் பயன் விளைந்து துன்புறும் வேளை(வின்); time of adverse influences, when former evil deeds bear fruit, opp. to āṅkālam. **2.** இறப்புக் காலம் (வின்); time of death.

*[ போம்+ காலம்]*

**போங்கு** *Pōṅgu,* பெ. (n.) *போக்கு²*(யாழ்.அக.) பார்க்க; see *pōkku²*

*[ போக்கு → போங்கு ]*

**போசக்கை** *Pōša-k-kai,* பெ. (n.) **1.** போலித் தோற்றம்; deceptiveness of appearance. **2.** மேற் பூச்சு; superficialit. of character. **3.** மாயம்; counterfeit, sham, pretence or cover to save credit or hide poverty.

*[ பூசு → பூசுகை → போசகை → போசக்கை ]*

**போசக்கை வேலை** *Pōšakkai-vēlai,* பெ. (n.) போலி வலை(வின்); counterfeit, unsubstantial work.

*[ போசக்கை + வேலை ]*

**போசிவல்லபம்** *Pōšivallabam,* பெ. (n.) *போகிவல்லபம்*(சங்.அக) பார்க்க; see *pōgi-vallabam.*

**போஞ்சான்** *Pōñjāṉ,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

**போஞ்சி** *Pōñji,* பெ. (n.) **1.** கையணிவகை; a kind of wristlet. **2.** எலுமிச்சை பழச்சாறு; lime-juice and sugar.

க. போஞ்செ

**போஞ்சிக்காய்** *Pōñji-k-kāy,* பெ. (n.) அவரைக்காய்; field-bean.



**போட்கன்** *Pōṭkaṉ,* பெ. (n.) **1.** பொய்யன்; liar. *'ஆராய்ந்தால் அதுதானும் போட்கன்'* (ஈடு. 8, 10, 1) **2.** சுணைகேடன்; person deviod of shame or modesty. *'போட்கன் மிதித்த வடிப் பாட்டிற் பொடித்தான் கொணர்ந்து பூசீர்கள்'* (திவ். நாய்ச், 13, 6)

*[ புல் → பொல் → பொள் → போள் → போட்கன் ]*

**போட்டடுப்பு** *Pōṭṭaḍuppu,* பெ. (n.) *போடு*[4] (இ.வ.) பார்க்க; see *pōḍu* a kind of oven.

*[ போடு + அடுப்பு ]*

**போட்டடை–த்தல்** *Pōṭṭaḍai,* செ.குன்றா.வி. (v.t.) திணித்தல்; to stuff, cram, as food.

*[ போடு → போட்டு + அடை ]*

**போட்டி** *Pōtti,* பெ. (n.) **1.** எதிரிடை; rivalry, emulation. *'தாட்டிகமுடன் வெகுபோட்டி போட்டிகளாக'* (இராமநா. உயுத், 15) **2.** கேலி(யாழ்.அக); ridicule.

தெ. க. போடி

*[ புல் → பொல் → பொள் → (பொட்டி) → போட்டி ]*

போட்டி–சமன்மை; இகலுதல்.

**போட்டி**[2] *Pōtti,* பெ. (n.) பந்தயம்; contest.

**போட்டிக்காரன்** *Pōṭṭi-k-kāraṉ,* பெ. (n.) **1.** எதிரி; rival. (w). **2.** கேலிக்காரன்; one who ridicules or sneers. (யாழ்.அக)

*[ போட்டி + காரன் ]*

**போட்டிக்கை** *Pōṭṭikkai,* பெ. (n.) *போட்டி*(யின்) பார்க்க; see *pōṭṭi.*

*[ போட்டி → போட்டிகை → போட்டிக்கை ]*
'கை' தொ. பெ. ஈறு.

**போட்டிவழக்கு** *Pōṭṭi-vaḻakku,* பெ. (n.) இடையறா எதிர்வழக்கு(வின்); continual rivalry or dispute.

*[ போட்டி + வழக்கு ]*

**போட்டுக் கொடு–த்தல்** *Pōṭṭu-k-koḍu-,* செ.குன்றாவி. (v.t.) **1.** கூடச் சேர்த்தளித்தல் (இ.வ.); to add, supplement. **2.** பிறனுக்காகச் செய்தல்; to be for another, as a sum. **3.** அடித்தல்(வின்); to slap, cuff **4.** கோள்மூட்டுதல்; to tell tales. 'எழுத்தரை ஏவலன் தலைமையாசிரியரிடம் போட்டுக் கொடுத்தான்'

*[ போட்டு + கொடு–, ]*

**போட்டுக்கொள்(ளு)–தல்** *Pōṭṭu-k-koḷ-,* செ.குன்றாவி. (v.t.) **1.** பூணுதல்(வின்); to wear. **2.** ஏற்றுக் கொள்ளுதல்(கொ.வ.); to take upon oneself.

*[ போட்டு + கொள்–, ]*

**போட்டுப்பொல்லாங்கு** *Pōṭṭu-p-pollāṅgu,* பெ. (n.) **1.** குற்றம்(யாழ்.அக); fault. **2.** வசை; abuse.

*[ போட்டு + பொல்லாங்கு ]*

**போட்டுமாறு—தல்** *Pōṭṭu-māṟu,* செ.குன்றா.வி. (v.t.) **1.** குழப்புதல்; to confuse, to mix up. **2.** உழப்பிப் பேசுதல்; to equivocate.

*[ போட்டு + மாறு –,]*

**போட்டுவிடு—தல்** *Pōṭṭu-viḍu-,* செ.குன்றா.வி. (v.t.) **1.** நழுவவிடுதல்; to drop. **2.** எறிதல்; to cast away. **3.** இழத்தல்; to lose **4.** கொன்று கைவிடுதல்; to leave, abandon, as an elephant, after killing its enemy. **5.** மேற்போதல்; to surpass, to ovevrcome

*[ போட்டு + விடு–, ]*

**போட்டுவை—த்தல்** *Pōṭṭu-vai-,* செ.குன்றா.வி. (v.t.) **1.** சேமித்துவைத்தல்; to lay up **2.** காலந் தாழ்த்துதல்; to delay. கடிதத்திற்கு மறுமொழி எழுதாமல் போட்டு வைத்திருக்கிறான்.

*[ போட்டு + வை ]*

**போடகம்** *Pōḍagam,* பெ. (n.) **1.** புண்(வின்); boil, tumour. **2.** அம்மைக் கொப்புளம் (சங்.அக); pock in small pox. **3.** கொப்புளிப்பான்;(சங்.அக) measles. **4.** அம்மை; small pox.

*[ போடு → போடகம் ]*

**போடம்[2]** *Pōḍam,* பெ. (n.) **1.** தகர்க்கை(சேதுபு. வேதா. 34, கீழ்க்குறிப்பு); slapping. **2.** சொல்லுக்கு அடிப்படையாய் வரும் பொருளை உணர்த்தவல்ல இசை(பி. வி. 18); eternal and imperceptible element of sounds and words and the real vehicle of the idea which flashes on the mind when a sound is uttered.

[போடு → *போடம்* ]

**போடி[1]** *Pōḍi,* பெ. (n.) *சம்புநாவல்* (மூ.அ) பார்க்க; see *sambunāval.*

**போடி[2]** *Pōḍi,* பெ. (n.) *போட்டி,*1 (C.G.) பார்க்க; see *pōṭṭi.*

*[ போட்டி → போடி ]*

**போடி[3]** *Pōṭi,* பெ. (n.) *போடியார்*(யாழ்ப்.) பார்க்க; see *pōḍiyar.*

*[ போடு → போடி ]*

'இ' வினைமுதல் ஈறு.

**போடியார்** *Pōḍiyār,* பெ. (n.) நிலக்கிழார்; landed proprietor.

*[ பாடி → போடி → போடியார் ]*

**போடு[1]—தல்** *Pōṭu,* செ.குன்றா.வி. (v.t.) **1.** எறிதல்; to cast down, throw a short. distance, to cast away. *'பூத்த கடுக்கையைச் சிறிதும் போடா'* (இரகு. ஆற்று. 19) **2.** இடுதல்; to put, set in a position, lay. *'புல்லாயினு மொருபச்சிலை யாயினும் போட்டிறைஞ்சி'* (தாயு. பாயப்புலி. 31) **3.** தாழ்முதலியன இடுதல்; to fasten, as a bott. *'கதவு போட்டாயிற்றா?'* **4.** பூணுதல்; to put on, as ornaments. *'வயிரமாலை பொலியப் போட்டு'* (இரகு. இலவண. 40) **5.** ஈனுதல்; to bring forth, as animals, to put forth, yield, as fruit-tree. *'வாழை குலை போட்டது'* **6.** அச்சிட்டு வெளிப் படுத்துதல்; to bring out, to publish. *'புத்தகம் போட்டான்'* **7.** கணக்குச் செய்தல்; to work, as a sum. **8.** வரைதல்; to draw, as a figure. **9.** பரிமாறுதல்; to serve, to stamp, to teat, as a drum. *'செருப்பா லொருவன் போடானோ'* (தனிப்பா. 1, 41, 80) **10.** அடித்தல்; to strike, to stamp. **11.** விதைத்தல்; to sow,

plant, **12.** பயன்படுத்தல்; to use, as totacco. *'புகையிலை போடுகிறவன்'* **13.** கள்முதலியன குடித்தல்; to drink, as toddy. "அந்தத் தடியன் போட்டுக்கொண்டு வந்து வம்பு வளர்க்கிறான்." **14.** விடுத்தல்; to lose, to drop *'வீரமுங் களத்தே போட்டு'* (கம்பரா. கும்பக. 1) **15.** பணமுதலியன கட்டுதல்; to pay, invest. *'பணம் போட்டு வாங்கினான்'* **16.** பிரித்து இடுதல்; to cast, as lots, to allot. *'சீட்டுப் போடு'* செ.கு.வி. (v.i.) **1.** உண்டாதல்; to become, form, (w). **2.** ஒரு துணை வினை; anauxiliary verb. *'அவன் செய்து போட்டான்'*

*[ போ → போடு ]*

**போடு²** *Pōtu,* பெ. (n.) **1.** எடுப்பாயுள்ளது; anything striking or impressive as a speech. *'அவன் ஒரு போடு போட்டான், எல்லாரும் ஒடுங்கினார்கள்'* **2.** நற்பேறு; luck.

*[ போ → போடு ]*

**போடு³** *Pōtu,* பெ. (n.) மொட்டை; taldness, shaven condition.

*[ மொட்டைபோடு → போடு ]*

**போடு⁴** *Pōtu,* பெ. (n.) **1.** பொந்து; hole, opening, cleft, *'வயல் வரப்பில் போடு பாய்ந்திருப்பதால் பாய்ச்சின நீர் நிற்பதில்லை'* **2.** கோட்டையடுப்பு பார்க்க.

*[ புல் பொல் → பொள் → பொத்து பொட்டு → போடு ]*

**போடு காடு** *Pōtu-kātu,* பெ. (n.) மலைச் சார்வில் புன்செய் வேளாண்மை செய்யக் கூடிய நிலம்; land fit for raising dry crops on the hills (w)

*[ போடு + காடு ]*

**போடுகால்** *Pōtu-kāl,* பெ. (n.) தரிசுநிலத்தை முதல் முறையாக உழுது பயிரிடுகை; first cultivation in waste land.

*[ போடு + கால் ]*

**போடுகால் நிலம்** *Pōtukāl-nilam,* பெ. (n.) சிலகாலங்களில் மட்டும் பயிர் செய்யப்படும் நிலம்; land cultivated off and on and not annually.

*[ போடுகால் + நிலம் ]*

**போடுகால் பாத்தியம்** *Pōtukāl-pāttiyaam,* பெ. (n.) வெற்று நிலத்தை உழுது பயிர் செய்வதால் குடியானவனுக்கு நிலத்திலுண்டாம் உரிமை; customary right accruing to a farmer in an uncultivated waste brought by him under cultivation.

*[ போடுகால் + பாத்தியம் ]*

**போடுகை** *Pōtukai,* பெ. (n.) கப்பலோரத்துள்ள கைப்பிடி; bulwark.

*[ போடு → போடுகை ]*

**போடுதடி** *Pōtu-tati,* பெ. (n.) பயனற்றவன்; (எறிந்த தடி) lit, a stick thrown away, useless person. (w)

*[ போடு + தடி ]*

**போடுதை** *Pōtutai,* பெ. (n.) சுவரைக் காக்கும் மேற்கட்டு; coping on a wall

*[ போடு → போடுகை → போடுதை ]*

**போடு பாய்–தல்** *Pōtu-pāy,* செ.கு.வி. (v.i.) வயல் வரப்பில் வெடிப்புண்டாதல்; to have defts in ridges.

*[ போடு + பாய் ]*

**போடுமண்** *Pōtu-man,* பெ. (n.) புதிதாகக் கொணர்ந்து கொட்டிய மண்; loose earth freshly thrown.

*[ போடு + மண் ]*

**போடுவான்** *Pōtuvān,* பெ. (n.) தோசை முதலிய பணியாரத்தில் சேர்க்கும் உளுந்தமா; mashed black gram used in preparing rice-cajes.

*[ போடு → போடுவான் ]*

**போத்தா[1]–தல்(போத்தருதல்)** *pōttā,* செ.குன்றா.வி. (v.t.) **1.** போய்க்கொண்டு வருதல்; to go and bring, to get, fetch. *'பரதவர் போத்தந்த பன்மீன்'* (தொல்.பொ.114, உரை). **2.** உரிய சொல்லை வருவித்துரைத்தல்; to fill up, as an ellipsis in a sentence. **3.** கொடுத்தனுப்புதல்; to send by messenger. "அமரர்கள் போத்தந்தார்" (திவ்.பெரியாழ். 1,3,4) **4.** புறப்படவிடுதல்; to send out, to permit to go out. *'உன்னை....போத்தந்த நுமர்'* (கலித்,58,10).

**போத்தா[2]–தல்** *pōttā-,* செ.கு.வி. **1.** போதலைச் செய்தல்; to go, proceed. *'நல்வாயிற் போத்தந்த பொழுதினான்',* கலித்.84,5.) **2.** வெளிவருதல்; to get out, come out. *'போத்தந்து தாயர் தெருவிற் றவிர்ப்ப'* (கலித்.84,14)

*[ போ + தா → போத்தா–தல் ]*

**போத்தி** *pōtti,* பெ. (n.) **1.** பாட்டன்; grand father **2.** மலையாளக் கோயில் பூசாரி; brahman temple.priest in Malabar.

*[ போற்றி → போத்தி ]*

**போத்திரி** *pōttiri,* பெ. (n.) பன்றி(சூடா.); hog, pig.

*[ போத்தி → போத்திரி ]*



**போத்து[1]** *pōttu,* பெ. (n.) **1.** பெற்றம், எருமை, புலி, மரை, புல்வாய் முதலிய விலங்கேற்றின் பொது(தொல்.பொருள்.597); male of animals, especialy, cattle, tigers, deer. **2.** மயில் எழால் என்பவற்றின் ஆண்;(தொல்.பொ.598) male of peafowl, herons and some other birds. **3.** முதலை, சுறாப்போன்ற நீர் வாழினத்து ஆண்; male of aguatic animals, as crocodile, etc. (தொல்.பொ.580) **4.** ஓரறிவுயிரினிளமை. (தொல்.பொ.580) sapling **5.** புதுக்கிளை; tender branch or shoot. of a tree. மரம் போத்து விட்டிருக்கிறது. **6.** செம்போத்து(சங்.அக.) பார்க்க; sem pottu crow-pheasant.

*[ பொத்து → போத்து ]*

**போத்து[2]** *pōttu,* பெ. (n.) **1.** பொந்து; hole, hollow. **2.** விலங்கு துயிலிடம்; lair of a beast. **3.** மனக்குற்றம்; vice, fault, as hollowness of mind. *'போத்தறார் புல்லறிவினார்'* (நாலடி,351)

*[ பொத்து → போத்து ]*

**போத்துக்கால்** *pōttu-k-kāl,* பெ. (n.) காம்பு;(தொல்.பொ.579,உரை) sugar-cane.

*[ போத்து + கால் ]*

**போத்துராசா** *pōttu-rāšā,* பெ. (n.) சோம்பேறி; indolent person, *'தடிப்போத்துராசா'.*

*[ போத்து + இராசா ]*

*[ த. அரசன்* Skt. rajā *த. இராசா ]*

**போத்துவெடி—த்தல்** *pōttu-vedi,* செ.கு.வி (v.i.) மரக்கிளை தோன்றுதல்(வின்); to sprout, as saplings.

*[ போத்து + வெடி —, ]*



**போத** *pōda,* கு.வி.எ. (adv.) **1.** போதுமானபடி; sufficiently. *'போதக்கொடுத்தான்'* **2.** செவ்வையாக; well, rightly. *'போதத் தன்செவித் தொளையிரு கைகளாற் பொத்தி'* (கம்பரா. இரணி.22.) **3.** விரைவாக; speedily. *'உய்ய வேண்டிலெழுபோத நெஞ்சே'* (தேவா.640,8)

*[ போது → போத ]*

**போதக்கட்டை** *pōda-k-kaṭṭai,* பெ. (n.) *போதிக்கட்டை* பார்க்க; see *podikkaṭṭai.*

*[ போதி + கட்டை → போதக்கட்டை ]*

**போதகம்¹** *pōdagam,* பெ. (n.) **1.** இளமை; (பிங்.) youthfulness, infancy. **2.** யானைக் கன்று;(பிங்.) elephant calf. "வேழப்போதக மன்னவன் தாலோ" (திவ்.பெருமாள்,7,1) **3.** யானை; elephant. *'போதகமொன்று கன்றி'* (கம்பரா. விபீடண.113). **4.** விலங்கின் பிள்ளை (சூடா); youth of animals **5.** போத்து **1,4.** (பிங்.). பார்க்க

**போதகம்²** *pōdagam,* பெ. (n.) *பசளை³*(மலை) பார்க்க; see *pašaḷai³*

**போதகம்³** *pōtakam,* பெ. (n.) அப்பவகை;(பிங்.) a kind of sweetmeat.

*[ பொருத்து → பொத்து→ போதகம் ]*

**போதகம்⁵** *pōdagam,* பெ. (n.) எட்டிமரம்(மலை.); strychnine tree.

**போதந்து** *pōdandu,* வி.எ. (part) ஒரு சொல் விழுக்காடு; an expletive, அது விலக்குப் பட்டது, *'ஈண்டுப் போதந்து'* (தொல்.சொல், 422, இளம்பூ.)

*[ போதா → போதந்து ]*

**போதப்புறா** *pōdā-p-puṟā,* பெ. (n.) புறாவகை(M.M); imperial pigeon.



**போதம்** *pōdam,* பெ. (n.) **1.** மரக்கலம்(திவா); ship, boat. *'போதங்கொ ணெடுந்தனிப் பொருவில் கூம்பொடு'* (கம்பரா.பள்ளிபடை.68)

2. 2ஆம் விண்மீன் (பிங்.); the second naksatra, 3. போதகம்1, 2 (அக.நி) பார்க்க. 4. மனைக்கட்டு (யாழ்.அக); house-site.



**போதர** *pōdara,* கு.வி.எ (adv.) அதிகமாக; abundantly, plentiful. '*போதரக் கனவிற் கண்டு*' (திவ்.திருக்குறுந்,4)

**போதரவு**[1] *pōdaravu,* பெ. (n.) 1. போகை; passing, going. '*புகுவதாவதும் போதர வில்லதும்*' (திருவாச.5,36) 2. செலுத்துகை; sending despatching 3. கொண்டு வருகை(வின்.); bringing.

*[ போது → போதரவு ]*

**போதரவு**[2] *pōdaravu,* பெ. (n.) 1. நயச்சொல்; respectfulness of language, blandishment. '*போதரவான சொல்*' 2. நல்லுதவி; civility, urbanity. 3. பொய்ப்புகழ்ச்சி; adulation, flattery. 4. பேணுகை; using anything with care.

*[ போது → போதரவு ]*

**போதலிப்பு** *pōdalippu,* பெ. (n.) *போதரவு*[2] (யாழ்ப்.) பார்க்க; see *podaravu*[2]

*[ போது → போதலிப்பு ]*

**போதலிமை** *pōdalimai,* பெ. (n.) *போதரவு*[2] (யாழ்.அக.) பார்க்க; see *podaravu*[2]

*[ போது → போதலிமை ]*

**போதவாகன்** *pōda-vāgaṉ,* பெ. (n.) தோணியோட்டுபவன்(சங்.அக.); boatman.

**போதா**[1]**–தல்(போதருதல்)** *pōdā,* செ.கு.வி. (v.i.) 1. செல்லுதல்; to go, pass. '*புறங்கடை போதரவிட்ட நுமரும்*' (கலித்.56). 2. திரும்புதல்; to return. 'போதரும்போ தச்சம் (நாலடி,83) 3. வருதல்; to come '*போதர் கண்டாயிங்கே போதர்கண்டாய்*' (திவ். பெரியாழ்.2,9,6) 4. பெறப்படுதல்; to be inferred. '*ஆண்டிருந்து துய்ப்பரென்பது போதரும்*'. (திருக்கோ.1,உரை)

*[ போ + தா ]*

**போதா**[2]**–தல்** *pōdā,* செ.குன்றா.வி. (v.t.) 1. கொண்டுபோதல்(பிங்.); to carry away. 2. கொண்டுவருதல்(வின்.); to bring (w.) 3. எதிர்கொண்டு போதல்(சூடா); to welcome, receive with courtesy.

*[ போ + தா ]*

**போதா**[2] *pōdā,* பெ. (n.) பெருநாரை (சிலப்.10,117,உரை); cyrus crane.

**போதாக்காலம்** *pōdā-k-kālam,* பெ. (n.) தீக்காலம்(வின்.); time of misfortune, evil days.

*[ போது + ஆ + காலம் ]*
'ஆ' – எ.ம.இ.நி.

**போதாக்குறை** *pōda-k-kuṟai,* பெ. (n.) *போதாக்குறைச்சல்* பார்க்க; see *pōda-k-kuṟaiccal.*

*[ போது + ஆ + குறை ]*

'ஆ' – எ.ம.இ.

**போதாக்குறைக்கு** *pōta-k-kuraikku,* வி.எ. (adv.) உள்ளவை போதாதென்று; as though not sufficient. *'போதாக்குறைக்குப் பிள்ளையும் பிறந்தது'.*

*[ போது + ஆ + குறை + கு]*

'ஆ' – எ.ம.இ.

**போதாக்குறைச்சல்** *pōdā-k-kuṟaiccal,* பெ. (n.) அதிகப்படி(வின்.); supplement; addition to make up any deficiency.

*[ போது + ஆ + குறைச்சல்]*

'ஆ' – எ.ம.இ.நி.

**போதாதகாலம்** *pōdāda-kālam,* பெ. (n.) *போதாக்காலம்* பார்க்க; see *podā-k-kalam.*

*[ போதாத + காலம் ]*

**போதாமை** *pōdāmai,* பெ. (n.) **1.** மனவொப் பின்மை; estrangement between persons. **2.** குறைவு; insufficiency, unfitness. **3.** பற்றாக்குறை; scarcitx.

*[ போது + ஆ + மை → போதாமை]*

'ஆ' எ.ம.இ.நி

'மை' பண்புப்பெயரீறு.

**போதி**[1] *pōdi,* பெ. (n.) மலை (பிங்).; hill, mountain.



**போதி**[2] *pōti,* பெ. (n.) போதிகைக்கட்டை பார்க்க; see pōdigai-k-kaṭṭai *'இந்திர நீலக்கல்லுருத்தலை போதியது'* (திருவிளை,திருமண.64)

*[ போது→போதி ]*

**போதிகை** *pōdigai,* பெ. (n.) போதிகைக் கட்டை பார்க்க. "போதிகைத் தலத்து" (கம்பரா. நகரப்.25)

*[ போதி → போதிகை ]*

**போதிகைக்கட்டை** *pōdigai-k-kaṭṭai,* பெ. (n.) **1.** தூண்மேல் வைக்கும் தாங்குகட்டை; capital of a pillar. **2.** குறுந்தறி;(பிங்). stake.

*[ போதிகை + கட்டை ]*

**போதிகைத்தூண்** *pōdigai-t-tūṉ,* பெ. (n.) குறுந்தூண் (யாழ்.அக.); stout pillar.

*[ போதிகை + தூண் ]*



**போதிய** *Pōdiya,* பெ, எ, (adj.) போதுமான, போதிய அளவு; adeguate, competent, suitable.

*[ போது → போதிய ]*

**போதியகுடி** *Pōdiyakuḍi,* பெ. (n.) பெரு மதிப்பிற்குறிய குடும்பம்(வின்.); respectable family. (w)

*[ போதிய + குடி ]*

**போதியல்** *Pōdiyal,* பெ,(n.) ***போதிகைப் பலகை*** (இ.வ.) பார்க்க; see *pōdigai-p-palagai*

**போதியவன்** *Pōdiyavān,* பெ. (n.) கண்ணிய வான்(யாழ்.அக); gentlemen, nobleman.

*[ போது → போதியவன் ]*

**போதினன்** *Pōtiṉaṉ,* பெ. (n.) நான்முகன் (தாமரைப் பூவில் இருப்பவன்); Brahama, as seated on the lotus. "திருமாலும் போதினனுந் தேவரும்" (சிவதரு. பாயி. 2)

*[ போது → போதினன் ]*

**போது[1]–தல்** *Pōdu,* செ.கு.வி. (v.i.) **1.** போதியதாதல்; to be adequate, to suffice. ''உலகமெலா முரல் போதா தென்றே'' (திருவாச, **9, 6**) **2.** மதிக்கப்படுதல்(வின்.); to be respectable. **3.** தகுதியாதல்; to be competent, fit, suitable.

**போது[2]–தல்** *Pōdu-,* செ.கு.வி. (v.i.) **1.** செல்லுதல்; to go, pass. *'போது நான் வினைக்கேடன்'* (திருவாச, 5, 22) **2.** ஒழுகுதல்; to conduct oneself, behave ***'அறனை அறிந்து போதுதல்... சான்ற வர்க்கெல்லாம் முறைமை'*** (கலித், **139, 2,** உரை)

*[ போ → போது – தல் ]*

**போது[3]** *Pōdu,* பெ. (n.) **1.** மலரும் பருவத்தரும்பு; flower bud ready to open"காலை பகலெல்லாம் போதாகி" (குறள்.**1227**); flower bud ready to open, **2.** மலர் (திவா.) ; flower போதார் கூந்தல்" (பு.வெ.**12**,இருபாற்.**5**,கொளு.) **3.** செல்வி (திருவிருத்.**76**, அரும்.பக்.**389**); freshness, beauty.

**போது[4]** *Pōdu,* பெ. (n.) **1.** பொழுது **1, 2, 3,** (சூடா) பார்க்க "போதுஞ் சென்றது குடபால்" (கம்பரா. வனம்புகு. **14**)

**போது[5]** *Pōdu,*வி.எ. (adv). பொழுதில்; when, while, during the time that. ***'ஆட்கொண்ட போதே கொண்டிலையோ'*** (திருவாச. **33, 7**)

ஒரி.க.போழ்து

*[ போ → போது ]*

**போதுகட்டுதல்** *Pōdu-kaṭṭudal,* பெ. (n.) **1.** காலை, மாலைகளில் முகில் சில நாழிகை வரை கதிரவனை மறைத்துக் கொண்டிருக்கை; hiding of the sun by clouds for some time in the morning and the evening. **2.** மழைபெய்வதற்கு அறிகுறியாய்க் காரிக் கிழமை (சனிக்கிழமை) மாலையும் அடுத்த நாட்காலையும் முகில் கதிரவனை மறைத்திருக்கை; hiding of the sun by clouds on a saturday evening and the next morning as indicative of heavy rain during the week.

*[ போது + கட்டுதல் ]*

**போதுகாலம்** *Pōdu-kālam,* பெ. (n.) பேறுகாலம்; time of childbirth.

*[ போது + காலம் ]*

**போது செய்–தல்** *Pōdu-šey-,* செ.கு.வி. (v.i.) **1.** பேரரும்பாதல்; to be ready to blossom, as a bud. 2. மூடுதல்; to close. *'கண் போது செய்து'* (திவ். இயற். திருவிருத். 93) 3. அலருதல்(வ்யா,) to blossom, (திவ். இயற். திருவிருத். 93) **4.** உண்ணுதல்; to eat. "வெண்ணெய் போது செய்தமரிய புனிதர்" (திவ். பெரியதி. 8, 7, 4) **5.** குரல் மாறுதல் (ஈடு, 2, 3, 7); to change, as voice on account of phlegm.

*[ போது + செய்–, ]*

**போதுஞ்சாட்சி** *Pōtu-ṉ-cātci,* பெ. (n.) தகுதியான சாட்சி(வின்.); competent witness.

*[ போது +* S.K.ṭ sāksi. *த. சாட்சி ]*

**போதுபடுதல்** *Pōdu-paḍudal,* பெ. (n.) கதிரவன் மறைவு; sunset.

*[ போது + படுதல் ]*

**போது போக்கு[1]–தல்** *Pōdu-pōkku-,* செ.கு.வி. (v.i.) காலங்கழித்தல்; to spend time. *'புறனல ரவனுறப் போது போக்கி'* (கம்பரா. உருக்கா. 14)

*[ போது + போக்கு–, ]*

**போதுபோக்கு[2]** *Pōdu-pōkku,* பெ. (n.) **1.** காலங்கழிக்கை; passing of time. **2.** விளையாடி இளைப்பாறுகை; recreation. "போதுபோக்காகச் சில பிரபந்தங்களைப் பண்ணுவிக்கப் பார்த்தோம்." (ஈடு, 7, 9, ப்ர)

*[ போது + போக்கு ]*

**போதுபோக்கு[3]** *Pōdu-pōkku,* பெ. (n.) விளையாட்டு; play; past time. "தோளைக் கழித்துத் தலையைச் சரித்துப் போதுபோக்காக நின்று கொன்றபடி" (ஈடு.1,6,7)

*[ போது + போக்கு ]*

**போதும் போதாதெனல்** *Pōdum-pōdāadeṉal,* பெ. (n.) சிறிது குறைந்ததன் குறிப்பு; expr. of slight deficiency or insufficiency.

*[ போதும் + போதாது + எனல் ]*

**போது வைகுதல்** *Pōdu-vaigudal,* பெ. (n.) காலம் நீட்டிக்கை; being late. "அழுது செய்கைக்குப் போதுவைகிற்று." (ஈடு, 7, 10, 4)

*[ போது + வைகுதல் ]*

**போதைப்புல்** *Pōdai-p-pul,* பெ. (n.) **1.** கர்ப்பூரப்புல்(வின்.); lemon-grass. (w) **2.** *காவட்டம்புல்*(சங்.அக); பார்க்க; see *kāvaṭṭampul* citronella grass

*[ போதை + புல் ]*

**போந்த** *Pōnda,* பெ.எ. (adj.) 1. தகுந்த; fit, suitable, proper, competent. *'போந்த மனிதன்'* (W) 2. பழகின (வின்.); practised. 3. தீர்மான மான; final, ultimate. *'உண்டுடுத் தின்பமாவதே போந்தநெறி'* (தாயு, சின்மயா. 5)

*[ போ → போந்த ]*

**போந்தி** *Pōnti,* பெ. (n.) 1. வீக்கம்(யாழ்.அக); swelling. 2. *போந்திக்கால்* பார்க்க; see *pōndi-k-kāl.*

தெ. போத

*[ போ → போந்தி ]*

**போந்திக்கால்** *Pōndi-k-kāl,* பெ. (n.) யானைக் கால்(வின்.); elephantiasis. (w.)

தெ.போதஹாலு

*[ பொந்தி → போந்தி → போந்திக்கால் ]*

போந்தி= வீக்கம்.தெ.போதாக்காலு.வே.க. (பக்.79.)



**போந்தின் கண்ணிக்கோன்** *Pōndin-kaṇṇi-k-kōṉ,* பெ. (n.) *போாந்தின்றாரோன்*(பிங்). பார்க்க;

*[ போந்து→ போந்தின் + கண்ணி + கோன் ]*

**போந்தின்றாரோன்** *Pōndinrāron,* பெ. (n.) சேரன்(சூடா.); cēra king, as decked with a garland of palmyra flowers. (பனம்பூமாலை யுடையவன்)

*[ போந்து → போந்தின் + தாரோன் ]*

**போந்து** *Pōndu,* பெ. (n.) 1. போந்தை பார்க்க; see pōndai *'அவன் பொன் முடிமேற் போந்து கண்டான்'* (பெருந்தொகை. 690) 2. பல்லி; lizard.

*[ பொந்து → போந்து ]*

**போந்தை** *Pōntai,* பெ. (n.) 1. பனை; palmyra palm. "போந்தை வேம்பே யாரென வருஉம் மாபெருந் தானையர் மலைந்த பூவும்" (தொல். பொ. 60) 2. இளம்பனை(திவா.); young palmyra. 3. பனை(அனுட)நாள்; the 17th naksatra.

*[ போந்து → போந்தை ]*

**போபடி** *Pōpaḍi,* பெ. (n.) உருவொற்றுமை, (வின்.); trace

தெ.போபடி

*[ போல்+படி ]*

**போபடிவிசாரி-த்தல்** *Pōpadi-viśāri-,* செ.கு.வி. (v.i.) திருட்டைப் பற்றித் துப்பு உசாவுதல்(வின்.); to trace stolen property, to investigate about theft.

*[ போபடி + விசாரி ]*
*[Skt. bicāri→த. விசாரி.]*

**போம்** *Pōm,* இடை. (part.) ஓர் அசைச் சொல்(சது); an expletive.

*[ போ → போம் ]*

**போம்பல்** *Pōmbal,* பெ. (n.) நீர்க்கடம்பு(மலை.); water cadamba.

*[ போம் → போம்பல் ]*

**போய்ப்பாடு** *Pōy-p-pāḍu,* பெ. (n.) **1.** புகழ்; prise. "போய்ப்பாடுடைய நின்தந்தையும்" (திவ். பெரியாழ். 2, 3, 1). **2.** பெரிதாயிருக்கை; largeness. *'சங்கங்கள் போய்ப்பாடுடையனவே'* (திவ். திருப்பா. 26)

*[ போ → போய் + பாடு ]*

*'பாடு' – தொ.பெ.ஈறு.*

**போய்வ—தல்** *Pōy-vā.,* செ.கு.வி. (v.i.) போதல் (கொ.வ.); to go

**போயகாலம்** *Pōya-kālam,* பெ. (n.) போன காலம் பார்க்க; see poṉakālam.(திவ். திருவாய். 2, 6, 10)

*[ போ + காலம் → போயகாலம் ]*

**போயி** *Pōyi,* பெ. (n.) *போகி³* (வின்.) பார்க்க; see *pōgi³*

*[ போகி+ போயி ]*

**போயிற்று** *Pōyirru,* இடை. (part) ஓர் அசைநிலை(தொல். சொல். 425); an expletive. (தொல். சொல். 425)

*[ போ → போயிற்று ]*

**போர்¹—த்தல்** *Pōr-,* செ.குன்றா.வி. (v.t.) **1.** அணிதல்; to wear, put on. ஆரம் போர் திருமார்பை (கம்பரா. இராவணன்வதை. 240) **2.** மூடுதல்; to cloak, to hide. *'பெற்றம் புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று'* (குறள். 273) **3.** சூழ்தல்; to surround. "விண்ணோ ரெங்கோன் புடையிற் போர்த்தார்." (கந்தபு. சிங்கமு. 457)

*[ பொரு → போர்த்தல் ]*

**போர்²** *Pōr,* பெ. (n.) **1.** செறிந்து பொருந்துகை; joining fast together. "திண்போர்க் கதவம்" (மதுரைக். 354) **2.** கதிர் வைக்கோற் படப்பு; heap of unthreshed grain, straw. stack. "போரிடை யுறங்கு மன்னம்" (கம்பரா. நாட். 6) **3.** 24ஆவது விண்மீன் (பிங்.); the 24th naksatra. **5.** குவியல்; accumulation மரப்பொந்து (யாழ்ப்.); hollow of a tree.

*[ பொரு → போர் ]*

**போர்³** *Pōr,* பெ. (n.) **1.** சண்டை; fight, battle, war. குன்றேறி யானைப்போர் கண்டற்றால் (குறள், 758) **2.** மற்போர்; wrestling. **3.** இகல்; rivalry, competition, "வீணைவாட் போர்க்கலாம்" (சீவக. 620)

*[ பொரு →போர் ]*

**போர்⁴** *Pōr,* பெ. (n.) **1.** புகர்நிறம் (போர்க்காளை); towny colour. **2.** புள்ளி 'கரும்போர்க்காளை' (நாஞ்.); spot.

*[ புகர் → போர் ]*

**போர்⁵** *Pōr,* பெ. (n.) பசுவின் சாணம் (யாழ்ப்.); cow-dung.

**போர்க்கட்டு—தல்** *Pōr-k-kattu,* செகுன்றா.வி. (v.t.) **1.** உள்ளுக்குள்ளே சரிப்படுத்துதல்; to adjust settle. **2.** மறைத்து அடக்கிக் கொள்ளுதல்; to hide. (யாழ்.அக.)

*[ போர் + கட்டு – தல் ]*

**போர்க்கடம்** *Pōr-k-kaḍam,* பெ. (n.) சண்டை செய்வதாகிய வீரர் கடமை; the duty of a warrior to fight in battle. "போர்க்கடம் பூண்ட பொருவலித் தடக்கையின்" (பெருங். உஞ்சைக். 53, 91)

*[ போர் + கடம் ]*

**போர்க்கடா** *Pōr-k-kaḍā,* பெ. (n.) சண்டைக்காக வளர்க்கப்படும் ஆட்டுக்கடா (கொ.வ.); fighting ram.

*[ போர் + கடா ]*



**போர்க்கண்** *Pōr-k-kaṇ,* பெ. (n.) போர்க்களம், பார்க்க; see pōr-k-kalam. "போர்க்கண் துணிபுனல்" (பரிபா. 6, 29)

*[ போர் + கண் ]*

**போர்க்கதவு** *Pōr-k-katavu,* பெ. (n.) 1. பலகைகளை இணைத்த கதவு; batten door. *'புலிப் பொறிப் போர்க்கதவின்'* (பட்டினப். 40) 2. இரட்டைக் கதவு (சிலப். அரும். அகராதி.); folding doors, as joined.

*[ போர் + கதவு ]*

**போர்க்கருவி** *Pōr-k-karuvi,* பெ. (n.) படைக்கலம்; weapon of war.

*[ போர் + கருவி ]*

**போர்க்கப்பல்** *Pōr-k-kappal,* பெ. (n.) போர்க்கலம்; war-ship.

*[ போர் + கப்பல் ]*

**போர்க்கவசம்** *Pōr-k-kavašam,* பெ. (n.) போர்த்தற்காப்புக் கருவிகள்; apparatus for defence.

*[ போர் + கவசம் ]*

**போர்க்களத் தொழிதல்** *Pōr-k-kaḷattoḻidal,* பெ. (n.) போரிற் புறங்கொடாது வீரன் பூசற்களரியிலே பட்டதைக்கூறும் புறத்துறை (பு. வெ. 2, 6, தலைப்பு); theme describing a warrior fighting to the last on the battle field without retreating.

*[ போர்க்களம் + தொழிதல் ]*

**போர்க்களம்** *Pōr-k-kalam,* பெ. (n.) போரிடு மிடம் (பிங்.); field of battle *'போர்க்களம் பாடும் பொருநன்'* (பொருந. 57, உரை)

*[ போர் + களம் ]*

**போர்க்களரி** *Pōr-k-kaḷari,* பெ. (n.) போர்க்களம் பார்க்க; see por-k-kalam. 'போர்க் களரியிலே விழுந்தான்' (பு. வெ. 2, 6, உரை)

*[ போர் + களரி ]*

**போர்க்களப்படை** *Por-k-kalappatai,* பெ. (n.) போர்ப்படை; army.

*[ போர் + களம் + படை ]*

**போர்க்களவீரன்** *Pōr-k-kalaveran,* பெ. (n.) போர்வீரன் பார்க்க. see porveeran.

*[ போர் + களம் + வீரன் ]*

**போர்க்காளை** *Pōr-k-kāḷai,* பெ. (n.) உடலிற் புள்ளியமைந்த எருது; bullock with sports on the body.

*[ புகர்→போர் + காளை ]*

**போர்க்குதிரை** *Pōr-kutirai,* பெ. (n.) போர்களக் குதிரை; war-horse.

*[ போர் + குதிரை ]*

**போர்க்குரல்** *Pōr-k-kural,* பெ. (n.) *போர்முழக்கம்* பார்க்க; see *pōrmulakkam.*

*[ போர் + குரல் ]*

**போர்க்குறிப்பு** *Pōr-k-kuṟippu,* பெ. (n.) அரிக் கட்டுக்களின் கணக்கு; account of corn stalks cut.

*[ போர் + குறிப்பு ]*

**போர்க்கெழுவஞ்சி** *Pōrkkeḻu-vañji,* பெ. (n.) வஞ்சிமாலை சூடி போருக்குப் புறப்படும் வீரரைப் புகழும் சிற்றிலக்கியவகை(வின்.); panegyric on an army marching to battle, the warriors being decked with wreaths of vañji flowers.

*[ போர்க்கு+எழு + வஞ்சி ]*

**போர்க்கோலம்** *Pōr-k-kōlam,* பெ. (n.) போரணி பூணுகை; military accoutrements, martial costume. ***'போர்க்கோல நீக்கி.... முலையார் மண்ணுறுப்ப வாடி'*** (சீவக. 2352)

*[ போர் + கோலம் ]*

**போர் கல—த்தல்** *Pōr-kala-,* செ.கு.வி. (v.i.) போர்புரிதல்(வின்.); to engage in a battle.

*[ போர் + கல—த்தல் ]*

**போர்ச்சேவகன்** *Pōr-c-cēvagaṉ,* பெ. (n.) படை வீரன்; soldier.

*[ போர் +* S.K.ṭ. sēvaka. *த.சேவகன் ]*

**போர்ச்சேவல்** *Pōr-c-cēval,* பெ. (n.) போர்ப் பந்தயத்துக்காக வளர்க்கப்படும் சேவல்; game-cock, fighting cock.

*[ போர் + சேவல் ]*



**போர்ச்சேணை** *Pōr-c-cēṉai,* பெ. (n.) *போர்ப் படை* பார்க்க; see *pōr-p-paḍai.*

*[ போர் + சேனை ]*

**போர்த்தளவாடங்கள்** *Por-t-taḷavādaṅgal, Por-t-talavatankal,* பெ. (n.) போர்க் கருவிகள்; military equipments.

*[ போர் + தளவாடங்கள் ]*

**போர்த்திறன்** *Pōr-t-taṉi-p-pūvai,* பெ. (n.) *போர்ச்சுயப் பாவை* பார்க்க; see *pōr-caya-p-pāvai.*

*[ போர் + திறன் ]*

**போர்த்தினவு** *Pōr-t-tiran,* பெ. (n.) போரிடும் திறமை; military skill.

*[ போர் +சேனை ]*

**போர்த்துக்கட்டு–தல்** *Pōrttu-k-kattu-,* செ.குன்றாவி. (v.t.) **1.** உள்ளுக்குள்ளே சரிப்படுத்துதல்; to adjust, settle. அடக்கிக் கொள்ளுதல்; to hide

*[ போர்த்து +கட்டு–, ]*

**போர்த்துமூடு–தல்** *pōrttu-mūḍu-,* செ.குன்றா.வி. (v.t.) *போர்த்துக்கட்டு* 2 (யாழ்.அக.) பார்க்க; see *pōrttu-k-kaṭṭu*

*[ போர்த்து + மூடு ]*

**போர்த்தேங்காய்** *pōr-t-tēṅkāy,* பெ. (n.) பந்தயத்துக்குரிய வலிய தேங்காய்; heard cocount used in game or contest of physical strength.

*[ போர் + தேங்காய் ]*

**போர்நடிவடிக்கை** *pōr-natavati-k-kai,* பெ. (n.) போர்நிலவரம்; state of warfare.

*[ போர் + நடிவடிக்கை]*

**போர்நாட்டம்** *pōr-nattam,* பெ. (n.) போரிடும் ஆசை; war-disire.

*[ போர் + நாட்டம்]*

**போர்நிறம்** *pōr-niram,* பெ. (n.) போர்ப்பொலிவு; fighting vigour. **'*போர்நிறப் புத்தி சேனன்*'** **(சீவக.789,உரை)**

*[ புகர் → போர் + நிறம்]*

**போர்நிறுத்தம்** *pōr-niruttam,* பெ. (n.) இடைக்காலச் சண்டை நிறுத்தம்; armistice

*[ போர் + நிறுத்தம்]*

**போர்ப்படை** *pōr-p-patai,* பெ. (n.) போரிடச் செல்லும் படை; force equipped for war.

*[ போர் + படை]*

**போர்ப்படைபட்டியல்** *por-p-patai-patiyal,* பெ. (n.) போர்ப்படை விளக்கக்குறிப்பு; army list.

*[ போர் + படை + பட்டியல்]*

**போர்ப்பறை** *pōr-p-parai* பெ. (n.) போர் முரசு; war-drum. "போர்ப்பறை முழங்கி யெங்கும்" **(சீவக.758)**

*[ போர் + பறை]*



**போர்ப்பிச்சை** *pōr-p-piccai,* பெ. (n.) திருப்பணிக்காகக் களத்தில் தண்டப்படும் பழைய வரிவகை(G.Tn.D.I.**313**.); a tax collected in ancient times at the time of the harvest from the ryots for repairs to temples.

*[ போர் + பிச்சை ]*

Skt. lehiksā → *த.பிச்சை*

**போர்ப்பு** *pōrppu,* பெ. (n.) **1.** *போர்வை* பார்க்க; see *pōrvai* போர்ப்புறு முரசம் **(பதிற்றுப்.84,2)** **2.** நெற்போர்(பிங்.); heap of threshed paddy.

*[ போர் → போர்ப்பு ]*

**போர்ப்பூ** *por-p-pū,* பெ. (n.) போரில் வீரர் அணிந்து கொள்ளும் அடையாளப்பூ; flower for garland used by warriors when going to battle. '*போர்ப்பூவும் தார்ப்பூவும்*' (தொல்.பொ.**626**,உரை)

*[ போர் + பூ ]*

**போர்ப்பை** *pōrppai,* பெ. (n.) **1.** உழவுசாலின் உட்குழிவு; gurrow. **2.** களை கொட்டின் அடி (யாழ்.அக.); handle of a small hoe.

*[ போர் + பை ]*

**போர்ப்பைக்காளை** *pōrppai-k-kāḷai,* பெ. (n.) **1.** பொலியெருது; breeding bull. **2.** உழவுக்குரிய காளை (யாழ்.அக.); plough ox.

*[ புல் → பொல் → போல் → போர் → போர்ப்பை + காளை]*



**போர்ப்பையன்** *pōrppaiyaṉ,* பெ. (n.) *போர்ப்பைக் காளை* (யாழ்.அக.) பார்க்க; see *pōrppai-k-kālai*

*[ புல் → பொல் → போல் → போர் → போர்ப்பையன்]*

**போர்பு** *pōrbu,* பெ. (n.) தவசப்போர்; grain heap. குன்றுகண் டன்ன நிலைப்பல் போர்பு (புறநா.**353**)

*[ போர் → போர்பு ]*

**போர்போடு–தல்** *pōr-pōḍu-,* செ.குன்றா.வி. (v.t.) தவச மணிகளைப் பிரித்தபின் வைக்கோலை மழையிற் கெடாத படி குவித்து மூடுதல் (யாழ்.அக.); to stack hay after threshing.

*[ போர் + போடு–தல்]*

**போர்மகள்** *pōr-magaḷ,* பெ. (n.) வெற்றித்திருமகள்; goddess of victory. "போர்மகளை ......தழுவியகை பொறாமை கூர." (கம்பரா.இராவணன்வதை.**226**)

*[ போர் + மகள்]*

**போர்மடந்தை** *pōr-maḍandai,* பெ. (n.) **1.** காளி; Durga, the goddess of war. **2.** வெற்றித் திருமகள்;(யாழ்.அக.) the goddess of valour.

*[ போர் + மடந்தை ]*

**போர்மறவன்** *pōr-maṟavaṉ,* பெ. (n.) *போர்வீரன்* பார்க்க; see *pōr-viraṉ.*

*[ போர் + மறவன் ]*

**போர்மாந்தம்** *pōr-māndam,* பெ. (n.) குழந்தை நோய் வகை;(பாலவா.) a child's disease caused by visceral obstructions.

*[ பொருமு + மாந்தம் ]*

**போர்முகம்** *pōr-mugam,* பெ. (n.) **1.** போர்முனை; front, foremost line of battle. '*போர் முகத்தை யறியானைப் புலியே றென்றேன்*'. (தனிப்பா. **1, 275, 16**). **2.** போர் முனைந்து நிகழுமிடம்; the place where battle rages the most. '*போர் முகந் தன்னினி புறந்தந் தேகினால்*' (பாரத.நிரைமீட்.**70**)

*[ போர் + முகம்]*

**போர்முரசு** *pōr-murašu,* பெ. (n.) *போர்ப் பறை,* பார்க்க; see *pōr-p-parai* '*போர் முரசெடி வெழுப்பொங்கி* (பாரத.நான்காம்.3)

*[ போர் + முரசு]*

**போர்முழக்கம்** *pōr-mulakkam,* பெ. (n.) போர்க்குரல்; war-shout.

*[ போர் + முழக்கம்]*

**போர்முள்** *pōr-mul,* பெ. (n.) சேவலின் முன்னங்கால் முள் (யாழ்.அக.); cock's claw.

*[ போர் + முள்]*

**போர்முனை** *pōr-munai,* பெ. (n.) *போர்முகம்* (யாழ்.அக.) பார்க்க; see *pōrmugam.*

*[ போர் + முனை]*

**போர்மூட்டு–தல்** *pōr-mūttu,* செ.குன்றா.வி (v.t.) **1.** சண்டை செய்யத்தூண்டுதல்;(யாழ்.அக.) to spur on to guarrel. **2.** கோள்சொல்லிப் பிரித்தல்(இ.வ.); to creat mis-under. standing between.

*[ போர் + மூட்டு]*

**போர்மை** *pōrmai,* பெ. (n.) இரக்கம் (நமதீப.608.); mercy, pity.

*[ ஒருமை→ போர்மை]*

**போர்வாங்கிவிடு–தல்** *pōr-vāngi-vidu,* செ.குன்றா.வி. (v.t.) சூடடிக்கத் தொடங்குதல்; to begin threshing of the grain.

*[ போர் + வாங்கிவிடு–,]*

**போர்வீரன்** *pōr-viran,* பெ. (n.) போரிடும் வீரன்; soldier.

*[ போர் + வீரன்]*

**போர்வு** *pōrvu,* பெ. (n.) *போர்பு* பார்க்க; see porbu. "கயலார் ரை போர்விற் சேக்கும்." (ஐங்குறு.9)

*[ போர் → போர்வு]*

**போர்வெறியர்** *pōr-veriyar,* பெ. (n.) வெற்றுவீரம்பேசுபவர்; warmonger.

*[ போர் + வெறியர்]*

**போர்வை** *pōrvai,* பெ. (n.) **1.** மூடுகை (பிங்.); covering, wrapping **2.** மேன் மூடுந்துணி(பிங்.); upper garment, cloak, blanket, rug, mantle. "யானையினுரிவைப் போர்வை" (கம்பரா.மிதிலை.150) **3.** தோல்; (பிங்.) skin. **4.** கவசம்; cocet of mail, corslet. '*புலிப்பொறிப் போர்வை நீக்கி* (சீவக.266). **5.** வாள்முதலியவற்றின்உறை (சீவக.266,உரை); sheath, as of sword. **6.** தேர்த்தட்டின் வெளிமறையப் பாவின பலகை; wooden cover of a temple-car. உள்ளரக் கெறிந்த வருக்குறு போர்வை. (சிறுபாண்.256)

தெ.போர்வ

*[ போர் → போர்வை]*

**போர்வைச்சீலை** *pōrvai-c-cilai,* பெ. (n.) *போர்வை 2* பார்க்க; see *pōrvai*

*[ போர்வை + சீலை]*

**போர** *pōra,* வி.எ. (adv.) மிகவும் (ஈடு,4,7,ப்ர.); entirely, exceedingly.

*[ போரு → போர]*

**போரடி[1]–த்தல்** *pōr-aḍi-,* செ.குன்றாவி.(v.t.) தலையடிக் கதிர்ப்போரினின்றும் தவசத்தை அடித்தெடுத்தல்; to thresh or beat out grain from straw.

*[போர் + அடி–த்தல்]*

**போரடி[2]–த்தல்** *pōr-aḍi-,* செ.கு.வி.(v.i.) தருக்கமிடுதல் (வின்.); to wrangle over.

*[போர் + அடி–த்தல்]*

**போரடி[3]** *pōr-aḍi-,* பெ.(n.) 1. தலையடிக் கதிர்ப்போரைக் கடாவிட்டு அடித்து நெல்லைப் பிரிக்கை; threshing. 2. நெற்களம்; threshing-floor. 3. தேங்காய் விளையாட்டு (யாழ்ப்.); playing with cocoanuts.

*[போர் → போரடி]*

**போரப்பொலிய** *pōra-p-polia,* கு.வி.எ.(adv.) முழுவதும்; fully, completely. *'இவன் இவனைப் போரப் பொலியச் சொல்லுங்காட்டில்'* (ஈடு,4,7,ப்ர.)

*[போர + பொலிய]*

**போரன்** *pōraṉ,* பெ.(n.) வைக்கோல் தட்டை (யாழ்ப்.); paddy silk.

*[போர் → போரன்]*

**போராக்காலம்** *pōrā-k-kālam,* பெ.(n.) *போதாக்காலம்* பார்க்க; see *pōdā-k-kālam.*

*[போதா → போரா]*

**போராசை** *pōr-āšai,* பெ.(n.) *போர்நாட்டம்* பார்க்க; see *pōr-nāṭṭam.*

*[போர் + ஆசை]*

**போராட்டக்களம்** *pōrāṭṭa-k-kaḷam,* பெ.(n.) போரிடுமிடம்; armagedon (or) war field.

*[போராட்டம் + களம்]*

**போராட்டம்** *pōrāṭṭam,* பெ.(n.) 1. சண்டையிடுகை; fighting. *"மடந்தையர் சிற்றின்பமோ... பொன்னாட்டும் வந்ததென்றாற் போராட்டமல்லவோ"* (தாயு. எங்குநிறை.10). 2. சண்டை; combat, struggle. 3. போட்டி; competition, rivalry. 4. விடாமுயற்சி; contention, striving earnestly.

*[போராடு → போராட்டம்]*

**போராடு–தல்** *pōrāḍu-,* பெ.(n.) 1. பொருதல்; to fight, carry on war. *"பூமியைப் போராடியிரந்தோருந் தம்மதென்பார்"* (தாயு. பாராபர. 228). 2. தொந்தரவு படுதல்; to struggle. 3. பேரம் பேசுதல்; bargain (w.).

*[போர் + ஆடு–தல்]*

**போரார்வம்** *pōr-ārvam,* பெ.(n.) போரிடும் எண்ணம்; fighting spirit.

*[போர் + ஆர்வம்]*

**போராற்றல்** *pōr-āṟṟal,* பெ.(n.) போரிடும் ஆற்றல்; fighting capacity.

*[போர் + ஆற்றல்]*

**போரான்** *pōrāṉ,* பெ.(n.) குதிரைவகை; a kind of horse. *"உயர்கனவட்டம் போரான்"* (திருவாலவா.28,69).

**போரி¹** *pōri,* பெ. (n.) பொருவோன்; egual, rival. (w.)

*[போர் → போரி]*

'இ' வினைமுதல் ஈறு

**போரி²** *pōri,* பெ. (n.) முருகன் வழிபாட்டு இடமான திருப்போரூர்; tiru-p-pōrūr sccred to god subrahmanya போரிவா ழாறுமா முகனே **(திருப்போ.சந்.9,1)**

*[போரூர் → போரி]*

**போரிக்கட்டை** *pōri-k-kattai,* பெ. (n.) *போதிகைக்கட்டை* பார்க்க; see *pori kattai.*

*[போதி → போரி + கட்டை]*

**போரிகை** *pōrikai,* பெ. (n.) *போதிகைக் கட்டை* பார்க்க; see *porikai.*

*[போதிகை → போரிகை]*

**போரிடுதல்** *pōritutal,* பெ. (n.) பொருதல்; one engaged in fight.

*[போர் + இடுதல்]*

**போரிலேபோடு—தல்** *pōril-ē-pōtu,* செ.குன்றா.வி. (v.t.) பயனற்றதாக்குதல்; to render useless.

*[போர் → போரிலே → போடு]*

**போரிழப்பு** *pōr-elappu,* பெ. (n.) போரினால் உண்டாகும் இழப்பு; loss of war.

*[போர் + இழப்பு]*

**போருணர்ச்சி** *pōr-unarchi,* பெ. (n.) போரிடும் மனப்பான்மை; fighting spirit.

*[போர் + உணர்ச்சி]*

**போரு¹—தல்** *pōru,* செ.கு.வி. (v.i.) **1.** செல்லுதல்; to go on, proceed, to continue. நீர் ஆதரித்துக்கொண்டு போரும் **(குருபரம்.170). 2.** மீண்டுவருதல்; to return. **3.** எட்டுதல்; to reach. போரவிடாயெங்கள் பட்டை **(திவ்.நாய்ச்.3,7) 4.** பொருள் பெறப்படுதல்; to be understood, as a meaning. *'பிரத்தியகர்த்தவிசயமாயும் போருகையாலே'* **(ஈடு,1,1,2).**

*[போது → போரு]*

**போரு²—தல்** *pōru,* செ.கு.வி. (v.i.) **1.** போதியதாதல்; to be enough, sufficient. சிறு மானிடவரென்று எண்ணுகைக்குக் கூடப் பாற்றம் போராதபடியான நாம், **(திவ். திருநெடுந், 21, வ்யா. பக்.198)**

*[போது → போரு—தல்]*

**போருதவி** *pōr-utavi,* பெ. (n.) போர்வீரனுக்கு உதவிசெய்கை; succour rendered to a warrior. (w).

*[போர் + உதவி]*

**போரூக்கம்** *pōr-ukkam,* பெ. (n.) போரிடும் மனஎழுச்சி; fond of fighting.

*[போர் + ஊக்கம்]*

**போரெதிர்—தல்** *pōr-etir,* செ.கு.வி. (v.i.) போர்செய்தலை மேற்கொள்ளுதல்; to set out to fight. *'போரெதிந்தற்றா'* **(கலித்.89)**

*[போர் + எதிர்—தல்]*

**போரேறு** *pōr-ēru,* பெ. (n.) 1. போர் செய்யவல்ல காளை; fighting bull போரேறொன் றுடையானு. மளகைக் கோனும் (திவ். பெரியதி. 2,10) 2. போர்வீரன்; champion, hero.புட்குழியெம்போரேற்றை (திவ்.இயற்.பெரிய. ம,117) 3. செவ்வாய் கோள்; the planet mars. (சது.)

*[ போர் + ஏறு]*

**போல்¹(லு)–தல்** *pōl,* செ.குன்றா.வி. (v.t.) 1. ஒத்தல்; to resemble, to be like. '*மக்களே போல்வர் கயவர்*' (குறள்,1071) 2. இணை யொத்தல்; to egual, match.

*[ போ → போல்(லு)–தல்]*

**போல்²** *pōl,* இ.சொல். (Part) 1. ஓர் உவமவுருபு; a particle of comparison. சமன் செய்து சீர்தூக்குங் கோல்போலமைந்து (குறள்,118) 2. ஓர்அசைச்சொல்; expletive. (திருக்கோ,222)

*[ போ → போல்]*

**போல்²** *pōl,* பெ. (n.) 1. உள்ளீடில்லாதது; hollow object. '*போல்வளை*'. 2. பதர்; chaff. (w). 3. பொய்; falsehood. (அரு.நி) 4. மூங்கில்; bamboo. (மலை)

*[ புல் → பொல்→ போல்]*

*தெ. போலு*

**போல்⁴** *pōl,* பெ. (n.) 1. வெற்றி; victory, valour. பண்புணரார்மதின்மேல்போலனை (தேவா.381–1.) 2. படை; neapon. (அரு.நி) 3. வாள்; sword (அரு.நி.)

*[ போ → போல்]*

**போல்கட்டை** *pōl-kattai,* பெ. (n.) போல்மரம் பார்க்க. see polmaram.

*[ போல் + கட்டை]*

**போல்சாவி** *pōl-cāvi,* பெ. (n.) உட்டுளையுள்ள திறவுகோல்; tubularkey.

*[ போல் + .சாவி]*

port. chiavi→ *த.சாவி*

**போல்மரம்** *pōl-maram,* பெ. (n.) வண்டியின் முன்புறத்துள்ள நீண்ட மரக்கட்டை; wooden shaftfitted to the fore-part of a vehicle.

*[ போல் + மரம்]*



**போல்மூங்கில்** *pōl-munkil,* பெ. (n.) மூங்கில் வகை; hollow bamboo.

*[ போல் + மூங்கில்]*

**போல** *pōla,* இ.சொல். (Part) ***போல்1***, 2 பார்க்க; see *pol*1,2. (தொல்.பொ.291)

*[ போல் → போல]*

**போலி** *pōli,* பெ. (n.) 1. ஒப்புடையவன் வள்–து; a person or thing that is egual, egui valent. தில்லை போலிதன் காதலனே

(திருக்கோ.303) தாமரை திருவடிகளுக்குப் போலியாயிருக்க. (ஈடு,1,4,ப்ர) 2. ஒப்பு; similarity.உவமப்போலி (தொல்.பொ.300,உரை) 3. சாயல்; imitation, semblance. (w). 4. கள்ளப்பொருள்; anything spurious, bcounterfeit. *'போலிநாணயம்'* 5. வஞ்சகம்; pretence, hypocrisy. 6. கேலி; jest. 7. போலியெழுத்து பார்க்க (நன்.122) 8. இலக்கணப்போலி பார்க்க. (நன்.238) 9. போலிப்பாசம்; sophism. *'பக்கப்போலியு மேதுப் போலியும்'* (மணி.29,145)

*[ போல் → போலி]*

**போலிஇரக்கம்** *pōli-earkkam,* பெ. (n.) பொய்இரக்கம்; lips sympathy.

*[ போலி +இரக்கம்]*

**போலிக்குரல்** *pōli-k-kural,* பெ. (n.) மாற்றுக்குரல்; false roar.

*[ போலி + குரல்]*

**போலிக்கையொப்பம்** *pōli-k-kaiyōppam,* பெ. (n.) பொய்க்கையொப்பம்; forgery signature.

*[ போலி + கையொப்பம்]*

**போலிச்சமயம்** *pōli-c-camayam,* பெ. (n.) பொய்யான மதம்; false religion.

*[ போலி + சமயம்]*

**போலிச்செய்தி** *pōli-c-caithi,* பெ. (n.) பொய்ச்செய்தி; false news.

*[ போலி + செய்தி]*

**போலிநடிப்பு** *pōli-natippu,* பெ. (n.) பாசாங்கு செய்தல்; hypocricy.

*[ போலி + நடிப்பு]*

**போலிச்சரக்கு** *pōli-c-carakku,* பெ. (n.) 1. உண்மைச் சரக்கைப் போலச் செய்த பண்டம்; imitation goods or commodity, as not genuine. 2. வெளிப்பகட்டுள்ள பொருள்; showy goods, as appearing good.

*[ போலி + சரக்கு]*

**போலித்தகவல்** *poli-t-talaval,* பெ. (n.) பொய்த்தகவல்; general talk of doultful accuracy.

*[ போலி + Aral.dakhl. த.தகவல்]*

**போலித்தனம்** *pōli-t-tanam,* பெ. (n.) உண்மையல்லாத வெளித்தோற்றம்; imitation, disguise, show. (யாழ்.அக)

*[ போலி + தனம்]*

**போலித்திரை** *pōli-t-tirai,* பெ. (n.) பொய்த்திரை; curtain.

*[ போலி + திரை]*

**போலித் தோற்றம்** *pōli-t-tottam,* பெ. (n.) செயற்கைத் தோற்றம்; false appearance.

*[ போலி + தோற்றம்]*

**போலிநடை** *poli-natai,* பெ. (n.) போலியான நடத்தை; trick of slyle.

*[ போலி + நடை]*

**போலிநியாயம்** *pōli-niyāyam,* பெ. (n.) 1. பொய்க்காரணம்; false reasoning. 2. நியாயம் போல் காணப்படும் நியாயமற்றது; that which seems just bet is really unjust.

*[ போலி +* skt. nyāya. *த.நியாயம்]*

**போலிப்பாசம்** *poli-p-pācam,* பெ. (n.) பொய்ப் பாசம்; sophism.

*[ போலி + பாசம்]*

**போலிப்பேச்சு** *Poli-p-pechu,* பெ. (n.) பசப்புப் பேச்சு; hypocritical speech.

*[ போலி + பேச்சு ]*

**போலிமனிதன்** *Pōli-manitan,* பெ. (n.) மக்கட்பண்பற்றவன்; brutish man (w)

*[ போலி +* skt. manu-ja. *த.மனிதன் ]*

**போலிமை** *Pōlimai,* பெ. (n.) *போலி²* பார்க்க. see *poli²* *'போலிமை கிரங்கி யுரைத்த பாசுரத்தாலே'* (திவ். திருவாய், ஈடு, 2, 1, 2, ப்ர. பண்ணீ)

*[ போலி → போலிமை ]*

**போலிமொழி** *Pōli-moli,* பெ. (n.) *இலக்கணப் போலி* பார்க்க; see *ilakkana poli* (நன். 238, மயிலை)

*[ போலி + மொழி ]*

**போலியாள்** *Pōli-y-āl,* பெ. (n.) 1. வெளி வேடக்காரன்; dissembler, pretender. (யாழ்.அக) 2. மேல் வாரியாக வேலை செய்பவன்; superficial person. (w.)

*[ போலி + ஆள் ]*

**போலியிரக்கம்** *Pōli-erakkam,* பெ. (n.) பொய்யாக இரக்கம் காட்டுதல்; lip's sympathy.

*[ போலி + இரக்கம்]*

**போலியெழுத்து** *Pōli-y-eluttu,* பெ. (n.) 1. ஓரெழுத்துக்குப் பகரமாக அவ்வொலியில் அமையும் எழுத்து; syllatle or letter resembling another in sound, as அய் for ஐ, அய் for ஔ. 2. ஓரெழுத்துக்குப் பகரமாக வரும் எழுத்து; letter substituted for another different in sound, as in சாம்பர் for சாம்பல். (நன்.)

*[ போலி + எழுத்து ]*

**போலிவாழ்க்கை** *Pōli-valkkai,* பெ. (n.) பொய் வாழ்க்கை; false life.

*[ போலி + வாழ்க்கை ]*

**போலிவீரம்** *Pōli-veram,* பெ. (n.) பாசாங்கு வீரம்; lion's skin.

*[ போலி + வீரம் ]*

**போலிவேடம்** *Pōli-vedam,* பெ. (n.) போலி நடிப்பு; hypocricy.

*[ போலி + வேடம் ]*

Skt. Vēsa→*த.வேடம்*

**போலிவேலை** *Pōli-vēlai,* பெ. (n.) கள்ளத்தனமான வேலை; shoddy work; (யாழ்.அக)

*[ போலி + வேலை ]*

**போலும்** *Pōlum,* இ.சொல். (part) ஓர் அசைச் சொல்; an expletive. (நன். 441)

*[ போல் → போலும் ]*

**போவி–த்தல்** *Pōvi,* செ.குன்றா.வி. (v.t.) போக்குதல்; to cause to go, to lead. போலிப்பம் பாழினுடம்பை (நல்வழி, 19).

*[ போ + போவி–த்தல் ]*

**போவு** *Pōvu,* பெ. (n.) போகை; going. *'போவுண்ட தென்னினைய'* (கம்பரா. நாகபாச. 231)

*[ போ → போவு ]*

**போவி–த்தல்** *Pōvuvi,* செ.குன்றா.வி. (v.t.) *போவி* பார்க்க; see *pōvi.* (நன். 137, மயிலை)

*[ போ → போவு → போவுவி – த்தல் ]*

**போழ்[1]–தல்** *Pōl,* செ.கு.வி. (v.i.) 1. பிளவுபடுதல்; to be cleft, split. 2. பிரிவுபடுதல்; to be disunited. (w). செ.குன்றா.வி. (v.t) 1. பிளத்தல்; to split, cleave open. கல்லுடை நெடுநெறி போழ்ந்து சுரனறுப்ப (பதிற்றுப். 19, 2). 2. ஊடுருவிச் செல்லுதல்; to pass through, cross over. கடற்குட்டம்போழ்வர்கலவர் (நான்மணி. 18). 3. அழித்தல்; to dispel, to destroy. *'நீடிருள் போழு நிலைமைத்து'* (சீவக. 2118).

*[ புல் → பொல் → போழ் ]*

**போழ்[2]** *Pōl,* பெ. (n.) 1. பிளவு; cleft. போழ்படக் கிடந்த (கல்லா. முருக்க) 2. துண்டம்; piece. பசுங்காய்ப் போழொடு (பெரும்பாண், 307) 3. தோலால் அமைந்த வார்; leathe strap போழ் தூண்டுசி (புறநா. 82, 4). 4. தகடு; sheet. வெள்ளிப் போழ் விலங்கவைத் தனைய (சீவக. 70)

*[ புல்→பொல் → போழ் ]*

**போழ்க்கமை** *Pōlkkamai,* பெ. (n.) அடைவு கேடு; irregularity, disorder, ill-manners. (திவ். திருமாலை, 33, வ்யா, 110)

*[ போழ்க்கன் → போழ்க்கமை ]*

**போழ்க்கன்** *Pōlkkan,* பெ. (n.) அடைவு கேடன்; ill-mannerer person. பொய்யெல்லாம் பொதிந்து கொண்ட போழ்க்கனேன் (திவ். திருமாலை, 33)

*[ போழ் → போழ்க்கன் ]*

**போழ்து** *Pōltu,* பெ. (n.) 1. பொழுது பார்க்க. அழல் மண்டு போழ்தின் (நாலடி. 202) 2. நன்முகூர்த்தம்; auspicious time. *'இப்போழ்து போழ்தென் றதுவாய்ப்பக் கூறிய'* (கலித். 93)

*[ போது → போழ்து ]*

**போழ்முகம்** *Pōl-mukam,* பெ. (n.) பன்றி; hog. (பிங்.)

*[ போழ் + முகம் ]*

**போழ்முகி** *Pōl-muki,* பெ. (n.) போழ்முகம் பார்க்க. (நூமதீப. 220)

*[ போழ் + முகம் → முகி ]*

**போழ்வாய்** *Pōl-vāy,* பெ. (n.) 1. பிளந்த வாய்; open mouth. போழ்வாய வன்றிலும் (திவ். இலற். திருவிருத், 87). 2. பொக்கை வாய்; tooth less mouth. போழ் வாய்ச்சி கண்டுடம்பு பூரித்தாள் (விறலிவிடு. 195)

*[ போழ் + வாய் ]*

**போழ்வு** *Pōlvu,* பெ. (n.) பிளவு; cleft, fissure.

*[ போழ் → போழ்வு ]*

**போழ்காலா** *Pōla-kāla,* பெ. (n.) பளபளத்த பச்சை நிறமுள்ளதும் ஆறடிநீளம் வளர்வதுமான கடல் மீன்வகை; reseball, sea-fish, silvery green, attaining six feet and more in length. polynemus tetradactylus.

*[ போழ் → போழகாலா ]*



**போழப்பெட்டி** *Pōla-p-petti,* பெ. (n.) **1.** வண்ணங் கொடுத்த பனையோலைகளைக் கொண்டு பலவடிவமாக முடையப்படும் கூடை; palmyra basket of fancy shapes, cloured attractively. **2.** திருமணத்தின் போது மாப்பிள்ளை வீட்டார் மணமகள் வீட்டிற்குத் தேங்காய் பழம் வெற்றிலை பாக்கு முதலியன கொண்டு போகும் சாயவட்டி; lacguer plate containing cocoanuts, aarecanuts, betels and plantains carried to the bride's house by the bride-groom's party in a marriage.

*[ பிழா → பெட்டி → போழப்பெட்டி ]*

**போழம்** *Pōlam,* பெ. (n.) மாறுபடுஞ் சொல்; inconsistent word. *'போழம் பலபேசி'* (தேவா. 1080, 11)

*[ போல் → போழ் → போழம் ]*

**போளம்** *Pōlam,* பெ. (n.) நறுமணப் பண்டவகை; myrrh, aloes, gum-myrrh.

**போளம்**[2] *Pōlam,* பெ. (n.) ஒருவகைத் நிலைத்திணை; a plant. (மலை)

**போளி** *Pōli,* பெ. (n.) மூடன்; simpleton.

**போற்றரவு** *Pōṟṟaarvu,* பெ. (n.) பேணுகை; due regard, civility, (w.)

*[ போற்று → போற்றரவு ]*

**போற்றலர்** *Pōṟṟalar,* பெ. (n.) *போற்றார்* பார்க்க; see *porrār.*

*[ போற்று + அல் + அர்]*
*'அல்' எ. ம. இ. நி.*

**போற்றன்** *pōṟṟan,* பெ. (n.) பாட்டன்; grand-father (நாமதீப. 189)

*[ போற்று + அன் → போற்றன் ]*

**போற்றார்** *Pōṟṟār,* பெ. (n.) பகைவர்; foes, enemies. *'போற்றாப் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்'* (புறநா. 2)

*[ போற்று + ஆ + அர்]*
*'அல்' எ. ம. இ. நி.*

**போற்றி** *Pōṟṟi,* பெ. (n.) **1.** புகழ்மொழி; praisse, applause, commendation (w) **2.** கோயிற் பூசை செய்யும் மலையாள நாட்டுப் பூசாரி; brahman temple-priest of malabar. (w). **3.** போத்தி[1] பார்க்க. செ.கு.வி (v.i) **1.** வழிபடு சொல் வகை; explamation of praise. *'பொய்தீர் காட்சிப் புரையோய் போற்றி'* (சிலப், 13,92)

*[ போற்று → போற்றி ]*

**போற்றி செய் –தல்** *Pōrri-cey,* செ.குன்றா.வி. (v.t.) வழிபடுதல்; to praise, worship, adore. பரமனை...போற்றி செய்வேனே. (திருமந். 3.)

*[ போற்றி + செய்தல் ]*

**போற்றிசை–த்தல்** *Pōṟṟicai,* செ.குன்றா.வி. (v.t.) போற்றிசெய் பார்க்க. *'புறந்தருவார் போற்றிசைப்ப'* (பெருயபு. மானக்கஞ்சாற, 12)

*[ போற்று → போற்றிசை – த்தல் ]*

**போற்றி சொல்(லு)–தல்** *Pōrri-col,* செ.குன்றா.வி. (v.t.) *போற்றிசெய்* பார்க்க; see *porri-cey* (w).

*[ போற்றி + சொல்(லு)–தல் ]*

**போற்றிப்பஃறொடை** *Pōrri-p-pakrotai,* பெ. (n.) மெய்கண்ட நூல்கள் பதினான்கனுள் ஒன்றும் உமாபதிசிவம் இயற்றியதுமான சிவனியக் கொண்முடிபு நூல்; a text-book of the siva siddhanta philosophy by umāpati-civvācāriyar, one of 14 mey-kanta-cāttiram. q.v.

*[ போற்றி + பஃறொடை ]*

**போற்றி பண்ணு–தல்** *Pōṟṟi-paṉṉu,* செ.குன்றா.வி. (v.t) *போற்றிசெய்* பார்க்க; see *porri-cey.* (w).

*[ போற்றி + பண்ணு–தல் ]*

**போற்றிப் பேணுதல்** *Pōtri-penutal,* பெ.(n.) சீராட்டி வளர்த்தல்; cherishment.

*[ போற்றி + பேணுதல் ]*

**போற்றிமை** *Pōṟṟimai,* பெ. (n.) வணக்கம்; honour, reverence. (w).

*[ போற்றி → போற்றிமை ]*

**போற்றியாதல்** *Pōṟṟi-y-ātal,* பெ. (n.) இடுக்குகை; grasping or securing closely. (நாமதீப. 757.)

*[ பொத்து → பொற்று → பொற்றி போற்றி + ஆதல் ]*

**போற்றீடு** *Pōṟṟitu,* பெ. (n.) பாதுகாவல் வகை; a system of watching. *'போற்றீடு முதலிய பாதுகாவலும்'* (தொல். பொ. 171, உரை)

*[ போற்று + இடு → ஈடு]*

**போற்று[1]–தல்** *Pōṟṟu,* செ.குன்றா.வி. (v.t.) 1. வழிபடுதல்; to praise, applaud. (பிங்.) போற்று மடியா ருண்ணின்று நகுவேன் (திருவாச. 5, 60) 2. வணங்குதல்; toworhsip(பிங்.) 3. பாதுகாத்தல்; to protect, keep with great care. போற்றினரியவை போற்றல். (குறள், 693) 4. வளர்த்தல்; to noursih (w.) 5. தீயவை தடுத்துக்காத்தல்; to guard against. புறஞ்சொற் போற்றுமின் (சிலப். 30, 188) 6. கடை பிடித்தல்; to adhere, hold fast to. புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும் 7. விருந்தோம்பல்; to entertain, to treat. with regard. *'எம்மைப் போற்றவே'* (கம்பரா. அரசியல். 40) 8. விரும்புதல்; to desire. *'போற்றிக் கேண்மதி'* (பொருந. 60) 9. கருதுதல்; to conzider. பொச்சாவாக் கருவியாற் போற்றிச் செயின் (குறள், 537) 10. மனத்துக் கொள்ளுதல்; to under stand, to pay attention to. *'கொண்டானர் நிரை போற்றெனக் கூறினான்'*

(சீவக. 430). 11. கூட்டுதல்; to gather to gether. (பிங்).

*[புல் → புகல் → புகற்று → போற்று ]*

**போற்று²** *Pōṟṟu,* பெ. (n.) 1. காப்பு; protection (சங்.அக). 2. பாராட்டி வழிபடு; praise, invocation. 3. புகழ்தல்; very high commendation. (யாழ்.அக.)

*[ புகல் → புகற்று → போற்று ]*

**போற்றுநர்** *Pōṟṟunar,* பெ. (n.) 1. சுற்றத்தார்; relatives, kinsmen. போற்றா ருயிரினும் போற்றுந ருயிரினும் (பரிபா. 4, 52) 2. ஒன்றுணர்வார்; those who understand. வேற்றுமை யின்றது போற்றுநர்ப் பெறினே (பரிபா. 4, 55)

*[ போற்று + போற்றுநர் ]*

**போறை** *Pōrai,* பெ. (n.) 1. பொந்து; hole, hollow in a tree. 2. கிணறு முதலியவற்றின் வங்கு; cavity in the side of a well. (w.)

*[ புரை→போரை → போறை ]*

**போன்** *Pōn,* பெ. (n.) 1. பொறி; trap (ஈடு, 2, 8, 4, ஜி) 2. மலைக் குகை; cave running into the side of a hill. 3. உலைக்கும் துருத்திக்கும் இடையில் சாய்வாகச் செல்லும் அடுப்புப் பாகம்; sloping cavity between the bellows and the over in a pōn-atuupu.

*[ புல்→போல் → போன் ]*

**பௌ** *Pau,* தமிழ் நெடுங்கணக்கில் 'ப்' என்ற என்ற மெய்யெழுத்தும் 'ஔ' என்ற உயிரெழுத்தும் சேர்ந்து உண்டான உயிர் மெய்யெழுத்து; the compound of ப் and ஔ. (செ.அக).

*[ ப் + ஔ → பௌ ]*

**பௌரி** *Pauri,* பெ. (n.) பெரும் பண் வகை; a musical mode, one of perum. pan, q.v.

**பௌலுருவி** *Pauluruvi,* பெ. (n.) மரஞ் செடிகளில் ஒட்டி வளரும் பூடுவகை; honey suckle mistletoe. ***"கீரைக்குப் புல்லுருவி கீழே முளைத்தாற் போல்"*** (இராமநா. அயோத். 20)

*[ புல்லுருவி → பௌலுருவி ]*

